6-3

# பிரபஞ்ச மிரட்டென்னும்

## பீதாம்பர ஐயர்

# ஜாலத்திரட்டு - 1500

இது,

ம-௱-௱-ஸ்ரீ, பீதாம்பர ஐயர் மாணுக்கருள் மாணுக்கராகிய

சி. பாஷிய ஐயங்காரவர்களின் அனுக்கிரமத்தின்படி

செஞ்சிமாநகர்

## ஏகாம்பர முதலியார் அவர்களால்

எழுதப்பட்டது




ஆறும் பதிப்பு


## ஜீ. ஆர். பாலைய நாயுடு அவர்களின்

அனுமதியின்படி,

சென்னை - சூளை,

## விநாயகம் அண்டு கம்பெனியாரால்

பதிப்பிக்கப்பட்டது.

1926


 [இதன் விலை 1 0 0

உ

கடவுள் துணை.

# பிரபஞ்ச மிரட்டென்னும்

பீதாம்பர ஐயர்

# ஜாலத்திரட்டு - 1500



## விநாயகர் - காப்பு

விருத்தம்

சீரோங்கும் சென்னைமுதல் பலதேயத்தும்
சித்தியா யாடிவரும் ஜாலந்தன்னை
ஏரோங்கும் கலியுகத்தோ ரெவருங்கண்டு
இன்புறவே செய்வதற்குத் தேடியின்று
பேரோங்கும் பீதாம்பர ஐயர்ஜாலம்
பெருமையுடன் புவியிலிது விளங்கவேண்டி
காரோங்கும் செந்தமிழால் கழறுதற்கு
கந்தரொடு கணபதிபொற் பாதங்காப்பே.



### 1. அந்தரமாக விநாயகர் நிற்க காட்டும் ஜாலம்.

மரத்தினால் நாலு அடி அல்லது ஐந்து அடி உயரமுள்ளதாக நாலு கால்கள் நிறுத்தி அதற்குக் கீழ்மேலும் ஓரடி அகலமும் ஒண்ணரை அடி நீளமுமுள்ள பலகையைக்கோர்த்து அந்த தோல்பலகையின் உள்புறத்தில் காந்தத்தைப் பதித்து கழட்டவும் பூட்டவுமாக செய்து வைத்துக் கொள்ளவும். வேறொரு மரத்தினால் விநாயகரைப்போல் அவயவங்கள் பின்னப்படாமல் பக்குவமாகச்செய்து வர்னம் முதலானதும் பூசிவைத்துக் கொள்கவும், ஜாலமாடுங் காலத்தில் அச்சபையில் மேற்சொன்ன சப்பரத்தை

6-3

உ

கடவுள் துணை.

பிரபஞ்ச மிரட்டென்னும்

பீதாம்பர ஐயர்

# ஜாலத்திரட்டு - 1500

## விநாயகர் - காப்பு

விருத்தம்

சீரோங்கும் சென்னைமுதல் பலதேயத்தும்
　சித்தியா யாடிவரும் ஜாலந்தன்னை
ஏரோங்கும் கலியுகத்தோ ரெவருங்கண்டு
　இன்புறவே செய்வதற்குத் தேடியின்று
பேரோங்கும் பீதாம்பர ஐயர்ஜாலம்
　பெருமையுடன் புவிபிலிது விளங்கவேண்டி
காரோங்கும் செந்தமிழால் கழறுதற்கு
　கந்தரொடு கணபதிபொற் பாதங்காப்பே.

### 1. அந்தரமாக விநாயகர் நிற்க காட்டும் ஜாலம்.

மரத்தினுல் நாலு அடி அல்லது ஐந்து அடி உயரமுள்ளதாக நாலு கால்கள் நிறுத்தி அதற்குக் கீழ்மேலும் ஓரடி அகலமும் ஒண்ணரை அடி நிகளமுமுள்ள பலகையைக்கோர்த்து அந்த தோல்பலகையின் உள்புறத்தில் காந்தத்தைப் பதித்து கழட்டவும் பூட்டவுமாக செய்து வைத்துக் கொள்ளவும். வேருெரு மரத்தினுல் விநாயகரைப்போல் அவயவங்கள் பின்னப்படாமல் பக்குவமாகச்செய்து வர்னம் முதலானதும் பூசிவைத்துக் கொள்கவும், ஜாலமாடுங் காலத்தில் அச்சபையில் மேற்சொன்ன சப்பரத்தை

சோடித்து பின்பு விநாயகருக்கு புஷ்பத்தினால் சாத்துபடிசெய்து நகைகள் முதலானதுங்கொண்டு அலங்கரித்து சப்பிரத்திற்கு மேலேயிருக்கும் காந்தத்திற்கு நேர் கீழாக காந்தம் இழுக்கும்படியான கனமுள்ள இரும்பு பலகைப் போட்டு உடனே கணேசரை அதின்மேல்வைத்து சபையோருக்குக் காட்டிவிட்டு கற்பூரத்தைக் கொளுத்தி வலதுகையில் மணியெடுத்து இடதுகையிலும் பிடித்துநின்று விநாயகரைத் தோத்திரஞ்செய்ய விநாயகர் அந்தரமாகக் கிளம்புவார். சபையிலுள்ளோர்கள் பார்த்து ஆச்சரியப்படுவார்கள். மிகவும் உன்னதமான வேடிக்கையாகவிருக்கும். சபையோர்கள் பார்த்து களித்தவுடனே விநாயகர் சயிலாயத்திற்குப் போகப்போகிறாரென்று சிகப்பு துணியை மேலேபோட்டு மூடி உடனே விநாயகரை மறைத்துவிடவேண்டும்.

## 2. சபையோர்க்கு பந்திசெண்டு தாம்பூலம் கொடுக்கும் ஜாலம்.

கருப்புதுணியில் அறைமுழம் நிகளத்தில் குட்டிச்சாத்தானைப்போல் ஒரே மாதிரியாக நாலைந்து பொம்மையாகத்தைத்து வைத்துக்கொள்ளவும் ஜாலமாடச் சபைக்கு வருமுன்னமே அப்பொம்மையின் தலைமுதற்கொண்டு முழங்கால்வரையிலும் ஒரு பொம்மையில் புஷ்பச்செண்டும், ஒரு பொம்மையில் பாக்கும், ஒரு பொம்மையில் வெத்திலையும், ஒரு பொம்மையில் சாதிக்காயும், ஒரு பொம்மையில் ஜாபத்திரியும், ஒரு பொம்மையில் ஏலக்காயும் ஒரு பொம்மையில் லவங்கமுங் போட்டுத் திருத்து ஒவ்வொன்றுக்கும் அடையாளம் வைத்துக்கொண்டு இவைகளை ஜோல்னாபையில் வைத்துக்கொள்ள வேண்டும் முதலாவது புஷ்பச்சைண்டு திருத்து வைத்திருக்கும் பொம்மையை எடுத்து அதன்காலை யிரண்டையும் பிடித்துக்கொண்டு சபையோர்களுக்குக் காட்டி சல் குட்டிச்சாத்தான் சீக்கிரல் ஓடிப்போய் பூந்தோட்டத்திற் புகுந்து தோட்டக்காரன் கண்களை மறைத்து நன்றாய் மலர்ந்தபுஷ்பமாய் பறித்து பந்திசெண்டுகளாகக் கட்டிக்கொண்டு வா வா என்று சொல்லி மேஜைமேல் வைத்து மேலே ஒரு வஸ்திரம்போட்டு மூடிவிட்டு மாத்திரைக் கோலை கையிலெடுத்து (எக்-தோ-தீன்) [ஒன்-டு-த்ரி) (ஒகடி-ரெண்டு-மூடு) (ஒண்ணு-ரெண்டு-மூணு) என்று காலுந் தலையுமாக எண்ணி அதின் தலைபுறமாக வாயைவைத்து ஓ குட்டிச்சாத்தான் பூச்செண்டு கொண்டுவந்தாயாவென்று கேட்கவும், அப்படி கேட்கும்போது அருகிலிருப்பவர் சபையோருக்குத் தெரியாமல் வந்தேனென்று சொல்லவேண்டும். பின்பு வஸ்திரத்தின் கீழாகக் கையைவிட்டு பொம்மையின் காலின் வழியாக இருந்து ஒவ்வொரு செண்டாக யெடுத்து வெளியில் போடவும் மற்றொருவன் எடுத்து வரிசையாக கொடுக்க பிரமித்து ஆச்சரியப்படுவார்கள். இவ்வாறே அந்த ஒரே பொம்மையைக் காட்டி மற்ற பொம்மைகள் சபையோருக்குத் தெரியாமல் சாமர்த்தியமாய் வரிசையாக யெடுத்து மேற்கூறியவாறு சொல்லி தாம்பூலம் முதலானதுங் கொடுக்கவேண்டும்.

## 3. சபையோர்கக்கு பந்நீர் தெளிக்கும் ஜாலம்.

ஒரு சொம்பில் கிணற்றுஜலம் அல்லது குளத்துஜலம் அல்லது ஆற்று ஜலம் அல்லது குழாஜலம் இவைகளில் எந்த ஜலமேனும் கொண்டுவந்து ஜாலம் ஆடும்சபையில் வைத்து பந்நீர் சொம்பைத்திறந்து கொஞ்சம் ஜலம் விட்டு சபையோர்களின்மேல் தெளித்துக் கேட்டால் வெறும் தண்ணீரென் பார்கள். அப்போது சபையைப்பார்த்து யாரோ கட்டிவிட்டார்களென்று சொல்லி விபூதியை யெடுத்து சல் மலையாள பகவதி கட்டை விலக்கு எதிரியைத்தாக்கு பகையாளியைக்கொல்லு திக்குக்கட்டு திசைக்கட்டு பூமிக்கட்டு ஆகாயக்கட்டு உடலைக்கட்டு இடைவிடாமல் இங்கையேயிரு, சல் இந்த நல்ல தண்ணியை பந்நீராக்கு என்று விபூதியை யெடுத்து அந்தத் தண்ணீரில் போட்டு கலந்துவிட்டு சொம்பில் ஊத்தி தெளித்துவிட்டால் குபீலேன்று வாசனை வீசும். ஆனால் தண்ணீரில் போடப்போகும் விபூதியில் முன்னதாகவே அத்தர்பில்லையை பொடிபண்ணி மிச்சமாகக் கலந்திருக்கவேணும்.

## 4. ரோஜா அத்தர் செய்யும் வித்தை.

ஓர் மட்பாத்திரத்தில் தூசியில்லாத ரோஜா இதழ்களைப்பரப்பி அவைகள்மேல் இதழ்கள் மறையும்படியான ஊற்றுஜலத்தைவிடவும் பாத்திரத்தை எப்போதும் சூரியகிரணத்தில் வைத்துவைக்கவும் 4-அல்லது 5-நாட்களில் தைலபிந்துகள் தண்ணீர்மட்டத்தின்மீது மிதக்கும் இதுதான் அத்தரென்பது இத்துளிகளை பஞ்சியினுல் சேகரித்து சிறிய புட்டியில் அடைத்துவைத்துக்கொள்ளவும் அத்தர் தென்படுகிறவரையில் இதை உபயோகித்த பிறகு புதிய இதழ்களை உபயோகித்துக் கொள்ளவேண்டியது. ஒருதோலா அத்தர் செய்யும் பட்சத்தில் குறைந்தது 60-ரூபாய் லாமங் கிடைக்கும்.

## 5. கண்களில் மணலைக் கோட்டிக்கொள்ளும் ஜாலம்.

எத்தைச் சொன்னாலும் கேட்கும் நத்தைச்சூரி என்கிற வேரைக்கொண்டுவந்து கொஞ்சம் சிறியதுண்டாய் வாயில்போட்டு அடக்கிக்கொண்டு சபையில் நின்று ஆத்துமணலை அள்ளி இரண்டு கண்களிலும் போட்டுக்கொண்டால் கண் அருகாது சபைபோர்களுக்குக் காட்ட ஆச்சரியப்படுவார்கள். உடனே சல் மலையாளபகவதி கீழே விழுந்துவிடும். சபையோர்கள் மகா மந்திரமென்று மயங்குவார்கள்.

## 6. இந்தியா ரப்பரை கரைக்கும் வித்தை.

ரப்பர் ஸ்டாம்பு செய்வதிலும் தண்ணீர்ஒட்டா துணிசெய்வதிலும் ரப்பரென்று வழங்கும் இந்தியா ரப்பர் கரைக்கப்பட்டு உபயோகப்படுத்தப்படுகிறது ரப்பரின்மீது மீதிலே டெட்ஸ்ரிபிட் பிட்ரோலியம் ஸ்பிரிட் இவைகளை ஊற்ற கரைந்துவிடும்.

அச்சுப்பிரதிகளை முட்டைவடிவாகவே அல்லது எப்படி யிஷ்டமோ
அவ்விதம் அடுக்கிக்கொண்டு அதன்மேல் அதை செவ்வையாய் மூடிக்கொள்
ளும்படியான அரக்கை கனமாக தட்டையாய் காய்த்துக்கொண்டு செவ்வை
யாக கழுவப்பட்டு தேங்காயெண்ணெய் தடவப்பட்ட அச்செழுத்துப் பட்ட
ரையின்மேல் அழுத்தி எழுத்துகள் அரக்குப்பட்டவரையில் பள்ளமாகத்
தெரியும் அரக்குப் பட்டரைக்கு கரைக்கட்டி ரப்பர் குழம்பை ஊத்த பள்ள
ங்களில் ரப்பர் பாய்ந்து முத்திரை செவ்வையாய்த் தெரியும் பிறகு இந்தமுத்
திரையை மரம்படிகளிலாவது பித்தளைப்படிகளிலாவது அமைத்துக்கொள்
ளவும் ஹஸ்தலிகிதம்போல்செய்வதற்கு ஈயத்தகட்டில் எழுத்துகளை செது
க்கி அதில் ரப்பரை ஊற்றி செய்துக்கொள்ளலாம்.

## 7. ஒரு பசுவில் இரண்டுவிதம் பால்கறக்கும் ஜாலம்.

பசுவை சபைக்குக் கொண்டுவாருமுன்னம் சித்திரமூலமென்ற வேரை
பச்சையாகக் கொண்டுவந்து அரைத்து ஒரு கொம்பில் பூசிவிட்டு சபையில்
கொண்டுவந்து நிறுத்தி கரக்க பூசுனபக்கம் இரத்தமாகக் கரக்கும் மற்ற ஒரு
பக்கம் எப்போதும்போல் வெளுப்பாக விருக்கும் மறுபடி இரண்டையும்
வெளுமையாக்க வேணுமென்றால் வேர்பூசின கொம்பை ஜலம்விட்டு கழுவி
விட்டு கரக்க நாலுமுலையும் வெளுமையாகக்கறக்கும் கண்டவர்கள் கண்கட்
டுவித்தையென்று ஆச்சரியம்படுவார்கள்.

## 8. மரத்தை உளுக்காமலும் சேத்துப்போகாமலும் செய்யும் வித்தை.

பந்தக்கால்கள் முதலியவை உளுத்தும் செல்லடிக்கப்பட்டும் செத்துப்
போய் விடுகின்றன. காய்ச்சின அல்லிவிதையின் எண்ணெயுடன் பொடி
த்தக் கரியைக்கலந்து கம்பங்களுக்குப்பூச எத்தனை வருடம் மண்ணிற்கிடந்
தாலும் இரும்புபோல் வலுவாயிருக்கும்.

## 9. தேங்காயுடைத்து உள்ளே முட்டைகாட்டும் ஜாலம்.

முத்தினதாக ஒரு தேங்காயைக் கொண்டுவந்து மூன்றுகண்ணில் ஒரு
கண்ணை துவாரஞ்செய்து குடிமை பிக்காமல் வைத்துக்கொண்டு ஒரு கோழி
முட்டையை சீமை காடியில் ஒருநாள் முழுமைக்கும் ஊறவைத்து கையி
லெடுத்தால் ஜவ்வைப்போல் நிகளும் அதை உள்ளே விட்டுவிட்டால் எப்
போதும்போல் முட்டையாகிவிடும். ஆனால் துவாரஞ்செய்து தேங்காயிலு
ள்ள ஜலத்தை முன்னதாகவே கொட்டிவிட்டு முட்டையை விட்டவுடன்
நல்லஜலம் விடவேண்டியது. துவாரத்தை மெழுக்கால்மூடி சபையோர்க்கு
நன்றாய்காட்டி பின்பு சல் மலையாளபகவதி இந்த தேங்காயிற்குள்ளே முட்
டை உண்டாகக்கூடுமென்று உடைத்து முட்டையைக்காட்ட சபையோர்கள்
ஆச்சரியப்படுவார்கள்.

## 80. தீபம் இல்லாமல் கர்ப்பூரம் கோளுத்தும் ஜாலம்.

திமிர் பாஷாணத்தை ஒரு சிறிய சீஸாவில் போட்டு ஜலம்விட்டு வைத்துக்கொண்டிருக்க வேண்டும் ஜாலமாடும் சபைக்கு வருமுன்னமே அந்த பாஷாணத்தின் சிறுபயரளவு வாயில்போட்டு அடக்கி வைத்திருந்து ஒரு கெச்சக்காய் பிரமாணம் கற்பூரத்தை சபையோர்க்கு முன்பாகவைத்து சகல சாமளாதேவீ இந்த கற்பூரத்தை கொளுத்திவிட்டுப் போடியென்று விபூதியை யெடுத்து கற்பூரம் மறையும்படியாகப் போட்டு சு பத்திரக்காளி யென்று வாயருகில் வலது கையைக் கொண்டுபோய் பாஷாணத்தைக் கையில் உமிந்துக்கொண்டு மறுபடியும் கொஞ்சம் விபூதியெடுத்து போடுவதுபோல் பாஷாணத்தை கற்பூரத்தின்மேல் வைக்க பாஷாணத்தின் ஈரம் வாங்கினவுடன் கற்பூரம் குபீலென்று யெரியும். சபையோர் இது அக்கினிதேவன் வசியமென்பார்கள்- ஆனல் பாஷாணத்தை தண்ணீரிலேயே போட்டு வைக்கவேண்டும்.

## 11. கோழிமுட்டை பறக்கும் ஜாலம்.

கோழிமுட்டையைக் கொண்டுவந்து சிறியதுவாரஞ்செய்து அதிலுள்ள பாதி அம்பியிவை ஊத்திவிட்டு பாதரசம் அறைபலமும் பனித்தண்ணீர் கொஞ்சமும்விட்டு துவாரத்தை காயிதத்தால் மூடிவிட்டு வெய்யலில்வைக்க சூடு ஏரயேர அந்திரமாகப் பறக்கும் கண்ட ஜெனங்கள் இது அந்தரதேவதை வசியமென்று ஆச்சரியப்படுவார்கள்.

## 12. வயலேட் இங்கிசெய்யும் வித்தை.

நாலு அவுன்சு சாயக்கட்டையை ஒண்ணறை பையிண்டு தண்ணியில் போட்டு முக்கால்பைண்டு ஆகிறவரையும் காச்சவும் பிறகு வடிக்கட்டி யெடுத்துக்கொண்டு அதில் முக்கால் அவுன்ஸ் சேர்ந்தும் ஒண்ணேகால் அவுன்ஸ் படிகாரமும் சேர்த்துக்கொள்க வேண்டும்.

## 13. முறத்தில் நெல்லுபோறி போறிக்கும் ஜாலம்.

பக்சை நெல்லை கொண்டுபோய் சுண்ணும்புக் கால்வாயருகில் சுண்ணும்பு ஜல்லிகொட்டி தாளிக்குமிடத்தில் கொஞ்சம் மண்ணைத் தோண்டிகொண்டுபோன நெல்லைக் கொட்டிப் பரப்பி மேலே மண்ணைப்போட்டு மூடிவிட்டு பின்பு அதன்மேல் சுண்ணும்புஜல்லி தாளித்தவுடனே இதை வாரிக்கொண்டுவந்து பத்திரப்படுத்தி ஜாலம் ஜடும் சமையத்தில் இந்த நெல்லில் கொஞ்சமெடுத்து முறத்திலாவது துணிசவுக்கத்திலாவது போட்டு சபையோர்களுக்குக் காட்டி சல் மலையாளபகவதி ஓடிவா ஓடிவா இந்த நெல்லை பொரி பொரியடி யென்றுசொல்லி கொஞ்சம் தண்ணீரை நெல்லின்மேல் தெளித்து கையினுல் வரக்க பளபளவென்று பொரியும் சபையோர்கண்டு அது எட்சணி வித்தையென்று நிச்சயிப்பார்கள்.

## 14. மணலே அலுவா செய்யும் ஜாலம்.

சீனி கற்கண்டு பலம்-1 பாதம் பிசினி பலம் ஒண்ணறை குங்குமப்பூ விராகனிடை அரிக்கால் இம்மூன்றையும் மணல்போல் தூளாகச்செய்து வைத்துக்கொண்டு ஜாலமாடும் சபையில் ஒரு பீங்கானுல் மணலேப்போட்டு அனைவருக்குங் காட்டி இந்த மணலே அலுவா செய்கிறேன் பாருங்களென்று துணியை மேலேபோட்டுமூடிவிட்டு சபையோர்களுக்குக் காண்பித்தமணலே கீழே மறைத்துவிட்டு இந்த அலுவா தினுசை சோல்னுவில் வைத்திருந்து மகா தந்திரமாக யெடுத்துப் பீங்கானில்போட்டு மறுமடியும் துணியைத்திறந்து காண்பிக்க மணம்போலவே யிருக்கும் உடனே கொஞ்சம் ஜலம் வார்த்து சல் மலேயாளபகவதி அலுவா செய்யடியென்று மறுபடியும் துணியைப் போட்டு மூடிவிட்டு சற்றுநேரம் பொறுத்து மேல்மூடிய துணியை வாங்கிப் பார்த்தால் அல்வாபோல் பந்தனையாக விருக்கும். அதை மேஜைகத்தியாலறுத்து சபையோர்களுக்குக் கொடுக்கலாம். இதை மகா தந்திரமாக செய்யவேண்டியது. மந்திரமென்றே நம்புவார்கள்.

## 15. இரகசிய இராயச இங்கிவித்தை.

கடிதத்தில் எழுதும் சங்கதி இரகசியமாக யிருக்கவேணுமாகில் எழுத்துகள் தெரியாமலும் நமக்கு வேண்டியவர்களுக்கு தெரியும்படியாயும் இருக்கவேண்டும் இதற்கு முக்கியமாய் பொடிசெய்த படிகாரத்தை ஜலத்தில் போட்டு யெழுதினல் தெரியாமலிருக்கும் வெய்யலில்வைக்க எழுத்துகள் கறுத்து கண்களுக்குப் புலப்படும் ஆச்சரியமாகவிருக்கும்.

## 16. சுட்டபோளியை புடச் சுட்டுகுருவி பறக்கும் ஜாலம்.

ஒரு சுட்டுக்குருவியைப் பிடித்துவந்து அதன் கண்களில் படாமல் கண்ணைக் கையினல்மூடிக்கொண்டு உயர்ந்த ஒயின்சாராயத்தை கால்முதல் தலைவரைக்கும் ஊத்தினைத்து கோதுமிமாவில் கனத்த போளிபோல் செய்து அதனுள் சுட்டுக்குருவியைவைத்து சுத்தி வாயைமூடி தயார் செய்துவைத்துக்கொண்டு அடுப்புமூட்டி கடாவியைவைத்து நல்லெண்ணெய் ஊத்தி எண்ணெய் காய்ந்தவுடன் போளியைசுட்டு இதனுள்ளிருக்கும் குருவி சாகாமற் பறக்கும்படி செய்கிறேன் பாருங்களென்று உடனே அந்த போளியை காய்கின்ற எண்ணெயில்போட்டு ஒரு பிரட்டுபிரட்டி சல்லிக்கரண்டியில் சடுக்கென்று யெடுத்துக்கொண்டு உடனே போளியை கையிலெடுத்துப் புட விர்ரென்று குருவியானது பறக்கும் ஆச்சரியப்படுவார்கள்.

## 17. பலவித பழத்தின்சாரம் காட்டும் வித்தை.

பழங்கள் எப்போதும் அகப்படுவதில்லை அவைகளின் சாரத்தையும் வாசனையும் இரக்கிக்கொள்வது மிக அவசியமான விஷயம் எலுமிச்சம்பழம் இலந்தம்பழம் விளாம்பழம் முதலியவைகளின் சாரத்தை பின் வருமாறு

வருமாறு எடுக்கலாம் தோல் அல்லது ஒட்டைநீக்கி ஆல்கஹால் என்னும் திராவகத்தைவிட்டு கரைத்து பிறகு வடிகட்டி வைத்துக் கொள்ளவேண்டும்.

## 18. பந்தங்கொளுத்தி வாயினுள் வைக்கும் ஜாலம்.

சபைக்கு வருகுமுன்னே கால்பலம் கற்பூரத்தை வாயில்போட்டு மென்று வாயெல்லாம் நன்றாய்ப் படும்படியாய் குழப்பி அப்பிவிட்டு பந்தங்கொளுத்தி வாயில் போட்டுக்கொண்டால் பார்ப்பவர் ஆச்சரியப்படுவார்கள் வாய்சுடாது.

## 19. லவங்கப்பட்டை தைலமுதலியவை யிறக்கும் வித்தை

லவங்கப்பட்டை அல்லது லவங்கத்தை செவ்வையாய் பொடிசெய்து அத்துடன் கொஞ்சம் ஜல சம்பந்தமான ஆல்கஹாலை விட்டு இரண்டுவாரம் கலக்கி வடிகட்டி இஷ்டப்படி வர்னம்போட்டு வைத்துக்கொள்ளலாம்.

## 20. தேள்கொட்டினுல் விஷமேறாதிருக்கும் ஜாலம்.

நாயிற்றுக்கிழமைதினம் சூரியன் உதயமாகுமுன் சென்று கருங்கருணைசெடிக்கு தூபங்கொடுத்து சூடங்கொளுத்தி வைத்து நூலில் மஞ்சள்தடவி அச்செடிக்குக் காப்பு கட்டிவிட்டு அன்று சாயந்திரம் சென்று அந்தச்செடியை பிடுங்கி அடிவேரை அறுத்து மோதிரம்போல் சுற்றியாவது விரலில் போட்டுக்கொண்டு தேளைக்கொட்டவிட்டு வேடிக்கைக் காட்டலாம் விஷமேறாது.

## 21. வயற்றைக்கீறி நூலுருவும் ஜாலம்.

ஜாலமாடும் சபைக்கு வருகுமுன்னமே மானிணுடைய ஜவ்கொண்டுவந்து சதரத்திற்குச் சதரமாய் நாலு அங்குலம் அளவு யிருக்கும படியாய் ஒரு துண்டை எடுத்து அதின்மத்தியில் பாதி உண்டைநூலை அந்த ஜவ்வின் நடுவில்வைத்து நூல்படாமல் சுற்றிலும் விளாம்பிசினிபூசி இடதுபக்கமாயாவது வலதுபக்கமாயாவது வயற்றின் தொப்புளுக்குப் பக்கத்தில் நூலை உள்ளேவைத்து ஒட்டிவிட்டால் உடம்போடு ஜவ்வும் ஒன்றாய்க்கலந்துவிடும் பார்ப்பவர் கண்ணுக்குத் தெரியாது கொஞ்சம் நூலையெடுத்து கொளுத்தி அந்தசாம்பலை வாயில்போட்டு முழுங்கிவிட்டு இப்போது முழுங்கியச் சாம்பலை நூலாக்கி யெடுக்கிறேன் பாரென்று ஒட்டினயிடத்தில் நூல்முனையை கத்தியால்கீறி சல் மலையாளபகவதி நூல் ஓடிவாயென்று நூல் முனையைப்பிடித்து யிழுத்தால் நூல்வரும் பார்க்கும் சபையோர்களெல்லாம் வயிற்றிலிருந்துதான் நூல்வருகுதென்று ஆச்சரியப்படுவார்கள் நூல் ஒட்டும்போது முனையை அடையாளமாகப் பார்த்து வைக்க வேண்டியது.

## 22. மஹௌஷத தீதிபிகை வித்தை

பாஸ்வோரிக் லேட்ஸ்என்று ஆங்கிலேய பாஷையில் வழங்கும் ஔஷதிதீபிதை ரகுவம்சம் ஒன்பதாவது அத்தியாயம் எழாவதாவது சுலோகத்தில் சொல்

லப்பட்டிருக்கிறது உலர்ந்த பாஸ்பரஸ் ஒருபங்கும் ஈதர் திராவகம் 6-பங்கும்கல ந்து ஒருபுட்டியில்போட்டு சடையால் (கார்க்) மூடி வென்னீரில் 8-மணிநேரம் வைக்கவும் வெளிச்சம் வேணும் சமையத்தில் மூடித்திறக்க வெளிச்சந்தெரியும் உடனேமூடிவிடவேண்டும். இது ஒருவருஷத்திற்கு வரும்.

### 23. துணியைக்கோளுத்த வேகாதிருக்கும் ஜாலம்.

ஒருசவுக்கத்தை சாராயத்தில் தோய்த்து சபையில் வைத்துக்கொளுத்தி விட்டால் குபீலென்றுயெறியும் அணைந்தபின் சவுக்கத்தை எடுத்து சபையோர் கள்முன்னே உதரி காண்பிக்க ஆச்சரியப்படுவார்கள் அக்கினிபகவான் வசிய மென்பார்கள்.

### 24. நெருப்பு பிடிக்காத் துணிசெய்யும் ஜாலம்.

முட்டையிலிருக்கும் வெள்ளை சிசுரையும் படிகாரத்தையுங் கலந்து குட் டைக்குப்பூசி உப்புக்கலந்த ஜலத்தில் தோய்த்து உலர்த்த நெருப்புண்டாகாது.

### 25. கோழிமுட்டையை மந்திரித்துவிடும் ஜாலம்.

வெள்ளைகுண்டுமணி செடியைக்கண்டுபிடித்து அதன் வடக்கோடியிருக்கும் வேரும் வெள்ளை மாடப்புரா பிச்சும் பொன்னறிதாரமும் பாவட்டையிலையும் சமனிடையாய்சேர்த்து அறைத்து முட்டைமீதில் தடவி முன்னதாக வைத்துக் கொண்டிருந்து ஜாலமாடும் சபையில் முட்டையை எடுத்துக் காண்பித்து இந்த முட்டையை புரளும்படி செய்கிறேன் பாரென்று வாசலில் விட்டால் வாசல் முழுவதும் புரண்டுக்கொண்டேவரும் பார்ப்பவர் பிர்மிப்பார்கள்.

### 26. தண்ணீா ஒட்டாத துணிசெய்யும் ஜாலம்

மெழுகுடன் குங்லியத்தைக் கலந்து காய்ச்சி அதில் துணியை நனைத்து உலர்த்தியெடுக்க மெழுகு சீலையாகும்.

### 27. மரக்கிளி பரக்கும் ஜாலம்.

மரத்தினல் கிளிபோல்செய்து வர்னம முதலானதும் உன்னதமாகப் பூசி இரக்கைமாத்திரம் மெல்லிய இரும்புத்தகட்டினலே கத்தரித்து அதற்குக்கீலுகள் வைத்து இரக்கையாடும்படியான தந்திரத்தோடுதொடுக்கவும் ஒவ்வொருபக்கமும் பாதி இரக்கைக்குமாத்திரம் பலவிதவர்னம் பூசியிருக்கவும் நடிக்கும்போது காந் தமிருக்கிற வீட்டில்சென்று இதோ மந்திரத்தினல் செய்தகிளி அந்தரமாகபற க்குமாவென்றுசொல்லி ஆகிலும் ஒரு மந்திரம் போடுகிறேன் பாருங்களென்று சொல்லி விபூதியெடுத்து மேலுங்கீழுமாக முழித்துப்பார்த்து சல் மலையாளபக வதி ஓடிவா சபையில்வந்து சற்று நில்லென்று நான்குதிக்கிலும் விபூதிபோட்டு

இந்தக்கிளியை உள்ளங்கையில் வைத்து ஏந்ினால் மேலுக்குக்கிளம்பும் கைக்கு எட்டினவரையில் போகும்போது மறுபடியும் எடுத்து முன்போல் ஏந்தவும் மறுபடியுமப்படியே கிளம்பும் பார்ப்பவர்களெல்லா மந்திரஞ்செய்தானென மயங்குவார்கள்.

### 28. பனிக்கட்டிசெய்யும் ஜாலம்.

ஒருமெல்லிய கண்ணாடி கோளத்தில் (பால்) கொஞ்சம் சலத்தைவூற்றி அந்த உருண்டைமையை சல்பியூரிக் ஈதர் என்னும் திராவகத்தால் நனைத்துக் கொண்டுவர சலம்கட்டி பனிக்கட்டியாகும்.

### 29. கசகசாவில் மீன் உண்டாகும் ஜாலம்.

கடலோரம் சென்று சூரியன் உதயமாகுமுன் பிடிக்கும்படியான சினையுடைய மீனைப்பார்த்து வாங்கிக்கொண்டுவந்து அந்தமீனைக்கீறி சினையெடுத்துஇரவில் பனியில் வைத்து பகலில் சூரியன் கிரணம்படாத நிழலில்வைத்து உலர்த்தி பதினெந்தாம் நாள்சென்றபிறகு சினையையுதிர்த்து கசகசாவில் கலந்து வைத்துக்கொண்டிருந்து சாலமாடுஞ்சபையில் ஒருபோவணியில் ஜலங்கொண்டு வரும்படிசெய்து இந்த கசககாவை கையிலெடுத்து சபையோர்களுக்குக்காட்டி இதை மீனுக்குகிறேன் பாரென்று சலத்தில்போடஉடனே உயிருடன் மீன்உண்டாகும்

### 30. அறுதத ஆட்டுதலை கற்றும் ஜாலம்.

கொம்பில்லாத ஆட்டுத்தலையை வாங்கிவந்து பக்குவமாய்மண்டை ஓட்டை கிளப்பி மூளையெல்லாம் எடுத்துவிட்டு வெத்திலை தோட்டத்திலிருக்கும் தவளையைக்கொண்டுவந்து தலையுள்ளேவைத்து மண்டையோட்டுக்கு வஜ்ஜிரந்தடவி ஒட்டிவிட்டு காய்ந்தபிறகு கழுவி மஞ்சள் குங்கமமிட்டு வாயில் ஒரு எலுமிச்சம் பழத்தை சாம்பிராணி தூபம்போட்டு அந்ததலை நாசில் புகையேறும்படியாய்க் காட்டினால் ஆட்டைப்போலவேகற்றும் நாசி துவாரத்திற்குச் சரியாய் தவளையின் முகத்தை வைக்கவும்.

### 31. இங்கிப்போடி செய்யும் ஜாலம்.

மாசிக்காய் 5-அவுன்சு காசிக்கட்டி 1-அவுன்சு அன்னபேதி2-அவுன்சு சோந்து அரைஅவுன்சு இவைகளைப்பொடிசெய்து வைத்துக்கொள்ளவும் தேவையானபோது கொஞ்சம் எடுத்து புட்டியில்போட்டு சலம்விட்டெழுதலாம்.

### 32. தீபமேற்றிவைதது வீடுமுழுதும் பச்சைப்பாம்பு காட்டும் ஜாலம்.

தேங்காய் ஒன்றுகொண்டுவந்து ஒருகண்ணை துவாரஞ்செய்து வெள்ளிக்கிழமைதினம் தேடிப்பச்சைப்பாம்பைக் பிடித்துக்கொண்டுவந்து தேங்காயினுள் விட்டு கெட்டியாய் துவாரத்தைமூடி பிறகு தூபதீபங்கொடுத்துப் பூமியைத்தோ

ண்டி புதைத்துவிடவேண்டும் ஏழுநாள் சென்றபிலகு அதைத்தோண டியெடுத்து
தேங்காயின்மேல் ஓட்டைப்போக்கி மற்றவைகளை கல்வத்திலிட்டு அறைத்து
வழித்து புதுபாண்டத்திலிட்டு சீசாவில்பதனப்படுத்தி வைத்துக்கொள்ளவேண்
டியது ஜாலம் ஆடும் சமையத்தில் ஒரு திரியில் அந்த தைலத்தை தோய்த்து அக
லில் வைத்துக்கொளுத்தி பார்க்க வீடெங்கும் பச்சைப்பாம்பாக இருக்கும்.

### 33. கோழிமுட்டை தண்ணியில்மேயும் ஜாலம்.

ஒரு கோழிமுட்டையைக் கொண்டுவந்து சிறிய துவாரஞ்செய்து அதனுள்
ளிருக்கும் அம்பிலி முதலானதும் போக்கிவிட்டு அட்டையை அதனுள்விட்டு
துவாரத்தை தண்ணீர் எட்டாதமெல்லிய சீலையில்மூடிவிட்டு கோழிமுட்டைகிரு
கிருவென்று சுழன்று நாலுபக்கமும் ஓடும் கண்டவர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

### 34 பூமியில் புதைததமுட்டை மாயமாய்ப்போகும் ஜாலம்.

ஒரேகட்டியாக ஒருபலம் படிகாரத்தை நிறுத்தெடுத்து நெருப்பில்போட
அது பொசபொசவென்று பொங்கி பூர்த்தவுடன் அதையெடுத்துப்பேணுகத்தி
யினுல் பக்குவமாக முட்டையைப்போல் நைசாகச் சீவிவைத்துக்கொண்டு ஜால
மாடும்சபையில் வேறுமுட்டையைக் கையிலெடுத்து சபையோர்களுக்குக்காட்டி
இந்தமுட்டையை புதைத்துவிடுகிறேன் மறுபடியும இந்தமுட்டையை யெடுத்து
கொடுப்பார்களாவென்று பந்தயங்கூறி சல்மலையாளபகவதி தந்திரமாக படிகார
முட்டையை எடுத்து அனைவருக்குங்கணபித்து பூமியில் கொஞ்சம் தண்ணீர்
தெளித்து சற்றுநேரங்கழித்து தோண்டிப்பார்க்க முட்டைமாயமாய்ப் போகும்
கணடோரெல்லாம் ஆச்சரியப்படுவார்கள்.

### 35. பாததுமுட்டை குதிககும் ஜாலம்

ஒரு பாத்துமுட்டை நல்லதாக கொண்டுவந்து அதின்மேல் சாணம் தடவி
வைத்துக்கொண்டு பிறகு கூளியிறகு கொண்டுவந்து அந்த இறகின் அடிபுறத்தில்
இறண்டங்குலம் துண்டு துனித்தெடுத்து அதின்நிறைய பாதரசத்தைவிட்டுஅதின்
வாயை மெழுகால்மூடி தயார்செய்துவைத்துக்கொண்டு ஷெ முட்டையை நல்ல
தீயுள்ள அடுப்பில்போட்டு நன்ருய் வெந்து சூடெழும்பியவுடன் சடுக்கென்று
முட்டைஎடுத்து மேலுள்ள சாணத்தைநீக்கிஉடனே ரசம்விட்டுவைத்திருக்கும்
கூளியின்இறகை முட்டையின்உள்ளே சொருவிட் குடுள்ளமட்டும் குதிக்கும்
கண்டவர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

### 36. காகிததில் பலகாரம் சுடும் ஜாலம்

நல்ல திடத்த கடு தாசியை யெடுத்து தொன்னை போல் ஒட்டி தேரிவ
பிரண்டையைக் கொண்டு வந்து மைபோ லரைத்து தொன்னையின் பின்புறத்

தில் நான்குபூசு நன்றாய்ப்பூசி காயவைத்துக்கொண்டு சாலமாடும் சபையில் மூன்று சிறுகல்லே அடுப்பின்மேல் வைத்து நல்லெண்ணெவிட்டு எண்ணெ காய்ந் தவுடன் அப்பளம் பணியாரம் இன்னும் பலவிதமான பலகாரமுஞ்சுடலாம் ஆனுல் கூடியசீக்கிரத்தில் சுட்டுக்காட்டவேண்டும் பொரண்டை அறைக்கும் போது கைவிரல்களுக்கு விளக்கெண்ணெ தடவிக்கொள்ள வேண்டும்.

## 37. ஒருமணிநேரத்திற்குள் கேழ்வரகு பயிரிட்டு கதிரறுக்கும் ஜாலம்

அவயத்திருக்கும் தலேக்கோழிமுட்டைக் கொண்டுவந்து அரிசிபுகும்படி யான துவாரம்செய்து அதனுள்ளிருக்கும் அம்பிலி முதலானதும்போக்கிவிட்டு அதின் நிறையகேழ்வரகை நிறப்பி துவாரத்தை காயிதத்தால் மூடி முன்போல் கோழியின் அவயத்தில் வைத்துவிடவும் அதுகுஞ்சிபொரிக்குந் தருணத்தில் மேற்படி முட்டை கண்டுபிடித்து யெடுத்துவந்து பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ளவும் ஜாலம் ஆடுஞ்சபையில் எருவு சேர்ந்தமண்ணைக்கொட்டி பாத்தி கட்டி ஜலம்விட்டு பிறகு மேற்படி கேழ்வரகு கையிலெடுத்து அனைவருக்குங் காட்டி அந்த பாத்தியில் விதைத்து மேலே அணியைப்போட்டு மூடிவிடவும் ஒருமணி நேரம்பொருத்துத்திறந்துபார்க்க பயிர்வளர்ந்து கதிர்விட்டிருக்கும் கண் டவர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

## 38. தீபத்தைப்பார்த்தவுடன் கூத்தாடுஞ் ஜாலம்.

ஞாயிற்றுக்கிழமைதினம் இரட்டைவால் பல்லியை தேடிக்கண்டவுடன் அருணக்கயர் முதலானதும் அறுத்துவிட்டு நிர்வாணமாக நின்றுகத்தியால் அந்த பல்லியின்வாலேத்துண்டிக்க அது கீழே விழுந்து அடிக்கும் அப்போது நீ நசிமசி யென்றுசொல்லிக்கொண்டே உன் இஷ்டம்போல் கூத்தாடி வால் துடிப்பு அடங்கினவுடன் அருணகயர் ஆடைமுதலானதும் உடுத்திக்கொண்டு வாலே யெடுத்து பத்திரப்படுத்தி வைத்துக்கொண்டு ஜாலமாடுஞ்சபையில் மெல்லிய வெள்ளேசீலேயில் வாலேவைத்து திரிபோல்செய்து வேப்பெண்ணெயில் தோய் த்து அகலிலிட்டு தீபமேற்றிட அதைபார்த்தவர் களெல்லாம் தங்கள் மனம்போல் கூத்தாடுவார்கள் தீபத்தை அணேத்துவிட்டால் ஆட்டம்நின்றுவிடும் ஆனுல் வாலி தீபடாமல் ஒரு அங்குளம் உள்ளேவைத்து சுற்றவேண்டும்.

## 39. தேவர்களே காட்டும் ஜாலம்.

நில்லேப்பால் கொண்டுவந்து அத்துடன் திமிரிபாஷாணம் சேர்த்து குழப் பிவைத்துக்கொண்டு இருட்டாக இருக்கும் ஓர் வீட்டில் முச்சியைக் கொண்டா வது அல்லது தானுவது சிறிய புருசினுல் மேற்படி பாலேக்கொண்டு அந்த அறை

குள் செவிற்றில் மும்மூர்த்திகள் போலும் தேவர்கள் போலும் யெழுதிவிட்டு பார்க்க பளபளவென்று பிரகாசமோடு தோற்றும் கதவை மூடிக்கொண்டு வெளியில் வந்துவிடவும் பிறகு தனக்கு இஷ்டமான பெயர்களை அழைத்து இதோ இந்த வீட்டில் தேவர்கள் முதலானவர்களைக் காண்பிக்கிறேன் பாருங்களென்று அனைவரையும் அழைத்துக்கொண்டுபோய் அறைதிறந்து காண்பிக்க தேவர்களெல்லாம் சூரியபிரகாசம்போல் தோற்றப்படுவார்கள் அப்போது பார்த்தவர்கள் யாவரும்பிர்மித்து மதிமயங்கி நிற்குந்தருணத்தில் கொஞ்சம் கற்பூரத்தை கொளுத்திவைத்து தேவர்களே தங்கள் தங்கள் யிருப்பிடம் போவீர்களென்றுசொல்ல வேண்டும் வெளிச்சங் கண்டவுடன் யெழுதியது தோற்றப்படமாட்டாதுவெளிச்ச மிருக்கும்போதே யனைவரையும் வெளியே போகச்சொல்லி கதவை சாற்றிக்கொள்ளவேண்டும்.

## 40. சகலமும் வசியமாகும் ஜாலம்.

கஸ்தூரிமஞ்சள் ஊசிகாந்தம கோரோசனை கிராம்பு பச்சை கற்பூரம் ஜாதிக்காய் இவைகளை வகைக்கு விராகனிடை காலாக யெடுத்து கவ்வத்திலிட்டு பொடிசெய்து வெள்ளையாக விருக்கும் மெல்லிய துணியில் அதைபறப்பி திரிபோல் செய்து வைத்துக்கொண்டு அதன்மேல் கருச்சீலைசுற்றி அதின்மேல் தாமரைநூல் சுற்றி குருவை தியானித்து பிறகு பசுவின் நெய்யை தலைமண்டையோட்டில் விட்டு சிவசிவாவென்று மேற்படி திரியை மண்டையோட்டிலிட்டு விளக்கேற்றி அதில்வரும் மைவாங்கி அத்துடன் புனுகும் ஜவ்வாதும் சமனிடையாகக் கூட்டி மத்தித்து சிமிளில் பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ளவேண்டும் அதன் பிறகு மோகினி தேவதை வசியமாகும்படி மோகினிபூசையும் வாலைபூசையும்செய்ய மந்திரம் ஸ்ரீம் இரீம் கிலியும் அக்ருஷனி மோகினிஎன்று லட்சம் உருவுகொடுத்துவரசுத்தியாகும் அதன்பிறகு மேறபடுமையில் கொஞ்சமெடுத்து நெற்றியில் திலர்தம் வைத்துக்கொண்டு வெளியில்வர சகலமும் வசியமாகும் அன்றியும் தங்கத்தினாலும் வெள்ளியாலும் சிமிழ்குச்சுசெய்து திலர்தம் இட்டுக்கொண்டுபோக தேவதை முதலானதும் ராட்சதர்களும் முனி பூதம் பேய்முதலானதும் ஸ்திரி புருஷாள்களும் வசியமாவதுடன் கேட்டதெல்லாம் தருவார்கள் பகைவிலகும் இந்த மையினால் கீர்த்தியாகிய ஜாலங்கள் செய்யலாம்.

## 41. மறைவுமை ஜாலம்.

ஐங்கோல பிண்டம் வாங்கி அதை சூரணித்து எடுத்து மாதர்கள் வீட்டுதூரவான சீலையில்வைத்து சுருட்டி தைத்துக்கொண்ட பிறகு தலைமண்டையோட்டில் பசுவின் நெய்விட்டு மேற்படி திரியை அதிலிட்டு தீபமேற்றியெறித்து அதில்வரும் மைவாங்கி சிமிளில் பத்திரப்படுத்திவைத்துக்கொண்டு ஜாலமாடிம் சபையில் போய் நின்று மேற்படி மைக்கொஞ்சமெடித்து நெற்றியில் இட்டுக்கொள்ள ஒருவர்கண்ணுக்கும் தோற்றாமல் நிற்பாய் மைய் துடைத்து விட்டால் தோற்றப்படுவாய் அப்போது சபையோர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

## 42. தேங்காய் மந்திரித்துவிடும் ஜாலம்.

ஒரு தேங்காயைக் கொண்டுவந்து குடுமை முதலான துசுளையும்போக்காமல் ஒரு கண்ணை புன்னைக்காய் புகும்படியான துவாரம் செய்து உள்ளிருப்பதை சுரண்டிவிட்டு வீட்டிலுள்ள சுண்டெலியை அதினுள்ளேவிட்டு தேங்காய் பில்லையில் வச்சிரந்தடவி துவாரத்தை மூடிவிட்டு தேங்காய் குடுமையும் வச்சிரந்தடவி தெரியாமல் ஒட்டிவிட்டு மஞ்சள்பூசி குங்குமபொட்டுவைத்து முன்னதாகவைத்துக்கொண்டு பிறகு ஜாலமாடுஞ் சபையோரைப் பார்த்து ஓ சபையோர்களே யாராகிலும் ஒருதேங்காய் கொண்டுவந்து கொடுத்தால் அதை மந்திரத்தால் உருளும்படிசெய்கிறேன் பாருங்களென்றுசொல்லி அவர்கள்கொண்டுவந்து கொடுக்கும் தேங்காயைவாங்கி அதற்கு மஞ்சள்பூசி குங்குமமிட்டு தூபதீபங்கொடுத்து சல்மலையாளபகவதி ஒடிவா என்று தந்திரமாக அவர்கள்கொடுத்த தேங்காயை மறைத்துவிட்டால் முன்தேங்காயைசபையில்விட அது ஒருயிடத்தில் நிற்காமல் உருண்டுக்கொண்டே யிருக்கும் சபையோர்கள் மிரளுவார்கள்.

## 43. நெருப்பில்லாமல் வெண்ணெய் உருக்கும் ஜாலம்

சூளையில் வெந்த கற் சுண்ணாம்பைக் கொண்டு வந்து ஒருவற்குந்தெரியாமல் ஜாலமாடும் சபையில் ஒருயிடத்தில்கொஞ்சம்மண்ணைத் தோண்டி இந்தகல்லைக் கொட்டிமண்ணை மூடிவைத் திருக்க வேண்டும் ஜால மாடும்போது ஒருகிண்ணத்தில் கொஞ்சம் வெண்ணெயைப் போட்டு சபையோர்களுக்கு காண்பித்து இந்தவெண்ணெயை நெருப்பில்லாமல் உருக்குகிறேன் பாரென்றுசொல்லி சுண்ணாம்பு புதைத்தவிடத்தில் கிண்ணத்தைவைத்து சுற்றிலும் ஜலம்விட்டுக்கொண்டுவர வெண்ணெய் கரகரவென்று உருகும் பார்ப்பவர்களெல்லாம் மகா ஆச்சரியமான ஜாலமென்று நினைப்பார்கள்.

## 44. ஒரு கிணற்றில் ஊற்றிய பசும்பாலை மறுகிணற்றில் எடுக்கும் ஜாலம்.

தல்லியமான மெல்லியசீலையில பசும்பால் ஆழாக்கு கறந்துகொண்டுவந்து அந்த சீலையில் கொஞ்சங் கொஞ்சமாக தோய்த்து உலர்த்தி அந்த ஆழாக்குப் பாலையும் சீலையில் எற்றி நன்றாய் உலர்த்தி முன்னதாகவைத்துக்கொண்டு ஜாலமாடும்சபையில் பசும்பால் ஆழாக்கு கறந்து கொண்டுவந்து சபையோர்க்குக்காட்டி இந்தபாலை ஒருகிணற்றில் இறங்கிக்கொண்டுவருகிறேனென்றுசொல்லி அனைவருக்கும் முன்பாக சடுக்கென்று ஒருகிணற்றில் ஊற்றிவிட்டு இதோபார் வேறு கிணற்றில் கொண்டுவருகிறேனென்று மேற்படி சீலையை கோமணமாகக்கட்டிக்கொண்டு கிணற்றிலிறங்கி இந்தசீலையை ஜலத்தில்நனைத்து சொம்பில்பிழிய பாலெல்லாங் கக்கிவிடும் ஆழாக்குப்பால் அளவாக பிழிந்துகொண்டு கிணற்றைவிட்

டு மேலேயேறிவந்து சபையோருக்குக்காட்ட ஆச்சரியப்படுவார்கள் ஆனால்கிண ற்றில் இறங்கும்போது ஒருவரையும் அக்கிணற்றருகில் வராமற்படிக்கு பயமுறு த்த வேண்டும்.

## 45 சீட்டெழுதி ஜலத்தில்போட சுழலுஞ் ஜாலம்.

ஒரு பனம்வோலை யெடுத்துவந்து அதைவாரி ஒரு அங்கலம் துண்டு துண் டித்து அதில் நசி மசி என்றெழுதி இப்புத்தகத்தில் கூறியிருக்கும் வசியமையில் கொஞ்சம் அந்தசீட்டில்தடவி அத்துடன் காதினிலிருக்கும் குரும்பியையெடுத்து நன்றாய் தடவி ஜலத்திற்போட கிருகிருவென்று சுழலும்.

## 46. விளாம்பழம் உருளும் ஜாலம்.

ஒருபழுத்த விளாம்பழத்தை கொண்டுவந்து அதை வாளினால் இரண்டாக அருத்து அதனுள்ளிருப்பதை யெல்லாம் யெடுத்துவிட்டு வீட்டினிலிருக்கும்சுண் டெலியை அதினுள்போட்டு வச்சிரந்தடவி கெட்டியாக ஒட்டி காய்ந்தவுடன் மஞ்சள்பூசி குங்குமமிட்டு முன்னதாக தயார்செய்து வைத்துக்கொண்டு ஜால மாடும் சபையில்சபையோர்களைப்பார்த்து யாராகிலும் ஒரு விளாம்பழம் கொண் டுவந்தால் இந்த சபையில் நடக்கவைக்கிறே னென்றுசொல்ல கொண்டுவந்து கொடுத்தால் அந்த பழத்தை வாங்கி அதற்கு மஞ்சள் குங்கமமிட்டு தூபதீபங் கொடுத்து பிறகு தந்திரமாக அந்தபழத்தை கையிலெடுத்து சபையோர்களுக்குக் காட்டி சல் மலையாளபகவதி நடவென்று வாசலில் விட்டுவிட கடகட வென்று உருளும்.

## 47. எலுமிச்சம்பழமறுக்க இரததங்காணுஞ் ஜாலம்

நல்ல கூறுள்ள ஒரு மேஜைகத்தியில் செம்பருத்திப்பூவின் ரசத்தைப் பிழி ந்து கத்தியில் தளும்பத்தடவி உலாவைத்து இம்மாதிரியாக ஆறுயேழுவிசை தடவி உலர்த்தி முன்னதாகத் தயார்செய்து வைத்துக்கொண்டு பிறகு ஜாலமா டும்சபையில் ஒரு எலுமிச்சம்பழத்தை கையிலெடுத்து சபையோர்களுக்குக்காட்டி இந்தபழத்தை அறுத்து ரத்தங்காட்டுகிறேன் பாருங்களென்றுசொல்லி பழத்தை இடதுகையில்பிடித்து வலதுகையில் மேற்படி கத்தியையெடுத்து கரகரவென்று அருக்க சொரசொரவென்று ரத்தம் ஒழுகும்.

## 48. எலுமிச்சப்பழம் குதிக்கும் ஜாலம்.

ஒரு எலுமிச்சம் பழத்தைக் கொண்டு வந்து அதை எழுத்தாணியால் குத்தி அதில் ஒண்ணரை விராகனிடை பாதாசத்தை விட்டு மெழுகினால் துவாரத்தை யடைத்து அந்தப்பழத்தை வெய்யலில்வைக்க சூடேறின மாத்திரத்தில் தரை யில் நிற்காது செண்டுபோல் எகுரும் அல்லது பூமியில் உருளும் பார்ப்பவர்க ளுக்கு ஆச்சரியமாக விருக்கும்.

## 49. கண்கட்டு மைவித்தை ஜாலம்.

ஒரு ஊர்க்குருவியைப் பிடித்துவந்து பாளத்தைதைத்து கால்களஞ்சுவெண்ணெயும் சேர்த்து குருவியின் வாய்புரமாக உள்ளுக்குச் செலுத்தி வாயை தைத்துவிட்டு சிறுபானைக்குள்வைத்து ஒருபடிதென்னங்கள் அதிலூற்றி அடுப்பேற்றி ஒருவிதவிரகால் எறித்து எட்டொன்றாய்க் கருக்கி பதம்பார்த்து அஸ்தியையும் ரோமத்தையும் நீக்கி மற்றவைகளையெல்லாம் கல்வத்திலிட்டு பேய்கருப்பன்சார் விட்டு சேர்த்தரைத்து மைபோலானபின்பு மெல்லிய சீலையில்தடவி உலர்த்தி திரியாய்சுற்றி தலைமண்டையோட்டில் ஐங்கோலத் தைலம்விட்டு மேற்படிதிரியை அதில் வரும் மையைவாங்கி தைலத்தோடு சேர்த்து இழைத்து ஜாலக்காளை பூசைசெய்து மையைபத்திரமாய் சிமிளில் வைத்துக்கொண்டு இஷ்டம்போல் வித்தையாடலாம்.

## 50. பாம்பு உண்டாகும் ஜாலம்.

ஜாலமாடும் சபையில் பச்சைவைக்கோல் கார் ஒன்றயெடுத்து சபையோர்களுக்குக்காட்டி இந்தவைக்கோலை பாம்பாக்குகிறேன் பாரென்று தந்திரமாக கண்கட்டு மையைத்தடவி கீழேபோட பாம்பாகும் பார்ப்போரெல்லாம் ஆச்சரியப்படுவார்கள்.

## 51. புளியனிலையை குளவியாக்கும் ஜாலம்.

புளியனிலையை ஒருகொத்துக் கொண்டுவந்து சபையோருக்குக் காட்டி இந்த புளியனிலையை குளவியாக்குகிறேன் பாரென்று கண்கட்டுமையைத்தடவி உருவி யிலையைக் கீழேபோட குளவியாகும்.

## 52. வேப்பிலையில் தேளாக்கும் ஜாலம்.

கண்கட்டு மையைத்தடவி வேப்பிலையை உருவி கீழேபோட தேளாகும்.

## 53. சேத்தகுருவியை உயிருண்டாக்கும் ஜாலம்.

எந்தஜாதி குருவியாயிருந்தபோதிலும் செத்துப்போனதைக்கொண்டுவந்து மேற்படி கண்கட்டுமையை அதின் சிரசில்தடவ உயிருண்டாகும். கண்டவர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

## 54. பானை ஓட்டை விராகன் ஆக்கும் ஜாலம்.

பானை ஓட்டை வட்டமாகச்செய்து வைத்துக்கொண்டிருந்து சபையோர்க்குக்காட்டி இந்த ஓட்டை விராகனாக்குகிறேன் பாரென்றுசொல்லி மேற்படி கண்கட்டு மையைஎடுத்து ஓட்டில்தடவிக் கீழேபோட விராகனாகும் கண்டவர்கள் பிர்மிப்பார்கள்.

## 55. சந்தணம் பூசுஞ் ஜாலம்.

மேற்படி கண்கட்டுமையை கையில் தடவிக்கொண்டு மண்ணைக்கிள்ளி ஒருவர்மேல்பூச கெந்தபொடி வாசனைவீசும்.

### 56. அம்மியை நடக்க வைக்குஞ் ஜாலம்.

அம்மியைக் கொண்டுவந்து சபையில்வைத்து இந்த அம்மியை நகரவைக்கி றேன் பாரென்றுசொல்லி மேற்படி கண்கட்டுமையை கொஞ்சமெடுத்து தந்திர மாக அம்மியில்தடவ அம்மிநகரும் ஆச்சரியப்படுவார்கள்.

### 57. கேச்சக்காய் ஒன்ருேடோன்று மோதிக்கோள்ளும் ஜாலம்.

பத்து பதினைந்து கெச்சக்காயையெடுத்து மேற்படி கண்கட்டு மையைத் தடவி பூமியில்போட ஒன்ருெடொன்று மோதிக்கொள்ளும்.

### 58. தேன்ன மரத்தைக்குத்த தேங்காய்விழும் ஜாலம்.

தென்னமரத்தடியில் போய்நின்று மேற்படி கண்கட்டுமையை மரத்தில் தடவிவிட்டு ஜாலக்காளை பூசைசெய்து சல் மலையாளபகவதியென்று மரத்தை ஓங்கிக்குத்த தேங்காய் பலபலவென்று விழும்.

### 59. பாவு சர்க்கரையாகும் ஜாலம்.

தேவையானமட்டும் பசம்பால் கொண்டுவந்து ஒரு பாண்டத்தில் அடுப் பேற்றி யெறிக்க பால்காயும்போது பெருந்தத்திவேரை துடுப்புபோல் செய்து கிளரிக்கொண்டுவந்து பால் நன்ருகக் காய்ந்தவுடன் அடுப்பைவிட்டு இறக்கி ஆற வைத்து புட்டியில்வூத்தி நாலுநாள் பொறுத்துப்பார்க்க சீனிசர்க்கரைபோல் வெள்ளை ஆற்றுமணல்போலிருக்கும் அதைமுன்னதாகத் தயார்செய்து வைத் துக்கொண்டு ஜாலமாடும் சபையில் வெள்ளை ஆற்றுமணலை கொஞ்சங்கையிலெ டுத்து இந்தமண்ணை சர்க்கரையாக்குகிறேன் பாரென்று காட்டி தந்திரமாக ஆற் றுமணலை மறைத்துவிட்டு மேற்படி பால்சர்க்கரையை யெடுத்து அனைவர்க்கும் கொடுத்து சாப்பிடச்சொல்ல சபையோர்கள் சாப்பிட்டு ஆச்சரியப்படுவார்கள் அன்றியும் இதைசெய்து வைத்துக்கொண்டு காலை மாலை இருவேளையும் உச்சிக் கரண்டிபிரமாணம் சாப்பிட்டுக் கொண்டுவர தாதுவிர்த்தியாகும் இந்திரியங் கட்டும்.

### 60. வசிய மூலிகை ஜாலம்.

மிளகு சாரணையின் செடியைக்கொண்டு வெள்ளிக்கிழமையில் காப்புக்கட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து தீபதூபங்கொடுத்து அதின்வேரைக் கொண்டுவந்து பொன்னினல் குளிசம்செய்து வேரை யதனுள் அடக்கஞ்செய்து வலதுகையில் கட்டிக்கொள்ள சகலரும் வசியமாவார்கள் மாதர்களும் மயங்கித்திரிவார்கள்.

### 61. ஜேகவசியமாகும் ஜாலம்.

ஊமத்தை பொன்னுங்கண்ணி செம்முள்ளி கெஞ்சா செங்குவளை பொன்னு வாரை புழுகு பாதரசம் கோரோசனை புல்லாமணக்கு சென்னுயுருவி மூலம் இவைகளை வெவ்வேருகச் சார்பிழிந்து வகைக்குவிராகனிடை யெடுத்து ஒன்ரு கச்சேர்த்து ஆழமுள்ள கல்வத்திலிட்டு மைபோலறைக்கும்போது சிற்றண்ட முடைத்துவிட்டு நன்ருக அரைத்து வழித்து பகவதியை தியானித்துப் பூசித்து

சிமிளில் அடக்கம்செய்து வைத்துக்கொண்டு திலர்தமிட புருஷர்கள் வசியமா வார்கள் கேட்டதைத்தருவார்கள் சிநேகிதமானவர்கள் பிரியமாட்டார்கள் நம் மைத்தேடிவந்து தலைவாசலில் காத்துக்கொண்டிருப்பார்கள் மாதர்கள் வலிய வந்து உறவாடுவார்கள்.

## 62. குருடனுகச் செய்யும் ஜாலம்.

நீரட்டையும் அரசன்பாலும் கொண்டுவந்துச் சீலையில்வைத்துதிரிபோல் சுற்றி எதிரியினுடைய விளக்கிற்போட்டு எறிக்க எதிரியினுடையகண்ணு திருஷ் டிகுறையும் இவ்வாறு நாலு யெட்டு நாளும் அந்தியில் மறவாமல் யெறித்துக் கொண்டுவர இரண்டுகண்ணும் குருடாகப்போகும்.

## 63. பூமியிலிருந்து அக்கினி புறப்படும் ஜலாம்.

கெந்தகத்தையும் அரப்பொடியையும் ஒன்ருகய்கலந்து ஜலம்விட்டு கொஞ் சம் இளவலாகவே உருண்டைசெய்து வெய்யல் உரைக்கும்படியான இடத்தில் பூமியில் ஓரடிப்பள்ளந்தோண்டி புதைத்துவிட்டு சபையோரைப்பார்த்து இந்த இடத்தில் பூமிக்குள்ளிருந்து அக்கினி வரும்படிசெய்கிறேன் பாருங்களென்று சொல்லி புதைத்த யிடத்தின்மேல் மனம்போல ஒரு சக்ரமெழுதி மந்திரம் ஜபிப்பவன்போல் நாலுமணிநேரம் ஜாலம் செய்துக்கொண்டுவர அதற்குள் பூமி படீலென்றுதாயவெடித்து அக்கினிப்பிரவேசமாகும் கண்டவர்கள் பிர்மித்து ஆச் சரியங் கொள்ளுவார்கள்.

## 64. புட்டியில் தீபங்காட்டும் ஜலாம்.

அல்லியமான வெள்ளைபுட்டி ஒன்று கொண்டுவந்து அதில் குண்டுமணி அளவு திமிரிபாஷாணத்தை புட்டியில்போட்டு ஆளிவாயி லெண்ணெயை காச்சி நன்ருகஆற்றி ஆறினபின் மெதுவாய்புட்டியில் ஊத்தி முன்னதாகவைத்துக் கொண்டு ஜாலமாடும் சபையில் இந்தபுட்டியை மேஜைமேல்வைத்து கார்க்குப் போட்டுமூட குபீல் குபீலென்று பிரகாசிக்கும் கார்க்கைத் திறந்துவிட்டால் இருண்டுபோகும் ஆச்சரியப்படுவார்கள் ஆனல் இராத்திரியில் காட்டவேண்டும்.

## 65. புட்டியில் புஷ்பங்காட்டும் ஜாலம்.

ஒரு அள்ளியமாகிய வெள்ளைபுட்டிகொண்டுவந்து அரைப்புட்டி ஜலம்ஊத்தி ஈயபஸ்பம் கொஞ்சம்போட்டு அத்திநாகத்தைகயற்றிலாவது கம்பியிலாவது கட்டி தண்ணியில் தங்கும்படியாய் தொங்கவிட்டு கார்க்குமூடிநாலுநாள் வைத்திருந்து எடுத்துப்பார்க்க மகாவிநோதமாக இருக்கும்பார்ப்போர்கள் ஆச்சரியப்படுவார்கள் ஈயபஸ்பமென்பது சுகர்லெட்டு.

## 66. மோகினி வசியமாகும் ஜாலம்.

சூரியக்காந்திப்பூ செங்கிழநீர்ப்பூ முல்லைபூ கோழியவரைப்பூவெள்ளைகாவ ளையின்பூ செவ்வலரிப்பூ கரிப்பான்சார் இந்தப் பூவையெல்லாம் சார்பிழிந்தி ஓரிடையாக நிருத்தெடுத்து ஒன்ருகச்சேர்த்து அதனுடன் கொம்புத்தேன்விட்டு

கல்வத்திலிட்டு அரைக்கும்போது ஸ்திரியினுடைய மருவும் கொடுஞ்சிலேயும் கூட்டியாட்டி புழுகு பச்சைகற்பூரம் இவை வகைக்கு கால்விராகனெகச் சேர்த்து மைபோலரைத்து சிமிளில் அடைத்து மயானத்திற்கொண்டுபோய் புதைத்து மோகினியை தியானித்து ஸ்ரீம் இரீ கிலியும்என்று மூன்றுநாளும் தவராமல் லட்சம் உருவுகொடுத்து மையையெடுத்துவந்து மோகினியை தியானித்து திலர் தமிட்டுக்கொண்டு வெளியேபோகசகலமும் வசியமாகும் நினைத்தகாரியம் தடையில்லாமல் முடியும் வலியசினேகங்கூடும்.

## 67. ஜாலக்காள் பூசை ஜாலம்.

மஞ்சள் கிழங்குகொண்டுவந்து பெண்பாவைபோல் ரூபஞ்செய்து கொடி மூலம் மேலேசுற்றி சத்திபூசைசெய்து பின்பு சாகினி டாகினி ஜாலக்காள்தேவி ருராவென்று லட்சம் வருகொடுத்து தியானிக்க ஜாலக்கா சித்தியாவாள் நீசெய்யும் ஜாலம் எங்கும் கீர்த்தியோங்கும் நீ சொன்னபடிக்கொல்லாம் உன்னிடமிருந்து ஆடுவாள்.

## 68. சோத்துப்போன கீரிப்பிள்ளை தோலுக்கு உயிருண்டாகும் கைப்பிரண்டு ஜாலம்.

ஈச்சன்கசங்கினால் இரண்டுகூடை ஒரே மாதிரியாகச்செய்து ஒரு கூடையில் உள்ளே கள்ள அரைவைத்து பார்ப்பவர்களுக்குத் தோற்றாமலிருக்கும்படி செய்து அந்தகள்ள அரைக்குள் உயிருள்ள கீரிப்பிள்ளையைப்பிடித்து அடைத்து அந்தகூடையினுள்ளிருக்கும் அறைக்குகயற்றினால் சுருக்குவைத்துதிறக்கமூடசுளுவாயிருக்கும்படி முன்னந்தயார்செய்து வைத்துக்கொண்டுபிறகு ஜலாமாடும் சபையில் கிரிப்பிள்ளைத் தோலைக கையில் எடுத்து அங்குள்ள அனைவர்களுக்குங் காட்டி இந்த தோலுக்கு உயிர் கொடுத்து நடக்கும்படி செய்றேன பாரென்றுசொல்லி அந்த தோலைப் பூமியில் வைத்துசாதா கூடையையெடுத்து சபையோர்களுக்கு நன்றாய்க் காட்டி அந்த தோலின் மேல் மூடி மேற்படி கிரிப்பிள்ளையை அடக்கம் செய்திருக்கும் கூடையை அருகே வைத்திருக்கவேண்டும் சதுரத்திற்கு சதுரம் ஆறுமுழம் நீளமுள்ளதுண்டை கிரிப்பிள்ளை தோலிருக்கும் கூடையின் மேல்மூடி ஜனங்களுக்கு தமாஷ் காட்டிக்கொண்டே தந்திரமாக துணியை அகலவிரித்து முழங்கால் மேல்போட்டு கூடையைத் தந்திரமாகப்பிரட்டி கிரிப்பிள்ளையை பக்குவமாக அவிழ்த்துவிட்டு மற்றவைகளை யெல்லாம் துணியில்மறைத்து அப்புறம் வைத்துவிட்டு மாத்திரைக்காலால் அந்தக்கூடையை மூன்றுதரம் ஏற்டு யிறக்கி பின்பு சல் மலையாள பகவதி இந்த கிரிப்பிள்ளையைத் தோலுக்கு உயிர் கொடுகொடு என்று மூன்று தரம் சொல்லி கூடையைத்திறந்து காட்ட உயிருடன் கிரிப்பிள்ளை இருக்கும் கண்டவர்கள் ஆச்சரியப்படுவார்கள் ஆனால் மகா தந்திரமாகச் செய்யவேண்டும் கிரிப்பிள்ளையை கூடைக்குள் அடக்கம்செய்து யிருப்பது கூடையைகாட்டினால் சாதாகூடைபோலிருக்கவேணும் கூடையளவு பக்குவமாக முடையவேணும்.

## 69. செத்துப்போன பாம்புதோலுக்கு உயிருண்டாக்கும் ஜாலம்

ஈச்சன் கசங்கினால் இரண்டுபாம்பை அடக்கம் செய்யும்பெட்டி ஒரேமாதிரியாகச் செய்து ஒருபெட்டியில் எந்த ஜாதிப் பாம்பையேனும் பிடித்து அதின் வாயிலுள்ள விஷப்பல்லைப் பிடுங்கிவிட்டு பெட்டியில் அடக்கஞ்செய்து ஜோல்னாவுக்குள் முன்னதாகத் தயார்செய்து வைத்துக்கொண்டு பிறகு ஜாலமாடும் சபையில் பாம்புத்தோலை கையிலெடுத்து அனைவர்களுக்குங்காட்டிஇந்த் பாம்புத்தோலுக்கு யிர்கொடுக்கிறேன் பாரென்றுசொல்லி பாம்புபெட்டியை அனைவர்களுக்குக்காட்டி அதில் பாம்புத்தோலை கையிலெடுத்து அனைவர்களுக்குங்காட்டி அதில் பாம்புத்தோலை போட்டுமூடி அதின்மேல் கருப்பு துணியை மூடி ஜனங்களுக்கு வேறு தமாஷ்களை காட்டிக்கொண்டு தந்திரமாக ஜோல்னாபையை அருகில் இழுத்து ஒருவருக்கும் தெரியாமல் துணியை மூடிக்கொண்டு மகாஜாக்கிரதையாக பாம்புபெட்டியை மாற்றி ஜோல்னாதுணி முதலானதையும் அப்புறம் நீக்கி பாம்புபெட்டியை மாத்திரைக்கோலால் மூன்றுதரம் ஏற்றி யிறக்கி சல் மலையாளபகவதி பாம்புத்தோல் பாம்பாகவேணும் சல்திசல்தி யென்றுசொல்லி மோடிக்காயை வாயில்வைத்துஊதி பாம்புபெட்டியை ஒன்பதுசுற்று சுற்றிவந்து பின்பு பாம்புபெட்டியை திறந்துகாட்ட பெட்டியிலிருந்து பாம்பு படம் விரித்தாடக்கண்டவர்கள்பிரமித்து ஆச்சரிப்படுவார்கள்.

## 70. அளந்தஅரிசி உபிரியாகுஞ்ஜாலம்.

கால்படி அரிசி பிடிக்கும்படியாக கிண்ணம் ஒன்று செய்து அதுபோலவே இன்னம் ஒன்று செய்யவேணும் இரண்டாவது கிண்ணத்தில் உள்ளே ஆழம் வைக்காமல் இரண்டுபடியரிசி மீதியாகும்படியாய் மரம்கனமாகவைத்து செய்து கொண்டு அந்த இரண்டுக்கும் வர்ணம் ஒரேமாதிரியாய்ப்பூசி இருக்கவேணும் அரிசியைக் கொண்டுவரச்சொல்லி ஆழமான கிண்ணத்தில் தலைவழிக்க அளந்துக்கொண்டு மற்றொருகிண்ணத்தை மேலேமூடி சபையோர்க்குக்காட்டிக்கொண்டே தந்திரமாகக் கீழ்மேலாகக் கவிழ்த்துவிட்டு மெதுவாய் மேலிருக்கும் கிண்ணத்தை யெடுத்தால் அரிசி குபுகுபுவென்றுபொங்கி வந்துவிடும் இது ஆச்சரியமாயிருக்கும் இதுபோலவே உளுந்து பயறு கடலை பட்டாணி நெல்லுமுதலானதும் அளந்துகாட்டலாம்.

## 71. தண்ணீர்பொங்குஞ் ஜாலம்.

குசவனிடம் குடுவை ஒன்றுசெய்து அதன்கழுத்தடியில் பொருந்தினாற்போல் புனல் மாதிரியாய்ப் உள்ளுக்குப் பொருந்தவைத்து அந்தபுனல்அடியில் ஒரு துவாரமும் குடுவைதொப்பை மையத்தில் ஒரு துவாரமும்வைத்து செய்து கொண்டு மேல்புரம் சிகப்புவர்ணம் பூசி கண்ணைப்போல் துவாரம்செய்திருக்கிறோ மாகையால் உடம்பெல்லாம் கண்களைப்போல் கருப்புவர்ணத்தில்எழுதியும் கருப்புவர்ணம்வைக்கவேணும் ஜாலமாடும் சபையில்வந்து துவாரத்தின்மேல்பெரிய விரலைவைத்து மூடி அழுத்திப் பிடித்துக்கொண்டு சொம்பில் ஜலம் கொண்டு வரச்சொல்லி இந்தக் குடுவையில் வார்த்து சல் மலையாள பகவதி

என்று மேலேவைத்து இதோ குடுவையை கவிழ்த்து வைக்கிறேன் தண்ணீர் இருக்குமா போகுமாவென்று சொல்லி கவிழ்த்து வைக்கவும் வைத்தால் பாதி ஜலம் கீழேபோய்விடும் துவாரம் மையமாகையால் பாதிஜலம் இருக்கும் மறுபடியும் துவாரத்தின்மேல் விரலைவைத்து மூடி எடுத்து அந்த துவாரத்தில் வாயைவைத்து மூச்சுப்பிடித்து ஊதினால் புனலிலிருக்கும் தொண்டிவழியாய் தண்ணீர்மேலுக்குப் பொங்கும் மறுபடியும் தோண்டியை பிடித்துக்கொண்டே கவிழ்த்தால் ஜலமிருக்காது அப்படியே தூக்கி யூதினால் பொங்கிவழியும் இது போல் ஜலமிருக்கின்ற வரையிலும் செய்யலாம் பார்ப்பவர்கள் சந்தோஷப் படுவார்கள்.

## 72. புட்டியில் மாம்பழம் காட்டும் புதுமையான ஜாலம்.

ஒரு கருப்பு புட்டியை அடியில் புனல்போல் இருப்பதை கின்கருவியாலறுத்தெடுத்து நல்ல இனிப்பாகிய மாம்பழங்களை உள்ளேபோட்டு தகரத்தினால்புனலைபோல் செய்து பிருவாய் சொருகி ஒட்டுத்தெரியாமல் தாரைகாச்சி பூசிவைத்துக்கொள்ளவும் புட்டியில்போட்டபழம் எத்தனைஎவ்வளவு பெரிதோ நிரமோ அதுபோல் கையிலெடுத்துகொண்டு சபையில் வந்து இது பஞ்சாபுதேசத்திலிருந்துகுட்டிச்சாத்தான் கொண்டுவந்த மாம்பழம் பாருங்களென்று பில்லை பில்லையாயறுத்து அனைவருக்கும் கொடுக்கவும் முன்பழமிருக்கும் புட்டியில் பிடித்தவரையில் நல்ல சலம் விட்டு இருக்கவேணும் அப்பா பரமாந்த சிஷ்யா தாகமெடுக்கிறது தண்ணீர் கொண்டுவாவென்று கேட்டு அந்த புட்டியை வாங்கி சாப்பிடுவதுபோல் உதட்டில்வைத்து தண்ணீர் கீழ்மேலும் சிந்தும்படியாய்செய்து மேஜைமேல் வைத்து சல் குட்டிச்சாத்தான் முன்னே அருத்துக்கொடுத்த மாம்பழத்தை இந்தபுட்டியில் வரச்செய்வாயா எதோ உன்சாமார்த்தியங்காட்டு என்றுசொல்லி மாத்திரக்கோலை எடுத்து ஒன் டு திரி எக் தோ தீன் ஒகடி ரெண்டு மூடு ஒன்று இரண்டு மூன்று என்று புட்டியைச்சுத்தி எண்ணி ஒருருல்கட்டையை எடுத்து புட்டியைப்பிடித்துக்கொண்டு நோக்கி அடித்துவிட்டால் பழங்கள் குபீலென்று வெளியில்விழும் பார்ப்போர்களுக்கு மகா அதிசயமாகவே யிருக்கும் இம்மாதிரியாக எவ்விதபழவர்க்கங்களையும் புட்டியில் காட்டலாம் ஆனால் ஜாக்கிரதையாகச் செய்யவேண்டும்.

## 72. கோழிமுட்டையின்மேல் விசித்திரமான யெழுத்துகள் யெழுதும் ஜாலம்.

ஒரு கோழிமுட்டையைக் கொண்டுவந்து உள்ளிருக்கும் அம்பிலியைப் போக்கி தேன் மெழுக்கைக்காச்சி முட்டையின்மேல் முழுதும்பூசிவிட்டு விசித்திரங்கள் எழுதலாம் எழுதிவிட்டு எழுத்துக்குள்ளிருக்கும் மெழுக்கையெல்லாம் சுத்தமாக யெடுத்துவிட்டு ஒயினில் மூன்றரைமணி நேரமாகிலும் நாலுமணி நேரமாகிலும் யூரவைத்து எடுத்து ஜலத்தில் கழுவி சபையோர்களுக்குக் காட்ட ஆச்சரியப் படுவார்கள் ஆனால் அல்பநாத்தியிலாவது ஊசியிலாவது எழுத வேண்டியது.

## 74. சபையில் ஒருவர்முகத்தை ஒருவர்பார்த்தால் விகாரமாகக் காட்டும் ஜாலம்.

ஒரு போகணியிலாவது இன்னம் எந்த பாண்டத்திலாவது (ஸ்றிபிறிட்டு) ஒயின்அரைபயிண்டு வாங்கிக்கொண்டுவந்து கொதிக்கவைத்து இரக்கிச் சபையில்வைத்து ஒருபிடி உப்பை அள்ளிப்போட்டால் புகையும் ஜொலிப்பும்யெழும்பும் அத்தருணத்தில் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தால் அகோரமாகத்தோணும் அதை அப்புறம் எடுத்து மறைத்துவிட்டால் அந்த அகோர ரூபம்மாறி சாதாரண ரூபமாய்த் தோற்றும்.

## 75. தண்ணீரின்மேல் விளக்கு எரியும் ஜாலம்.

ஒரு சிறிய கிளாசிலாவது இன்னம் வேறே எந்த பாண்டத்திலாவது ஜலம் விட்டு சபையோர்களுக்கு நன்றாய்க்காட்டி இந்த ஜலத்தில் தீபம்காட்டுகிறேன் பாருங்களென்று சொல்லி (பொடாசியம்) என்றதை கொஞ்சம்போட்டால் குப்பென்றதாக தீபம்போல் பிரகாசித்து ஒளியும் பொடாசியம் வாங்கவேணுமென்றால் ஷாப்பில் கிடைக்கும் மருந்தை வைத்திருக்கும்படியான பத்திரம் கிருஷ்ணயல் எண்ணெயில்போட்டு வைத்திருக்கவேண்டும்.

## 76. புட்டியில் முட்டைவிடும் ஜாலம்.

கோழிமுட்டையைக் கொண்டுவந்து சீமைகாடியில் மூன்றுநாள் ஊறவைத்து எடுக்க சவ்வைப்போல் மெதுவாய் நிகளும் அதை ஒரு நல்லியமான புட்டியில் முட்டையை மலரைப்போல் யிழுத்து புட்டிக்குள்விட்டு கொஞ்சம் நல்ல சலம்விட எப்போதும்போல் முட்டையாகிவிடும். சாலமாடும் சபையில்வைக்க பார்ப்போர்களெல்லாம் ஆச்சரியப்படுவார்கள்.

## 77. நல்லதண்ணீரை பன்னீராக்குஞ் ஜாலம்.

ஒரு தாம்பாளத்தை சபையோர்களுக்குக்காட்டி மேசையின் மேல்வைத்து ஒருசொம்பில் நல்லசலம் கொண்டு வரும்படியாகச்செய்து தாம்பாளத்தில் ஊத்தி அனைவருக்கும் காட்டி இதோயிந்த சலத்தைப் பன்னீராகச்செய்கிறேன் பாரென்றுசொல்லி சற்றுநேரம் பொருத்து அந்தசலத்தை எடுத்துஅனைவர்மீதும் தெளிக்க வெறும்சலமென்பார் உடனே சல்மலையாளபகவதிஎன்னையிந்தசபையில் அவமானம்படுத்தாமல் இந்த தண்ணீரை பன்னீராக்கவேண்டும் என்றுசொல்லி ஒருவருக்குந்தெரியாமல் தந்திரமாக (எஸன்ஸ் ஆப்ரோஸ்) என்கிறதைலத்தில் நாலு துளிவிட அத்தர்வாசனை கமகமவென்றதாகப் பரிமளிக்கும் அதை யெடுத்து சபையோர்கள் மீதுதெளிக்க ஆச்சரியப்படுவார்கள் ஆனால் அந்த (எஸன்ஸ் ஆப்ரோஸ்) என்ற வஸ்துவை சிறிய சைப்புக் குழைசெய்து அதில் விட்டுவைத்திருந்து அந்த குழாவை விரலில் பக்குவமாய் அடக்கி சலத்தில்விடவேண்டியது மருந்துஷாப்பில்கிடைக்கும் எஸன்ஸ்ஆப்ரோஸ் என்பது தமிழில் ரோசாவின் சத்து.

## 78. சம்பங்கிஅத்தர் வாசனேகாட்டும் ஜாலம்.

ஒரு நல்லியமானபுட்டியை நன்ருய் சலம் விட்டுகழுவி சபையோர்களு க்கு காண்பித்து மேசையின்மேல் வைத்து ஒருசொம்பில் நல்லசலம்கொண்டு வரும்படியாகச்சொல்லி கொஞ்சம் சலத்தை புட்டியில் ஊத்தி சபையோரை பார்த்து இந்தபுட்டியிலிருக்கும் நல்லதண்ணீரை சம்பங்கி அத்தர்செய்கிறேன் பாரென்று தந்திரமாக சம்பங்கிசத்தை நாலுஐந்து துளிவிட சம்பங்கி அத்தர் வாசனே கமகமவென்று பரிமளிக்கும் ஆச்சரியப்படுவார்கள்.

## 69. மல்லிகைப்பூ வாசனேகாட்டும் ஜாலம்,

ஒரு வெள்ளே அகலப் பீங்கானில் நல்ல சலத்தை விட்டு சபையோர் களுக்குக்காட்டி இந்த சலத்தை மல்லிகைப்பூ அத்தர்செய்கிறேன் பாருங் களென்று சொல்லி அடே குட்டிச்சாத்தான் சீக்கிரமாகச் சென்று அத்தர் ஷாப்பில் போய் நல்ல ஒஸ்தி மல்லிகைப்பூ அத்தர் கொண்டுவந்து இந்தத் தண்ணீரில் ஊத்துவாயென்று மாத்திரைக்கோலால் மூன்றுதரம் அந்த பீங்கா னேச்சுற்றி சனங்களுக்குத் தமாஷ்காட்டிக்கொண்டே ஒருவருக்கும் தெரியா மல் மல்லிகைப்பூ அத்தரில் நாலு ஐந்துதுளிவிட குபீலென்று மல்லிகைப்பூ அத் தர் வாசனேகமகமவென்று பரிமளிக்கும் ஆச்சரியப்படுவார்கள்.

## 80. சலத்தை அலுவாசெய்யும் வித்தை.

ஒருபுதிய பாண்டத்தைக் கொண்டுவந்து நன்ருகச் சலம்விட்டுக்கழுவிசபை யில்வைத்து ஒருசொம்பில் நல்லசலங் கொண்டுவாச்சொல்லி அந்தசலத்தை மேற்படி பாண்டத்திலூற்றி சபையோரைப்பார்த்து இத்த சலத்தை அலுவா செய்கிறேன் பாருங்களென்றுசொல்லி மேலே துணியைப்போட்டுமூடி ஒருவ ருக்குந் தெரியாமல் தந்திரமாக முன்னதாக நாட்டுச்சக்கரைபோட்டு சிறுகட் டுக்கொடியை சார்பிழிந்து கொஞ்சம்சார்விட்டுபிறகு சல்மலேயாளபகவதிதண் ணியை அலுவாசெய்யென்று சற்றுநேரம்பொருத்து துணியைத்திறந்து பார்க்க பந்தனயாகிவிடும் அதை மேசைகத்தியால் சிலேஸ் சிலேசாக அறுத்து சபை யோர்களுக்குச் சாப்பிடும்படியாக கொடுக்க ஆச்சரியப்படுவார்கள் இதைசா தாரணமாய்ச் செய்துநின்ருலும் தாது விருத்தியாகும்.

## 81. நினைத்தமிருகம் முதலானவைகளே உண்டாக்கும் மகாமாய மை.

மேற்சொன்ன இலேயைக்கொண்டுவந்துத் தனித்தனியாகச் சார்பிழிந்து ஒவ் வொன்றிலும் உச்சிக்கரண்டி சார்விகிதம் அளவாகயெடுத்து ஆழமுள்ளக் கல் வத்திலிட்டு அறைக்குக்போது கள்ளிக்காக்கையின் வெள்ளே அம்பிலியையும் கோழிமுட்டையின் வெள்ளே அம்பிலியையும்விட்டு அறைத்து குதம் கால்களஞ் சியும் அதில்சேர்த்து கோரோசனே கால்களஞ்சியும் பச்சைபூரம் கால்களஞ்சி யும் அத்துடன்கூட்டி மாதர்வீட்டுதூரமான சீலேயைக்கொளுத்தி அந்த சாம்ப லுங் கொஞ்சம்சேர்த்து பச்சை ஒணேக்கொண்டு குடல் எலும்பு முதலான

வைகளையும்போக்கி அதையும்சேர்த்து யாவையும் மைபோலரைத்து வழித்து துல்லியமான சீலையில் நன்றாய்தடவி உலரவைத்து பிறகு தலைமண்டையோட்டில் ஐங்கோலத்தைலம் வார்த்து மேற்படிதிரியை அதில்போட்டு எரித்து தமிலம்வாங்கி சிமிளில் அடக்கஞ்செய்து வைத்துக்கொண்டு அதைக்கொண்டுபோய் மயானத்தில் புதைத்து காலை மாலை இருவேளையும் மயானருத்திரியை தியானிக்கும் மந்திரம் ஓம் ஸ்ரீம் இரீம் கிலியும் அக்குருஷணி ஓ மயானருத்திரி என்வசமாக ஓடிவருவாயென்று வேளைக்கு லட்சம் உருசெபிக்கவேண்டும் கையில் சாம்பிராணி வத்திகொளுத்தி வைத்துக்கொள்ளவேண்டும் இப்படி இருபத்தொரு நாள்செபித்து இருபத்திரண்டாம்நாள் இரவில் தோண்டி மைசிமிளை யெடுத்து வேகின்றசபத்தின் கால்மாட்டில் மைசிமிளைவைத்து தூபதீபங்கொடுத்து தேங்காயுடைத்து ஒரு கோழிகுஞ்சு காவுகொடுத்து அந்த சபத்தை ஒன்பதுசுத்து வந்து பத்திரம்படுத்தி வைத்துக்கொள்ளவேண்டும் இது ஆரம்பம் கிராணத்தில் செய்தால் ரொம்பசீக்கிரம் சித்தியாகும் மயானருத்திரி தனக்கு சித்தியிருந்தால் செபமுடிந்த கடைசிதினம் தன்னுடைய சொரூபத்துடன் சொற்பனத்தில் வந்து பிரசன்ன மாகி மறைந்து போவாள் அப்போது தான் சித்தியாச்சுதென்றறிந்து மையையெடுத்து மனம்போல் ஜாலமாடலாம் அப்படிக்கில்லாவிட்டால் இன்னொருமுறை பூசைசெய்ய வேண்டும் ஆயினும் இது கலியுகக் கால மானதால் அனைவருக்கும் சித்தியாகு மென்று எண்ணப்படாது அந்த வழிக்கு வந்தவர்களுக்கு தடையன்றி சித்தி தானேயாவாள் அதை யோசிக்க வேண்டும்.

## 82. பச்சைப்பாம்பு உண்டாகும் ஜாலம்.

வரகுவைக்கோலைக் கையிலெடுத்து சபையோர்களுக்குக்காட்டி இந்தவைக்கோலை பச்சைப்பாம்பாகச் செய்கிறேன் பாருங்களென்றுசொல்லி மயானருத்திரியை மனதில் தியானித்து ஜாலக்காளைப்பூசித்து சல் மலையாளபகவதி பச்சைப்பாம்பாக வேணுமென்று மகாமாயமையைத்தடவி பூமியில்போட பச்சை பாம்பாகும் பார்ப்பவர்கள் ஆச்சரியப்படுவார்கள் ஆனால் அது ரொம்பநாழியிரா ஒரு நாழிகைக்குள் மறைந்துபோகும் அதை உஷாராக நாம் அறிந்து மறைவதற்குள் சல் ஓடிப்போ பாம்பேயென்று துணியை மேலேபோட்டு மூடவேண்டும் மூடி உடனே திறந்துபார்க்க வரகுவைக்கோலாக யிருக்கும்.

## 83. கோழியுண்டாகும் ஜாலம்.

கோழியிறகு ஒன்றைக் கையிலெடுத்து சபையோர்களுக்குக்காட்டி பாருங்கள் சபையோர்களே இந்த கோழியிறகைக் கோழியாக்குகிறேன் பாரென்று சொல்லி மயானருத்திரிமந்திரத்தை தியானித்து ஜாலக்காளைப்பூசித்து மகாமாயமையில் கொஞ்சம் அந்தயிறகில் தடவிக் கீழேபோட அழகுடைய சாவல்போல் யாவருக்குந்தோற்றும் ஆச்சரியப்படுவார்கள் உடனே கோழியின்மேல் ஒருதுணியைப்போட்டுமூடி கோழியே மாயமாய்ப்போவென்றுசொல்லி சற்றுநேரம் பொருத்துத் திறந்துபார்க்க கோழியிறகாயிருக்கும்.

### 84. அஸ்வமுண்டாகும் ஜாலம்.

ஒரு சிகப்பு தோம்புத்துணியை யெடுத்து சபையோர்களுக்குக்காட்டி இந்த சீலையை அஸ்வமாக்குகிறேன் பாருங்களென்று மகாமாயமையைக் கையிலெடுத்து ஜாலக்காளை தியானித்து மையை துணியில்தடவி கீழேபோட பார்ப்பவர்களுக்கு அஸ்வம்போல் தோற்றும் எல்லோரும் ஆச்சரியப்படுவார்கள் உடனே மேற்சொல்லியவாறு செய்யவும்.

### 85 ஆடு உண்டாக்கும் ஜாலம்.

ஒருகருப்பு சீலையைக்கையிலெடுத்து சபையோர்களுக்குக் காண்பித்துஇந்த கருப்பு சீலையை ஆட்டுக்கடாவாகச்செய்கிறேன் பாரென்றுசொல்லி அந்தசீலையை முன்னதாகவைத்து மாத்திரைக்கோலை கையிலெடுத்து அந்தசீலைசுற்றிகோடுகிழித்து மாத்திரைக்கோலால் மூன்றுதரஞ் சுற்றி யேற்றியிரக்கி மயானருத்திரியை மனதில் தியானித்து சாலக்காளைப்பூசித்து சல்மலையாளபகவதி இந்தகருப்புச்சீலை ஆட்டுக்கடாவாகவேணுமென்று மகாமாயமையில் தோற்றப்படும்சபையோர்கள்பிரமிப்பார்கள் உடனேமேற்சொல்லுயவாறு செய்துமறைத்துவிடவும்.

### 86. எறுமைக்கிடா உண்டாகும் ஜாலம்.

கருப்புக்கம்பிளியை கையிலெடுத்து சபையோர்களுக்குக் காட்டி இந்தகம்பிளியை எறுமைக்கிடாவாகச்செய்கிறேன் பாருங்களென்று அதைச்சுருட்டி முன்னதாகவைத்து மயானருத்திரியைத் தியானித்து சாலக்காளை பூசித்து சல்மலையாளபகவதி இந்தகம்பிளியை எறுமைகிடாவாகச்செய்வாய் சீக்கிரம்சீக்கிரம் என்று தந்திரமாக மகாமாயமையை கொஞ்சம்கம்பளியின்மீது தெளிக்கஉடனே எருமைக்கிடாவைப்போல தோன்றப்படும் கண்கட்டு வித்தையென்று கலங்குவார்கள் உடனே ஒருதுணியை எருமைக்கிடா மீது மூடி சற்றுநேரம் பொருத்து பார்க்க கம்பிளியாயிருக்கும்.

### 87 யானை உண்டாக்கும் ஜாலம்.

ஒரு சலவைமல் குட்டையை யெடுத்து சபையோர்களுக்குக்காட்டி இந்த மல்குட்டையை யானையாகச்செய்கிறேன்பாரென்று அதைச்சுருட்டி முன்னதாகவைத்து கற்பூரங்கொளுத்தி விநாயகரை பூசைசெய்து பிறகு மயானருத்திரி மந்திரத்தை ஆயிரத்தெட்டுதரம் ஒதி சாலக்காள் மந்திரத்தை நூத்தியெட்டுதரம் ஒதி சல்மலையாளபகவதி இந்த மல்துண்டை யானையாகநொடிக்குள் செய்யவேணுமென்று சொல்லிதந்திரமாக மகாமாயமையில் கொஞ்சமெடுத்து குட்டையில் தடவ பார்ப்பவர்களுக்கு ஆனை வுருவபோல் தோற்றும் பார்ப்பவர்கள்பயந்துபிர்மிப்பார்கள்.

### 88. கரடி உண்டாகும் ஜாலம்.

கருப்பு ஆட்டுவரித்தோலை சபையில் கொண்டுவந்து வைத்து இந்த தோலை கரடியாகச் செய்கிறேன் பாரென்றுசொல்லி மயானருத்திரியை தியானித்து சாலக்காளைப்பூசித்து மகாமாயமையை எடுத்து தோலில்தடவ கரடிரூபமாகத் தோற்றும் அனைவரும் பார்த்தவுடனே மேற்சொல்லியவாறு செய்யவும்.

## 89. புலி உண்டாக்கும் ஜாலம்.

புலித்தோலைக்கொண்டுவந்து சபையோர்களுக்குக்காட்டி இந்தப்புலித்தோலை புலியாக்குகிறேன் பாரென்றுசொல்லி மயானருத்திரியை தியானித்து சாலக்காளை பூசித்து மகாமாயமையில் கொஞ்சமெடுத்து புலித்தோலின்மேல் பூச புலியுருவாகத்தோற்றும் கண்டவர்கள் பயந்து ஓடத்தலைப்படுவார்கள் இதுயென்ன மந்திரஜாலமோவென்று மயங்குவார்கள் உடனே துணியால்மூடி மேற்சொல்லியவாறு செய்யவேண்டும்.

## 90. புரு உண்டாகும் ஜாலம்.

புருவின் இறகு பத்துபதினைந்து எடுத்து ஒன்றாய்ச்சேர்த்துக்கட்டி சபையோர்களுக்குக்காண்பித்து இந்தப்புருவின் இறகை புருவாக்குகிறேன் பாரென்றுசொல்லி அந்தயிறகை முன்னேவைத்து ஒரு கூடையையெடுத்து அனைவருக்குங்காட்டி அதைமூடி அதின்மேல் ஒரு துணிமூடி மயானருத்திரியை தியானித்து ஜாலக்காளைப்பூசித்து சல் மலையாளபகவதி சல்தி புருவாகச்செய்யென்று மூன்றுதரஞ்சொல்லி தந்திரமாக மகாமகாயமையை கொஞ்சந்தடவி கூடையை திறந்துகாட்ட புருதோற்றும் பார்ப்பவர்கள் பலேஜோக்கான வித்தையென்று ஆச்சரியப்படுவார்கள்.

## 91. மரப்பொம்மை சண்டைசெய்யுஞ் ஜாலம்.

செம்மரம் அல்லது இன்னம் எந்தமரத்தினாலாவது ஒரு ஆண்பொம்மையும் ஒரு பெண் பொம்மையுஞ்செய்து அதற்கு நகை ஆடையாபரண முதலான தந்தரித்து ஜாலமாடுஞ்சபையில் மேசைமேல்வைத்து மயானருத்திரியை தியானித்து ஜாலக்காளைப்பூசித்து சபையோர்களைப்பார்த்து இந்தப்பொம்மை இரண்டையுஞ் சண்டைவிடுகிறேன் பாருங்களென்றுசொல்லி மகாமாயமையையெடுத்து இரண்டு பொம்மைக்குங் கொஞ்சகொஞ்சந்தடவ இரண்டும் ஒன்றோடொன்று தாக்கும் விழுந்து விழுந்து யெழுந்திருக்கும் பார்ப்பவர்கள் மதிமயங்குவார்கள்.

## 92. செம்பை பொன்னாக்கும் ஜாலம்.

ஒரு செம்புத்துண்டையெடுத்து சபையோர்களுக்குக் காண்பித்து இதைத் தங்கமாக்குகிறேன் பாருமென்றுசொல்லி மயான ருத்திரியைத் தியானித்து ஓ அம்மணி இந்தசெம்பை தங்கமாக்கவேணுமென்று ஜாலக்காளைபூசித்து மகாமாயமையை அதின்மேல்தடவ பத்தரைமாற்று தங்கமாக இருக்கும் சபையோர்கையில்கொடுத்து பார்க்கச்சொல்லி உடனேவாங்கி சல் எப்போதும்போல் செம்பாகிவிடு என்று பூமியில்போட செம்பாகிவிடும் பார்ப்பவர்கள் இதுகண்கட்டு வித்தையென்பார்கள்.

## 93. பலகரை குதிக்கும் ஜாலம்.

பத்துப்பதினைந்து பலகரையை கையிலெடுத்து மயானருத்திரியைத் தியானித்து ஜாலக்காளைப் பூசித்து மகாமாயமையை பலகரையில் தடவிப்போட பூமி

யில்நிற்காமல் குதிக்கும் பார்ப்பவர்கள் பிரமிப்பார்கள் ஆனால் ஒரு நிமிஷம் இர ண்டுநிமிஷந்தான் குதிக்கும் அதன்பின்பு பலகரை பூமியில்தான் கிடக்கும்.

### 94 ஈயத்தை சோக்கவெள்ளியாக்குஞ் ஜாலம்.

வெள்ளீயம் அல்லது காரீயம் கொண்டுவந்து ஒருகட்டியாகச் சபையோர் களுக்குக் காண்பித்து ஈயத்தைச் சொக்கவெள்ளியாகச்செய்கிறேன் பாரென்று சொல்லி மயான ருத்திரியை தியானித்து அம்மணி இந்தயீயம் சொக்கவெள்ளி யாகவேணுமென்று சாலக்காளைப் பூசித்து மகாமாயமை எடுத்து தந்திரமாகக் கொஞ்சம்தடவபால்போல் சொக்கவெள்ளியாகும் பார்ப்பவர்கள்பிரமிப்பார்கள்

### 95 மண்குடம் பொன்குடமாகும் ஜாலம்.

ஒரு மண்குடத்தை சாலமாடும் சபையில் கொண்டுவந்து அனைவருக்குங் காட்டி இந்த மண்குடத்தை பொன்குடமாக்குகிறேன்பாருங்களென்றுசொல்லி மயானருத்திரியை தியானித்து அம்மணி இந்தகுடத்தை பொன்னுக்கவேணு மென்று ஜாலக்காளைபூசித்து மகாமாயமையைத்தடவ மஞ்சள் பிளந்தாற்போல் தோற்றப்படும் ஆச்சரியப்படுவார்கள்.

### 96 ஆற்றுமணலை அரிசியாக்குஞ் ஜாலம்.

ஒரு முறத்தில் ஆத்துமணலைக் கொண்டுவந்து ஜாலமாடும் சபையில் வை த்து சபையோரைப் பார்த்து இந்த ஆற்றுமணலை அரிசியாகச்செய்கிறேன் பா ரென்று சொல்லி மயான ருத்திரியை தியானித்து அம்மணி இந்தமணல் அரிசி யாக வேணுமென்று ஜாலக்காளைபூசித்து மகாமாயமையை கொஞ்சமெடுத்து தந்திரமாக மணலின்பேரில் தெளிக்க அரிசியைப்போல் தோற்றும் யாவரும் ஆச்சரியப்படுவார்கள்.

### 97 எலுமிச்சம்பழம் நடக்கும் ஜாலம்.

பத்துபதினைந்து எலுமிச்சம்பழத்தை சபையில் வைத்து இந்த பழங்களை நடக்கும்படி செய்கிறேன் பாரென்று மயானருத்திரியை தியானித்து அம்மணி இந்தப்பழங்களை நடக்கச்செய்வாயென்று ஜாலக்காளை பூசித்து மகாமாயமை யை யெடுத்து தந்திரமாக ஒவ்வொரு பழத்திலும் படும்படியாகத்தடவிக் கீழே போட அப்பழங்கள் பூமியில் நிற்காமல் மூலைக்குமூலை கடகடவென்று உருளும் பார்ப்பவர்கள் பிரமிப்பார்கள்.

ஆனால் இந்த மையினாலும் மயானருத்திரி எவலினாலும் ஜாலக்காள் சித்தி யாலும் இப்படி அனேகவித்தைகள் ஆடலாம் ஆடினாலும் ஒவ்வொரு வித்தையா டும்போது.மயானருத்திரியை தியானிக்கையில் நாம் எவ்வித வேடிக்கைகாட்ட உத்தேசித்தோமோ அவ்விதம் செய்யவேண்டுமென்று அப்போதைக்கப்போ அம்மனை நடத்தவேண்டுமென்று பிரார்த்தித்து பின்பு மையைதடவமனம்போல் சித்தியாகும் அதாவது அம்மணி பாம்பாகவேணும் கோழியாகவேணும் குதிரை யாகவேணும் புலியாகவேணும் என்று நாம் எவ்விதம்சொல்லி மையைத்தடவு கின்றோமோ அவ்விதமேயாகும் அந்தந்த ரூபம்போல் தோற்றமாகி உடனே மறைந்து விடுமேதவிர ரொம்பநேரம் நிற்கமாட்டாது.

## 98. பானையின்மீது தேங்காயைவைத்து தடியாலடித்துப்பானை உடையாமல் தேங்காயை உடைக்கும் ஜாலம்.

கீழ்காய்நெல்லி செடியைத் தேடிக்கண்டுபிடித்து ஆதிவாரம் காலையில் சூரியன் உதயமாகுமுன்னமே அச்செடியருகிற்சென்று அச்செடிக்கு மஞ்சள் நூல் காப்புகட்டி தூபதீபங்காட்டி ஒரு ஒணானை பலிகொடுத்துவிட்டு வீட்டிற்கு வந்துவிடவேண்டும் அன்றுசாயங்காலம் சென்று அந்த செடியை பிடுங்கிவந்து அந்தவேரை நாலு ஐந்தாகசேர்த்து முறுக்கி சிம்மாடுபோல் சுற்றிக்கொண்டு கவிழ்த்து இந்தவேர் சிம்மாட்டை அதனமேல்வைத்து தேங்காயைவைத்து தந்திரமாக அருக்க தேங்காய் உடையும் தோண்டிஉடையாது பார்த்தர்வர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

## 99 குளத்தில்முழுகி கடுதாசி எழுதிவரும் ஜாலம்.

முன்னதாக ஒரு காயிதத்தில் எலுமிச்சம் பழஞ்சாற்றில் படிகாரத்தைப் பொடிசெய்துப்போட்டு நன்ருய்க்குழைத்து மேற்படி காயிதத்தில் தன்னுடைய மனம்போல் யெழுதிவிட்டு வெய்யலில் காயவைத்து நன்ருய் உலர்ந்தபின் எடுத்துப்பார்த்தால் எழுத்து ஒன்றும்தெரியாமல் இருக்கும் அந்தகாயிதத்தை சபையோர்களுக்குக்காட்டி இந்த காயிதத்தை குளத்தில் முழுகி குளத்திற்குள் இருந்துகடிதம் எழுதிவருகிறேன் பாரென்றுசொல்லி ஆடையை களைந்து குளக்கரையின்மேல் வைத்துவிட்டு காயிதத்தை கையில்பிடித்துக்கொண்டு குளத்தில்மூழ்கி கால்மணிநேரம் மூச்சுப்பிடித்து தண்ணீரைவிட்டு மேலேகிளம்பி கரையேறி வந்து காயிதத்தைப்பார்க்க குப்பென்று எழுத்துக்கள்தெரியும் அதைவாசித்துக்காட்ட சபையோர்கள் ஆச்சரியப்படுவார்கள் ஆனல் காயிதத்தில்முன்னுடியாக எழுதிவைத்துக்கொண்டிருக்க வேண்டும்.

## 100. ஒருவர்கழுததில் கத்திகுத்தும் ஜாலம்.

ஒரு கூறுள்ளக் கத்தியை மையமாய் இரண்டு துண்டுசெய்து பின்கழுத்தில் பதியும்படியாக தகடுசெய்து அந்தகத்தியில் பத்தவைத்து ஜாலமாடுமிடங்களில் முன்னுதாய் சபையோருக்கு ஒரு கத்தியைக் காண்பித்து குத்துவேன் என்று ஒரு சிறுவனைப் படுக்கவைத்து துணிமேலேபோட்டு மூடி தந்திரமாக அந்த கத்தியை மறைத்து வில்கத்தியை மாட்டிவிடவேண்டும் ஆட்டு ரத்தத்தை துணியில் தோய்த்து உலரவைத்திருந்து ஜாலமாடும் இடத்தில் அந்ததுணியை கொண்டு வந்து ஜலத்தில் நனைத்துக்கழுத்தில் பிழிய ரத்தமாகவே யிருக்கும் பார்ப்பவர்கள் அலறி ஆச்சரியப்படுவார்கள்.

## 101. ஒரு ஸ்திரியை சிக்கத்திற்கட்டி பெட்டியிற்போடும் தோம்பர ஜாலம்.

மயிரினுல் திரித்தக் கயிரினுலாவது அல்லது சாதாநூல் கயற்றினுலாவது வலைபோல் சிக்கமொன்றுபின்னி அடியில் சுருக்குவைத்து அந்த சுருக்குல் கயர் கோத்து சுருக்கி முடிபோட்டு வைத்திருக்கவேண்டும். அந்தசிக்கவலையை அனே

வருக்கும்காட்டி இந்த சிக்கத்தில் இந்த ஸ்திரியைக் கட்டி இந்த மூங்கிற்பெட்டி யில் போடுகிறேன் பாரென்றுசொல்லி அந்தசிக்கத்தை மேற்புறமாக விரித்துக் கீழேபோட்டு அந்தஸ்திரியை அழைத்து அந்த சிக்கத்திற் குந்தவைத்து அவள் கையின் பெரியவில் இரண்டையும் ஒன்ருகச்சேர்த்து கழுத்துடன் பிடித்துக் கட்டி சிக்கமத்தியில் குந்தவைத்து நன்ருய் தலைமுதல் தேகமெல்லாம் வளைத்து சிக்கத்தை இருக்கிக்கட்டி கெட்டிமுடிகளாக பத்து பதினைந்துப்போட்டு மூனு அடி நிகளமும் இரண்டடி உயரமுமாக வாட்டசாட்டமாய் செய்து வாய் சின்ன தாக வைத்திருக்கும் மூங்கிற்பெட்டியில் சிக்கத்திற் கட்டியிருக்கும் ஸ்திரியை மெதுவாகத்தூக்கி ஒண்ணேகாலடி அகலமுள்ள பெட்டியின் வாயில் மெள்ள மெள்ள உள்ளேபோகும்படிச்செய்து பெட்டியின் மேல்மூடியை ஒருவரை பிடிக் கச்செய்து துணியை மேலேபோட்டு மூடி மறைவுசெய்துவிடவும் பெட்டியில் இருப்பவளுக்கு சொல்லிவைக்கவேண்டியது. என்னவெனில் விரலைமடக்கி யிழு த்துக்கொண்டு மேற்படிசிக்கத்தின் அடி சுருக்கை முடியை அவிழ்த்துயிழுத்தால் சிக்கம் அலாக்காய்விடும் அதைக்கயட்டி மறுபடியும் சுருக்கை கோர்த்துக் கத்தை வெளியில்போட்டு விடுயென்று சொல்லிவைக்கவேண்டும் உள்ளிருப்பவர்கள் அப்படியே அவிழ்த்துப்போட்டவுடன் அந்தசிக்கத்தை எடுத்து சபையோர்களுக் குக்காட்ட கட்டினபிரகாரம் சிக்கமிருக்க ஆளைக்காணுமென்று ஆச்சரியப்படு வார்கள் உள்ளிருப்பவள் பெட்டியில் ஒருபக்கமாய் அசையாமல் பதுங்கிக்கொண் டிருக்கவேண்டு கத்தியை வெளியிருப்பவன் எடுத்துக்குத்தும்போது பெட்டியில் சைகையோடுப் பிறளவேண்டும் குருக்கில் குத்தும்போது சப்பாத்து முள்பழத் தை கத்தியில் உள்ளிருந்தபடியாகப்பூச ரத்தம் கத்திவழியாக சரசரவென்று வெ ளியேவரும் பார்ப்பவர்கள் ஐயையோ பெட்டிங்குள்ளிருந்தவளை குத்திவிட்டா னென்று குய்யோ முறையோவென்றுக் கூவுவார்கள் அப்போதுபெட்டியின் மேல் மூடியைமூடி அதின்மேல் துணியைமூடி மூன்றுகுறள் கூப்பிட்டு மந்திரம் செய்பவன்போல் பெட்டியை மூன்றுசுற்று வந்து ஒரு சிரியக்கல்லையெடுத்து பெட்டியின்மேல்போட அந்தசைகைகண்டு பெட்டிக்குள்ளிருப்பவள் ஒரு ஓசை யாக சப்தம்கொடுக்க உடனே துணியையும் பெட்டியின் மேல்மூடியையும் யெடு த்துவிட பெட்டிக்குள் இருப்பவள் வெளியேவர கண்டவர்கள் யாவரும் பிர மித்து ஆச்சரியப்படுவார்கள் ஆண்பெண் யாராயிருந்தாலும் கட்டுப்போடலாம் ஸ்திரீயேவேண்டுமென்று அவசியமில்லை ஆனல் சிக்கம் பின்னுவதும் பெட்டி செய்வதும் வேலைத்திரமாக யிருக்கவேணும்.

## 102. குடத்தின்மேல் தோண்டியைவைத்து அந்திரமாக தூக்கும் ஜாலம்.

ஒரு மண்குடத்தில் நிறைய தண்ணீர்ரொப்பி ஒருசிரிய தோண்டியிலும் தண்ணீர் நிறையரொப்பி சிறிய தோண்டியைக் குடத்தின்மேல் வைத்து அதின் வாய்ப்புறம் சுற்றிலும் பசும் சாணத்தை அடர்த்தியாகப்பூசி காத்து பூராமற்படிக் குசெய்து மேலிருக்கும் சிறிய குடத்தின் கழுத்தில் உக்கம்போல நல்ல உரப்புள் ளகயற்றினல்போட்டு மேலேதூக்கிக் கட்டிவிட குடம் அந்தரமாகநிற்கும் பார்ப் புவர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

## 103. உரலே அந்தரமாகத் தோங்கவிடும் ஜாலம்.

ஒரு உரலைக்கொண்டுவந்து அதின்நிறைய ஜலம்விட்டு அந்த உரலின் வாய்க்குப் பதிந்தாற்போலிருக்கும் ஒருசொம்பில் நிறைய ஜலம்விட்டு அந்த உரலின் மேல்வைத்து உரலின்வாய் புறத்திற்கும் சொம்பிற்கும் பிடிப்பாகச் சுற்றிலும் களிமண்பூசி அதின்மேல் சீலைசுற்றி மறுபடியும் அதின்மேல் களிமண்ணை பூசி காற்று புக சந்தில்லாமல் பசும் சாணத்தை பூசி உரலை தூக்கினல் தாங்கும்படியான கயற்றை யெடுத்து சொம்பின் வயிற்றில் உக்கம்போல்போட்டு தூக்கி உயரத்தில் கட்டிவிட அந்திரமாநிற்கும் ஆச்சரியப்படுவார்கள்.

## 104 குடத்தில் தண்ணீரை ரோப்பிபட்டாவைக்குத்தி தூக்கும் ஜாலம்.

ஒரு மண்குடத்தில் ஜலத்தை ரொப்பி மேல்மூடும் ஜானகியில் கத்திநூரும் படியான துவாரஞ்செய்து சானகிதுவாரத்திற்குச் சரியாய் எலுமிச்சம்பழம் வைத்து கத்தியில் கம்பியைக்கோத்து குடத்தினுள் தட்டில் தாக்கும்படியாய் மேலேதூக்கிக் கட்டிவிடவேண்டும் கத்திஅடியில் துவாரமாவது வளையமாவது வைத்திருக்கவேண்டும்.

## 105 ஒருவன் தலையின்மீது அடேப்புவைத்து எண்ணெய்க் காய்ச்சும் ஜாலம்

வெத்திலே ஆனைலத்தை சிமைசுண்ணும்பு இந்த மூனுஞ்சேர்த்து பாக்கு உரல்போல்செய்து மேல்பக்கம் மூன்று வாய்வைக்கவும் ஆனல் இந்த அடுப்பை முன்னதாகச்செய்து வைத்துக்கொண்டு பின்பு ஜாலமாடுஞ்சபையில் ஒருவனைக் குந்தவைத்து அவன் தலையின்மீது இந்த அடுப்பைவைத்துக் காத்துபோகாமல் துணியினல் தலைமுதல் திரேகமெல்லாம் மூடிவிட்டு ஒரு கம்பிளியில் வளையஞ்செய்து துணிசுற்றிகொளுத்தி அடுப்பினுள்ளே போட்டு வத்தியை சுற்றூரங் கொளுத்திவைத்து தகரத்தால் தட்டுசெய்து அதில் எண்ணெய் ஊத்திவைத்துக் காய்ந்தபிறகு கொஞ்சம் ஜலந்தெளித்தால் குபீலென்றதாக யெறியும் கண்டவர்கள் ஆச்சரியப்படுவார்கள் ஆனல் அடுப்பு உயரம் அரையடி வைக்கவேண்டும் வளையம்செய்து அடுப்பில்போட்டால் இரண்டு அங்குலம் உள்ளே இரங்கவேண்டியது கொளுத்தும்போது கத்தாழைசோற்றை பில்லையாக அறுத்து அடும்பின் கீழ்ப்புறம் அடியில் வைத்தாலும் வைக்கலாம்.

## 106. பூனையை எலிவேல்லும் ஜாலம்.

ஒரு எலியைப் பிடித்துவந்து அதின் திரேகமாதியந்தமும் எருக்கம்பாலும் குப்பைமேனிச்சாறும்தடவி பூனையெதிரில் விட்டுவிட்டால் பூனைவந்து எலியை முகர்ந்து பார்த்தவுடன் அதைக்கடிக்காமல் தலைவெறி கொண்டதுபோல் கத்திக் கொண்டேயிருக்கும் கண்டவர்கள் என்னமோ வசியம்செய்து வைத்தானென ஆச்சரியப்படுவார்கள்.

### 107 எலுமிச்சம்பழத்தை தூக்கிப்போட அந்திரமாக நிற்குஞ்ஜாலம்.

சுந்தரம் புணரும்போது அதனுடைய வால்மயிரை வெவ்வேருகப்பிடுங்கிக் கொண்டுவந்து மோதரம்போல் வெவ்வேருகச்சுற்றி அதன் ஐங்காயத்தைப்பூசி அதன்மேல் தங்கத்தைச்சுற்றி மோதரம்போல் விரலுக்குச் சரியாய்ச்செய்து வலது கைவிரலில் பெண்மயிர் மோதரம் போட்டுக்கொண்டு ஜாலமாடும் சபையில்வந்து ஒரு எலுமிச்சம்பழத்தைக் கையிலெடுத்து அந்தப்பழத்தைத் தூக்கிப் போட்டு அந்தரமாக நிற்கும்படி செய்கிறேன் பாரென்றுசொல்லி கனியையெடுத்து ஆகாயத்தில் விட்டெறிந்து இடதுகையை கீழேதாழ்த்தி மூடிக்கொண்டிருக்க கனி அந்தரமாக நிற்கும் கீழேவிழாது இடதுகையைநிமிர்த்தி வலதுகையையேந்த கனி கையில்வந்துவிழும் பார்ப்போர்கள் ஆச்சரியப்படுவார்கள் இது அந்தரதேவதை வசியமென்பார்.

### 108. நினைத்தரூபமாகும் மூலிகை ஜாலம்.

கையாந்தகரைச் செடியைக் கண்டுபிடித்து செவ்வாய்க்கிழமை காலையில் சென்று மஞ்சள்நூல் காப்புகட்டி தீபதூபங்கொடுத்து அதின்வேரைப் பிடுங்கி வந்து காதில்வைத்து எவ்வண்ணரூபமாக மனதில் நினைக்கின்றையோ அவ்வண்ணரூபமாகுவாய் அது எவ்வாறெனில் புலியாகவேணுமென்றால் புலியாகுவாய் கரடியாகவேணுமென்றால் கரடியாகுவாய் குரங்காகவேணுமென்றால் குரங்காகுவாய் எருமையாகவேணுமென்றால் எருமையாகுவாய் ஆனையாக வேணுமென்றால் ஆனையாகுவாய் நாயாகவேணுமென்றால் நாயாகுவாய் பூனையாகவேணுமென்றால் பூனையாகுவாய் கோழியாகவேணுமென்றால் கோழியாகுவாய் குதிரையாகவேணுமென்றால் குதிரையாகுவாய் கழுதையாகவேணுமென்றால் கழுதையாகுவாய் பன்றியாகவேணுமென்றால் பன்றியாகுவாய் மானுகவேணுமென்றால் மானுகுவாய் ஆடாகவேணுமென்றால் ஆடாகுவாய் மரமாவாய் கல்லாவாய் ஆணுருவமாகவேணுமென்றால் ஆணுருவாகுவாய் பெண்ணுகவேணுமென்றால் பெண்ணுகுவாய் ராசனுகவேணுமென்றால் ராசனுகுவாய் குருவாகவேணுமென்றால் குருவாவாய் சித்தராவாய் முத்தராவாய் தபசியாகவேணுமென்றால் தபசியாவாய் கிணராவாய் குளமாவாய் பாம்பாவாய் பலவிதப் பட்சிசாதிகளாவாய் இன்னம் எவ்விதம் நினைக்கின்றையோ அவ்விதமெல்லாம் ஆகுவாய் ஆனால் மூலிகையின் மகிமையால் தோற்றப்படும் பார்ப்பவர்களுக்கும் ஆச்சரியமாகயிருக்கும் கூண்டுவிட்டு கூண்டுபாயும் வித்தைகற்றவனென்று யாவரும் புகந்து கொண்டாடுவார்கள்.

### 109. தேவர்களெல்லாம் தோற்றமாகும் ஜாலம்

சிறுமுன்னையென்ற செடியைக் கண்டுபிடித்து ஞாயிற்றுக்கிழமைகாலையிற் செடியருகிற்சென்று அச்செடிக்கு மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட்டு தூபதீபங்காட்டி பலிகொடுத்து அந்த வேரைப்பிடுங்கிவந்து உலர்த்திப்பொடியாக்கி மாதர்கள் வீட்டுக்கு தூரமானசீலையில் வேரைவைத்து திரிபோல்சுற்றி தலைமண்டையோட்டில் ஐங்கோலத்தைலத்தை வார்த்து அதிலிந்தத் திரியைப்போட்டு பசுநெய் கூடவிட்டு விளக்கேற்றி கோவிலுக்குள்ளாகனாவது தனியாகவிரு

க்கும் மாளிகைக்குள்ளாகவாவது அல்லது தானிருக்கும் வீட்டிலாவது அந்த விளக்கை யேற்றிவைத்து இஷ்டமானபேர்கள் யாவரையு மழைத்துக்கொண்டு போய் இந்த விளக்கைப் பாருங்களென்றுசொல்லி வாயை மூடுவதற்குள்ளாக தேவர்கள்யாவரும் அவர்கள் கண்ணிற்குத் தோற்றப்படுவார்கள் அப்போது பார்த்த மனிதர்கள்யாவரும் மயங்கித் திகைப்பார்கள் விளக்கை அணைத்துவிட்டால் யாவும் மறைந்துபோகும்.

## 110 கல் தானய் எகிரிவிழும் ஜாலம்.

குன்று குடைதாங்கியென்ற செடியைக் கண்டுபிடித்து செவ்வாய்க்கிழமை காலையில்சென்று அச்செடிக்கு மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட்டு தூபதீபங்கொடுத்து வேரைப்பிடுங்கிவந்து அதைப் பிரமணைப்போல்சுற்றி முன்னதாக வைத்துக்கொண்டிருந்து ஜாலமாடுஞ்சபைக்கு வந்து ஒரு ஆள்பாரமுள்ள கருங்கல்லை முன்னேவைத்து சபையோரைப்பார்த்து இந்தக்கல்லை அலாக்காய்க்கிளப்பி அப்புறம்போய் விழும்படிச்செய்கிறேன் பாரென்றுசொல்லி தந்திரமாக மேற்படிவேர் சிம்மாட்டைத்தாழ ஒருவருக்குந் தெரியாமல்வைத்து அதின்மேல் கல்லைத்தூக்கிவைக்க கல்லானது பூமியில் நில்லாமல் கிளம்பி அப்புறம்போய் விழுந்துவிடும் பார்த்தோர்கள் பிர்மித்து இது குட்டிச்சாத்தான் யேவலென்று திகைப்பார்கள்.

## 111. தலைமேய் பாரஞ்சுமக்கும் ஜாலம்.

மேற்சொன்ன குன்றுகுடை தாங்கிச்செடிக்கு சூரியகிராணத்திலேனும் சந்திரகிராணத்திலேனும் அச்செடிக்கு மஞ்சள்நூல் காப்புகட்டி தீவளர்த்தி பொங்கலிட்டு பலிகொடுத்து தூபதியங்கொடுத்து வேரைப்பிடுங்கிவந்து அதைக் குளிசமாடி முன்னதாக வைத்துக்கொண்டு ஜாலமாடுமிடத்தில் சபையோர்களை பார்த்து நாலுபேர் தூக்கும்படியான இந்தப் பாராங்கல்லை என் சிரசின்மேல் தூக்கிவையுங்கள் யான் சுமக்கிறேன் என்றுசொல்லி ஒருவருக்குந் தெரியாமல் இந்தக்குளிசத்தை சிரசில் வைத்துக்கொண்டு தூக்கிவைக்கச்சொல்ல பாரம் தோற்றாது ஒருமணிநேரம் வைத்திருக்கலாம் பார்ப்பவர்கள் மனங்கலங்கி பிரமிப்பார்கள்.

## 112. பாராங்கல்லை உதைக்கக் கல்பின்னுக்கு நகரும்ஜாலம்.

கோபுரந்தாங்கி என்ற செடியைக்கண்டு பிடித்து ஞாயிற்றுக்கிழமை காலையிற்சென்று அச்செடிக்கு மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட்டுப் படிகொடுத்து தூபதீபங்காட்டி வேரைப்பிடுங்கிவந்து குளிசமாடி வைத்துக்கொண்டிருந்து ஜாலமாடும் சபையில் ஒருபெரிய பாராங்கல்லை கொண்டுவரும்படிச்செய்து சபையோரைப்பார்த்து இந்தப் பாராங்கல்லைக் காலினல் உதைத்து நாலடிதூரம் போகும்படிச் செய்கிறேன் பாருங்களென்றுசொல்லி மேற்படி குளிசத்தை வலதுகாலில் கட்டிக்கொண்டு கல்லை எட்டியுதைக்க செங்குத்தாய் கிளம்பி நாலடிதூரம் போய்விழும் பார்ப்பவர்கள் ஆச்சரியப்படுவதுடன் இது ஆஞ்சநேயருடைய வசியமென்பார்கள்.

## 113. பாம்பை புத்திலிருந்து அழைக்கவும் மறுபடியும் போகவும் செய்யும் ஜாலம்.

மயானத்தில் சபம் எறியும்போது அதனருகிற்சென்று அதன் வாயினுள் இரும்பாணியைச்சொருகி மார்பில் வெள்ளியாணிக்கடாவி தொப்புளில் செம்பாணியைச்சொருகிவிட்டு வந்துவிடவேண்டும் மறுநாள் காலேயில் எழுந்துபோய் அவைகளை எடுத்துக்கொண்டு வரவேண்டும் ஆனுல் காடாற்றுமுன்னே யெடுத்துக்கொள்ளவேண்டும் அதை பிறம்பில் கைபிடிக்குமிடத்தில் வெள்ளிக்கட்டு போட்டு பூமியில் ஊனும்பக்கம் இரும்பைச்சொருகி செம்பை பிரம்புக்கு நடுக்கட்டாகக்கட்டி பிறகு அதின்மேல் ஐங்கோலக்கருவபூசி பூசையில்வைத்து ஸ்ரீம் ரீம் கிலியும் என்று நாளொன்றுக்கு லட்சம் உருவு ஓதி ஜாலக்காளேப்பூசை செய்து சித்தியானவுடன் பிறம்பை யெடுத்து பத்திரப்படுத்தி வைக்கவேண்டும் வித்தைகாட்ட இஷ்டமுள்ளபோது இஷ்டமான பேர்களே பாம்பிருக்கும் புத்தருகில் அழைத்துக்கொண்டேகி அவர்களைப்பார்த்து இந்த புத்திலிருக்கும்பாம்புகளை வெளிவரும்படிச் செய்கிறேன் பாருங்களென்றுசொல்லி பிறம்பைவலக்கையிற்பிடித்து புத்தின்மேல் மூன்று தட்டுதட்ட புத்திலிருக்கும் பாம்புகளெல்லாம் வெளியே புறப்பட்டுவந்து விளையாடும் பார்ப்பவர்கள் ஆச்சரியப்படுவார்கள் உடனே அந்தப்பிறம்பை திருப்பி புற்றின்மேல் மூட்றுதட்டுதட்ட பாம்புகளெல்லாம் புற்றினுள்ளேபோய் பிகுந்துவிடும் அப்படிக்குக் காட்டினுலுங்காட்டலாம் அல்லது பாம்பை பெட்டியிலடக்கஞ்செய்து ஜாலமாடுஞ் சபையில்வைத்து முன்போல் பிரம்பினுல் மூன்றுதட்டுதட்ட பாம்புகள் பெட்டியைவிட்டு வெளியேவந்து படமெடுத்தாடும் பிறம்பை திருப்பித்தட்ட பாம்புகளெல்லாம் பெட்டிக்குள்போய் பேசாமலடங்கும் ஆனுல் 24-நாள் உருகொடுக்கவேண்டும்.

## 114. பாராங்கல்லே தானுய்நடக்கச்செய்யும் ஜாலம்.

கருங்காலிச் செடியைக்கண்டுபிடித்து வியாழக்கிழமைதினம் காலேயிற்சென்று வோமம்வளர்த்தி மஞ்சள்நூல் காப்புகட்டிபொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங்காட்டி அந்தச்செடியை மூன்றுதரம் வலஞ்செய்து அதின் வடக்கு போகும்வேரைப் பிடுங்கிவந்து பொடிசெய்து சீலேயில்வைத்து திரிபோல்சுற்றி நாய் தலேமண்டையோட்டில் வேப்பெண்ணெய் விளக்கெண்ணெய் நல்லெண்ணெய் இவை மூன்றும்விட்டு மேற்படி திரிக்கு ஐங்காயமைதடவி நாய்மண்டையோட்டிற்போட்டு விளக்கேற்றி தைலம்வாங்கி அத்துடன் புனுகும் சவ்வாதும் கலந்து ஜாலக்காளேப் பூசைசெய்து சிமிளில் வைத்துக்கொண்டு ஜாலமாடுஞ்சபையில் ஒருபெரிய பாராங்கல்லே கொண்டுவரும்படிச்செய்து சபையோரைப் பார்த்து இந்தக்கல்லே நடக்கச்செய்கிறேன் பாரென்று மேற்படி மையை எடுத்து அந்தக்கல்லின்மேல் ஒருவருக்குந்தெரியாமல் தடவ உடனேபாறையானது கடகடவென்று பிளரும் சபையோர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

## 115. ஒருமனிதன் பத்துமனிதனுகத் தோற்றும் ஜாலம்.

சித்திரரேகை என்னும் மரத்தைக்கண்டு அம்மரத்தை காலே மாலே நாற்பது நாள்போய் சுத்திக்கொண்டுவந்து நாற்பத்தோராம்நாள் அம்மரத்திற்கு மஞ்சள்

பூசி குங்குமமிட்டு பொங்கலிட்டு பால்பழம் சர்க்கரை அவல்கடலை முதலான தும் படைத்து தேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்து அம்மரத்தின் வடக்கு வேரை தோண்டிக்கொண்டுவந்து பொன் குளிசமாடி பின்பு ஜாலக்காளை பூசித்து அதை கையில் கட்டிக்கொண்டு ஜாலமாடும் சபையில் ஒருவனை நிறுத்தி குளிசங்கட்டியகையில் விபூதியை யெடுத்து தேவர்களையும் ஜாலக்காளையும் தியானித்து அவன்மேலேபோட அவன் பார்ப்பவர்களுக்கு பத்து மனிதனைப் போல் தோற்றப்படுவான் சபையோர்கள் ஆச்சரியப்படுவார்கள் இடதுகையில் கொஞ்சம் விபூதியையெடுத்து முன்போல் தேவர்களையும் ஜாலக்காளையும் தியானித்து அவன்மேல்போட ஒரு மனிதனாகத் தோற்றப்படுவான். (சித்திர ரேகையென்பது அரசு.)

## 116 ஒருவனை உட்காரவும் எழுந்திருக்கவும் செய்யும் ஜாலம்

நிண்ணாசிணிங்கிசெடியைக் கண்டுபிடித்து செவ்வாய்கிழமை காலையில்செடியருகில் சென்று மஞ்சள்நூல் காப்புகட்டி எக்கியம் வளர்த்தி பொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங்காட்டி இவ்விதமாக ஒன்பதுநாள் செய்து ஒன்பதாம் நாள் சாயரட்சை அதின் வேரைப் பிடிங்கிக்கொண்டு வந்து பஞ்சலோகத்தினால் ஒரு போல் வளையம் செய்து பூசையில் வைத்து சுப்பிரமணியரைதியானித்துச் சொல்லும் மந்திரம் ஓம் சரஹணபவா ஐயும் கிலியும் சவ்வும் எருறு நாளொன்றுக்கு ஆயிரத்தெட்டு உருகொடுத்து வரவேண்டும் இப்படி இருபத்தோர் நாள்கொடுத்து இருபத்திரண்டாம் நாள் பூசைபோட்டு வளையத்தையெடுத்து வலகையில் மாட்டிக்கொள்ளவேண்டும் ஜாலமாடும் சபையில் ஒருவனை நிற்க வைக்க சபையோரைப்பாரென்றுசொல்லி இந்த மனிதனை உட்காரவும் எழுந்திருக்கவும் செய்கிறேன் பாரென்றுசொல்லி வலகையிலுள்ளக் கடகத்தை புசத்திலிருந்து மணிக்கட்டண்டை இறக்கி நின்றுக்கொண்டிருக்கும் மனிதன் சிரசில் கையை வைத்து பாதம்வரைக்கும் இறக்கிக்கொண்டுவர உட்கார்ந்துக் கொள்ளுவான் எழுந்திருக்கச் சொன்னால் எழுந்திருக்கமாட்டான் பத்துபேர்பிடித்து தூக்கினாலும் குந்தின வண்ணமாகத்தான் கிளம்புவான் கடகத்தைப் புஜத்துவரைக்கும் தூக்கி அவன் பாதத்திலிருந்து சிரசுவரைக்கும் ஏற்றிட சடுக்கென்று எழுந்திருப்பான் பார்ப்பவர்கள் ஆச்சரியபடுவார்கள் ஆனால் கடகம்தெரியாமல் சொக்காய் போட்டுக்கொள்ளவேண்டும்.

## 117 கிணற்றிலிரங்கி சோருக்குஞ் ஜாலம்.

கால்படி அரிசியை அளந்தெடுத்து மூன்றுப் புறையாகத் துணியை செய்து அதில் அரிசியைப் போட்டு மூட்டைகட்டி எடுத்துக்கொண்டுபோய் சுண்ணாம்பு கால்வாயின் கீழேவைத்து விடவேண்டும் கால்வாய் வெந்தபிறகு அரிசிமூட்டையை யெடுத்துக்கொண்டு வந்து பத்திரப்படுத்தி ஜாலமாடும் சபையில் ஒரு குடுவையை வைத்து அதில்பாதிகுடுவை அரிசிபோட்டு சபையோரைப்பார்த்து இந்த குடுவையில் போட்ட அரிசியை கிணற்றிலிறங்கிச் சமையல் செய்து வருகிறேன் பாருங்களென்று சொல்லி அனைவருக்கும் முன்பாகவே கிணத்திலிறங்கி அரிசிக்குத்தகுந்த தண்ணீர்விட்டு குடுவையை முழுத்தினால்அரிசியெல்லாம்

வெந்துபோய்விடும் கிணத்திற்குள் சற்றுநேரமிருந்து வெளியேயேறிவருங்காலத்தில் உடம்பெல்லாம் நனைந்துகொண்டுவந்தால் சபையோர்கள் பார்த்து தண்ணீருக்குள் சமைத்து வந்தானென்று ஆச்சரியம்படுவார்கள் ஆனால் சாதத்தை மருவனத்தில் கொட்டி யாவருக்குங் காட்டலாம்.

## 118. நெருப்பில்லாமல் சாதம் சமைக்கும் ஜாலம்.

ஜாலமாடும் சபையில் ஒரு சிறிய குடுவைகொண்டு வரும்படிச்சொல்லி அந்தக் குடுவையில் கொஞ்சம் அரிசிபோட்டு முன்னே வைத்து சபையோர்களைப் பார்த்து இந்தகுடுவையில் போட்ட அரிசியை நெருப்பில்லாமல் சமைக்கிறேன் பாருங்களென்று சொல்லி தந்திரமாக தண்ணீர்விடுவதுபோல் சதூரக்கள்ளிப் பாலை விட்டு சற்றுநேரம் பொருத்துப்பார்க்க சாதம்வெந்திருக்கும் அதை அனைவருக்குங்காட்ட ஆச்சரியப்படுவார்கள் ஆனால் ஜாலமாடும்சபைக்குவருமுன்னே சதுரக்கள்ளிப்பாலைக்கறந்துகொண்டு தயாராய்வைத்திருக்கவேண்டும்.

## 119 வேறுமுறைப் பச்சைப்பாம்பு காட்டும் ஜாலம்.

பச்சைப்பாம்பை கொண்டுவந்து அதைக்கொன்று கெச்சக்காயும் பருத்திகொட்டையும் பாம்பின் வயிற்றில் கொள்ளுமட்டும் செலுத்தி மண்ணுக்குள் புதைத்து அதின்மேல் ஜலம்விட்டு நாலுநாள் பொருத்து தோண்டியெடுத்து வித்தை இந்த பாகமாக மூன்றுதரப்போட்டு எடுத்துக்கொண்டு கெச்சக்காயின் மேல் ஓடுபோக்கி இரண்டு வித விதத்தின் வெண்ணெய்யை மூன்றுதிரமாக வடித்துக்கொண்டு மூன்றுதிரம் வடித்து பஞ்சை திரிசெய்து அத்திரியை தீபமேற்றி அகலிவிட்டு ஐங்கோலத் தைலம் பூசி மேற்படி யெண்ணெயை அதில் விட்டு தீபமேற்றி இராக்காலத்திற் பார்க்க எங்கும் பச்சைப்பாம்பாகத் தோன்றும் அப்பாம்பை கணக்கிட முடியாது வெகுபேர்கள் மிரளுவார்கள் வத்தியை அமைத்துவிட பாம்புகள் மறைந்துபோகும்.

## 120. வைப்புயேவல் சூனியம் முதலானதுடன் கள்ளனைப் பிடிக்கும் மை.

நிலவாகையின் விரையை 10-பலம் நிருத்தெடுத்து நிலப்பனங்கிழங்கும் அதின் கொடியும் முப்பூவும் வகைக்கு விராகனிடை ஒன்று சேர்த்து கல்வத்திவிட்டு அறைத்துபில்லைதட்டி உலரப்போட்டு உலர்ந்தபின்பு அதையெறித்துத் தைலம்வாங்கி அதனுடன் ஆள்காட்டிக் குருவியின் முட்டையைக் கொண்டுவந்து அதை உடைத்து சிற்றுமணக்கெண்ணெயில் ஊத்தி மேற்படி தைலத்தையும் ஒன்றுகச்சேர்த்து எறித்துக்காய்ச்சி தைலம்வாங்கி சிமிளில் பதனமாகவைத்துக்கொண்டு யிருக்கவேண்டும் தனக்காவது இன்னுமெவர்களுக்காவது ஆபத்து காலங்களில் கொஞ்சம் மையையெடுத்து வெத்திலையில் வைத்து தானுவது இன்னும் வேறே யாரையாகிலும் பார்க்கச் சொல்ல வைப்பு யேவல் சூனியம் வைத்தவர் இன்னாரென்றும் இருப்பிடம் நிறம் குறி சொந்தக்காரர் அயலாரென்றும் தெரியவரும் களவுசெய்தவர் இன்னாரென்று அழிந்துபோகச்சென்றும் அழிவில்லையென்றும் தோற்றப்படும்.

## 121. வாத்திய ஜாலம்.

வன்னிய ரென்றும் பள்ளிகளென்றும் சொல்வது அவர்கள் கையினில் இரும்பினால் வளையம் போட்டுக் கொண்டிருப்பார்கள் அவர்கள் மரணமானால் அந்த வளையலுடன் மயானத்திற்குக் கொண்டுவந்து தகனம் பண்ணுவார்கள் அதைப்பார்த்துக் கொண்டிருந்து அவர்கள் மறுநாள் சென்றுகாடாற்று முன்னமேசென்று அந்த இரும்புவளையலை யெடுத்துக்கொண்டு வந்து அதைகருமானிடத்திற்கொடுத்துப் பாக்குவெட்டிசெய்து பதனமாகவைத்துக்கொள்ளவும்.

## 122. பேருகை வாத்திப ஜாலம்.

சங்கம் செடியைக் கண்டுபிடித்து சூரியக்கிராணமேனும் சந்திரக்கிராணமேனும் பிடிக்கும்போது மேற்படிசெடியருகிற்சென்று மஞ்சள் நூல்காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங்காட்டி பூசைப்போட்டு அசசெடியின் வடக்குபோகும்வேரை பிடுங்கிக்கொண்டுவந்து பத்திரமாகவைத்திருந்து சாலமாடுமிடத்தில் சபையோர்களைக்பார்த்து இப்போது பேரிகைவாத்தியம் முழங்கச் செய்கிறேன் பாரென்றுசொல்லி மேற்படிசங்கன்வேரை கையற்பிடித்துசெய்து வைத்திருக்கும் பாக்குவெட்டியால் அந்தவேரில் கொஞ்சம்வெட்ட பேரிகை வாத்தியம் முழங்கும் ஆச்சரியப்படுவார்கள்.

## 123. நகபத்து வாத்திய ஜாலம்.

குடான் செடியைக் கண்டுபிடித்து ஆதிவாரம் காலையில் செடியருகிற்சென்று மஞ்சள் நூல் காப்புகட்டி பலிபூசைபோட்டு தூபதீபங்காட்டி அற்செடியின் கிழக்குபோகிற வேரைப்பிடுங்கிவந்து பத்திரமாக வைத்திருந்து ஜாலமாடுமிடத்தில் சபையோரைப் பார்த்து இப்போது நகபத்துவாத்தியம் முழங்கச்செய்கிறேன் பாரென்றுச்சொல்லி தந்திரமாக இந்தவேரை சங்கன்வேருடன் சேர்த்துப்பிடித்து மேற்படிப்பாக்குவெட்டியால் ஒருதுண்டுவெட்ட நகபத்துவாத்தியம் முழங்கச்சபையோர்கள் பிர்மித்து ஆச்சரியப்படுவார்கள் குடான் என்பது செம்முள்ளி.

## 124. நகாறுவாத்திய ஜாலம்.

கிரீடம் என்னும் செடிக்கு வியாழக்கிழமைதினம் காலையிற்சென்று எருக்கன்நூலால் காப்புகட்டி அச்செடியை ஒன்பதுசுத்துவந்து தூபதீபங்காட்டி அச்செடியின் மேற்குப்போகும் வேரைப்பிடுங்கிவந்து பத்திரமாகவைத்திருந்து சாலமாடுமிடத்தில் சபையோர்களைப்பார்த்து இப்போது நீங்கள் யாவரும் சந்தோஷிக்கும்படியாய் நகாறுவாத்தியம் முழங்கச்செய்கிறேன் பாரென்று தந்திரமாக இந்தவேரைச் சங்கன்வேருடன் சேர்த்து இடதுகையில் பிடித்து அவ்வேரை வெட்ட நகாறுவாத்தியம் முழங்கும் ஆச்சரியப் படுவார்கள் கிரீடம் என்பது வேலிப்பருத்தி.

## 125. தம்பட்டவாத்திய ஜாலம்.

கிரீட்டி என்னும் செடியைக் கண்டுபிடித்து சூரியகிராணத்தில் மஞ்சள் நூல் காப்புகட்டி பலிபூசைப் போட்டு தூபதீபங் காட்டி வேரைப் பிடுங்கிவந்து பத்திரமாகவைத்திருந்து ஜாலமாடுமிடத்தில் சபையோர்களைப்பார்த்து இப்போது அனைவரும் ஆச்சரிக்கும்படியாய் தம்பட்டவாத்தியம் முழங்கும் அனைவரும் சந்தோஷப்படுவார்கள் கிரீட்டி என்பது பிரண்டை.

## 126. துத்திவாத்திய ஜாலம்.

புல்லுருவிச்செடிக்கு பூரணபருவத்தில் இரவு பனிரண்டு மணிக்குச் செடியருகிற்சென்று மஞ்சள்நூல் காப்புகட்டி பூசைபோட்டு பலிகொடுத்து அதின் வடக்குபோகும் வேரைப்பிடுங்கிவந்து பத்திரமாக வைத்திருந்து ஜாலமாடுமிடத்தில் சபையோர்களைப்பார்த்து இப்போது யாவரும் பிர்மிக்கும்படியாக துத்திவாத்தியம் முழங்கச்செய்கிறேன் பாரென்றுசொல்லி இந்தவேரை சங்கன்வேருடன் சேர்த்து மேற்படி பாக்குவெட்டியால் வெட்ட துத்திவாத்தியம் முழங்கும் ஆச்சரியப்படுவார்கள்.

## 127. தவண்டைவாத்திய ஜாலம்.

அகுலி யென்னும்செடிக்கு அமாவர்சைதினம் காலையில் மஞ்சள்நூல் காப்புகட்டி தூபதீபங்கொடுத்து அச்செடியின் தெற்குபோகும் வேரைப்பிடுங்கிவந்து பத்திரமாக வைத்திருந்து ஜாலமாடுமிடத்தில் அங்குள்ளப்பேர்களைப் பார்த்து தவண்டைவாத்தியம் வாசிக்கும்படிச்செய்கிறேன் பாரென்றுசொல்லி இந்தவேரைச் சங்கன்வேருடன் சேர்த்து மேற்படிப்பாக்குவெட்டியால் வெட்ட தவண்டைவாத்தியம் வாசிக்கும் அதைக்கேட்டு சபையோர்கள் ஆனந்திப்பார்கள் அகுலி என்பது நருவிலி.

## 128. தவில்வாத்திய ஜாலம்.

இருப்புக்கொல்லிச் செடியைக் கண்டுபிடித்து சந்திரகிராணத்தில் அச்செடிக்கு மஞ்சள்நூல் காப்புகட்டி பலிபூசைப்போட்டு அச்செடியின் வடக்குபோகும் வேரைப்பிடுங்கிவந்து பத்திரமாக வைத்திருந்து ஜாலமாடுமிடத்தில் சபையோர்களைப்பார்த்து இப்போது தஞ்சாவூர் தவில்வாத்தியம் முழங்கும்படிச்செய்கிறேன் பாருங்களென்றுசொல்லி இந்தவேரைச் சங்கன்வேருடன் சேர்த்து மேற்படி பாக்குவெட்டியால் வெட்டத் தவில்வாத்தியம் தமாஷாய் முழங்கும் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள் இருப்புக்கொல்லி என்பது சிவனார்வேம்பு.

## 129. மல்லாரிவாத்திய ஜாலம்.

குண்டலியென்னும்செடிக்கு செவ்வாய்க்கிழமைகாலையிற்சென்று சூரியன் உதயமாகுமுன் மஞ்சள்நூல்காப்புகட்டி பலிபூசைபோட்டு வேரைப்பிடுங்கிவந்து பத்திரமாகவைத்திருந்து ஜாலமாடுமிடத்தில் அங்குள்ள சபையோர்களைப்பார்த்து இப்போது அனைவரும் சந்தோஷப் படும்படியாக மல்லாரிவாத்தியம் முழங்கும்படிச்செய்கிறேன் பாருங்களென்றுசொல்லி இந்தவேரைசங்கன்வேருடன்

சேர்த்து பாக்குவெட்டியால்வெட்ட மல்லாறிவாத்தியம்முழங்கும் காதில்கேட்டு மனமகிழ்ச்சிக் கொள்வார்கள் குண்டலி என்பது சீந்தில்.

## 130. தாரை ஊதும் ஜாலம்.

முல்லைசெடிக்கு சூரியகிராணத்தில் மஞ்சள் நூல் காப்புகட்டி பலிகொடுத்துப் பூசைபோட்டு அச்செடியின் கிலக்குவேரை கொண்டுவந்து பத்திரப்படுத்தி வைத்திருந்து ஜாலமாடுமிடத்தில் சபையோர்களைப் பார்த்து எங்கேனுங் கேட்டிராத தாரைவாத்தியம் ஊதும்படிசெய்கிறேன் பாரென்றுசொல்லி இந்த வேரை சங்கன் வேருடன் சேர்த்து மேற்படிப் பாக்குவெட்டியால் வெட்ட தாரை வாத்தியம் வாசிக்கும் கேட்டு ஆனந்திப்பார்கள்.

## 131. பம்மைவாத்திய ஜாலம்.

சிறுநிம்பம் செடிக்கு சந்திரகிராணத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி பலிகொடுத்துப் பூசைபோட்டு வேரைப்பிடுங்கிவந்து பத்திரப்படுத்திவைத்திருந்து ஜாலமாடுமிடத்தில் சபையோர்களைப்பார்த்து இப்போது விநோதமாகப் பம்பைவாத்தியம் முழங்கும்படிச்செய்கிறேன் பாரென்றுசொல்லி இந்தவேரைச் சங்கன் வேருடன்சேர்த்து மேற்படி பாக்குவெட்டியால் வெட்ட மகா விநோதமாகப் பம்பைவாத்தியம் முழங்கும் கேட்டு ஆனந்த சந்தோஷப்படுவார்மள் சிறுநிம்பம் என்பது மலைவேம்பு.

## 132. பூரியூதும் ஜாலம்

சிறுகுறிஞ்சா செடியைக் கண்டுபிடித்து அமாவாசைதினம் காலையிற்சென்று மஞ்சள்நூல் காப்புகட்டி பூசைபோட்டு வேரைப்பிடுங்கிவந்து பத்திரமாக வைத்திருந்து ஜாலமாடுமிடத்தில் அங்குள்ளபேர்களைப் பார்த்து பூரி யூதும்படி செய்கிறேன் பாரென்றுசொல்லி இந்தவேரை சங்கன்வேருடன் சேர்த்துமேற்படி பாக்குவெட்டியால் வெட்ட பூரிவாத்தியம் முழங்கும் புதுமையாக யிருக்குதென்று சபையோர்கள் புகழ்வார்கள்.

## 133. சூரியவாத்திய ஜாலம்.

கந்திவாருணிச்செடியைக் கண்டுபிடித்து சந்திரகிராணத்தில் அச்செடிக்கு மஞ்சள்நூல்காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங்காட்டி அதின் வடக்குபோகும்வேரைப் பிடுங்கிவந்து பத்திரமாக வைத்திருந்து ஜாலமாடுமிடத்தில் சபையோர்களைப்பார்த்து இப்போது யாவரும் புகழும்படியாக சூரியவாத்தியம் வாசிக்கும்படிச்செய்கிறேன் பாரென்றுசொல்லி இந்தவேரை சங்கன் வேருடன்சேர்த்து மேற்படி பாக்குவெட்டியால் வெட்ட சூரியவாத்தியம் வாசிக்கும் சபையோர்கள் ஆச்சரியப்படுவார்கள் கந்திவாருணி என்பதுபேய்த்தூமட்டி.

## 134. சந்திரவாத்திய ஜாலம்

கமாதமென்னும் செடியைக்கண்டுபிடித்து சூரியகிராணத்தில் அச்செடிக்கு மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து பூசைபோட்டு அதின்

தெற்குபோகும் வேரைப்பிடுங்கிவந்து பத்திரப்படுத்தி வைத்திருந்து ஜாலமாடும் சபையில் அங்குள்ளவர்களைப் பார்த்து முந்தி சூரியவாத்தியம் வாசிக்கும்படி செய்தேன் இப்போது சந்திரவாத்தியம் வாசிக்கும்படி செய்கிறேன் பாரென்று சொல்லி இந்தவேரைச் சங்கன் வேருடன்சேர்த்து மேற்படிப் பாக்குவெட்டி யால் வெட்ட சகலரும் மகிழும்படியாக சந்திரவாத்தியம் வாசிக்கும் கமாதம் என்பது மணத்தக்காளி.

## 135. உடுக்கை வாத்திய ஜாலம்.

கரிக்கோலம் என்னும் செடியைக் கண்டுபிடித்து அமாவாசைதினம் அச் செடிக்கு மஞ்சள்நூல் காப்புகட்டி பலி பூசைபோட்டு அதின்வேரைப்பிடுங்கி வந்து பத்திரப்படுத்தி வைத்திருந்து ஜாலமாடுமிடத்தில் சபையோர்களைப்பார் த்து இப்போது உடுக்கைவாத்தியம் முழங்கும்படிச்செய்கிறேன் பாரென்றுசொ ல்லி இந்தவேரைச் சங்கன்வேருடன் சேர்த்து மேற்படி பாக்குவெட்டியால் வெட்ட உடுக்கைவாத்தியம்முழங்கும் உலகோர் ஆச்சரியப்படுவார்கள் கரிக்கோ லம் என்பது அழிஞ்சில்.

## 136. மேற்கூறிய சகலவாத்தியமும் ஒன்ருய் முழங்கும் ஜாலம்

ஆதியாகச்சொன்ன சங்கன்வேருடன் மற்றவேர்களையும் ஒருங்குசேர்த்து பத்திரப்படுத்தி வைத்துக்கொண்டு ஜாலமாடுமிடத்தில் சபையோர்களைப்பார் த்து இப்போது தனித்தனியாக வாத்தியங்களைக்கேட்டு ஆனந்தமடைந்தீர்கள் சகலவாத்தியமும் யேககாலத்தில் வாசிக்கும்படியாக செய்கிறேன் பாரென்று சொல்லி வேர்கள்யாவையும் ஒன்ருகவைத்து மேம்படி பாக்குவெட்டியால் துண்டுதுண்டாக வரிசையாய் வெட்டிக்கொண்டேவர வாத்தியங்களெல்லாம் ஏகோபித்து ஏககாலத்தில் முழங்கும் சபையோர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

## 137. சாதத்தை வேகாமற்படிக்கு செய்யும் ஜாலம்.

அத்திமரத்தில் சிறுதுண்டு வெட்டிவந்து அதைநன்ருய் யெறியவைத்து அதைக்கழுதை மூத்திரத்தில் அவித்து எடுத்துக்கொண்டு ஞாயிற்றுக்கிழமை மீனலக்கினம் பார்த்து ஈத்தைச்சூரிச்செடிக்கு மஞ்சள்நூலினல் காப்புகட்டிவந் துவிடவேண்டும் மறு ஞாயிற்றுக்கிழமையில் துலாலக்கினம் பார்த்து நிர்வாண மாயிருந்து செடிக்கு காயம்படாமல் உச்சிவேர் அறுமல் பிடுங்கிவந்து மேற்படி அத்திமரம் சுட்டக்கரி அடுப்பிலும் இந்தவேரைப் பாண்டத்துள்ளேயும் போட் டால் எவ்வளவு தீபோட்டு எறிக்கினும் சாதம் வேகாது மறுபடியும் அடுப்பை பசுஞ்சாணியில்மெழுகி சுத்திசெய்தாலொழிய வேகாது.

## 138. சுண்ணும்பு வேகாதிருக்கும் ஜாலம்

எட்டிமரத்தில் சிறுதுண்டு வெட்டிக்கொண்டுவந்து அதை நன்ருக எறித்து எருமை மூத்திரத்தில் அவித்து அந்தக்கரியை யெடுத்து பத்திரப்படுத்தி பின்பு செவ்வாய்கிழமை கேட்டை நட்சத்திரமும் கடகலக்கினமும் பார்த்து எதைச் சொன்னுலுங்கேட்கும் ஈத்தைச்சூரிச்செடிக்கு மஞ்சள் நூலினல் காப்புகட்டி பொங்கலிட்டு தூபதீபங்காட்டி அதின் வடக்குப்போகுவேரைப் பிடுங்கிகொண்டு

வந்து பத்திரப்படுத்தி வைத்திருந்து மேற்படிக்கரியை சுண்ணும்புக் கால்வாயினுள்ளேபோட்டு வேரை ஈசானிய மூலைபக்கம் சொருகிவிட சுண்ணும்புக்கல்லாயினும் கிளிஞ்சலாயினும் யெவ்வளவு கரி கட்டைபோட்டாலும் வேகாது அந்தவேரை யெடுத்துவிட்டு பசுங்கோமியந்தெளிக்க எப்போதும்போல்வேகும்.

## 139. ஜலத்தின்மேல் விளக்கேறியும் ஜாலம்.

அத்தி மரத்தினுடையபாலை துல்லிதமான சல்லாக்கந்தையில் துவட்டித் திரியாகத்திரித்து கொஞ்சம் ஆழமானக் கலசத்தில் கால்பங்கு ஜலத்தைவிட்டு ஆனல் ஜலத்துக்குமேல் ஒரு யிழையுயரமான சிறு கல்லுகளாவதுபோட்டு வைத்து நனையாதப்பக்குவமாய் வைத்துக்கொளுத்திக் காட்டினுல் நம்புவார்கள் அதில் தடையுள்ள கலசமாகவேசெய்து வைத்துக்கொண்டால் முன்னே வத்தியைப்போட்டு எல்லாருக்கும் நடுவில்நின்று ஜலத்தைவிடலாம் வத்திநனையாமல் விடவேண்டும்.

## 140. தீபங்காட்டும் ஜாலம்.

குங்கிலியத்தையும் கர்ப்பூரத்தையும் பொடியாகச்செய்து நசுக்கி ஒரு கந்தையில் பரப்பி திரியாகத்திரித்து விளக்கெண்ணெயில் தோய்த்து வைத்துக்கொண்டு முன்போல் தடையுள்ள கலசத்தில் வத்திபோட்டு தடைக்கு ஒரு யிழை குறைவாகவே ஜலத்தைவிட்டுக் கொளுத்தி சபையில்வைத்தால் இரண்டு நாழிகையெறியும் நிஜமாகவே நம்புவார்கள் சிலர் தேவதை வசியமென்று நினைப்பார்கள்.

## 141. ஜலம்விட்டு விளக்கேறியச்சேய்யும் ஜாலம்.

ஜாலமாடும் சபைக்கு வருகுமுன்னமே திருகுகள்ளிப்பாலைக் கரண்டியளவெடுத்து கற்பூரமும் அதேயளவெடுத்து இரண்டையும் சேர்த்து அரைத்து துல்லியமான சீலையில்தடவி உலர்த்தி வத்தியாய்த் திரித்து தயார்செய்து வைத்திருந்து ஜாலமாடும் சபையில் தடையிருக்கும் கலசத்தில் மேற்படி வத்தியைப் போட்டு யாவரும்பார்க்க கலசத்தில் ஜலத்தைவார்த்து விளக்கேத்திக் காட்டினுல் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள்.

## 142. சூளை வேகாதிருக்கும் ஜாலம்.

ஆச்சாமரத்தில் சிறுதுண்டு வெட்டிக்கொண்டுவந்து எறித்து கழுதை மூத்திரம் எருமை மூத்திரம் நாய்மூத்திரம் இம்மூன்றும் விட்டு அவித்து அந்தக் கரியையெடுத்து பத்திரப்படுத்தி வைத்துக்கொண்டு பின்பு அமாவாசை மூலநட்சத்திரம் விருச்சிகலக்கினம் இவைகூடிய தினத்தில் நத்தை சூரிச்செடிக்கு மஞ்சள் நூலினுல் காப்புகட்டிவிட்டு வந்துவிடவேண்டும் பூரணபருவத்திற்சென்று பொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங்காட்டி அதின்வேரைப்பிடுங்கிவந்து வைத்துக்கொண்டு எந்தசூளையாவது போடும்போது மேற்படிச் சுட்டகரியை சூளை போடுமுன் உள்ளே போட்டுவிட்டு இந்த வேரைக்காத்து யெந்தபக்கம்மடிக்கின்றதோ அந்தவாட்டம்பார்த்து வேரைச் சொருகிவிட எவ்வளவுவரட்டி கட்டை

போட்டாலும் அச்சூளை வேகாது அந்தவேரை யெடுத்துவிட்டு சந்தனக்கட்டையும் மஞ்சள்கொம்பும் சூளையில்போட வேகும் ஆனால் சூளை அடுக்கும்போதே கரியைபோட்டு விடவேண்டும்.

## 143. போதை யெடுக்கும் ஆஞ்சனம்.

ஆடாதொடைச் செடியைக்கண்டுபிடித்து ஆதிவாரத்தில் மஞ்சள்நூலால் காப்புகட்டி பொங்கலிட்டுப் பூசைபோட்டு அதினுடைய கிழங்கை விராகன் ஒன்று நிறுத்து கல்வத்திற் போட்டு அதினுடைய பழமும் அதே நிறையாகச் சேர்த்துத் கோரோசனை அறைவிராகனிடை கூட்டி சாரை நெய்விட்டு அரைத்து வெட்டுண்ட மனிதன் தலைமண்டையோட்டைத் தேடிக்கொண்டுவந்து அறைத்தமையைச் சீலையில்தடவி உலர்த்தி திரிசெய்து மண்டையோட்டில் போட்டு முத்தெண்ணெய் விட்டு விளக்கேற்றித் தைலம்வாங்கி சிமிளில் வைத்துக்கொண்டு ஒருமிளகு பிரமாணம் மையையெடுத்து வெத்திலையில் வைத்து கண்ணை சிமிட்டாமல் உற்றுப் பார்க்கபார்க்கப் பாதாளமெல்லாம் பட்டணமாக தோன்றும் நதிகளெல்லாம் தெரியும் பூமியிலுள்ள எவ்வகைப்பட்டதும் கண்ணிற்கு நேராகத்தோற்றும் உடனேயதற்குச் செய்யவேண்டிய சாந்திசெய்து பூமியைக்கிண்டியெடுத்து கொள்ளலாம் ஆனால் கை கூட்டி அறைத்து சிமிளில் அடக்கம் செய்தவுடன் குருவை தியானித்து கணபதி பூசைசெய்து அஞ்சனதேவியையும் அனுமாரையும் தோத்திரம் செய்து பின்பு மையையெடுத்து ஆட சித்தியாகும்.

## 144. நினைத்தகுறி சொல்லும் ஜாலம்.

பச்சைப்புழுகு கோஷ்டம் பச்சைப்பூரம் சந்தனம் இவைகளைச் சமநிடையாகச்சேர்த்து கல்வத்திலிட்டு ஜலம்விட்டு மைபோல் அறைத்து செப்புத்தகட்டில் பூசி அதின்மேல் திரிகோண சக்கரமிட்டு அதினுள் ஸ்ரீங்காரத்தை அடைத்து சொல்லும் மந்திரம் ஓம் நமோ பகவதே ஓம் உக்கிரமாகாளி சாமுண்டியாயி வயிரவி சாம்பவி யோங்காக்குநிமிலி மகாசத்தி நமா நமாகா வென்று மூன்றுகாலமும் தவராமல் ஆயிரத்தெட்டு உருகொடுத்துவர சித்தியாகும்.

## 145. பூசை செய்யும் விதி.

மூன்றுகாலமும் தலைமுழுகவேண்டும் ஒருப்பொழுதுபோலிருந்து ஒருவேளை அமுதுக்கொள்ளவேண்டும் அதில் முன்னெடும் கவாளத்தை காகத்திற்கு வைக்கவேணும் வேஷ்டிப்போட்டுப் படுக்கவேணும் இவ்வாராகயிருந்து கத்தியைவைத்துப் பூசைசெய்ய ஒருமண்டலத்தில் சித்தியாகும் சித்தியானவுடன் செய்யும்தொழில் யின்னதென்றும் சொல்லலாம் ஒருவர் நினைத்து வந்துக்கேழ்ப்பதையும் சொல்லலாம் ஓடிப்போனவரையும் பிடித்துக் கொடுக்கலாம் ஆனால் புகைச்சாப்பிடக்கூடாது வெத்திலைப்பாக்குத்தின்னலாம் குறிசொல்லும்போது இடதுகையை கன்னத்தில்வைத்துக்கொண்டு வலதுகையை நீட்டிக் குறிசொல்லவேண்டும்.

## 146. சோக்குத்தாள் ஜாலம்

சொக்குப்பாக்கு அப்பைக்கிழங்கு நிலப்பனங்கு தாளிமீவர் பேயத்திவேர் பேயலாவேர் குப்பமேனிவேர் வேளைவேர் கழற்சிவேர் ஊமத்தின்வித்து தலை மஞ்சங்கொடி மாதர்வீட்டுக்குத் தூரமானசீலை மயானத்தின் சாம்பல் மண்டை யோடு ஊமை மண்டைப்பொடி இவையெல்லாம் சமனிடையாகக்கூட்டி பொடி செய்து வைத்துக்கொண்டு பேயாலன் பாலும் கூடசேர்த்துப் பொடிசெய்ய வேண்டும் இப்படிச்செய்து வைத்துக்கொண்டு கொஞ்சம் பொடியை யெடுத்து சபையில் தூற்றிவிட்டால் சகலபேரும் பொறிகலஸ்கி மதிமயங்கிக்கிடப்பார்கள் அவர்களை மடியைப் பிடித்திழுத்து புரட்டிப்புரட்டி அவர்கள் வசமுள்ளப் பொருளைப் பரித்துக்கொண்டாலும் தெரியாது தடியெடுத் தடித்தாலுந் தெறியாது உடனே நல்லசலம்கொண்டுவரச்சொல்லி அந்த சலத்தை அவர்கள்மீதுதெளிகக் மயக்கம்தெளித்து நினைவுபிறக்கும் அறிவுண்டாகும் ஆனல் சலம்தெளித்த சற்று நேரம்வரைக்கும் திகைப்பூண்டு மிதித்தாப்போலிருக்கும் உடனேதெளிந்துவிடும்.

## 147. பேயாட்டும் ஜாலம்.

காட்டின்பசுவின் எருவைக்கொண்டுவந்து கொளுத்தி சாம்பலாக்கி சீலையில் வடிகட்டி திருநீருபோல் செய்துவைத்துக்கொண்டு அப்பைக்கிழங்கு தாளிவேறு பேயத்திவேர் பேயலாவேர் ஊமத்தம்வித்து இவைகள் வகைக்கு விராகனிடை யெடுத்து பொடித்து சீலையில்வடிகட்டி மேற்படி விபூதியுடன் கலந்துவைத்துக் கொள்ளவேண்டும் ஜாலமாடுமிடத்தில் ஒருமனிதனைக் குந்தவைத்து சபையோரைப்பார்த்து இந்தமனிதனை பேய்ப்பிடித்தவன்போல் ஆடும்படி செய்கிறேன் பாரென்றுசொல்லி மேற்படி திருநீறைகொஞ்சம் கையிலெடுத்து மந்திரம்சொல்பவன்போல் வாயில்வந்தபடி எதையோசொல்லி அவன் சிரசில்போட உடனே தலையை சுற்றியாடுவான் வாயில்வந்தபடிக்கெல்லாம் பினத்துவான் சபையோர்கள் பிர்மைக்கொண்டு திகைத்துநிற்பார்கள் அதன்றியும் சாதாரணமாய் பேய் பிடித்த ஸ்திரிபுருஷர்களா யிருந்தபோதிலும் ஆடாமல் வாய்திறவாமலிருந்தால் அவர்களைகுந்தவைத்து மேற்படிதிருநீரைப்போட ஓங்காரமுமிட்டு ஆடி உடனே ஊரும்பேரும் சொல்லிவிடும் அப்போதேமுடியறுத்துவிட்டால் அத்துடன் ஒழிந்துவிடும் ஆடும்பேயை ஆடாமல் உடனே நிருத்தவேணுமென்றால் ஜலத்தை தெளிக்க மயக்கம் தெளிந்து நின்றுவிடும்.

## 148. ஆடாத முனிகளை வேறுவிதம் ஆட்டும் ஜாலம்.

எவ்விதமான முனிகள் பேய்கள் பிசாசுகள்பிடித்து வாய்திறவாமலும் ஆடாமலுமிருந்தபோதிலும் அதற்கு சிறிய பயரளவு அபினியை எடுத்து வெத்திலையில் வைத்து மடித்து உள்ளுக்குச்செலுத்திவிட உடனே காகாவென்று ஆடி ஊரும் பேரும் தான் ஒண்டியிருந்து பிடித்விடமும் பரபரவென்று சொல்லிவிடும் அப்போது முடியை அருத்துவிட்டு முழுக்கவைக்க அத்துடன்யாவும் ஒழிந்துவிடும்.

### 149. வேறுவிதமுறை பால் உதிரமாகும் ஜாலம்.

தம்பலம் பூச்சியைக்கொண்டுவந்து புல்லில் கலந்துப் பசுவுக்குக்கொடுத்தால் அதைதின்றவுடன் பாலைக்கரந்தால் இரத்தநிரமாக இருக்கும் யாவரும் ஆச்சரியப் படுவார்கள் அப்போது நீ சபையோரைப் பார்த்து இரத்தநிரமாக கரக்கும்பாலை வெள்ளைநிரமாகக் கரக்கும்படி செய்கிறேன்பாரென்றுசொல்லி ஒருதொட்டியில் நல்லசலம்விட்டு சுக்குத்தூள்பண்ணிப் போட்டுக்கலக்கிப் பசுவைக் குடிப்பாட்டி னப்பிறகு கரந்தால் பால் எப்போதும்போல் வெள்ளையாயிருக்கும் சந்தோஷப் படுவார்கள்.

### 150. நெருப்பில்லாமல் கர்ப்பூரம் கொளுத்தும் ஜாலம்.

கற்பூரகட்டியைச் சபையோர்களுக்கு முன்னேவைத்து அவர்களுக்குத்தெ ரியாமல் தந்திரமாக சிருபயரளவு திமிர்பாஷாணத்தை கற்பூரக் கட்டிமீதுவைத்து கையிலேந்தி சபையோர்களுக்கு நன்ருய்க்காட்டி குருவிற்கு தூபமென்றுசொல் லிவாயினுலூதினல் குபீலென்று எறியும் சபையோர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

### 151. வேறுவிதம் முறத்தில் பொரிபொரிக்கும் ஜாலம்.

ஒரு ஜான் நிகளத்தில் அதற்குத்தக்கின அகளத்தில் ஒரு முச்சல்செய்து அடியில் கள்ள அறையோடே முடையவேண்டியது அந்தக் கள்ள அறையில் பிடித்தமட்டும் பொரியைப்போட்டு வைத்துக்கொண்டு ஜாலமாடும் சபையில் வந்து உட்கார்ந்து ஒரு சவுக்கத்தைக் கழுத்தில் கட்டி இரண்டு முந்தாணியையும் இரண்டுக்கால் பெருவிரலில் சுத்திப்பிடித்து ஷெ முச்சலில் கொஞ்சம்நெல்லைப் போட்டு கொஞ்சம் தண்ணிதெளித்துப் பொரிபொரிப்பதுபோல் கலகலவென் றுக் குலிக்கிக்கொண்டேயிருந்தால் அடியிலிருக்கும் பொரியெல்லாம்கீழுமேலு மாய் துள்ளிமேலுக்கு வந்துவிடும் பார்ப்பவர்கள் ஆச்சரியபடுவார்கள்.

### 152. துணியில் சோளம் பொறிக்கும் ஜாலம்.

சோளத்தை மூன்றுபிறை துணியில் மூட்டைகட்டி சுண்ணும்பு தாளிக்கு மிடத்தில் கொஞ்சம் பள்ளந்தோண்டி இந்த சோள மூட்டையைவைத்து மே லேமூடிவிடவேண்டும் சுண்ணும்புத் தாளித்தபிறகு அதை தோண்டி யெடுத்துக் கொண்டு ஜாலமாடுமிடத்தில் துணியைச் சவுக்கமாகப் பிடிக்கச்சொல்லி நடுவில் சோளத்தைப்போட்டு கொஞ்சம் ஜலத்தைத்தெளித்தால் முத்துபோல் பொறி யும் சபையோர் ஆச்சரியப்படுவர்ர்கள்.

### 153. வேறுவிதம் குடத்கின்மேல் தேங்காயுடைக்கும் ஜாலம்.

குப்பமேனி செடியை கண்டு பிடித்து ஞாயற்றுக்கிழமை பார்த்து மஞ்சள் நூலினல் காப்புகட்டி தூபதீபங்கட்டிா அச்செடியின்வேர் அருமல்பிடுங்கிவந்து புதுக்குடத்தினுள்ளே வைத்து கவிழ்த்துவிட்டு தேங்காயைக் குடத்தின்மேல் வைத்து துணிவாக மோதி தடியால் நேராக அடிக்க சூரைவிட்டாற்போற் சிதறி போகும் பார்த்திருந்தபேர்கள் ஆச்சரியப்படுவார்கள் ஆனல் தன் பேருக்கு உள்ளபட்சி அரசாயிருக்கும்போது செடிக்குக் காப்புகட்டவேண்டும் பட்சிபார் க்க தெரியாவிட்டால் தேர்ந்தசோசியரிடத்திலாவது கேட்டுகொள்ளவேண்டும்

### 154. துணியை விசிறி ஆகாயத்திற்போட குடைபோல்வரும்ஜாலம்.

தருவீழியென்னும் செடிக்குக் காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங்காட்டி திக்குபந்தனம் செய்து பின்பு அதைவெட்டி அதனுடையகிழச் கைவாங்கி அந்தகிழங்கில் விராகனிடை ஒன்று நிறுத்தெடுத்து ஒரு சவுக்கமானத் துணியில்கட்டி குருவை தியானித்து விநாயகரைப் பூசித்து ஜாலக்காரனை மனதில் நினைத்து அந்தரதேவதையை துதித்து சீலையைக்கையிலெடுத்து ஆகாயமார்க்க மாக விட்டெறிய அது கீழே யிறங்கும்போது குடைபோல்யிறங்கும்சபையோர் கள் ஆச்சரியப்படுவோர்கள் சிலர் பிர்மித்து அந்திரதேவதை வசியமென்பார்கள்.

### 155. நெருப்பிலாடும் வித்தை.

பச்சை தவளை கொண்டுவந்து தவைத்து ஒரு பாண்டத்திற்போட்டுஜலம் விட்டு அடுப்பேற்றி யெறித்து அதில்வரும் நெய்யை யெடுத்து வேறொரு பாண் டத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

### 156. மண்வெட்டியைக் காய்ச்சிக் கையாலெடுக்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் கருமான் உலைபோற்செய்து அதற்கு இரண்டு துருத்தி வைத்து சீமைகரியேனும் காட்டுகரியேனும் போட்டு நெருப்பிட்டு துருத்தியால் ஊத நெருப்பு கனகனவென்று யெறியும் அப்போது மண்வெட்டியை உலக்கட த்தில் வைத்துப் பழுக்கக்காச்சி கொரடால் தூக்கி கல்லின்மேல்வைத்து சபை யோர்களைப் பார்த்து இதோபழுக்கக் காய்ந்திருக்கும் மண்வெட்டியை கையால் தூக்குகிறேன் பாரென்றுசொல்லி மேற்படி பச்சைத்தவளை நெய்யைகையில் தலும்பப் பூசிக்கொண்டு மண்வெட்டியைத் தூக்க ஆச்சரியப்படுவோர்கள் சிலர் அக்கினி பகவான் வசியமென்பார்கள்.

### 157. நெருப்பில் காய்ச்சிய யிரும்புகுண்டை பல்லால் கடித்தெடுக்கும் ஜாலம்.

விளாங்காய் பருமனுள்ள ஒரு இரும்புகுண்டை கருமான் உலையிலிட்டு சிவக்கக்காய்ச்சி கொரடினால் தூக்கி ஒரு கல்லின்மேல்வைத்து சபையோரைப் பார்த்து இந்த குண்டை பல்லினால் கடித்து தூக்குகிறேன் பாரென்றுசொல்லி மேஷ தவளைநெய்யை வாய்நிறையஊத்திக்கொண்டு குண்டை பல்லினால் கடித்து தூக்கலாம் வாய்சுடாது பார்ப்போரெல்லாம் பிர்மித்து நிற்பார்கள் சிலர் அக்கி னியைக் கட்டிவிட்டானென்பார் சிலர்கண்கட்டுவித்தை யென்பார்கள் சிலர்மகா மந்திரவாதியென்று மயங்குவார்கள் நெய்யை குழப்பி பிழிந்து விடவேண்டும்.

### 158. இரும்புக் கம்பியைக்காச்சி வைக்கோல் மேல்போட வைக்கோல் வேகாதிருக்கும் ஜாலம்

ஒரு அடி நிகளமுள்ள ஒரு இரும்புகம்பியை சிவக்கக் காச்சி கொரடால் தூக்கி சபையோர்களைப் பார்த்து இந்தக்கம்பியின்மேல் வைக்கப்பிரி சுற்றி வை க்கல் வேகாதிருக்கும்படிக்குச் செய்கிறேன் பாரென்று சொல்லி வைக்கப்பிரி யை முன்னதாக தவளை நெய்யில் தோய்த்து வைத்திருந்து அதை யெடுத்துச்

சுற்றவைக்கோல் கொஞ்சமேனும் வேகாது ஆச்சரியப்படுவார்கள் உடனே அந்தவைக்கோலை யெடுத்துவிட்டு சாதாவைக்கோலின்மேல் கம்பியைப்போட குபீலென்று யெறியும் பிர்மிப்பார்கள்.

## 159 சங்கிலியைக்காச்சிக் கையாலெடுத்து உருவும் ஜாலம்

இரும்புசங்கிலியை கருமான் உலையில்போட்டுப் பழுக்கக்காச்சி கொரடாலெடுத்து ஒரு இரும்பு கூட்டில் வைத்துச் சபையோர்களைப் பார்த்து இந்த சங்கிலியைக் கையாலெடுத்து உருவுகின்றேன் பாரென்றுசொல்லி மேற்படி தவளை நெய்யை கையில் தளும்பத் தடவிக்கொண்டு சங்கிலியையெடுத்து உருவஆச்சரியபடுவார்கள்.

## 160. நெருப்பின்மேல் நடக்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் தேவையானமட்டும் கட்டைகளைப்போட்டுக்கொளுத்தியெறிந்து தீயமர்தபின் நெருப்பைபரப்பி சபையோரைப்பார்த்து இந்த நெருப்பை மெறிக்கிறேன் பாரென்றுசொல்லி மேற்படி தவளைநெய்யை காலின்பாதங்களில் தளும்பப் பூசிக்கொண்டு நெருப்பில் குதிக்க கால்சுடாது கண்ணால் பார்ப்போர்கள் மிரண்டு பிர்மித்து நிற்பார்கள்.

## 161. ஆகாயத்தில்விட்டெறிந்த மர அன்னம் ப்றந்துபோகும் ஜாலம்.

மரத்தினால் அன்னம்போல் ஒன்றுசெய்து அதற்குவர்னமுதலானதுங் கொடுத்து தயார்செய்து வைத்துக்கொள்ளவேண்டும் பின்பு நத்தைச்சூரி செடியைக் கண்டுபிடித்து சூரியகிராணத்தில் மீனலக்கினமும் அவிட்டநட்சத்திரமும் கூடிய தினத்தில் அச்செடிக்கு மஞ்சள்நூலினால் காப்புகட்டி வந்துவிடவும் பிறகு கன்னியாலக்கினத்திற்சென்று அச்செடிக்குக் காயம்படாமலும் வேர் அறுமலும் பிடிங்கிக்கொண்டுவந்து வேரை பத்திரப்படுத்தி வைத்துக்கொண்டு ஜாலமாடுமிடத்தில் மேற்படி மர அன்னத்தை சபையோர்களுக்குக் காட்டி இதை ஆகாயத்திலெறிந்துபரந்து இரங்கிவரும்படியாகச் செய்கிறேன் பாரென்றுசொல்லி அன்னத்தை கையிலெடுத்து தந்திரமாக மேற்படிவேரை மோதிரம்போல் அன்னத்தின் காலில்சுற்றி ஆகாயத்தில் விட்டெறிய அது உயரப்போய் திரும்பி கீழேவரும் போதுப்பார்க்கையில் உயிருள்ள அன்னம்பறந்து வருவதுபோலிருக்கும் பார்ப்பவர்களெல்லாம் பிர்மித்து ஆனந்திப்பார்கள் கீழேவிழும்போது மர அன்னமாகத் தானிருக்கும்.

## 162. ஜலத்தின்மேல் நடக்கும் ஜாலம்.

ஜலத்திரட்டிங் கூட்டுமூலிகைக் கொண்டுவந்து வெய்யலில்போட்டு உலர்த்தி தூளாய்ச்செய்து ஐங்கோலத் தைலம்விட்டு மைபோல் அறைத்து பரணியில் வைத்துக்கொண்டு அந்தமையை பாதக்குரட்டில் கீழ்ப்புறந்தடவி காலிற்போட்டுக்கொண்டு ஜலத்தின்மேல் பயமில்லாமல் நடக்கலாம் அப்படிக்கல்லாமல் இந்த மையை வாகனங்களுக்குப்பூசி அதின்மேல் எறிக்கொண்டு ஜலத்தின்மேல்போகலாம் ஆனால் கிணர்குளந்தவிர ஆற்றில் போகக்கூடாது.

## 163. வேறுவித தண்ணீர்மேல் மிதக்கும் ஜாலம்.

குடோசரியென்கிற மூலிகைவேறு பச்சைத்தவளை நிணமும் இதை இரண்டும் போதுமானமட்டும் சேர்த்தரைத்து ஒரு ஆள் படுக்கின்ற தடுக்கில் ஒருபுறம் தளும்பப்பூசி உலர்த்தி குளத்தில் அல்லது கிணத்தில்போட்டு தான்விபூதி ருத்திராட்சம் முதலானதும் பலமாகப்பூசி கையில் ஜெபமாலையெடுத்துக்கொண்டு அந்தத் தடுக்கின்மேல் மல்லாக்கப் படுத்துக்கொண்டுண்டு ஈஸ்வரனை நோக்கி யோகம் செய்பவன்போலிருக்கவும் ஆனால் முதுகில் நெட்டிக்கொண்டே யிருந்தால் இக்கரையும் அக்கரையும் போய்க்கொண்டும் வந்துக்கொண்டுமிருக்கும் தடுக்குத்தண்ணீரில் மூழ்காது கண்டவர் பிர்மிப்பார்கள் கடவுளைப்போல் வந்தனைவழிபாடுகளும் செய்வார்.

## 164. அகாயத்தில் விட்டபுறுவை புட்டியில் இறக்கும் ஜாலம்

ஒரு கருப்பு புட்டியைக் கொண்டுவந்து அடியில் அறுத்து இரண்டுவெள்ளை புறு கொண்டுவந்து ஒன்றை உள்ளேவிட்டு தகரத்தினுல் புனல் போல்செய்து அவயில்சொருகி தாருபூசியிருக்கவும் ஜாலமாடும் சபையில் வந்து மற்றொரு வெள்ளைப்புறுவை சபையில் காட்டிவாசலில் வந்து ஆகாயத்தில் விட்டுவிடவும் பின்பு இந்தபுட்டியை மேஜையின்மேல் வைத்து குட்டிக்சாத்தானுகிய பொம்மையை அருகில்வைத்து மாத்திரக்கோலை கையிற்பிடித்து பொம்மையைப்பார்த்து ஓ குட்டிச்சாத்தான் இப்போது நான் விட்டபுறு இந்தபுட்டியில் வருமாவராதல்லவா (சல்) நீ எனக்கு அடிமையாயிருப்பது நிஜமானுல் சீக்கிரம் இந்த புட்டியில் வரும்படியாய்ச்சொல் பார்ப்போமென்று சற்றுநேரம் மந்திரம் செய்பவன்போல் கண்ணைமூடிக்கொண்டிருந்து இந்த புட்டியை எடுத்துக்கீழே பளீலென்றுக் தட்டினுல் புறுபறந்துபோகும் பார்ப்பவர்களெல்லாம் பிர்மித்து இது இந்திர ஜாலமாயிருக்குதென்பார்கள்.

## 165. வேறுவிதம் களவுபிடிக்கும் ஜாலம்.

ஒருவீட்டில் திருடுபோகுமாகில் ஒரு அறையைக்காலிசெய்து மெழுகி கோலமிட்டு பசும்சாணத்தால் பிள்ளையார்பிடித்துவைத்து கர்பூரம்சாம்பிராணி வெத்திலைப்பாக்கு பழம் அவல்கடலை எலுமிச்சம்பழம் விபூதிகட்டி இவை முதலானதும் கொண்டுவரும்படியாகச்செய்து அந்த அறைக்குள்சென்று கதவை மூடிக்கொண்டு தன்மனம்போல் ஒரு சக்கரமெழுதி பழமுதலானதையும்வைத்து கர்பூரம்கொளுத்தி பின்பு நீசெய்யவேண்டிய தந்திரமாவது ஒரு அடிநிகளமுள்ள ஒரு இரும்பாணி சம்பாதித்து அதின்மேல் நல்லவாசனையுள்ளப் பெருங்காயத்தை தளும்பப்பூசி சக்கரத்தின்மத்தியில் நட்டுவைத்து விடவேண்டும் ஆனால் ஆணியும் பெருங்காயமும் முன்னதாகவே தயார்செய்து வைத்திருக்கவேண்டும் அறைக்குள் வேலைமுடிந்தவுடன் கதவைதிரந்துக்கொண்டு வெளியில்வந்து அவ்வீட்டிலிருப்பவர்கள் அனைவரையுமழைத்துச் சொல்லவேண்டியது இதோ இந்த அறைக்குள் நட்டயிருக்கும் இரும்பாணியை ஐந்துவிரலினுலும் கெட்டியாக அழுத்திப் பிடித்துவிட்டு வரவேண்டும் ஆனுல் களவுசெய்தவர்கள் கையை ஆணி கெட்டி

யாகப் பிடித்துக்கொள்ளுமென்று பயமுறுத்தி பின்பு ஒவ்வொருவராக அறைக்குள்விட்டு கதவைமூடிக்கொள்ளவேண்டும் அனைவரும் அறைக்குள்சென்றுவந்த பின்பு ஒவ்வொருவர் கையையும் முகர்ந்துப்பார்க்க பெருங்காயம் வாசனையடித்தால் அவர்கள் களவு செய்திருக்கமாட்டாரென்று நம்பவேண்டும் களவுசெய்தவர் பயந்து ஆணியைத்தொடமாட்டார் அவர்கையில் பெருங்காயவாசனையுமிராது கண்டுக்கொள்ளவும்.

## 166. களவு காணும் ஜாலம்.

ஒரு வீட்டில் களவுபோகுமாகில் வாசலில் மெழுகி கோலம் போட்டு பசுசாணத்தினால் பிள்ளையார்வைத்து அதன்சிரசில் அருகன்புல்சொருகி பின்பு அந்த வீட்டில் இருப்பவர்கள் பேரையெல்லாங்கேட்டு பனம் ஓலை குருத்துகளில் வெவ்வேறாக எழுதிக்கொண்டுவரும்சீட்டு ஒன்றுகூடவைத்துக்கொண்டு இரகசியமாய்ச் சந்தேகமிருக்கும் ஆளைத் தீரவிசாரித்து ஒரு சட்டியில் சாம்பலைவாரி வாசலில்வைத்து சந்தேகப் பேர்வழிச்சீட்டை தந்திரமாய்ச் சாம்பலில்சொருகி பின்பு நெருப்பைவாரி அச்சட்டியில்போட்டு வீட்டிலிருந்தத் துகைபோல்சீட்டுகளை எண்ணி அந்த நெருப்பு சட்டியில் போட்டுவிட்டு மந்திரம் செய்வதுபோல் விபூதி எடுத்து ஒருநாழிகைவரையில் ஓதி அக்கினியில் கொஞ்சம்போட்டுஅனைவருக்கும் விபூதி கொடுத்தபிறகு சொல்லவேண்யடிது இப்போதுச் சீட்டையெலலாம் நெருப்பில்போட்டு விட்டேன் களவுசெய்யாதவர் சீட்டெல்லாம் சாம்பலாகப் போய்விடும் களவுசெய்தவர் சீட்டு வேகாமற்படிக்கு பச்சென்றாயிருக்கும் இது தான் திருஷ்டாந்தரமென்று ஒருகுடத்தில் தண்ணீர் கொண்டுவரும்படிச் சொல்லி அத்தண்ணீரில் சாம்பலுடன் போட்டுகரைத்தால் ரகசியமாகச் சொரிகின சீட்டு மிதந்துவிடும்.

## 267. எட்சணி வசியமை

பச்சை ஓணான் பிடித்துவந்து அதினுடைய பிச்சை எடுத்துக்கொண்டு அத்துடன் நிசைமயக்கிப் பொடியும் மதிமயங்கித்தூளும் சமனாகச்சேர்த்துக் கல்வத்திலிட்டு ஙங்கோலத்தைலம்விட்டு மைபோல் அறைத்துச்சிமிளில்வைத்துக்கொண்டு மோகினியையும் ஜாலக்காளையும் தியானிக்கவேண்டியமுறைமை எவ்விதமெனில் ஸ்ரீம் இரீம் கிலியும் மாயாமோகினி நமா என்று இருபத்தோர் நாளைக்கு மூன்று காலமும் தவராமல் லட்சம் உரு கொடுத்துவர சித்தியாகும்.

## 168. பெண்ணுருவாகுஞ் ஜாலம்.

ஜாலமாடுஞ்சபையில் வந்துநின்று ஜாலமாடிக்கொண்டே யிருந்து ஷடி ஜாலக்காள் வசியமையில் கொஞ்சமெடுத்து நெத்தியில் திலர்தமிட்டுக்கொள்ள உடனே பார்க்குஞ் சபையோர்முதல் யாவர்களும் அதிக ரூபவதியான பெண்ணைப்போல் தோற்றும் அவர்களுங்கண்டு வாய்வரண்டு மதிமயங்கி மோகித்து நிற்பார் சிலர் ரம்பை ஊர்வசி மேனகை திலோர்த்தமையோ அல்லது தெய்வப் பெண்ணோ என்று நினைப்பார்கள் உடனே நெறிற்றியிலிட்ட மையைத் துடைத்துவிடப் பெண்ரூபமாறி ஆண்ரூபமாகிவிடும் சபையோர்கள் பார்த்துப் பிர

மித்து பெண்ணின் அழகை ஒருவரோடொருவர் சொல்லி வர்ணித்துக்கொண் டே யிருப்பார்கள்.

### 169. எட்சணிவசியமாக வேறுவிதஜெபம்

நேமநிஷ்டையோடு யிருந்து தியானிக்கும் விதமெவ்விதமெனில் ஸ்ரீம் இரீம் கிலியும் அவ்வுமவ்வும் சவ்வும் நமசிவய ஓம் என்று மூன்றுகாலமும் ஒரு மண்டலம் வேளையொன்றுக்கு லட்சம் உருகொடுத்து எட்சணியைத் தியானி த்து கேட்கவேண்டியது யாதெனில் பரிமளவஸ்துக்கள் ஜாதிக்காய் கிராம்பு ஜா பத்திரி வால்குளகு பாக்குவெத்திலை சர்க்கரைகற்கண்டு கனிவர்க்கங்கள் பலகார வகைகள் இவையெல்லாம் நான் நினைக்கும்போது கொண்டுவந்து தரவேணு மென்று கேட்டுக்கொள்ளவேண்டும் நாற்பதுநாளும் உருகொடுத்து சித்தியான வுடன் தெப்பக்கால் மூலியென்னும் செடிக்கு வெள்ளிக் கம்பியினால் காப்பு கட்டி அந்தச்செடியருகில் அந்திசந்தி எட்டுநாளும் தவராமல்சென்று ஷே எட் சணி மந்திரத்தை ஓதி தியானித்து எட்டாநாள் பொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங்காட்டி வேரைப்பிடுங்கிக் கொண்டுவந்து அதின்மேல் ஐங்கோலக்கரு வைப்பூசி ஸ்திரீகள் வீட்டுக்குத்தூரமான சீலையை மேலேசுற்றி தங்கத்தால்குளி சம்செய்து அதிலடைத்து வாயைமூடி பூசையில்வைத்து ஷே எட்சணிமந்தி ரத்தை லட்சம்ஓதி கடைசிதினத்தில் பூசைப்பலமாகப்போட்டு குளிசத்தை எடு த்துப் பட்டுக்கயர்கோர்த்து வலதுகையில் கட்டிக்கொண்டு மேற்சொன்ன வகை கள் ஒவ்வொன்றையும் அழைப்பிக்க சித்தியாகவரும்.

### 170. சந்தனம், பன்னீர், புஷ்பம், ஜாதிக்காய், ஜாபத்திரி, வால்மிளகு, பாக்கு, வெத்திலை, சர்க்கரை, கற்கண்டு, கனிவர்க்கங்கள், பலகாரம் முதலானவைகளை அழைப்பிக்கும் ஜாலம்

வெங்கலத்தினால் ஒன்பது சிறுகிண்ணம் செய்து அந்த அளவாகவே தேங் காய் கொட்டாங்கச்சியும் சம்பாதித்து வைத்துக்கொண்டு மாத்திரைக்கோலொ ன்று தயார்செய்து வைத்துக்கொள்ளவேண்டும் ஜாலமாடுமிடத்தில் ஐந்து பெ ரியதாம்பாளம் கொண்டுவரும்படிச் சொல்லி சபையோர்களைப்பார்த்து ஓசபை யோர்களே உங்கள் அனைவருக்கும் மரியாதை செய்யும்படியாக சில வகைகளை அழைப்பிக்கிறேன் பாருங்களென்றுசொல்லி ஷே ஒன்பது கிண்ணத்தையும் ஒன்பது தேங்காயின் கொட்டாங்கச்சியையும் சபையோர்களுக்குக்காட்டி பூமி யின்மேல் கவிழ்த்துவிட வேண்டும் ஒரு கிண்ணத்தையும் ஒரு கொட்டாங்கச்சி யையும் கையிலெடுத்து இரண்டு வாயையும் ஒன்றாகமூடி கிண்ணமும் கையும் மறையும்படியாக மேலே ஒரு சீலை சவுக்கத்தைமூடி எட்சணியை தியானித்து அம்மணி நல்ல வாசனையுள்ள அறைத்த சந்தனம் இந்தக்கிண்ணத்தில் வரவே ணுமென்று மனதில் நினைத்து மந்திரத்தைத் தியானிக்க உடனே சந்தனம்கிண் ணம் நிரைய உண்டாகும் உடனே மேல்மூடிய துணியை எடுத்துவிட்டு சந்தன

த்தை தட்டில்வைக்க சபையோர்கள் ஆச்சரியப்படுவார்கள் ஆனல் மேற்சொன்னதினுசுகள் ஒவ்வொன்றையும் இவ்வாருகவே ஒவ்வொரு கிண்ணத்தை யெடுத்து எட்சணி மந்திரத்தைத் தியானித்து அழைக்கவேண்டும் தடையில்லாமல் சகலமும்வரும் சபையோர்களும் பிர்மிப்பார்கள்.

### 171. மாஞ்சேடி முளைக்கும் ஜாலம்

ஏரழிஞ்சி விதையைக் கொண்டுவந்து அதைப் பூந்தயிலமாகச்செய்து மாங்கனியைக் கொண்டுவந்து ஒரு சொம்பில் அதின் சாரைப்பிழிந்துக்கொண்டு தோலைநீக்கிவிட்டு அந்தப் பழச்சாற்றுடன் ஐங்கோலக்கருவையுங்கூட்டி ஷெடி பூந்தைலத்துடன் சேர்த்து அந்த மாங்கொட்டையைத் தைலத்தில் ஊரப்போட்டு ஒருநாள் முழுதும் ஊரியபின் மாங்கொட்டையை யெடுத்து சூரியன் ஒளி படாமல் நிழலிலுலர்த்திவைத்துக் கொள்ளவேண்டும் ஜாலமாடுமிடத்தில் இந்த மாங்கொட்டையைப் புதைத்து மேலேமண்ணைமூடிவிட்டு ஜலம்வார்த்து கூடையை மேலே மூடிவிட வேண்டும் இவ்வாருக நாலுதரந்திறந்து தண்ணீர்வார்க்க வேண்டும் இவ்வகைச்செய்ய மூணேமுக்கால் நாழிகைக்குள் இலைவிட்டுக் கொழுந்தாகி முதிர்ந்த இலையாகி பூவாகி பிஞ்சாகி காயாகி கனியாகி மரந்தழைத்திருக்கும் பார்ப்போர்கள் பிர்மித்து ஆச்சரியப்படுவார்கள் கனியை அறுத்து சபையோர்களுக்கும் காட்டலாம் ஆனல் மூணேமுக்கால் நாழிகையில் மறைந்து போகும் பழம் அளிந்த பழமாகயிருக்கவேணும்.

### 172. தீபத்தைப்பார்த்தால் வீடேல்லாம் நல்லபாம்பாக தோற்றும் ஜாலம்.

நல்லபாம்பின்கொழுப்பை வாங்கிக்கொண்டு வந்து நல்லிதமான வஸ்திரத்தில் தவட்டி நிழலில் உலர்த்தி திரியாகச்செய்து வைத்துக்கொள்ளவும் இரவில் ஒரு கலசத்தில் இந்த திரியைப்போட்டு மூத்தெண்ணெய்விட்டுக் கொளுத்திவிட்டு தீபத்தைப்பார்க்க வீடெல்லாம் நல்ல பாம்பாகத்தோற்றும் பார்ப்பவர்களெல்லாம் மிரண்டு ஓடுவார்கள் அந்த திரியை யெடுத்துவிட்டு வேறே திரியை போட பாம்பெல்லாம் மறைந்துவிடும்.

### 173. பாம்பு உண்டாகும் ஜாலம்.

பேரோஸ் சர் ப்யிண்டு என்னும் மருந்தைக்கொண்டுவந்து சபைமுன் கொளுத்தினல் சர்ப்பம்போல் படம்விரித்து ஆடும் பார்க்கும் சபையோர்கள் சர்ப்பமென்றே நம்புவார்கள் இந்தமருந்து சைனுபஜார் கடைகளில் அகப்படும்.

### 174. தடப்பம் சுழலும் ஜாலம்.

ஒரு தேரின தடப்பத்தையெடுத்து ஒருவருக்குந் தெரியாமல் தந்திரமாக முருக்கி அதின் முனையில் கொஞ்சம்பிளந்து சிறிய துண்டுதடப்பத்தை அதில் சொருகி பூமியில் மணலைக்குவித்து அதில் சொருகியாவது அல்லது ஒருவர்கையில் குடுத்து சபையோர்களைப்பார்த்து இந்தத் தடப்பத்தை கிருகிருவென்று சுழலும்படிச செய்கிறேன் பாரென்று ஒரு சொம்பில் ஜலங்கொண்டு வாச்

சொல்லி சல் மலையாள பகவதி இந்த தட்டப்பத்தை கிருகிருவென்று சுழலச்செய்வாயென்று கொஞ்சம் ஜலத்தை கையிலள்ளி தட்டப்பத்தின்மேல்விட கிருகிருவென்றுசுழலும் பார்ப்பவர்கள் ஆச்சரியப்படுவார்கள் கையில் பிடித்திருப்பவனும் மிரளுவாள்.

### 175. துடப்பம் தண்ணீரில் நிற்கும் ஜாலம்.

ஒரு துடப்பத்தை யெடுத்து ஒருவருக்குந் தெரியாமல் தந்திரமாக அதின் அடியில் கனத்த அல்பனுத்தியாவது ஊசியாவது குத்தி ஒருவர் கண்ணுக்கும் தெரியாமல்செய்து இரண்டடி உயரமுள்ள மறத்தொட்டியிலாவது பித்தளை தோடுதலையிலாவது ஷெ துடப்பத்தைப்போட நிற்கும் ஆச்சரியப்படுவார்கள் ஆனால் அதில் தண்ணீர் நிறையவிட்டிருக்கவேணும்.

### 176. சாணியுருண்டைத் தண்ணியில் மிதக்கும் ஜாலம்.

பெருமனுகவுள்ளத் தக்கயையெடுத்து அதை பந்துபோல் சீவி அதன்மீது சாணத்தை நன்ருகபூசி வைத்துக்கொண்டிருந்து வேருெரு சாணி உண்டையை அனைவருக்கும்காட்டி அதை தந்திரமாக மறைத்துப்போட்டு ஷெ உருண்டையைத் தண்ணீரில்போட மிதக்கும் ஆச்சரியப்படுவார்கள்.

### 177. தீபமேற்றிப்பார்த்தால் வீடெல்லாம் தவளையாகக் காணும் ஜாலம்.

தவளையைப் பார்த்து ஆதிவாரத்தில் கொண்டுவந்து அதன் கொழுப்பை யெடுத்து ஒரு துல்லிதமான சலவைமல்லில் தடவிட்டி நிழலில் உலர்த்திக் காய்ந்த பிறகு அந்த வஸ்திரத்தைத் திரிசெய்து வைத்திருந்து இரவில் இந்த வத்தியைப் போட்டு தீபமேற்றித் தீபத்தைப்பார்க்க வீடெங்கும் நிற்கும் மனிதர் மேலெங்கும் தவளையாகத்தோன்றும் பார்ப்போர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

### 178. வேறுவிதம் சாதம் வேகாதிருக்கும் ஜாலம்.

நிலவேம்புவேர் கொண்டுவந்து சிறியதுண்டாய் அரிசி அரிக்கும்போதே உலைப்பானையிலாவது அரிசியிலாவது போட்டுவிட்டால் சாதம் வேகாது வேரை யெடுத்துவிட்டு மறுவுலை வார்த்துவைத்து அரிசியை நன்ருய்க் கழுவிப் போட சாதம்வேகும்.

### 179. இரும்புகுண்டை ஆகாயத்திலேறிய அந்திரமாக நிற்கும் ஜாலம்.

நத்தைச்சூரி செடியைக் கண்டுபிடித்து சுவாதிநட்சத்திரம் கும்பலக்கினம் ஆதிவாரங்கூடிய சுபதினத்தில் அச்செடிக்கு மஞ்சள்நூல் காப்புகட்டி விட்டு வந்துவிடவேண்டும் மறு ஆதிவாரத்தில் சிம்பலக்கினத்திற்சென்று பொங்கலிட்டுப் பலிகொடுத்து பூசைபோட்டு செடிக்குக் காயம்படாமலும் வேர் அருமலும் தோண்டி யெடுத்துக்கொண்டு வந்து பொன்தகட்டினுல் கடையம்செய்து அதில் அவ்வேரைப்போட்டு விநாயகரைப்பூசித்து வலதுகையில் மாட்டிக்கொள்

ளவும் ஜாலமாடுமிடத்தில் வந்து இரும்புக்குண்டை கையிலெடுத்து சபையோர்க ளுக்குக்காட்டி இந்தக்குண்டை ஆகாயமார்க்கமாக விட்டெறிந்து அந்தரமாக நிற் கச்செய்கிறேன் பாருங்களென்று சொல்லி குண்டையெடுத்து ஆகாயமார்க்க விட்டெறிந்து வலதுகையிலுள்ள கடகத்தைக்கழட்டி இடதுகையில் பிடித்து பூமியில்தாழ்த்த குண்டு அந்தரமாக நிற்கும் சபையோர்கள் ஆச்சரியப்படுவார் கள் உடனே அந்த கடகத்தை வலதுகையில் பிடித்து குண்டுக்கு நேராகத்தூக்கி காட்ட கீழேவிழுந்துவிடும்.

## 180. சிரசில்லாமனிதர்களாகத் தோற்றும் ஜாலம்.

வெட்டுண்ட மனிதனுடைய தலையை புதைத்திருக்கு மிடத்தைத் தேடிக் கண்டுபிடித்து அதைத்தோண்டி எடுத்துக்கொண்டு வந்து அதன் எலும்பை தீவ ட்டியில் வைத்துசுத்தி விளக்கெண்ணெய் வார்த்து தீவட்டியைக் கொளுத்தி பிடிக்க சபையிலுள்ளவர்கள் ஒருவரை ஒருவர் பார்க்கத் தலையில்லாமுண்டமாக தோற்றும் சபையோர்கள் பயந்து மிரண்டு மூலைக்குமூலை ஓடுவார்கள் சிலர்தலை களை தடவிப் பார்த்துக்கொண்டே திகைத்து நிற்பார்கள்.

## 181. இந்திரஜால மை.

பூனையொன்று கிரிப்பிள்ளையொன்று இரட்டைவால் அரணையொன்று திகைப்பூடு பூச்சிபத்து பேய்ப்பீர்க்கன்விரை பலம் இரண்டு புல்லாமணக்கு விரை பலம் இர ண்டு இவைகளையெல்லாம் நறுக்கிப் பேய்க்கருப்பன் சாற்றில்போட்டு ஒருஜா மம்பொறுத்து யெடுத்து பூமியின்மீது உலரப்போட்டு பின்பு ஆதளையின்பாலில் ஒருசாமம் ஊறப்போட்டு இவைகளையெல்லாம் ஒரு பாண்டத்திற்போட்டு பூர் தயிலமாகக் காச்சி வாங்கி ஐங்கோலக்கருவுங் கூடச் சேர்த்து கல்வத்திலிட்டு அரைத்து வருகையில் ரசமும் வெண்ணெயும் வகைக்கு கால் கழஞ்சு சேர்த்து மைபோல் அரைத்தெடுத்து சிமிளில் பத்திரமாக வைத்துக்கொள்ளவும் பின்பு ஜாலக்காளையும் நீலகண்டிடையும் பூசைசெய்யும் விதம் ஸ்ரீம் கிரீம் கிலியும் சவ்வும் அய்யும் அவ்வும் மவ்வும் யவ்வும் கூ கூ நீலகண்டி அம்மா என்று இருப த்தொருநாள் மூன்றுவேளையும் தவறுமல் வேளை ஒன்றுக்கு லட்சம் உருசெபி க்க மைக்கு உயிருண்டாகும் பின்பு நீ நினைத்த ஜாலங்களை தீரமாக ஆடலாம்.

## 182. நூலேணி ஜாலம்.

திரித்த நூற்கயறை யெடுத்து மெத்தைமீதேனும் மரங்கள்மேலும் இன்னம் எதின்பேரிலேனும் வீசுகயற்றில் இந்தமையைத் தடவிப்போட நூலேணியைப் போல படிப்படியாக நிற்கும் பார்ப்பவர்கள் பிர்மித்து ஆச்சரியப்படுவார்கள்.

## 183. படைகள் உண்டாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் சபையோர்களைப் பார்த்து இப்போது முப்பத்திரண்டு ஆயுதங்களுடனே படைகளை வரவழைக்கின்றேன் பாருங்களென்று சொல்லி நீலகண்டியைத் தியானித்து ஜாலங்காளைப் பூசித்து வீசி மையைக் கொஞ்சம் கையிலெடுத்து பூமியிலுள்ள மண்ணை அள்ளி நாலுதிசையிலும் போட உடனே

நாலுதிசையிலும் இருந்து முப்பத்திரண்டு ஆயுதங்களுடன் திரளாகப் படைகள் திரண்டுவரும் அதைக் கண்டோர்களெல்லாம் கலங்கி மிரண்டு கதிகெட்டுத் தடுமாறி ஓடுவார்கள்.

## 184. வாழைத்தண்டைவெட்ட மனிதர் தலைபோல் உருளும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் நாலடி நீளமுள்ள ஒரு வாழைத்தண்டைக் கொண்டு வரும்படிச்சொல்லி அந்த தண்டைக் கையில் பிடித்து சபையோரைப் பார்த்து இந்த வாழைத்தண்டை வெட்டி மனிதனுடைய தலையாக விழச்செய்கிறேன் பாருங்களென்று சொல்லி நீலகண்டியம்மனைத் தியானித்து அம்மணி இந்த வாழைத்தண்டை வெட்டுகிறேன் இது மனிதனுடைய தலையைப்போல் தோற்றவேணுமென்று தியானமோதி தந்திரமாக ஷெ மையையெடுத்து வாழைத்தண்டு முழுதும்பூசி இடதுகையில் தண்டைப்பிடித்து வலதுகையில் கத்திகொண்டு தண்டைவெட்ட துண்டுக்கு ஒரு தலையாக உருளும் பார்த்தவர்களெல்லாமாச்சரியப்படுவார்கள் ஆனால் தலைகளை எல்லாம் உடனே எடுத்து மறைந்துபோவென்று சொல்லிவிட வேண்டும்.

## 185. கலியாணப் பூசினிக்காயை வெட்ட யானைத்தலையாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு கலியாணப் பூசினிக்காயைக் கையிலெடுத்து சபையோர்களுக்குக் காட்டி இந்தப் பூசினிக்காயை வெட்டுகின்றேன் ஆனைத்தலையாகுது பாருங்களென்று சொல்லி நீலகண்டியைத் தியானித்து அம்மணி இந்த பூசினிக்காயை வெட்டுகின்றேன் ஆனைத்தலையாகத் தோற்றச்செய்ய வேணும் என்று சொல்லித் தந்திரமாக ஷெ மையை பூசினிக்காயின் மீதில்தடவி கத்தியால் ஓங்கிவெட்ட உடனே யானைத்தலைபோல் தோற்றும் சபையோர்கள் மனமிரண்டு மதிமயங்கி பிர்மித்து மகா மந்திரவாதியென்று கொண்டாடுவார்கள் ஆனால் அந்தத்தலையை உடனே மறைந்துப்போவென்று சொல்லவும்.

## 186. பூசினிக்காயை வெட்டக் குதிரைத் தலையாகும் ஜாலம்.

ஜாலமாடு மிடத்தில் ஒரு பூசினிக்காயைத் கையிலெடுத்துச் சபையோர்களுக்குக்காட்டி இந்தப்பூசினிக்காயைவெட்டிக் குதிரைத் தலையாகும்படிச் செய்கிறேன் பாருங்களென்று சொல்லி நீலகண்டியைதியானித்து அம்மணி இந்தப் பூசினிக்காயை வெட்டுகிறேன் குதிரைத்தலைபோல் தோற்றச் செய்வாயென்று சொல்லி தந்திரமாகமேற்படிமையைப் பூசினிக்காயின்மேல் தடவி காயைநிலத்தில் வைத்து கத்தியால் ஓங்கிவெட்ட உடனே குதிரை தலையாகத்தோற்றும் சபையோர்கள் ஆச்சரியப்படுவார்கள் உடனேதலையை மறைத்துச் சல்போவென்று சொல்லவும்.

### 187. சேச்சக்காயை வெட்ட ஆட்டுத்தலையாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் செச்சக்காயைக்கையிலெடுத்து சபையோர்களுக்குக் காட்டி இந்த செச்சக்காயை வெட்டுகிறேன் ஆட்டுத் தலையாகுது பாருங்க ளென்று சொல்லி நீலகண்டியை தியானித்து அம்மணி ஆட்டுத் தலையாகவேணு மென்று சொல்லி மேற்படி மையைத்தடவிவெட்ட ஆட்டுத்தலைபோல் தோற் றும் ஆனல் எத்தனை செச்சக்காயை வெட்டுகின்றேமோ அத்தனை தலையாகத் தோற்றும் ஆச்சரியப்படுவார்கள் உடனே தலையை மரைத்து சல்போவென்று சொல்லவும்.

### 188. பச்சை வைக்கக்காரை வெட்ட நல்லப்பாம்பு தலையாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் பச்சை வைக்கக்காரைக்கொண்டு வரும்படி சொல்லி அதை வாங்கிச் சபையோர்களுக்குக் காண்பித்து இந்த வைக்கக்காரைவெட்டி பாம்புத்தலையாகும்படி செய்கிறேன் பாரென்றுசொல்லி மேற்படி மையைத்தந் திரமாக வைக்கக்காரிற் றடவி ஒரு மனைமேல்வைத்து கத்தியால் துண்டுதுண்டு துண்டாகவெட்டிக் கொண்டேவர எத்தனை துண்டாகிறதே அத்தனைபாம்புத் தலையாகத் தோற்றும் படத்தை விரித்துக் கொண்டிருக்கும் பார்ப்போர்கள் பயங்கொள்வார்கள் உடனே தலைகளைமறைத்து விடவேண்டும்.

### 189. பனங்காயை வெட்ட பன்றித்தலையாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் பனங்காயொன்றைக் கையிலெடுத்து சபையோர்களுக் குக்காட்டி இந்தப் பனங்காயை வெட்டி பன்றியாகச் செய்கிறேன்பாரென்று சொல்லி நீலகண்டியை தியானித்து அம்மணி இந்தப் பனங்காயை வெட்டு கிறேன் பன்றித்தலையாகதோற்றச் செய்வாயென்று சொல்லிமேற்படி மையை யெடுத்துத் தந்திரமாக பனங்காயிற்பூசி காயைபூமியின்மேல்வைத்து கத்தியால் நோக்கிவெட்ட உடனே பன்றி தலையாகும் பார்ப்பவர்கள் ஆச்சரியப்படுவார் கள் உடனே தலையை மறைத்து சல் ஓடிப்போவென்று சொல்லவும்.

### 190. பேய் பீர்க்கங்காயை வெட்ட புலித்தலையாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு பேய்பீர்க்கங்காயை கையிலெடுத்துச் சபையோர் களுக்குக் காட்டி இந்தப்பீர்க்கன் காயை வெட்டிப் புலித்தலையாகச் செய்கி றேன் பாரென்று சொல்லி நீலகண்டியை தியானித்து ஓ அம்மணி இந்தபேய் பீர்க்கன்காயை வெட்டுகிறேன் புலித்தலையாகத்தோற்றச்செய்ய வேண்டுமென்று சொல்லி மேற்படி மையைத் தந்திரமாகக் காயில்தடவி பூமியின்மேல் வைத்து கத்திக்கொண்டு மோதிவெட்ட உடனே புலித்தலையாகத் தோற்றும் பார்ப்பவர் கள் பயந்து பதரியோடுவார்கள். ஆனல் உடனே தலையைமறைத்து சல்காட்டிற் குஓடிப்போவென்றுசொல்லவம்.

## 191. சோரக்காயைவெட்டப் பசுத்தலையாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு சொரக்காயைக் கொண்டு வரும்படியாகச்சொல்லி அதை வாங்கிச் சபையோர்களுக்குக்காட்டி அந்த சொரக்காயைவெட்டிப் பசுத் தலையாகும்படி செய்கிறேன் பாரென்றுசொல்லி நீலகண்டியை தியானித்து அம்மணி இந்த சொரக்காயை வெட்டுகிறேன் பசுத்தலையாகத் தோற்றச்செய்ய் வேணுமென்று சொல்லி மேற்படி மையையெடுத்து தந்திரமாக சொக்காயிற் றடவி பூமியின்மேல்வைத்துக் கத்தியைக்கொண்டு ஓங்கிவெட்ட உடனே பசுத்தலையாகத் தோற்றும் பார்ப்போர்கள் ஆச்சரியப்படுவார்கள், ஆனல் தலை யை உடனேமறைத்து சல் பசுக்கூட்டத்திற்போய்ச் சேரென்று சொல்லவும்.

## 192. துமிட்டிக்காயைவெட்ட யெறுமைத்தலையாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு ஆற்றுத் துமிட்டிக்காயைக் கையிலெடுத்து சபை யோர்களுக்குக் காட்டி இந்த ஆற்றுத்தும்மிட்டிக்காயை வெட்டி எறுமைத்தலை யாகச் செய்கிறேன் பாரென்று சொல்லி நீலகண்டியைத்தியானித்து அம்மணி இத்த துமிட்டிக்காயை வெட்டுகிறேன் எறுமைத்தலையுருவாகச் செய்யவேண்டு மென்றுசொல்லி மேற்படி மையை தந்திரமாக காயிற்றடவி பூமியில்வைத்துக் கத்தியால் நோக்கி வெட்ட உடனே எறுமைத்தலை யுருவாகத்தோற்றும். சபை யோர்கள் ஆச்சரியப்படுவார்கள். ஆனல் தலையை உடனே மறைத்து சல் ஓடிப் போவென்று சொல்லி சற்றுநேரம் பொறுத்து மூடிய தலையைத் திறந்துபார்க்க மாயமாகப்போகும். ஆற்றுத்துமிட்டிக்காய் இரண்டு துண்டாகக்கிடைக்கும்.

## 193. வாய்வுஸ்தம்பன ஜாலம்.

எழுசிபிடிக்கும் காந்தமாக எட்டுபலம் கொண்டுவந்து கொஞ்சம்மறை வாகஇருக்கும்படியான வீட்டிற்குள் வலச்சல்மேல் மையம்பார்த்து ஒருகெஜ நிகளம்சவுக்கமாக நாலுமூலையும் இரண்டுபலம் காந்தமெடுத்து நிற்கும் படியாக வலுவாகப் பொருந்தவைத்து அதற்கு நேர்க்கீழாக இரும்பு பலகை சன்னமாகவும் ஒரு ஆள்குந்தத்தக்கினதாகவும் போட்டு விட்டுவிடாமல் உடனே குந்திக்கொள்ளவும் ஆனல் குந்துகிறவன் விபூதி ருத்திராட்சம் காஷா யம்பூண்டு யோகியைப்போல் இருக்கவேணும் குந்தினவுடன்கையைகெட்டியாக மூடிக்கொண்டு தம்பிடிக்கிறவன்போல் பூடகமாயிருந்தால்தான் பார்க்கிறவர்கள் வாய்வுஸ்தம்பனம் செய்கிறனென்பார்கள் மிகவும் மகிமையாக எண்ணுவார்கள் ஆனல் காந்தம் யாருக்குந்தெரியாமல் வைத்திருக்கவேணும்.

## 194. நினைத்தயிடத்திற்குபோகும் சுயஜாலம்.

ஆலமரத்தின்கீழ் ஆலங்கண்ணு அகப்பட்டால் அதற்கு ஞாயற்றுகிழமைய தினம் அதற்கு மஞ்சள்நூல் காப்பு கட்டிவிட்டுவந்துவிடவேண்டும் அடுத்தவெள் ளிக்கிழமையதினம் சென்று ஒரு சிறியகுடுவையில் பொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங்கொடுத்து வேர் அறுமல் பிடுங்கிவந்து தீட்டுப்படாமல் ஒரு இடத் தில் வைத்திருந்து அடுத்த செவ்வாய்க்கிழமையில் தலைமுழுகி வாசலெல்லாம்

மெழுகி பிள்ளையார் பிடித்துவைத்து அதன் சிரசில் அருகன்புல்சூட்டிதாம்பூலம் வெல்லம் பழம் வைத்து இந்தசெடியும் வேரையும் எதிரில்வைத்து தூபதீபங் கொடுத்து தேங்காயுடைத்து வேரையெடுத்துப் பத்திரமாகத் தீட்டுப்படாமல் வைத்திருக்கவும் தினகாலம் ஸ்தானம்செய்து ஞியாபகமகப்பார்த்துக்கொண்டே யிருந்து நட்சத்திரம் விழும்போது வேரை எடுத்துக் கீழேபோட்டுவலதுகாலால் மிதித்துக்கொள்ளவும் செருப்புக்குள்ளே வைத்து தீட்டில்லாதிடத்திருக்கவும் ஊர்ப்பிரயாணம் போகும்போது போட்டு நடந்தால் பதின்காதமானாலும் அலுப் பில்லாமல் நடக்கலாம் எப்போதும் பத்திரமாய்க் காப்பாற்றவேணும் மந்திர மில்லை தந்திரந்தான் செய்துபார்த்தால் தெரியும் மனந்திருப்தியாகும்.

## 195 ஒருமணிக்குள் ஒருகாதம் நடக்கும் உற்சாக ஜாலம்.

நத்தைச்சூரிசெடியைக்கண்டுபிடித்து செவ்வாய்கிழமையில் மஞ்சள்நூல் காப்பு கட்டி தூபதீபங்கொடுத்துவிட்டு வந்துவிடவேண்டும் அடுத்த ஆதிவாரத் திற்சென்று பொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங்கொடுத்து அச்செடிக்கு காயம்படாமலும் வேர்அறுமலும் பிடுங்கிக்கொண்டுவந்து சுத்தமானயிடத்தில் வைத்திருந்து அடுத்த வெள்ளிக்கிழமைதினம் ஸ்நானம்செய்து வாசலைமெழுகி பிள்ளையார்பிடித்துவைத்து அதன்சிரசில் அருகன்புல்சூடி வெற்றிலைபாக்குவெல் லம் பழம் முதலானதும் படைத்து தேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்து சூடங் கொளுத்தி செடியையும் பிள்ளையார்முன்வைத்து மேற்சொன்னபடி ஒன்பது வெள்ளிக்கிழமை தூபங்கொடுத்து வேரையெடுத்துப் பத்திரமாக வைத்திருந்து சந்திரகிராணத்தில் நட்சத்திரம் கீழேவிழும்போது உஷாராய்ப் பார்த்துக்கொ ண்டே யிருந்து இந்தவேரை காலில்போட்டுக் கொள்ளும்படியான போல்காப்பு செய்து அதில்வேரை அடைத்துப் பத்திரமாக வைத்துக்கொள்ளவும் நடந்து பரிட்சிக்கவேண்டில் மேற்படி காப்பை இடது காலில் போட்டுக் கொண்டு செருப்புமாட்டிக்கொண்டாவது சாதாரணமாகவாவது ஒருமணி நேரத்திற்குள் ஒருகாதம் நடக்கலாம் போகிற விசையும் கால்நோயும் இளப்பாயாசமும் தெரி யாது. ஆனல் பயமில்லாமல் பந்தயங்கட்டியும் நடக்கலாம்.

## 196 கோழிமுட்டையை ஜலத்திற்போட வேடிகிளம்பும் ஜாலம்.

ஒருகோழிமுட்டையை கொண்டுவந்து அதனுள்ளிருக்கும் வெள்ளை அம் பிலிபாவையும் எடுத்துவிட்டு அதில்நிறைய தாளிக்காத கற்சுண்ணம்பு கெந்தகம் இவைகளை வெவ்வாராக சமமால் திருத்து அரைத்து ஒருமிக்கச் சேர்த்து முட் டைக்குள் சசலுத்தி மெழுகால் அதன் சிரிபவாயைமூடி தவலையிலாவது மண் குடத்திலாவது நிறையஜலம்விட்டு அதில் இந்தமுட்டையைப் போட்டுவைக்க வெடிசப்தம் கிளம்பும் ஆச்சரியப்படுவார்கள் ஆனல் குளமுதலிய தண்ணீருள்ள இடத்திற் போடலாம்.

## 197. சகல விஷயமும் நீக்க உபயோக ஜாலம்

எட்டிமரத்தில் விளாங்காய்ப் பூரும்படியானத் துவாரம்செய்து அவ்வளவு பழம் புளியைக் கொட்டை கோது முதலானதையும் போக்கி மனம்போல் உள்

ளேவைத்து அந்த எட்டிமரத்தினுலேயே அப்படித்து நாற்பதுநாள் சென்று எடுத்து எட்டிமரத்தினல் சிமிள்செய்கு அதில்போட்டுவைத்துக் கொள்ளவும் தேள், நன்றதெருக்காய், பூனை, எலி, பெருச்சாளி வண்டு ஒணான் பச்சோந்தி முதலானதுடன் இன்னம் எதுவானுலும் சரைசற்பம் தவிர மற்ற எல்லாவிஷத் திற்கும் மிளகுப் பிரமாணமெடுத்து வெத்திலேயில் மடித்து சொல்லாமற் கொடுக்கவும் பத்தியம் பச்சரிசியும் முருங்கயிலேயும் போட்டு கஞ்சிகாச்சி கொடுக்கவும் உப்பு ஆகாது கடும்பத்தியம் காலே மாலே இரண்டுவேளேயும் மூன்றுநாளேக்கு இருக்கவேண்டும் விஷம் அற்றுப்போகும்.

## 198. பாம்புகடித்த பேருக்கு விஷமிரக்குஞ் ஜாலம்.

பாம்புகடித்தவருக்கு உடனே சன்னமாகியப் பானை ஓட்டால் அவர்கள் உச்சியில் மூன்றுகீரல்கீரி அதிலே தக்காளிச் சார்பிழிந்து உள்ளங்கையினுல் அறைச்சித் தேய்க்கத்தேய்க்கத் விஷங்கக்கி எழுந்திருப்பார்கள் ஜாகை காச்சிக் கொடுக்கவும் இந்த மூலிகை இருளருக்கும்ஜோகைருக்கும் உயிருக்கு உயிருன மூலிகை இன்னங் கீழாநெல்லி குப்பமேனியிலும் விஷம் நீங்கும் அவசியமாய் சிறியானங்கை செடிமூலமும் உலர்த்திப் பொடிபண்ணி வைத்துக்கொண்டால் மூணுவிராகனிடை பிரமாணம் எடுத்து ஒரு வெத்திலேயில் வைத்துக் கொடுத் தாலும் சீக்கிரம் விஷமிரங்கும் இதுவும் கைமுறைதான்.

## 199. உலர்ந்துபோன இருவை ஜலத்தில் ஓடவிடும் ஜாலம்

உலர்ந்த இருவைக்கொண்டுவந்து பின்பு கிளுவையிலேயைப்பரித்து வந்து உரலில்போட்டி இடித்துக் சார்பிழிப்து கொஞ்சம் இருவை அதில் அள்ளிப் போட்டு பிச்சைக்குக் கிணறு அல்லது குளவில் தூவிவிட்டு நின்றுப்பார்த்தால் உயிரோடிருக்கும்போது எப்படி வளைந்து வளைந்து ஓடுமோ அப்படிபோல் குருக்குநெடுக்குமாய் ஓடும் சிலது கிருகிருவென்று சுழலும் பார்த்தவர்பிர்மிப்பார்கள்

## 200. சோக்கால் சொன்னபடி கேட்குஞ் ஜாலம்.

எருஞ்சி இரங்கழிஞ்சி என்னும் விதையைக் கொண்டுவந்து வெவ்வேறுகப்பொடித்து நல்லிதமானச் சீலேயில் வைத்து வெவ்வேருகத்திரி செய்து வைத்துக்கொள்ளவும் தலைமண்டை ஓட்டில் புங்கம் உண்ணெய் விட்டு மேற்படி திரிரெண்டிற்கும் ஐங்கோலத் தயிலம் பூசி எவ்வொருத்திரியாகப்போட்டு கொளுத்தி தயிலம்வாங்கி சிமிளில் வெவேராக வைத்துக்கொள்ளவேண்டும் ஜால ஈடுமிடத்தில் ஆடிக்கம்பம் நட்டுவிட்டு இரண்டு தெச்சக்காய் கையிலெடுத்து சபையோர்களுக்கு காட்டி இந்தத்தெச்சக்காயை இந்தகம்பத்தின்மேல் ஏறவும் ஒன்று யிறங்கவும் செய்கிறேன்பாரென்று சொல்லி மேற்படி மையைத் தந்திரமாக ஒவ்வொருக் காயிற்குத் தடவி விடவேண்டும் ஆனல் எழிஞ்சி தயிலம் தடவினக்காயும் இரங்கழிஞ்சித் தயிலம் தடவினக்காக்குங் அடையாளமிருக்கவேணும்

மெழுகி பிள்ளையார் பிடித்துவைத்து அதன் சிரசில் அருகன்புல்சூட்டிதாம்பூலம் வெல்லம் பழம் வைத்து இந்தசெடியும் வேரையும் எதிரில்வைத்து தூபதீபங் கொடுத்து தேங்காயுடைத்து வேரையெடுத்துப் பத்திரமாகத் தீட்டுப்படாமல் வைத்திருக்கவும் தினகாலம் ஸ்தானம்செய்து ஞாபகமகப்பார்த்துக்கொண்டே யிருந்து நட்சத்திரம் விழும்போது வேரை எடுத்துக் கீழேபோட்டுவலதுகாலால் மிதித்துக்கொள்ளவும் செருப்புக்குள்ளே வைத்து தீட்டில்லாதிடத்திருக்கவும் ஊர்ப்பிரயாணம் போகும்போது போட்டு நடந்தால் பதின்காதமானாலும் அலுப் பில்லாமல் நடக்கலாம் எப்போதும் பத்திரமாய்க் காப்பாற்றவேணும் மந்திர மில்லை தந்திரந்தான் செய்துபார்த்தால் தெரியும் மனந்திருப்தியாகும்.

## 195 ஒருமணிக்குள் ஒருகாதம் நடக்கும் உற்சாக ஜாலம்.

நத்தைச்சூரிசெடியைக்கண்டுபிடித்து செவ்வாய்கிழமையில் மஞ்சள்நூல் காப்பு கட்டி தூபதீபங்கொடுத்துவிட்டு வந்துவிடவேண்டும் அடுத்த ஆதிவாரத் திற்சென்று பொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங்கொடுத்து அச்செடிக்கு காயம்படாமலும் வேர்அறுமலும் பிடுங்கிக்கொண்டுவந்து சுத்தமானயிடத்தில் வைத்திருந்து அடுத்த வெள்ளிக்கிழமைதினம் ஸ்நானம்செய்து வாசலைமெழுகி பிள்ளையார்பிடித்துவைத்து அதன்சிரசில் அருகன்புல்சூடி வெற்றிலைபாக்குவெல் லம் பழம் முதலானதும் படைத்து தேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்து சூடங் கொளுத்தி செடியையும் பிள்ளையார்முன்வைத்து மேற்சொன்னபடி ஒன்பது வெள்ளிக்கிழமை தூபங்கொடுத்து வேரையெடுத்துப் பத்திரமாக வைத்திருந்து சந்திரகிராணத்தில் நட்சத்திரம் கீழேவிழும்போது உஷாராய்ப் பார்த்துக்கொ ண்டே யிருந்து இந்தவேரை காலில்போட்டுக் கொள்ளும்படியான போல்காப்பு செய்து அதில்வேரை அடைத்துப் பத்திரமாக வைத்துக்கொள்ளவும் நடந்து பரிட்சிக்கவேண்டில் மேற்படி காப்பை இடது காலில் போட்டுக் கொண்டு செருப்புமாட்டிக்கொண்டாவது சாதாரணமாகவாவது ஒருமணி நேரத்திற்குள் ஒருகாதம் நடக்கலாம் போகிற விசையும் கால்நோயும் இளப்பாயாசமும் தெரி யாது. ஆனால் பயமில்லாமல் பந்தயங்கட்டியும் நடக்கலாம்.

## 196 கோழிமுட்டையை ஜலத்திற்போட வேடிகிளம்பும் .ஜாலம்.

ஒருகோழிமுட்டையை கொண்டுவந்து அதனுள்ளிருக்கும் வெள்ளை அம் பியையும் எடுத்துவிட்டு அதில்நிறைய தாளிக்காத கற்சுண்ணம்பு கெந்தகம் இவைகளை வெவ்வாராக சமமால் நிறுத்து அரைத்து ஒருமிக்கச் சேர்த்து முட் டைக்குள் சசலுத்தி மெழுகால் அதன் சிறியவாயைமூடி தவலையிலாவது மண் குடத்திலாவது நிறையஜலம்விட்டு அதில் இந்தமுட்டையைப் போட்டுவைக்க வெடிசப்தம் கிளம்பும் ஆச்சரியப்படுவார்கள் ஆனால் குளமுதலிய தண்ணீருள்ள இடத்திற் போடலாம்.

## 197. சகல விஷயமும் நீக்க உபயோக ஜாலம்

எட்டிமரத்தில் விளாங்காய்ப் பூரும்படியானத் துவாரம்செய்து அவ்வளவு பழம் புளியைக் கொட்டை கோது முதலானதையும் போக்கி மனம்போல் உள்

ளைவைத்து அந்த எட்டிமரத்தினாலேயே ஆப்படித்து நாற்பதுநாள் சென்று எடுத்து எட்டிமரத்தினால் சிமிள்செய்து அதில்போட்டுவைத்துக் கொள்ளவும் தேள், நண்டுதெருக்காய், பூனை, எலி, பெருச்சாளி வண்டு ஓணான் பச்சோந்தி முதலானதுடன் இன்னம் எதுவானாலும் சரைசற்பம் தவிர மற்ற எல்லாவிஷத்திற்கும் மிளகுப் பிரமாணமெடுத்து வெத்திலையில் மடித்து சொல்லாமற் கொடுக்கவும் பத்தியம் பச்சரிசியும் முருங்கயிலையும் போட்டு கஞ்சிகாச்சி கொடுக்கவும் உப்பு ஆகாது கடும்பத்தியம் காலை மாலை இரண்டுவேளையும் மூன்றுநாளைக்கு இருக்கவேண்டும் விஷம் அற்றுப்போகும்.

## 198. பாம்புகடித்த பேருக்கு விஷமிரக்குஞ் ஜாலம்.

பாம்புகடித்தவருக்கு உடனே சன்னமாகியப் பானை ஓட்டால் அவர்கள் உச்சியில் மூன்றுகீரல்கீரி அதிலே தக்காளிச் சார்பிழிந்து உள்ளங்கையினால் அறைச்சித் தேய்க்கத்தேய்க்கத் விஷங்கக்கி எழுந்திருப்பார்கள் ஜாகை காச்சிக் கொடுக்கவும் இந்த மூலிகை இருளருக்கும்ஜோகைருக்கும் உயிருக்கு உயிரான மூலிகை இன்னங் கீழாநெல்லி குப்பமேனியிலும் விஷம் நீங்கும் அவசியமாய் சிறியானங்கை செடிமூலமும் உலர்த்திப் பொடிபண்ணி வைத்துக்கொண்டால் மூணுவிராகனிடை பிரமாணம் எடுத்து ஒரு வெத்திலையில் வைத்துக் கொடுத்தாலும் சீக்கிரம் விஷமிரங்கும் இதுவும் கைமுறைதான்.

## 199. உலர்ந்துபோன இறாவை ஜலத்தில் ஓடவிடும் ஜாலம்

உலர்ந்த இறாவைக்கொண்டுவந்து பின்பு கிளுவையிலையைப்பரித்து வந்து உரலில்போட்டி இடித்துக் சார்பிழிப்து கொஞ்சம் இறாவை அதில் அள்ளிப் போட்டு பிச்சைக்குக் கிணறு அல்லது தரவில் தூவிவிட்டு நின்றுப்பார்த்தால் உயிரோடிருக்கும்போது எப்படி வளைந்து வளைந்து ஓடுமோ அப்படிபோல் குருக்குநெடுக்குமாய் ஓடும் சிலது கிருகிருவென்று சுழலும் பார்த்தவர்பிர்மிப்பார்கள்

## 200. சோக்கால் சொன்னபடி கேட்குஞ் ஜாலம்.

எருஞ்சி இரங்கழிஞ்சி என்னும் விதையைக் கொண்டுவந்து வெவ்வேறாகப்பொடித்து நல்லிதமானச் சீலையில் வைத்து வெவ்வேறாகத்திரி செய்து வைத்துக்கொள்ளவும் தலைமண்டை ஓட்டில் புங்கம் உண்ணெய் விட்டு மேற்படி திரிரெண்டிற்கும் ஐங்கோலத் தயிலம் பூசி எவ்வொருத்திரியாகப்போட்டு கொளுத்தி தயிலம்வாங்கி சிமிளில் வெவேராக வைத்துக்கொள்ளவேண்டும் ஜாலரடுமிடத்தில் ஆரடிக்கம்பம் நட்டுவிட்டு இரண்டு கெச்சக்காய் கையிலெடுத்து சபையோர்களுக்கு காட்டி இக்கக்கெச்சக்காயை இந்தகம்பத்தின்மேல் ஒன்று யிறங்கவும் செய்கிறேன்பாரென்று சொல்லி மேற்படி மையைத் தந்திரமாக ஒவ்வொருக் காயிற்குத் தடவி விடவேண்டும் ஆனால் எழிஞ்சி தயிலம் தடவினக்காயும் இரங்கழிஞ்சித் தயிலம் தடவினக்காக்குங் அடையாளமிருக்கவேணும்

இரங்கழிஞ்சிமை தடவினக்காயை கம்பத்தின் அடியில் வைத்து ஜாலக்காளைப் பூசித்து சல் எமென்று சொன்னால் கீழே யிருங்குங்காய் கடகடவென்று யேரி போய் கம்பத்தின்மேல் குந்தும் சல் இரங்கென்று சொன்னால் கம்பத்தின் உச்சி யிலுள்ளக்காய் கடகடவென்றுக் கீழேயிறங்கும் பார்ப்பவர்கள் ஆச்சரியப்படு வார்கள் அது யெப்படி இரங்குமென்றால் கம்பத்தை சுற்றிக்கொண்டே யேறும் அதுதான் ஆச்சதயம் ஆனல் தலைமண்டை ஒடு இரண்டு இருக்கவேண்டும்.

## 291. மண்ணைக் கிள்ளிப்போட்டு மலைகளாகத் தோற்றும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் சபையோர்களைப் பார்த்து கொஞ்சம்மண்ணை அள்ளி அனைவருக்குங்காட்டி இந்தமண்ணை நாலுதிசையிலும் போடுகிறேன் பர்வதங் களாகத் தோற்றுய் பாருங்களென்று சொல்லி நீலகண்டியைதியானித்து ஜால காளைப்பூசித்து கையிலுள்ள மணலைநாலுதிசையிலும் விட்டெரிய வேண்டும் ஆனல் மண்ணைக் கையிலெடுக்கும் முன்னதாகவே இந்திரஜாலமையை தந்திர மாகத் கையிற் பூசிக்கொள்ளவேண்டும் மணலை எரிந்த உடன் நாலுதிசைகளி லும் மலையாகத்தோற்றும் அஷ்டகுலம் பர்வதங்கள் மகம்மேறு கைலை அகஸ்தி யர்வாழும் பொதிகைமலை இவைகளைப்போல் தோற்றும் அம்மலைகளில் தேவர் சித்தர் முத்தர் முனிவர் முதலானவர் வாழ்வதும் தோற்றும் விருட்சங்கள் எந்த வனங்கஇ ஆசிர்மங்களும் தோற்றும் ஆச்சருயப்படுவார்கள்.

## 303. மண்ணை அள்ளி நால்திசையிலும்போட சத்தசமுத்திரமும் தோற்றும் ஜாலம்.

ஜாலமாடும் சபையில்நிட்று நீலகண்டியைதியானித்து ஜாலக்காளைப் பூசி த்து மேற்படி இந்திரஜாலமையைத் தந்திரமாகத் கையிற்பூசிக்கொண்டு பூமியி லுள்ள மண்ணை அள்ளி நாலுதிசையிலும்போட உடனே எழுசமுத்திரமுய் தோற்றும் தீவாந்திரங்களும் திருமாலும் லட்சுமியும் தோற்றுவார்கள் அன்றி யும் கப்பல் படவு தோணி நீரில்வாழும் பலவகையான மச்சங்களும் தோற்றும் அசை ஜெகத்தோர்கள்பார்த்து ஆச்சரியப்படுவதுடன் தேவனென்றும் சித்த நுனன்றும் கொண்டாடுவார்கள்

## 203. நூல்கயற்றைக் துண்டுதுண்டாகவெட்டி விழுங்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் கைபெரியவிரல் பெருமனுள்ள நாலுமுழம் நூல்கயற் றை எடுத்துச் சபையோர்களுக்கு காட்டி இதைதுண்டுதுண்டாக வெட்டி விழுங் கிவிடுகிறேன் பாரென்றுசொல்லி கூருள்ளகத்தியை வலதுகையிற்பிடித்து நூல் கயற்றை ஒரு மரத்துண்டின்மேல் வைத்து துண்டு துண்டாகவெட்டி கும்பலாக வைத்து நீலகண்டியைத்தியானித்து ஜாலக்தாளைப்பூசித்து மேற்படி இந்திரஜால மையைத் தந்திரமாககையிற்பூசிக்கொண்டு ஒவ்வொருத் துண்டாயெடுத்து வாயி

ற்போடுவதுபோல் பின்னுக்கு யிழுத்துக் கீழேபோட்டுக்கொண்டே யிருக்கப் பார்ப்பவர்களுக்கு உள்ளுக்கு விழுங்குவதுபோல் இருக்கும் ஆச்சரியப்படு வார்கள்.

## 204. புதுபட்டணம் உண்டாக்கும் புதுமையான ஜாலம்.

தனக்கு இஷ்டமானபேர்களை இரவில் அழைத்துக்கொண்டு ஒரு வெட்ட வெளியான மைதானத்திற்சென்று கூட அழைத்துப்போனவர்களைப் பார்த்து இந்த வெட்டவெளியான மைதானத்தை ஒரு பட்டணமாகச் செய்கிறேன் பா ரென்றுசொல்லி நீலகண்டியைத்தியானித்து ஜாலக்காளைப்பூசித்து மேற்படி இந் திரஜாலமையைத் தந்திரமாக கையிற்பூசிக்கொண்டு மண்ணை அள்ளி பட்டண முண்டாகவெணுமென்று நாலுதிசையிலும் போட பட்டணமுண்டாகும் அப் பட்டணத்தில் தெருக்கள் கடைவீதி ஜெனக்கூட்டம் நீண்டகோபுரம் கோயில் திருக்குளம் வேதியர்வீதி இர்ராஜன் வாழும் அரண்மனை சதுரங்கச்சேனை பல வித தானியம் விளையும் நிலம் தோப்பு முதலானனதும் தோற்றும் பார்ப்பவர் கள் பிர்மித்து ஆச்சரியப்படுவார்கள் ஆனால் மூணேமுக்கால் நாழிகைவரைக்கும் தோற்றும் அதையறிந்து அதற்குள் சல் பட்டணமே மறைந்துபோகக் கடவா யென்று சொல்லவேண்டும்.

## 205. மடியில்கட்டிய தோங்காயை உடைக்கும் ஜாலம்.

தேங்காயைச் சவுக்கத்தில் சுத்தி மடியில் கட்டிவிட்டு இரண்டு கைகளையும் பின்புரமாய் மடித்து இரண்டு பெருவிரலையும் ஒன்றின்மேல் ஒன்று வைத்துக் கட்டிவிடச்சொல்லி ஒரு வீட்டிற்குள்சென்று கதவைச்சாற்றித் தாள்போடச் சொல்லின பிறகு நீ உட்கார்ந்து பின்னுலிருக்கும் கைகளை புட்டத்தின் கீழாகக் கொடுத்து மெதுவாய்க் காலைமடித்து உள்ளேவிட்டு வாங்கினுல் கட்டுபிரகாரமே கை பினபுரம் வந்துவிடும். தேங்காயையுடைத்துக் கட்டிக்கொண்டு முன்போல் காலின்கீழாகக் கையைகொடுத்து பின்னுக்கு வாங்கிக்கொண்டு கதவைதட்டி திறக்கச்சொல்லி வெளியில் வந்தால் தேங்காயைப்பார்த்து ஆச்சரியப்பட்டு மந் திரஞ்செய்தானென்றே நம்புவார்கள். ஆனால் உள்ளே யிருக்கும்போது மலை யாளதேவி வாடி சாமுண்டி ஒடிவா என்று சொல்லிக்கொண்டே மேற்படிதேங் காயையுடைத்து வரவேணும்.

## 206 குளத்தில் முழுகி விபூதியிட்டுக்கோண்டுவரும் ஜாலம்.

கொடிக்கள்ளிப்பாலை விபூதிபோல்குழைத்து சிவயோகிபோல் தேகம் முழுவதும் கட்டுகட்டாகயிட்டு வெய்யலில்நின்ருல் உலர்ந்த பிறகு ஒன்றும் தெரியாது. அனைவருக்குங்காட்டி பிறகு ஒரு குடம் ஜலத்தைச் சிரசில் ஊத்தினுல் உடனே பளிச்சென்று யோகியைப்போலிருக்கும் பார்ப்பவர்களெல்லாரும் ஆச் சரியமாய் பிர்மிப்பார்கள். அன்றியும் குளத்தில் முழுகி வெளியில் வரலாம்.

## 207. வேறுவித குளத்தில் முழகி விபூதியிடும் ஜாலம்.

காட்டாமணிப்பாலைக் கரந்து விபூதியைப்போல் குழைத்து முன்போல் திரேகமுழுது மிட்டுக்கொண்டு வெய்யலில் காய்ந்தபிறகு பார்த்தால் ஒருவருக்கும் தெரியாமலிருக்கும் குளத்திலாவது கிணற்றிலாவது தாவிலாவது முழுகி வெளியில்வந்தால் சிவயோகிபோலிருக்கும். பார்ப்பவர்கள் மதிமயங்கி ஆச்சரியப்படுவார்கள்.

## 208. தீயில் குதிக்கும் ஜாலம்.

சங்கன் செடிபுதரில் பூத்திருக்கும் காளைக்கொண்டுவந்து புதுபாண்டத்திற் போட்டு வெய்யலில் வைத்தால் தயிலம்போல் உருகிவிடும். அதையெடுத்து ஒரு யேனத்தில் பத்திரமாக வைத்துக்கொள்ளவும். ஜாலமாடுமிடத்தில் கட்டைகளைப்போட்டுக்கொளுத்தி அது திகு திகு வென்று எரியும்போது சபையோர்களைப்பார்த்து இந்தத்தீயில் குதிக்கின்றேன் பாரென்றுசொல்லி ஆடையாபரணங்களைக் களைத்துவிட்டு எவ்வளவு தீயாயிருந்தபோதிலுங் குதிக்கலாம் ஆனால் மேற்படி தயிலத்தை தேகமாதியந்தமும் பாதத்திலும் முன்னதாகவே பூசிக்கொண்டிருக்கவேண்டும். பார்ப்பவர்கள் அக்கினியைக்கட்டி விட்டானென்று ஆச்சரியப்படுவார்கள்.

## 209. மோடிவித்தை காட்டும் ஜாலம்.

ஜாலமாடும் சபைக்குவருமுன்னே படிகாரத்தைச் சதுரமான கல்லின் மத்தியிலே வைத்து அனல்காட்டி ரூபா சவரன் அல்லது செம்பு காசியை அந்தப் படிகாரம் உருகும்போதுநன்றாய் அழுத்தி ஒட்டிவைத்துக் கொள்ளவேண்டும் ஆனால் சுற்றிலு மிருக்கும் படிகாரத்தை பேனாகத்தியினால் சுத்தமாகச் சுரண்டி எடுத்துவிடவேண்டும் அதைக்கொண்டுவந்து மேஜையின்மேல் வைத்து சபையோர்களைப்பார்த்து இந்தக்கல்லின்மேல்வைத்து இருப்பதை யாராகிலும் யெடுத்துவிட்டால் அவர்களுக்குப் பத்து ரூபா கொடுக்கிறேனென்று சொல்லவும்அதை வந்து எடுத்துப்பார்த்து எடுக்கமுடியாமல் திகைப்பார்கள் அப்போது அவர்களைப் பார்த்து நான் எடுக்கிறேன் பாருங்களென்று தந்திரமாக ஜலத்தில் கையைத் தோய்த்து எடுக்க கையோடுவந்துவிடும் கண்டோர்களெல்லாம் கலகலத்து ஆச்சரியப்படுவார்கள்.

## 210. கைகெடியாரம் சொன்னபடிக் கேட்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் நன்றாக டயம்போகும்படியான ஒரு கைகெடியாரத்தைக் கையிலெடுத்து சபையோர்களுக்குக்காட்டி இதோ நன்றாக ஓடும் கெடியாரத்தை ஓடவெட்டாமல் செய்கிறேன் பாரென்றுசொல்லி காந்தத்தையாவது காந்தக் கல்லையாவது தந்திரமாக கையில் வைத்திருந்து கெடியாரத்தின் பின்புரத்தில் அணைத்துக் காட்டிப் போகுதாவென்றுக் கேட்டால் போகவில்லையென்று சொல்வார்கள் உடனே காந்தத்தை யெடுத்து விட்டுக்கேட்டால் டயம் போகுதென்று சொல்வார்கள் இது மகா மந்திரமென்று ஆச்சரியப்படுவார்கள்.

## 211. நெருப்பை கையில் வாரும் ஜாலம்.

ஜாலமாடும் சபைக்கு வருமுன்னே உத்தாமணிச் செடியின் வேரும்அதின் கொழுந்தையும் அம்மியில் வைத்துமைப்போல் அறைத்துக்கையில் பூசிக்கொண்டு சபையில் வந்து சட்டையைக் கொளுத்தி நெருப்பாக்கிய கோட்டை நெருப்பையாவதுக் கொண்டுவரும்படி சொல்லி இரண்டு கையிலும் சேர்த்து வாரலாம். கைசுடாது கண்டவர்கள் ஆச்சரியப் பட்டுகொளியுடைய வசியமென்று கலங்குவார்கள்.

## 212. சேக்கில் யெண்ணெய் வாராமல் செய்யும் ஜாலம்.

நாயுருவி வேரைத் தூளாகச்செய்து செக்கு ஆடுகிறபோது அதில்பொட்டுவிட்டால் என்னேரம் ஆடினபோதிலும் எண்ணெவராது அவையாவையு மெடுத்துவிட்டு செக்கைச் சுத்தப்படுத்தி வேறே எள்ளாவது இன்னம் யேதாவதுப் போட்டு ஆடினல் எப்போதும்போல் எண்ணெ வருகும்.

## 213. சோம்பில் நிரைய ஜலத்தை ஊத்தி மேல்லிய சீலையை வாய்புரத்தில் கட்டி கவிழ்த்தால் ஜலம் போகாதிருக்கும் ஜாலம்.

ஒரு சிறிய சொம்பிலாகிலும் அல்லது பெரிய சொம்பிலாகிலும் ஜலத்தை நிறையவிட்டு மெல்லீசுத் துணியை வாய்புரத்தில் கட்டி வலது உள்ட்ங்கையை அதின்மேல் வைத்து கெட்டியாக அமுத்தி மூடி சல் மலையாள பகவதி தண்ணியை நிருத்தடி என்றுசொல்லி தந்திரமாகக் கவிழ்க்க ஜலம் அப்படியே நின்றுவிடும் ஆச்சரியப்படுவார்கள்.

## 214. ஒருவர்மேல் விஷமேற்றும் உன்னித ஜாலம்.

முருங்கமரத்தின் மீதிலிருக்கும் கம்பளிப்பூச்சி மயிரும் தம்மலிவிரையும் வீட்டில் சமைக்கும் சட்டியில் அண்டையிலிருக்கும் கரியும் நல்லெண்ணெயும் சேர்த்து இவைகளை மைபோல் அறைத்து வைத்துக்கொள்ளவும் ஜாலமாடுமிடத்தில் ஒருவனை அழைத்து அவன்கையில் ஒரு கல்லைக்கொடுத்து ஷை மையைத் தந்திரமாக அவன்கையில் பூசியிட்டால் அவன் உடனே பதைபதைத்து துடித்து யிரைச்சலிடுவான் பார்ப்போர்கள் கல்லிலிருந்து விஷம் ஏறுதென்று நம்புவார்கள் ஆனல் அவனை உடனே நல்ல ஜலத்தில் குளித்துவிட்டு வரச்சொல்ல விஷம் இரங்கிவிடும்.

## 215. மணலைத்தின்னும் ஜாலம்.

ஜாலவாடுமிடத்தில் ஒரு சிறியக் கூடைநிறைய ஆத்து மணலைக் கொண்டு வரும்படிச்சொல்லி சபையோர்களைப் பார்த்து இந்தக்கூடை மணலையும் மென்

றுதின்று விடுகின்றேன் பாருமென்று சொல்லி நீலகண்டியைத் தியானித்து ஜாலக்காளைப் பூசித்து ஷெ இந்திரஜால மையைத் தந்திரமாகக் கையிற் பூசிக் கொண்டு மண்ணை கையில்வாரி வாயில் போடுபவன்போல் புன்புரமாகக் கீழே போட்டுவிடவும் பார்ப்பவர்கள் மண்ணை மென்றுத் தின்கிருனென்று நம்பி ஆச்சரியப்பட்டு அசந்து நிற்பார்கள்.

## 216. பட்டாக்கத்தியை முழுங்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் நல்ல பளபளப்பாயும் நன்ருய்க் கூருகச் சாணைபிடித்ததுமாக யிருக்கும் ஒரு பட்டாக்கத்தியை முழுங்கி விடுகிறேன் பாரென்றுசொல்லி நீலகண்டியைத் தியானித்து ஜாலக்காளைப் பூசித்து ஷெ இந்திரஜால மையை தந்திரமாகக் கையிற் பூசிக்கொண்டு பட்டா கத்தியை யெடுத்து முழுங்குபவன்போல் வாயின்மேல் கையைவைத்து கத்தியைப் பின்புரமாகப் போட்டு விட்டால் பார்ப்பவர்கள் பட்டாக்கத்தியை முழுங்கிவிட்டானென்று பதரி ஆச்சரியப்படுவார்கள்.

## 217. கேட்டப்பாறையை முழுங்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் நாலடி நிகளமுள்ள ஒரு கெட்டப் பாறையைக் கையில் எடுத்துச் யபையோர்களுக்குக்காட்டி இந்த கெட்டப்பாறையை முழுங்கி விடுகிறேன் பாருங்களென்று சொல்லி நீலகண்டியைத் தியானித்து ஜாலக்காளைப் பூசித்து மேற்படி இந்திரஜால மையை தந்திரமாகக் கையிற் பூசிக்கொண்டு கட்டப்பாறையை வாய்க்குச் சரியாக வைத்து கையை வாய்மேல்வைத்து கட்டப்பாறையைப் பின்னுக்கு வாங்கிக் கீழே போடப் பார்ப்பவர்கள் கெட்டப்பாறையை முழுங்கிவிட்டா னென்று ஆச்சரியப்படுவார்கள் ஆனுல் மையை உடனே துடைத்துவிட்டு கக்குவதுபோல் கக்கி கெட்டப் பாறையை முன்னே யெடுத்துப்போட பார்ப்பவர்கள் முழுங்கின கெட்டப்பாறையை கக்கிவிட்டானென்று பிர்மித்து நிற்பார்கள்.

## 218. இரும்புகுண்டை முழுங்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் விளாங்காய்ப் பெருமனுள்ள ஒரு இரும்பு குண்டை யெடுத்துச் சபையோர்களுக்குக் காட்டி இந்த குண்டை முழுங்கி விடுகிறேன் பாருங்களென்று சொல்லி நீலகண்டியைத் தியானித்து ஜாலக்காளைப் பூசித்து மேற்படி மையைத் தத்திரமாகக் கையிற் பூசிக்கொண்டு குண்டை யெடுத்து வாய்மேல் கையைவைத்து பின்புரமாகப் போட்டுவிட வேண்டும் பார்ப்பவர்களுக்கு குண்டை முழுங்கிவிட்டாற்போ லிருக்கும் உடனே மையைத் துடைத்து விட்டு குண்டையெடுத்து முன்னே போட முழுங்கின குண்டை கக்கிவிட்டானென்று ஆச்சரியப்பட்டு ஆனந்திப்பார்கள்.

## 219. சிலைத் திறைய வித்தை.

கழுதைப் புணரும்போது பார்த்திருந்து அதினுடைய வால்மயிரைப் பிடுங்கிவந்து வைத்துக்கொண்டு கண்விடாதப் புற்றின்மேல் படர்ந்திருக்கும் செடி

யின் கொடியைப்பார்த்து அந்தச்செடிக்கு கிராணத்தில் காப்புகட்டி பொங்கலி ட்டுப் பலிகொடுத்து தூபம் காட்டிக கொடியைப்பிடுங்கி வந்து அக்கொடியுடன் ரோமத்தையும் சேர்த்து வளையம்போல் சுத்தி அதன்மேல் தங்கக்கம்பி வெள் ளிக்கம்பி சுத்திடவும் ஆனல் சுத்துமுன்னே கருவை யதின்மேல் பூசவேண்டும் ஜாலக்காளைப் பூசைசெய்து வளையத்தைப் ரத்திரமாக வைத்துக்கொள்ளவும் அதை வலது கையில்மாட்டி மெலுக்கு யேற்றச் சீலைத்திறையும் கீழுக்குயிறக்க எப்போதும்போல் அமர்ந்துவிடும் ஆச்சரியப்படுவார்கள்.

## 220 எட்டி மூளைவித்தை.

கெச்சக்காய் சில சுடலையில்வேகும் சவத்தினிடத் தயிலம் ஐங்கோலத்தயி லம் இவைகளை கருக்கிக்கொண்டு அம்மியில்வைத்து மைபோல் அரைத்தெடுத்து சிமிளில் வைத்துக்கொள்ளவும் இது சித்தியாக மந்திரம் ஓம்-நம-யங்-வங்-சிங் சுவாகாயென்று மையைப் பூசையில் வைத்து மூன்றுகாலமும் கால மொன்று க்கு லட்சம் உரு கொடுத்துவர சித்தியாகும் பிறகு எட்டிக் கொம்பில் எட்டு மூளைச்சீவி அதன்மேல் மேற்படி மையைத்தடவி மேற்சொன்ன மந்திரம் ஆயி ரத்தெட்டோதி •பெருத்தப் பூசையாகப்போட்டு பலி முதலானதுங்கொடுத்து மூளையை யெடுத்துப் பத்திரமாக வைத்துக்கொள்ளவும்.

மேற்படி மூளையைக் கொண்டுபோய் வர்த்தகஞ்செய்யும் கடைமுன்னே கிடாவக் கடைவிற்காது செக்காடுமிடத்திற் கிவாஎட ன்னேரம் ஆடினலும் எண்ணெய் வராது சூளைமுன்கிடாவ சூளை வேகாது கருமான் உலைமுன்கிடாவ இரும்புக்காயாது சுண்ணாம்புச் சூளைமுன்கிடாவ சுண்ணாம்புக்கல்வேகாது கல் சூளைமுன் கிடாவ கல்வேகாது வண்ணான் அடுப்பின்முன் கிடாவ வெள்ளாய் வேகாது நெற்களத்திலும் உப்புக்களத்திலுங் கிடாவ இராசிக்குறையும் மீனுள்ள குளம் கிணறு தூரவு ஆறு மடுவு இதுகளில்கிடாவ வலையில் மீன் அகப்படாது கொட்டணம் போடுமிடத்திற் கிடாவ நெல்மசியாது மூளையைப் பிடுங்கிவிட மேற்சொன்னவைகளெல்லாம் எப்போதும்போல் நடக்கும்.

## 222. வீட்டிற்போட்டு கதவைச் சாத்திவிட வெளிவரும் ஜாலம்.

இரண்டு கால்பெரு விரல்களையும் இரண்டு கைப்பெருவிரல்களையும் கட்டி மல்லார்ந்து படுத்துத் தன்மனதைப் பூரணத்தில் நிறுத்தி நாட்டத்திலிருக்க மனஞ்சொக்கி மவுனத்திலூன்றிச் சுழுத்தியி லடங்கிவிடும். பின்பு தெளிந்தவு டன் இவ்விரண்டு கட்டுகளையும் அவிழ்த்துவிட்டு மறுவேலைப் பார்க்கவும் இம் மடி சதா நடத்துவல்ல் பனிரண்டு வருஷத்திற்குள் சித்தியாகிவிடும் அதன்பின் எந்த வீட்டிலாகிலும் கருங்கல் கட்டடத்திற்குள் ளாகிலும் விட்டு பந்தோபஸ்து செய்தாலும் இவன் வெளிவரச் சுவர்கள் இடங்கொடுக்கும் அவை ஒருவருக்குந் தெரியாது இதைப் பரகாயப் பிரவேச மென்பார்கள் இப்படிச் செய்வோரைச் சித்து புருஷரென்றே சொல்வார்கள்.

## 222 ஓட்டமோடும் வித்தை.

விழுதியிலையை வாயில்போட்டுக் கொஞ்சம் தின்று கொஞ்சம் வாயிற்ரு டையில் அடக்கி வைத்துக்கொண்டு எந்த மட்டில் ஓடினாலும் ஓடலாம் இளைப்பு களைப்பு ஒன்றுமிராது நிற்கவேண்டுமானல் ஒரு மரத்தைப்பிடித்து நிற்கவேண் டியது ஒரு காதத்திற்குமேலும் ஓடலாம்.

## 223. பாலைத் தயிராக்கும் வித்தை.

ஒருபடிப் பாலில் வாழைக்கிழங்கை உலர்த்தி இடித்து வஸ்திரகாயஞ் செ ய்த தூளில் அழை அழாக்கு அதிற்போட்டுக் கலக்கத் தயிராகும் இன்னும் நாணற்புல்லு போட்டாலும் தயிராகும்.

## 224 பேயாட்டும் வித்தை.

பேயாடுவோரையாவது அல்லது எவ்வித மனிதரையாவது தலைமுழுகி வரச்சொல்லி அஎவீரத்தலையோடு உச்சியில் மருளூமத்தன் காய்த்தூளை ஆர்க்கப் பொடித்து அதிற் கொஞ்சம் போட்டு அரைக்கித் தேய்த்துவிட நின்றுவிடும் பின்பு செய்வதைச் செய்யவும்.

## 225. நெருப்பு வித்தை ஜாலம்

மணத்தக்காளிச்சாறு தக்காளிச்சாறு வசளைச்சாறு இம்மூன்றும் ஒன்ருய் கலந்துக் கைகளில் பூசி நெருப்பை யெடுக்கவும் அல்லது கால்களிற்பூசி நெருப் பை மிதிக்கவும் கைகால்கள் சுடாது கொப்பளிக்காது என்னேரம் விளையாடினு லும் விளையாடலாம்.

## 226. மீன்படும் வித்தை.

திருகுகள்ளியை முழமுழந் துண்டுகளாகத் தரித்து ஏறி குளம் மடுக்களில் நான்கு பக்கத்திலும் அடத்தியாகப் போட்டு வைத்திருக்கச் சற்றுநேரத்திற்குள் அதிலுருக்கும் மீன்களெல்லாம் மிதந்துபோய்விடும் அதுகளில் ஒன்றேனும் தப்பிப் பிழைக்காது.

## 227. வேறுவிதம் சோறுவேகாத வித்தை

வெண்காந்திவேர் கெஞ்சாவிதை ஐங்கோலம் இவை மூன்றையும் சேர் த்து உலையிற் அரிசிபோட சோறு வேகாது இதற்கு மாற்றுமில்லை.

## 228 மகா விநோத மோடி வித்தை.

சிதம்பரச் சக்கரத்தைக்கிரி அட்சரமும் பீஜம் முதலானதும் அதில் அடை த்துப் பூசையில்வைத்து அருளாகும்படி ஓதுங் மந்திரமாவது ஓம் ஸ்ரீம் கிலியும் அவ்வும் மவ்வும் சிவ்வும் நமசிவய சுவகா யென்று மூன்று காலமும் நாளொன் றுக்கு லட்சமுரு கொடுக்கவும் இப்படிக்குத் தவராமல் நாற்பத்தொருநாள் ஓதி சக்கரத்தை யெடுத்து வைத்துக் கொள்ளவும் மோடிவித்தை செய்யவேண்டில்

கோவில் முன்பாகிலும் குளத்தின் முன்பாகிலும் அம்பலமாக யிருக்கும் தெருவி லேனும் ஆடவேண்டும் ஆடுவதற்கு குருவினுடையப் பாதத்தை முன்வணங்கி பின்பெரியோர்களின் பாதம்வணங்கி சித்தர் முத்தர் முனிவர் முதலானவரை துதித்து நிற்க ராட்சதர் எவல் வைப்பு எதிரில் மிருகம் முதலான ஜாதிகள் கொடிய விஷங்கள் இவை முதலானதும் எதிர்நில்லாது ஏவல்செய்யும் படி யான சித்தியாகும் சித்தியானவுடன் வாளும் செக்குலக்கையும் நர்ட்டி உலக்கை முன்பு தேங்காய் ஒன்றுவைத்து அதன் முன்பு பாதரட்சை வைத்து அதற்கு முன்பு தேய்ந்தவேர்வைத்து அதற்கு முன்பு வாழைமரத்தை நாட்டிப் பந்தற் போட்டுப் பூமாலேகுட்டி மாவிலே தோரணங்கட்டி பெருத்தப் பூசைபோட்டு பலிகொடுத்து எட்டிமுளே மைபூசி அஷ்ட சித்தியில் அடைத்து கோடுயேழுகிரி காளியுடதியானம் ஒதி மூடியத்திரையை எடுக்கச்சொல்லி பின் மோடியெடுக் கிம்படிசெய்யவும்.

எதிரிளானவன் மோடியெடுக்க வரும்போது கக்குகக்கு காளிதுர் கஙி அரி உம் ஐம் என்று சொல்லி கண் கட்டு மையைக் கையிற் றடவி வெத்திலேயை முறத்திற்போட்டு அள்ளி யெதிரியின்மேல் போட அது தேளாகிகொட்டும் அவன் பதைபதைத்து மயங்குவான் அப்போது நீ ரங் ரங் சூலி என்று சொல்ல அவனுடைய தேகமாதியந்தமுங் யெறிந்து ஓடி விழு ந்து அழுவான் மறபடியுமவன் வருவானுகில் அப்போது நீ வறிவறி மறி சண் டாளி அம் அம் என்று சொல்லி விபூதியைக் கையிலெடுத்து தியானமோதி எதி ரிமேல்போட உருண்டு விழுகுவான் பின்பு ஓம் படுசுவாகா என்று விபூதியை அள்ளி எதிரிமேல்போட அவன் கீழேவிழுந்து கோபிப்பான் அம் அம் நிம் ஓம் என்றுசொல்லி வேப்பிலேயும் மண்ணும் விபூதியுமெடுத்து தியானித்து அவன் மேல் போடப் போட்டவுடன் பூமியில் விழுந்துந கையுங்காலும் உதைத்துக் கொள்வான் வாயில் உதிரங்கக்குவான் அப்போது குறடாவும் தேங்காயும் உலக் கையும் இதுகளெல்லாம் கூட்டமாக யெழுந்து அவனே அடிக்கும் வாளானது எழும்பிவெட்டும் ஆனல் காளியை தியானஞ்செய்ய மேற்சொன்ன ஆயுதங்க ளெல்லாம் எழுந்து அடிக்கும் உன்னே எதிரிவெல்லமாட்டான் நீ வைத்த மோ டியு மெடுக்கமாட்டான்.

## 229. மஞ்சளே தண்ணீரில்கரைத்து மறுபடியும் எடுக்கும்ஜாலம்.

நீர்முள்ளி விரையைக் கொண்டுவந்து பொடித்து வஸ்திரகாயஞ் செய்து விபூதியில் கலந்து வைத்துக்கொள்ளவும் பின்பு ஜாலமாடுமிடத்தில் ஒரு போக ணியில் தண்ணீர்வார்த்து முன்னே வைபது அறைத்த மஞ்சளுருண்டையைக் நீரில் கலக்கி மறுபடியும் எடுக்கிறேன் பாருங்களென்றுசொல்லி சல் மலேயாள பகவதி ஒடிவா ஓடிவா கரைத்த மஞ்சளேகொண்டுவா என்று சொல்லிக்கொண் டே மேற்படி விபூதியைப் போட்டுககலக்கி வழித்தால் உருண்டையாய் வந்து விடும் பார்த்தபேர்களெல்லாம் பிர்மித்து ஆச்சரியப்படுவார்கள்.

### 230. தண்ணீரில் மணலைக் கலக்கி உதிரிமண் எடுக்கும் ஜாலம்.

வெளாம்பிசினியைக் கொண்டுவந்து தண்ணீரில் கறைத்து ஆத்துமணலில் பிசிரி உலரவைத்து உதிரிப்பிடித்து வைத்துக்கொள்ளவும் ஜாலமாடுமிடத்தில் ஒரு போகணியில் தண்ணீர்கொண்டு வரும்படியாகச் செய்து மேற்படி மண்ணை சபையோர்களுக்குக் காட்டி இந்த மண்ணை இந்தஜலத்திற் போட்டுகலக்கி மறுபடியும் உதிரி மண்ணுகவே யெடுக்கிறேன் பாரென்றுசொல்லி அந்த மணலைத் தண்ணீரில் போட்டுக் கைபோட்டு வாரினுல் காய்ந்தமணலாகவே யிருக்கும் அதை எடுத்து அனைவருக்குங்காட்ட ஆச்சரியப்படுவார்கது.

### 231. தண்ணியில் பாணவேடிக்கை காட்டும் ஜாலம்.

ஒரு கோப்பையில் தண்ணீர்வார்த்து அனைவருக்குங்காட்டிபாஸ்பரையிட்டு ஆப்லயின் என்று சொல்லும்படியான மருந்தைக்கொஞ்சம் தண்ணீரில் போட்டால் பொதைபாணம்போல் கிளம்பும் இது சில கனவான்கள் கைமுறையாகச் செய்த ஜாலம் ஆனுல் இது மருந்து ஷாப்பில் கிடைக்கும்.

### 232. ஒருவர்மீது விஷத்தையேற்று விநோத ஜாலம்

பூனைக்காஞ்சியிலையின் மேலிருக்கும் சொணையும் அதன் காயின்மேலிருக்கும் சொணையும் பூனைபுடுக்கு காயின்மேலிருக்கும் சொணையும் வெண்டக்காய் மேலிருக்கும் சொணையும் ஆகிய இந்த நான்கு தினுசும் சேர்த்து ஒருடப்பியில் வைத்துக்கொண்டு யாதாமொருவர்மேல் விஷம் ஏற்றும்போது தந்திரமாக விரலில் அந்த சொணையைத் தொட்டுக்கொண்டு மண்ணைக்கிள்ளிப்பூசினுல் விஷம் போல் ஏறும்.

### 233 காயிதத்தின்மீது விசித்திரம் எழுதி இரவு இருட்டில் காட்டும் ஜாலம்

திமிரிபர்ஷாணத்தை ஸ்டீலில் குத்திக்கொண்டு வெள்ளைகடிதாசி யின் மேல் தன்மனதிற் கிசைந்ததை யெழுதி இரவில் இருட்டில் காட்டினுல் பிரகாசமாக எழுத்துக்கள் தோணும் பார்ப்பவர்கள் ஆச்சரியப்படுவார்கள் ஆனுல் அந்த பாஷாணத்தை தண்ணீரிற்போட்டு வைக்கவேண்டும்.

### 234 ஆத்துமணலை அரிசிபோல் மேல்லும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்திற்கு வருமுன்னமே குண்டுமணி இலையைமென்றுத் தாடையில் அடக்கிக்கொள்ளவும் ஒரு முச்சலின் ஆத்துமணலைக்கொண்டுவந்து சபையோர்களைப்பார்த்து இந்த முக்சலிலிருக்கும் ஆத்துமணலையெல்லாம் மெல்

லுகிறேன் பாரென்றுசொல்லி மணலையெடுத்து வாயில் போட்டு மெல்ல ஆச்சரியப்படுவார்கள் எவ்வளவானாலும் சலிப்பில்லாமல் மெல்லலாம்.

## 235 இரும்பு சங்கிலியைப் பழுக்கக்காச்சி கையாலுருவும் ஜாலம்.

ஜாலமாடும் சபைக்கு வருமுன்னமே கத்தாழை மடல் கொண்டு வந்து அதன் சோத்தையெடுத்து பில்லை பில்லையாக அருத்து விளக்கெண்ணெயில் போட்டு வைத்துக்கொள்ளவும் சபையில் சங்கிலியை நன்ருய் காயவைத்துக் கம்பிமாட்டி யிடதுகையில் தூக்டச் சபையோரைப்பார்த்து இந்த சங்கிலியை உருகுகிறேன் பாரென்றுசொல்லி இடதுகையைத்தூக்கி வலதுகையில் கத்தாழைமடலோடு யெண்ணெயைவாரி உருவினுல் சங்கிலி குப்பென்றெரியும் கை சுடாது ஆனுல் தந்திரமாக உருவவேண்டும்.

## 236 ஜலத்தைகட்டும் ஜாலம்.

குயவனிடத்திற் சென்று ஒரு பச்சைத்தோண்டியை வாங்கிக்கொண்டு வந்து அத்தோண்டியின் உள்ளுக்கெல்லாம் மருவிலிம்பழத்தைப் பிசைந்து மூன்றுதரம்பூசிக் காய்ந்தபிறகு தண்ணியை நிறையவிட்டு உக்கம்போட்டு மேலே தூக்கிக் கட்டினபிறகு ஓட்டையெல்லாந் தட்டிவிட்டால் ஜலம் அந்திர மாக நிற்கும் பார்ப்போர் ஆச்சரிடுப்பயவார்கள்.

## 237. ஜலத்தை அலுவாசெய்யும் அற்புத ஜாலம்.

ஜாலமாடும் சபைக்கு வருமுன்னே கட்டுக்கொடியென்ற மூலிகையைக் கொண்டுவந்து துண்டு துண்டாக துண்டித்து வைத்துக் கொள்ளவும் சபைக்கு வந்து ஒரு குடத்தில் நல்லஜலம் கொண்டுவரும் படிச்சொல்லி சபையோர்களுக்குக் காட்டி இந்த ஜலத்தை அல்வாசெய்கிறேன் பாரென்றுசொல்லி மேற்படி மூலிகையைத் தந்திரமாக அதிற்போட்டு கொஞ்சம் சற்கரையுங்கூடப் போட்டுக்கலக்கி மூடிவைத்து சல் மலையாலபகவதி இந்த தண்ணீரை அல்வா செய்யடி என்று சொல் சற்று நேரம்பொருத்து திறந்துபார்க்க அல்வாபோல் பந்தனையாகக் கட்டிவிடும் பார்ப்போர்கள் ஆச்சரியப்படுவார்கள் அதைக்கத்தியினுல் அறுத்து அனைவருக்குங் கொடுக்கலாம் இதை சாதாரணமாய்ச் செய்து தின்றாலும் தாதுவிர்த்தியாகும். அன்றியும் சிறு கட்டுக்கொடி இலைச்சாறையும் கசக்கிப் பிழியலாம்.

## 238. சில்லிகுடத்திற் தண்ணீர் நிற்கும் ஜாலம்.

ஒரு குடத்தை எழுத்தாணியால் சில்லிகள் செய்து துத்தியிலையையும் நருவிலியிலையையும் அதின் பழத்தையுஞ்சேர்த்து ஒன்றும் இரண்டுமாக அரைத்து குடத்தினுள்ளே பூசி சற்றுநேரம் பொருத்துக் குடத்தில் ஜலம்வார்த்துத் தூக்கினுல் ஒரு துளியுஞ் சிந்தாது ஆச்சரியப்படுவார்கள்.

## 239. நெருப்பில்லாமல் வஸ்திரங்கொளுத்தும் ஜாலம்.

திமிர் பரஷாணமென்பதைப்பயராளவு எடுத்துக்கொண்டுக் கையை எல்லா ருக்குங் காட்டிவிட்டுப் பஞ்சியாவது வஸ்திரமாவது தேங்காய் நாருவது இவை களைப் பந்துபோல் சுருட்டிக் காத்துவாட்டமாக நினறுமேற்படி பாஷாணத்தை அதில் நுழைத்து ஊதினல் குபீலென்றெரியும் ஆச்சரியப்படுவார்கள்.

## 240. வாயில் நெருப்பு கக்கும் ஜாலம்.

ஒரு சிறுபயறளவு திமிர் பாஷாணத்தை உதட்டில் வைத்துக்கொண்டு பஞ்சைப் பந்துபோல் சுருட்டி வாயில் கவ்விக்கொண்டு காத்துபோகும் வாடை யாக நின்று ஊதினல் குபிலென்றுப் பத்தியெரியும் அனைவருக்கும் அது ஆச்சரியமாக யிருக்கும்.

## 241. கோழிமுட்டை பரக்கும் ஜாலம்.

ஒரு கோழிமுட்டையைவாங்கி அதில் சிறிய அவாரஞ்செய்து பாதி அம் பிலியை ஊத்திவிட்டு அதற்கு பதில் சீமைகாடியை ஊற்றி ஊசிகாந்தம் கொஞ் சேர்த்து அதின் துளையை காயிதத்தால் ஒட்டிவெய்யலில் வைத்தால் சூடேறின பிறகு கீழேநிற்காது ஆச்சரியப்படுவார்கள்.

## 242. சாம்பிராணி புகைபோடச் சகலரும் ஆடும் ஜாலம்.

கெச்சைக்காயுடன் ஐங்கோவம் சேர்த்து சாம்பிராணித் தைலம் அதனு டன் கூட்டிப் பூசையில்வைத்து ஜெபிக்கும் மந்திரம் ந-ம-சி-வ-ய-ஓம் கிலியும் சவ்வும் ஐயும் சர்வபாசா சாக்குருவிஷணு என்றுக்கு மூன்றுவேளையும் லட்சம் உருவுகொடுத்து வரவேண்டியது ஆனல் இருபத்தோர்நாள் கொடுக்கவேண்டும். பின்பு அதையெடுத்து வைத்துக்கொண்டு ஜாலமாடும் சபையில் சாம்பிராணி தூபம்போடுவதுபோல் போட இந்தப் புகைபட்டப்பேர்களெல்லாம் வெறி கொண்டவர்போல் ஆடுவார்கள் ஆச்சரியமாகயிருக்கும்.

## 243. ஒருமனிதனைத் தொட்டால் தொட்ட விடமெல்லாம் பத்தல் பத்தலாக பிளக்கும் ஜாலம்.

குறளி வசியமாகும்படியாக தியானம் செய்யும்விதம் எவ்விதமெனில் ஓம் அவ்வும் உவ்வும் மவ்வும் ஸ்ரீம் இரீம் கிலியும் வயநமசி குறளிவாவா நீ நான் சொன்னதெல்லாம் செய்யவாயென்று இந்திரஜால மையையெடுத்து பூசை யில்வைத்து இருபத்தோருநாளும் இரண்டு வேளையுந்தவருவல் லட்ச உருவு ஓதி பலிபூசை நடத்திமையையெடுத்து வைத்துக்கொள்ளவும். பின்பு அந்தமை

யைக் கொஞ்சம் விரலில்தொட்டு குறளியைத்தியானித்து ஒருவர்மேல் தடவிய விடமெல்லாங் பத்தல்பத்தலாகப் பிளந்தாற்போல் தோற்றும் அனைவரும் பிர்மிப்பார்கள் ஆனல் மூனேமுக்கால் நாழிகைக்குள் மறந்துப்போகும்.

## 244. வயற்றைக்கீரி குடலையெடுத்துக்காட்டும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒருசூரிகத்தியைக் கையிலெடுத்துச் சபையோரைப் பார்த்து இதோ என்வயற்றைக் கீரிக் குடலையெடுத்துக் காட்டுகிறேன்பாரென்று சொல்லி குறளியைத்தியானித்து அம்மணி இப்போதுபார்ப்பவர்களுக்கு வயற்றைக் கீரினுப்போலும் குடல் வெளியே வந்தாற்போலும் தோற்றும்படிச் செய்வாயென்று சொல்லி மேற்படி இந்திரஜாலமை விரலில்தொட்டு தந்திரமாக கத்தியோடு வயற்றில் நேராகத் தடவிக்கொள்ள அப்போது பார்ப்பவர்களுக்கு வயது கிழிந்தாற்போல் குடல் வெளியில் வந்தாற்போலும் தோற்றும் ஆச்சரியப்படுவார்கள்சிலர் இதைப்பார்த்து பிர்மத்துக் கண்ணை மூடிக்கொள்பார்கள். சிலர் பார்க்கப்போகாதென்று அப்பால் ஓடிப்போவார்கள்.

## 245 மல்லிகைமொக்கு அழைப்பிக்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு பூக்குடலை யெடுத்து சபையோர்களுக்குக் காட்டி இந்தப் பூக்குடலை நிறைய மல்லிகைமொக்கு அழைப்பிக்கிறுறேன் பாருங்களென்று சொல்லி குறலியைத் தியானித்து அம்மணி இந்தப் பூக்குடலைநிறைய மல்லிகை மொக்கு வரவேண்டுமென்று சொல்லி தந்தப் பூத்குடலையின் மீது துணியைப்போட்டு மூடி இந்திரஜால மையைத் தொட்டு தந்திரமாக பூக்குடலையில் தடவிவிட்டு சற்றுநேரம் பொருத்துத் துணியைத் திரந்துகாட்ட பூச்குடலை நிறைய பூவிருக்கும் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள் உடனே துணியைப்போட்டி மரைத்துவிடவேண்டும்.

## 246. ஒன்பது வகை கனிவர்க்கங்கள் அழைப்பிக்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் எவ்வகைகிகூடையாயினும் ஒன்பது கூடையெடுத்து அனைவருக்கும் காட்டி ஒவ்வொரு கூடையில் ஒவ்வொரு கனிவர்க்கங்கள்அழைபிக்கிறேன் பாரென்று சொல்லி குறளியை தியானித்து அம்மணி மாங்கனி தேங்கனி பிலாகனி வாழைகனி அத்திக்கனி மாதுளங்கனி கிச்சிலிகனி அன்னசிக்கனி கொம்பாக்கனி இந்த ஒன்பது கூடையில் கொண்டுவரவேணுமென்று சொல்லி கூடைகள்மீது துகில்போட்டு மூடி இந்திர ஜாலமையை தந்திரமாக விறலில்போட்டு ஒன்பது ஒன்பது கூடைக்குந் தடவி குறளிமந்திரம் ஆயிரத்தெட்டோதி பிறகு துணியைத் திரந்துகாட்ட மேற்கூறியக் கனிகளெல்லாம் புஷ்களமாகத் கூடைநிறையவிருக்கும் பார்ப்போரனைவரும் ஆச்சரியப்படுவார்கள் உடனே துணியைப்போட்டு மறைத்துவிட மாயமாக மறைந்துப்போய்விடும்.

### 247. மனிதனுடையகாது யானைக்காதைப்போலாடும் ஜாலம.

ஜாலமாடும் சபையில் வந்துநின்று சபையோர்களைப்பார்த்து இதோஎனது இரண்டுகாதையும் யானைக்காதைபோலாகச்செய்து ஆடும்படிசெய்கிறேன் பாரென்று சொல்லி குறளிமந்திரத்தை ஆயிரத்தெட்டோதி தியானித்து இந்திர ஜாலமையை விரலில்தொட்டு தந்திரமாக இரண்டுகாதிலும் தட்விக்கொள்ள யானைக்காதைப்போல் ஆடி ஆடும் ஆச்சரியப்படுவார்கள் உடனே துணிபோட்டு மூடிதிறக்க எப்போதும் போலாகிவிடும்.

### 248. மீன் பிடிக்கும் வித்தை

திருகுகள்ளித் துண்டைத் துண்டுதுண்டாக வெட்டி குளங்கிணறு நூவு மடுவுமுதலான யிடங்களில் நெருங்கப்போட்டு சற்றுநேரம் நின்லிம் சரி அல்லது பேன் கொட்டையை வருத்து அதற்கிச் சரிபிடையாய் பச்சையாக வுரித்த இராவைவைத்து அரைத்து மேற்படி யிடன்களில் தூவினாலும் வேண்டியவரையில் மீனைப் பிடித்துக்கொள்ளலாம்.

### 249. கையில் பந்தமேந்தும் ஜாலம்.

கத்தாழை மடலசோத்தை பில்லைபில்லையாக அருத்து உள்ளங்கையில் வைத்து மேலே சல்லாதுணியைமூடி எண்ணைபந்தம் கொளுத்திவைத்து எத்தினால் பந்தம் பிரகாசமாக யெரியும் கைசுடாது சல்லாதுணியும் வேகாது அனைவரும் ஆசசரியப்படுவார்கள்.

### 250. ஒருகுடம் நீரை குடிக்கும் ஜாலம்.

சிறுபூளை யென்றவேருங் குப்பமேனிவேரும் வாயில்போட்டு மென்றுஅடக்கிக்கொண்டால் ஒருகுடம் தண்ணீறையும் குடிக்கலாம் அந்தக் குடத்தையும் தின்றுவிட வேண்டுமென்றாலுந் தின்றுவிடலாம்.

### 251. வேறுமுறை சங்கிலியுருவும் ஜாலம்

பச்சைதவளை நெய்யும் வெங்காயச்சாரும் கத்தாழைச்சாரு வெந்தியமும் உப்பும் விளக்கெண்ணையில் கறைத்து வைத்துகொள்ளவும் பிறகு நெருப்பில் காய்ந்த சங்கிலியை கம்பிமாட்டி இடதுகையில்தூக்கி வலதுகையில் மேற்படி யெண்ணையை வாரி உருவினால் குப்பென்று எரியும் வலதுகைவேகாது.

### 252. முள்ளின் மேல் நடக்கும் ஜாலம்

ஓரிலை தாமரையின் வேரும் செம்பு நெருஞ்சிவேரும் கொண்டுவந்து அதைத் தலைமாற்றிச் செப்புக்குளாவிற்போட்டு குளிசமாடி வாயில்போட்டுக் கொண்டு எவ்வித முள்ளின் பேரிலாகிலும் ஜாமினன்றி நடக்கலாம் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள்.

## 253. கோழிசண்டை ஜாலம்

எத்தைசொன்னாலுங் கேட்குமென்கிற நத்தைச்சூரிவேருடன் கழலமுங் கொண்டுவந்து நீரில்போட்டு ஒருமாதம்சென்று யெடுத்து சண்டைசாவலுககு கொடுத்து கத்திகட்டிவிட்டாலுந் தோற்காது எதிரிசாவலுடைய கத்திபட்டா லும் அருபடாது அனல் நத்தைச்சூரியைத் தனியாவது ஆகாரங்களோடாவது உள்ளுக்குச் செலுத்தவும்.

## 254. ஆடுகளை கைத்தட்டி அழைக்க பின்னால் வரும் ஜாலம்

கோவை செடியின் வடக்கேபோகும்வேர் கொஞ்சமும் அதன் இலைகொ ஞ்சமும் கொண்டுவந்து சிறுநீர்விட்டு நன்றாய் அரைத்து இரண்டு கைகளி லும் மின்னும் பின்னும் தடவிக்கொண்டு ஆடிருக்கும் இடத்திற்போய் கைதட் டினால் ஆடெல்லாம் பின்னால் தொடர்ந்துவரும்.

## 255. படுத்தஆடு எழுந்திராத ஜாலம்.

தேவாங்கைக் கொண்டுவந்து உயிரைபோக்கி தோலையுரித்து ஆடிகெக்குமி டத்தில் கொண்டுபோய் புதைத்தால் படுத்திருக்கும் ஆடுகள் எழுந்திராது அந்த தோலை தோண்டியெடுத்தால்தான் எழுந்திருக்கும்.

## 256. மிதியடி ஜாலம்.

விளாம்பிகினியைத் தூமாய்ச்செய்து விபூதியில் மிச்சமாய்ப் போட்டுக் கலந்துவைத்துக்கொண்டு குமிளில்லாத வெரும் பலகையாயுள்ள மிதியடி யை கழுவிவைத்து இரண்டு காலும் அலம்பி இந்த விபூதியைப் பலகைமேல் தூவி எறி நடக்கலாம் இது சிலர் செய்தே யிருப்பார்கள்.

## 257. பசியில்லாதிருக்கும் ஜாலம்.

நாயுரிவி விரையைக் கொண்டுவந்து அறைத்துப் பசும்பாலை விட்டுக் கூழா கசிச்சாப்பிட அன்ன ஆகாரமில்லாமல் இருக்கலாம் ஆனலிது சிவயோகிகளுக் குத் தகும் மற்றவர்களுக்கு தேகம் ஊஷ்ணமாம்.

## 258. இரும்பை ஒடிக்கும் ஜாலம்.

ஒரு சிரிய இரும்பு சம்பியை வாழைமரத்தடியில் நடுவாகச் சொருகிவைத்து மூன்றுநாள் சென்று யெடுத்துவந்து ஒடித்தால் பளபளவென்று ஒடிந்துவிடும்.

## 259. சுண்ணாம்புத் திண்ணும் ஜாலம்..

சங்கம் விரையைக் கொஞ்சம் வாயில்போட்டு கசகசவென்று மென்று பின்பு சுண்ணாம்பைத்திண்ணலாம் உள்ளுக்கு முழுங்கக்கூடாது அதிகமாய்மென் றுவிட்டால் மாத்துண்டு அதாவது வாய்வெந்தால் உடனே மஞ்சளைவாயிலிட்டுக் கசகசவென்று மென்றால் காரந்துலையும் தோங்காய் பில்லைதின்பதும் பழக்கம்.

## 260. வாட்டிலோட்டை கடிக்கும் ஜாலம்.

வேளை வேறை வாயிலிட்டு மென்று அடக்கி வாட்டிலோடு பீங்கானோடு இவைகளில், யேதேனும் ஒன்றைப் போட்டுக்கடிக்கலாம் மெல்லலாம் அரிசி போல் மாவாகிவிடும் வாயை அறுக்காது.

## 261. வேறுமுறை வாட்டிலோடு மேல்லும் ஜாலம்.

காரமென்பது அக்ராகாரத்தை ஒருசிறிய துண்டு வாயில்போட்டு நன்றாய்க் கசகசவென்று மென்று தாடையில் அடக்கிக்கொண்டு வாட்டிலோட்டைமென்றால் அரிசிபோல் மசிந்து ரோகிவிடும் வாயை அருக்காது ஆனால் உள்ளுக்கு முழுங்கக்கூடாது உஷாராய் மெல்லவேண்டும்.

## 262. தண்ணீர் நிற்கும் ஜாலம்.

மயிரோசனையும் கார்கறைந்த வேரும் கோரைக்கிழங்கும் அரசன்மரத்து வேரும் சம்நிடையாக யெடுத்து அரைத்து குடத்திற்குள் பூசிஜலத்தை மொண்டு சபையிலவந்து சிழ்மேலாய்க் கவிழ்த்துக் காட்டினல்துளி ஜலங்கூட்க் கீழே விழாது அனைவரும் ஆச்சரியபடுவார்கள்.

## 263. ஆடு மேயாத ஜாலம்.

மூஞ்சூரைப் பிடித்துவந்து ஓடுகிறத் தண்ணியில் விட்டால் எதிர்கோக்கியாடும் அப்போது சுத்தியினல் ஒரே வெட்டாக வெட்டி தலைப்புறத்தைமாத்திரம் எடுத்துவந்து ஆடுயிருக்குமிடத்தில் புதைத்து விட்டால் மறுபடியும் எழுந்துத் தழைமேயப் போகாது புதைத்ததை யெடுத்தால் மாத்திரம் மேயப்போகும்

## 264. விளக்குப் பார்க்கும் ஒருவித ஜாலம்.

மயிலிறகு நீட்டமாயுள்ளதை ஒன்று கொண்டுவந்து அதின்கீழ் துவாரமாக ஒருகளஞ்சியம் விட்டு களிமண்ணல் மூடிபிாகு தெரியாமல் சல்லா கந்தையால் முழுதிலும் சுத்தி விளக்கெண்ணெயில் தோய்த்து ஒரு பக்கமாகக் கொளுத்தி பார்க்க ஏதேதோ புதுமைகளெல்லாந் தோன்றும் ஆச்சரியமாக விருக்கும்.

## 265. வாயினில் அக்கினி உண்டாகும் ஜாலம்.

தம்பலமெனும் மூச்சை ரவியில் காயவைத்து அதற்குச் சமமாய் வெள்ளைக்கல்லை பொடி செய்து இரண்டும் ஓரிடயாகக் கலந்துக்கொண்டு தாடையில் திருகடிகை பிரமாணம் தந்திரமாக அடக்கி வைத்துக்கொண்டு சபையில்வந்து நின்று வேடிக்கைப்பார்ப்போர்களை பார்த்து இதோவாயில் நெருப்புகக்குகிறேன்

பாருங்களென்று வாயைதிறந்துகக்க நெருப்பு குபில் குபீலென்றுவரும் பார்ப்பவர் ஆச்சரியப்படுவார்கள்.

## 266. வழக்கு வெல்லும் வித்தை

நெருஞ்சியின் வேர் மயில் ரோசனை இரண்டையும் சேகரித்து வாசலில் வைத்து கணேசனைப் பூசைசெய்து குலதெய்வத்தையும் நினைத்து அதைஎடுத்து வாயிலடக்கிக்கொண்டு எதிரியின்முகம்நோக்கிநிற்க அவன்மொழி பிதறிடுவான்.

## 267. வலையில் மீன்படாத ஜாலம்.

செருப்படைச்சாறு அத்தொடுகூடி பெருங்காயம் கரைத்து செம்படவர் காயவைத்திருக்கும் வலைகளின்மீது விசிரிவைத்துவிட்டால் அந்த வலையில் மீன் படாது மறுபடியும் உழமண்ணுபோட்டு ஊறவைத்துவேக்காடுக் கொடுத்துத் தோய்த்து காயவைத்தால்தான் மீன்கள்படும் இந்தவேலைசெய்தால் பிழைப்புக்கு இடையூராகையால் தோஷமென்பது.

## 268. வேறுமுறை வாட்டிலோடு மெல்லும் ஜாலம்.

கோபாரந்தாங்கி பென்றச்சொடியின் வேரைக்கொண்டுவந்து அதில் சிறிய துண்டாய் வாயில்போட்டு கசகசவென்று மென்று தாடையில் அடக்கிக்கொண்டு வாட்டிலோட்டைப் போட்டுக்கடித்தால் முருக்கைப்போல் மென்றுவிடலாம் வாயை அறுக்காது.

## 269. கையில் வெத்திலைச் சுண்ணம்புச் சிவக்கும் ஜாலம்

கரிகவலன் கொழுந்தைக் கொண்டுவந்துக் கையில் வைத்துக்கசக்கிச் சார் கையில் தாங்கும்படியா ஊறவைத்து உலர்ந்தபின் கைதட்டிசபையோருக்கு நன்றாகக் காண்பித்துவிட்டு சுண்ணாம்பும் வெத்திலையுங் கொண்டு வரும்படியாகச் சொல்வி கசக்கினல் குங்மென்றதாகக் கைசிவக்கும் ஆச்சரியப் படுவார்கள்.

## 270. கிணத்தில் தோண்டி போட்டால் தண்ணி மோள்ளாதிருக்குஞ் ஜாலம்

புதுதோண்டியைக் கொண்டுவந்து அதின் கீழ்புரத்தில் பச்சசாந்தியை அறைத்து தடவிவிட்டு தாம்பு கயற்றைக் கட்டிக் கிணத்திற்போட்டடுல் தண்ணீர் மோள்ளாது பார்ப்போர்கள் என்னமோ தாளயமென்று விருப்பார்கள் பச்சோந்தி யென்பதுப் பச்சைஓணன்.

## 271. ஒருவரை தும்பலுங் குசுவும் விடும்படி செய்யுஞ் ஜாலம்

சுண்டக்காய் வேரும் ஆனைத்திப்பிலி இவை இரண்டையும் சமமாகசேர்க்க வஸ்திரகாயஞ் செய்துக்கொண்டு சபையில் தூவிவிட்டால் அந்தநெடிநாசியில் யேரினவர்களெல்லாம் குசுவிடுவார்கள் தும்பல் தும்புவார்கள்.

## 272. பேன் மாரண வித்தை

கெந்தகமும் ரசமும் விராகன் ஒன்ருக நிருத்தெடுத்து இலையிரண்டையும் ஒன்ருகச்சேர்த்து அரைத்து நூரில்பூசி உலரவைத்து காய்ந்தபிறகு ஸ்திரீகளாவது புருஷர்களாவது பேன் மிச்சமாகப் பிடித்திருந்தால் இந்தக்கயற்றைக் கட்டினுல் அத்துடன் பேன்களெல்லாம் மரணமாகிவிடும.

## 273. எலுமிச்சம்பழத்தை துணியில் கட்டி துணியராமல் வெட்டும் ஜாலம்

ஒரு எலுமிச்சய்பழத்தைக் கொண்டுவந்து நாலுமூலை சவுக்கமுள்ள கை குட்டையில் நடுவேவைத்து தளர்த்தியாய்ப் பக்குவமாய்க்கட்டி பூமியின்மேல் மண்குவித்து மேற்படி கட்டினப் பழத்தை லைத்து மந்திரம்செய்பவர்போல் ஓங்காளி ஆங்காளி ரீங்காளி மாகாளி யென்றுசொல்லிக் கனதிதக் கத்திக்கொண்டு வெட்டினுல் பழம் இரண்டு துண்டாகிவிடும் |துணியரு து மகாதந்திரமாக வெட்டவேண்டியது ஆனுல் மண் அடியிலிருக்கவேணும்.

## 274. தண்ணீரில் கறைந்த சாம்பலை மறுபடியும் எடுக்கும் ஜாலம்.

சாம்பலை கொஞ்சம் த்ண்ணீரில் கறைத்துவிட்டு இந்த கறைத்த சாம்பலை யெடுக்கிறேனென்று சொல்லி கொஞ்சம் நெருஞ்கி விறையை விபூதிபோல் தூளாய்ச்செய்து கொஞ்சம் போட்டுக்கலக்கி வழித்தால் வந்துவிடும் மறுபடியும் கறைத்துவிட்டாலும் கறைந்துவிடும் பார்ப்போர்கள் மகா அற்புதமான வித்தை செய்தானென்னு ஆச்சரியப்படுவார்கள்.

## 275 வேறுமுறை நெருப்புமிதிக்கும் ஜாலம்.

தாளிச்செடியின் சமூலம் கொத்தான் சமூலம் மருக்கர்ரை உப்பு இவைகளை சமனிடையாக எடுத்துப் பசும்பால்விட்டு அறைத்து உள்ளங்காலிரண்டிலும் பூசிக்கொண்டு கட்டையைப் போட்டுக்கொளுத்தி தீ அடங்கினபின்பு நெருப்பை அகலப்பரப்பி பயமில்லாமல் மிதிக்கலாம் பார்ப்பவர்கள் அக்கினி பந்தனம்செய்தானென்று ஆச்சரியப்படுவார்கள்.

## 276. தீபமேற்றி பார்த்தால் வீடேங்கும் மஞ்சள் நிரமாகத் தேரியும் ஜாலம்.

சாராயத்தைக் கொதிக்கவைத்து கைபொருக்க கால் சூடாக ஆறவைத்து உப்புபவுடர் கொஞ்சம் போட்டுக் கொளுத்தினுல் வீடெங்கும் மஞ்சள் நிறமாக தோத்தரிக்கும் ஆனுதி அக்காலத்தில் ஒருவரை ஒருவர் பார்த்தால் வேறு ரூபமாக தோற்றும்.

## 277. வேறுமுறை வெள்ளா வேகாதிருக்கும் ஜாலம்

ஆவரான் விரகைவெட்டி கொளுத்தி எருமை மூத்திரத்தால் அவித்து அந்தக்கரியை வெள்ளாய் அடுப்பில் போட்டுவிட்டால் எவ்வளவு கட்டைபோட்டுக் கொளுக்தினும் வெள்ளாய்வேகாது அதை அவித்து அதனுள்ளிருக்கும் சாம்பலெல்லாம் எடுத்துவிட்டு மறுபடியும் கொளுத்தினல் வேகும்.

## 278. நாய்கடிக்காமலிருக்கும் ஜாலம்

நாயுரிவியிலையும் எருக்கண்மொக்கும் அதின் இலையும் இம்மூன்றையும் கசக்கி கடிக்கவரும் நாய்முகத்தில் எரித்தாலதை முகர்ந்தால் உடனே மயக்கங் கொண்டு திகைத்து நிற்கும் கண்டவர்கள் எவனே வரய்கட்டி விட்டானென்று பலவாராகச்சொல்லி பரித்தாபப்படுவார்கள்.

## 279. குளத்தில் மூழ்கி நாமமிடும் ஜாலம்

கொடிக்கள்ளிப் பாலைக்கொண்டுவந்து திரேகம் ஆதி அந்தமும் நாமமிட்டுக் ககாண்டு திருசூரணத்திற்குப் பதில் பிரமதலைடிப்பாலை இட்டுக்கொண்டு காய்ந்தபிறகு ஒருவருக்குந் தெரியாமலிருக்கும் சபையோரைப் பார்த்து கிணத்திலாவது குளத்திலாவது மூழ்கி நாமமிட்டுகொண்டு வருகிறேன்பாரென்றுசொல்லி ஆடை முதலானதுங் களைத்துவிட்டு சோதனைக்காட்டு அனைவரும் முன்பாக கிணததிலாவது குளத்திலாவது மூழ்கி கொஞ்சநேரம் பொருத்து வெளியே வந்தால் தேக முழுமையும் நாமமயமாகப் பிரகாசிக்கும் அன்றியும் சபையில் ஒரு சொம்பு ஜலம் ஊத்திக்கொண்டாலும் கொளளலாம் ஆச்சரியப்படுவார்கள்.

## 280. நூலைக்கொளுத்திச் சேதமில்லாமல் எடுக்கும் ஜாலம்.

கஞ்சிதண்ணியும் உப்புங்கரைத்து உண்டை நூலில் பூசி உலரவைத்துகாய்ந்தபிறகு அதின்மேல் விளக்கெண்ணெய் பூசிக்கொளுத்தினல் எறிரிம்நூல் சேதமாகாது அவிந்தபிறகு நூலையெடுத்து அனைவருக்குங் காட்டலாம் ஆச்சரியப்படுவார்கள்.

## 281. நல்லபாம்பைக் கட்டும் ஜாலம்.

சாதாரணமாக ஜொகிளாவது இன்னம் எவர்களாவது நல்லபாம்பை ஆட்டிக்கொண்டிருக்கையில் வெள்ளைப்பூண்டை அறைத்து வெளர்ங்காய்பிரமாணம் ப்பாமபின்முன்போட உடனே படம் விரித்தாடிக்கொண்டிருந்த பாம்புமயக்கங் கொண்டு பூமியோடு பூமியாகப் படுத்துக்கொள்ளும் பார்ப்பவர்கள் ஆரோ கட்டிவிட்டாரென்று பிர்மிப்பார்கள்.

## 282. அக்கினிசட்டி யேந்தும் ஜாலம்.

ஒரு புதிய சட்டியைக் கொண்டுவந்து அந்த சட்டியில் நெருப்பைக்கொட்கட்டைப்போட்டு கொளுத்தி சட்டில் சாம்பல் நிறைகிறவரையிலுங் கொளுத்தி

இரண்டுநாள் சென்றபின்பு ஆறவைத்து அதிலிருக்கும் சாம்பலை அந்த சட்டியில் முக்கால்சட்டி யிருக்கும்படி அழுத்தி வைத்துக்கொள்ளவும் அக்டினி சட்டித் தூக்கிக்கொண்டு வெளியே புரப்படவேண்டுமானல் அந்த சட்டியிலுள்ள சாம்பலின் மேல்கொஞ்சம் கட்டைபோட்டுக்கொளுத்தி அச்சமில்லாமல் வெளியில் தூக்கிக்கொண்டு வரலாம் பார்ப்பவர்கள் அக்கிணிக் கட்டுக்கட்டினுளென்று ஆச்சரியப்படுவார்கள்.

## 238. துட்டுநடக்கும் ஜாலம்.

மனிதர் மயிரில் ஒண்ணரை முழம் நிகளமுள்ள ஒருமயிரை யெடுத்து அதின் முனையில் கொஞ்சம் மொழுக்குல் ஒட்டவைத்திருந்து ஜாலமாடும்போது ஒருவரிடத்தில் தப்பிடியாகிலும் காலணவாகிலும் வாங்கி மந்திரம் செய்பவாபோல் மேர்படி மயிர் மொழுக்குல் இந்ததுட்டை ஒட்டி எதிரில்வைத்து இன்னொரு முனைக் கால் பெருவிரலில் கட்டிருந்து இந்ததுட்டை நடக்கவைக்கிறேன் பாரென்று சொல்லி கொஞ்சம் விபூதியைப்போட்டு சல் மலையாளபகவதி சானிவாவா இந்ததுட்டை நடக்கச்செய்யென்று தந்திரமாகக் காலை சட்டென்று தட்டினல் துட்டு துள்ளி வந்து விழும் கண்டவர்களெல்லாம் வசியமென்று ஆச்சரியப்படுவார்கள். மாயப்பிரட்டல்ச் செய்வேண்டியது.

## 284. மர அன்னம் தண்ணியில் மேயுஞ் ஜாலம்.

மரத்தினல் அன்னமொன்று செய்து அதின் நெற்றியில் இரும்பு ஆணி அடித்து வைத்திருந்து ஒரு மூங்கிற்கொம்பின் முனையில் காந்தத்தைப் பதிய வைத்திருந்து ஜாலமாடும்போது அச்சபையில் ஒருமரத்தொட்டியில் ஜலம்விட்டு மேற்படி அன்னத்தை அதில்விட்டு மேற்படி மூங்கிற்கோலைக் கையிலெடுத்து காந்தம் இருக்கும்பக்கத்தை அன்னத்தின் முகத்துக்கு நேர்காட்ட மனம்போல் வரும் பார்ப்பவர்கள் மந்திரமென்றே நம்புவார்கள் ஆனல் லேசானமரத்தில் அன்னம் செய்யவேண்டும்.

## 285. ஒருவித ஜலத்தில் இரண்டுவித நிறம் ஆக்கும் ஜாலம்.

சபையில் ஒரு பேரகணியில் ஜலங்கொண்டு வரும்படிச்செய்து இந்தஜலத்தைஇரண்டுவித நிறம் ஆக்குகின்றேன் பாரென்றுசொல்லி ஒருவருக்குந் தெரியாமல் விட்மஸ் என்னும் மருந்தைக் கொஞ்சம்போட குப்பென்று நீல வர்ணமாகும் அனைவருக்குங் காட்டிப் பார்த்தபின்பு இந்த நீலநிறத்தைச் சிகப்புநிறமாகச் செய்கிறேன் பாரென்றுசொல்லி கொஞ்சம் கெந்தகத் திராவகத்தை தெரியாமல் அதில்விட செகப்பு நிறமாகிவிடும் கண்டவர்கள் பிர்மித்து ஆச்சரியப்படுவகர்கள்.

## 286. பீநாத்தங் காட்டும் ஜாலம்.

பீநாளிப் பட்டையைக் கொண்டுவந்து இடித்து வஸ்திரகாயஞ்செய்து வைத்து ஜலம்விட்டுக் கட்டியாகப் பிசைந்து கடலைப்பருப்புப் பிரமாணம் உருண்

டையாகச்செய்து வைத்துக்கொள்ளலாம் ஜாலமாடுமிடத்திலே தமாஷ்காட்ட வேண்டில் ஒருவருக்குந் தெரியாமல் ஒரு உருண்டையைக் கீழேபோட்டுவிட்டு அடையாளமாகபார்த்துக்கொண்டே யிருந்து ஒரு சிறுவனை அழைத்து மேற்படி உருலேடையுடன் மண்ணையும் சேர்த்து வாரிஜலம் விட்டு கைபினுற் பூசினல் பீநாத்தம்நாறும் பார்ப்போர்கள் குட்டிச்சாத்தான் யேவலென்றுத் திகைப் பார்கள்.

## 287. காய்ந்த கருவாடு தண்ணில் மேயுஞ் ஜாலம்.

வயிற்றைப் பிவக்காத உலர்ந்த கருவாட்டை நாலு ஐந்துக்கொண்டு வந்து புலிதொடக்கி யிலேயும் கிளுவையிலேயும் சமமாகச்சேர்த்து சார்பிடுந்து அந்தச் சாற்றில் கருவாடை ஊரவைத்து சஞ்சறுநேரம் பொருத்தெயத்து கிணர் தூரவு இவைகளில்போட உயிருள்ள மீன்போல் வளைய வளைழி ஓடும் பார்ப்பவர் களுக்கு ஆச்சரியமாக விருக்கும்.

## 288. ஐங்காயத் தயில வித்தை

சகல விநோத ஜாலங்களுமாட ஐங்கோலத்தைலங் கூட்டும்வகை எப்படி யெனில் கன்னியாஸ்திரியானவள் மரணமானவுடன் கொண்டுபோய்ப் புதைக்கு மிடத்தை அடையாளமாகப் பார்த்திருந்து இரண்டு மண்டலஞ் சென்றபின் இராக்கால நடுச்சாம வேளையிற்சென்று சுடலையிலுள்ள சமாதிவையெண்டி அவளுடைய எலும்புகள் யாவையும் யெடுத்துக்கொண்டுவந்து அதைப்பொடி யாகச்செய்து அத்துடன் வழலையுப்பு கல்லுப்பு வெங்கோல்வப்பு அழிஞ்சிமரக் கொட்டை பேய்ப்பீர்க்கன்விரை புங்கங்கொட்டை நாச்குப்பூச்சி இவைகளை வகைக்குப்பலம் பனிரெண்டாக நிறுத்தெடுத்து உலர்த்தி ஒருபாண்டத்தில் ஐந்துபடி சுத்தஜலம் விட்டு அதிலிந்தச் சரக்கையெல்லாம் ஊரப்போட்டு நாலு ஜாமஞ்சென்றபின் அவைகளை யெல்லாமெடுத்து ரவியில் உலரச்செய்து உலர் ந்தபின் கல்லுரலில் போட்டு நன்ருகயிடித்து வேறொரு பாண்டத்தில் இவை யெல்லாம்போட்டு அதின்மேல் ஒருசட்டிமூடி வாய்ப்புறத்திற்கு சீலேமண்செ ய்து பூமியில் நாலுமுழங் குழிதோண்டி சமாதிபின் எறுவைக் கொண்டுவந்து அக்குழியில் இரண்டுமுழம் அடையும்படியாகப் போட்டு இரண்டுஜாண் அதிற் பள்ளமாக்கி ஒரு சிறிய கலசத்தை அதில்வைத்து மேல்மூடி ஜாண்கைக்கு நடு வில் துவாரஞ்செய்து கலசத்தின்மீது வைத்து அதின்மேல் ஷெ பாண்டத்தை மையமாகவைத்து குதிரையெருவு மாட்டெருவு ஆட்டெருவு மலப்புழுக்கை சுடுகாட்டுச்சாம்பல் கரி இவைகளைச்கலந்து அக்குழிழை மூடிவிட்டு அத்திவிரகி ஞல் அக்குழிமேல் மூன்றுஜாமம் ஒரே தீயாக யெரிக்கவேண்டும் ஆனல் காலா க்கினிபோல் எரித்து நன்ருய் நெருப்பெல்லாம் பூத்துச் சாம்பலாகி ஆறினபின் குழியைத்தோண்டிப் பாண்டத்தை யெடுத்து அப்பால் வைத்துவிட்டு அடியில் வைத்தக் கலசத்தை எடுத்து அதிலுள்ளத் தைலத்தையெடுத்து பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ளவும் இதுதான் ஐங்கோலத் தயிலமென்பது.

### 289. இத்தயிலதை மறுதயிலமாக்கும் வித்தை.

ஐங்கோலத் தயிலத்தில் இரண்டுசேர் வாங்கி பீங்கானில்விட்டு வழலைச்சு ன்னம் அரைபலம்போட்டு காலாக்கினி தயில்த்தில் ஒருபலஞ் சேர்த்து வைத் துக்கொள்ளவும் பூரம் பச்சைக்கெளுத்தி பச்சைஜாதிக்காய் ஏலம் லவுங்கப்பூ மிளகு கிராம்பு சுக்கு கோரோசனை திப்பிலி இவைகள் வகைக்கு அரைவிராக னெடை நிறுத்து யெடுத்துக் கல்வத்திலிட்டுப் பொடித்து அத்தூளை ஐங்கோலத் தயிலத்துடன் சேர்த்து ஷெ பீங்கானுக்கு மேல்மூடிபோட்டு பூமியிற் பள்ளந் தோண்டிப் புதைத்து ஒரு மண்டலம் பொருத்தெடுத்து வைத்துக்கொள்ளவும் ஷெ தயிலத்தை வேளையொன்றுக்கு ஒரு விராகனெடை வீதம் ஒருமண்டலம் உட்கொள்ள எமனை வெல்லும்படியான வயதுண்டாகும் பாலைப்பருவம் பதினு றுமாகி மன்மலனைப்போல் வடிவுதோன்றும்.

### 290. அஷ்டமாசித்து விளையாடத் தயிலம்.

கழுவிலேறி இறந்தவரைக்கொண்டுபோய் புதைக்கு மிடத்தைப் பார்த்தி ருந்து அதற்குச் சுற்றிலும் சுவர்யெழுப்பி பந்தோபஸ்தாகச் செய்யவேண்டும் ஆனல் மனிதர்கள் நடமாட்டமில்லாத யிடத்திற் புதைக்க வேண்டும் பிறகு ஒரு மண்டலம் பொருத்து அதைத் தோண்டியெடுத்து நாற்றம் போகும்படியா கச் சுத்திசெய்து ரவியில் சாருபோல் உலர்த்தி அதையெடுத்துப் பத்திரமாக வைத்துக் கொள்ளவும் கருங்காக்கையின் பிச்சு சமூலமும் மயில் கருங்கோழி செம்பருந்து இந்த ஐந்து பட்சியையுங் கொண்டுவந்து அதின் ரோமங்களைப் போக்கி மனிதர் சஞ்சாரமில்லாத யிடத்திற் கொண்டுபோய் சருகுபோல் உல ர்த்தி பத்திரமாக வைத்துக் கொள்ளவும் தேவாங்கின்பிச்சு கருநாயின்கிச்சு கரு ம்பூனையின்பிச்சு நழநரியின்பிச்சு குரங்கின்பிச்சு இந்த ஐந்து பிச்சையுமெடு த்து முன்போல் உலர்த்தி பத்திரமாக வைத்துக் கொள்ளவும் பின்பு மேல்சொ ன்ன வகையெல்லாம் ஒன்ருகச்சேர்த்து கல்லுறலில்போட்டு சதைத்து ஒரு பாண்டத்திற்போட்டு அதன்மேல் ஒரு சட்டியைக் கவிழ்த்து சீலைமண்செய்து இரண்டுமுழங் குழிவெட்டி அக்குழி மத்தியில் இரண்டுஜாண் குழிவெட்டி அந் நடுச்சிறுகுழியில் சிறிய கலசம் ஒன்றுவைத்து சானகையால் நடுவே அவாரஞ் செய்து ஓலசத்தின்மேல் வைத்து அதின்மேல் ஷெ பாண்டத்தை வைத்துப் பின்பு சமாதியெருவு ஆட்டெருவு மாட்டெருவு சுடுகாட்டுச்சாம்பல் இவைகளைக் கொட்டி குழியைமூடி ஒருமண்டலம் குமுங்கவைக்கவும்.

சரியாய் நாற்பதுநாளுஞ் சென்றபின்பு அக்குழியின்மீது ஒரு மரத்தின் விரகினல் மூன்றுசாம மெரிக்கத் தயிலமானது இறங்கும் கொளுத்திய தீ ஆறிய பின்பு அக்குழியைத்தோண்டி மேல்வைத்த பாண்டத்தை யெடுத்து அப்புறம் வைத்து அடியில்வைத்த கலசத்தை எடுத்துப் பார்க்க அஷ்டமாசித்தித் தயிலம் அதில் இரங்கி இருக்கும் அதை யெடுத்து அத்துடன் வழலைச்சுன்னம் அறை பலம்போட்டு அதை மத்தித்தால் நாகப்பழம் வர்ணம்போல் காணும் அதைவை

த்து வைரவருடைய பூசைசெய்து வாலை பூசையுஞ்செய்து பின்பு மையைச் சீசாவிலிட்டு பத்திரமாக வைத்துக்கொண்டு பலவிதமான சித்துகளையும் விளையாடலாம்.

## 291. தாமரைத்தடாக முண்டாக்குஞ் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு கூழாங்கல்லைக் கையிலெடுத்து சபையோர்களுக்குக்காட்டி இதை மந்திரித்து ஈசான்னியமூலையில் போடுகிறேன் நீங்களனைவரும் ஸ்நானபானஞ்செய்ய தாமரைத் தடாகம் உண்டாக்குகின்றே னென்று சொல்லி வைரவரைத் தியானித்து தடாக முண்டாகவேணுமென்று மனதில் எண்ணி ஒருவருக்குந் தெரியாமல் ஐங்கோல மையை விரலில் தொட்டுக் கூழாங்கல்லிற் தடவி ஈசான்னிய மூலைபக்கம் வீசியெறிய உடனே தாமரைக தடாக முண்டாகும் அதில் இலைகளும் புஷ்பங்களும் தழைத்து நிறைந்திருக்கும் பார்ப்போர்கள் ஆச்சரியப்படுவார்கள் ஆனல் அத்தடாகம் மூணேமுக்கால் நாழிகைக்குள் மாயமாக மறைந்துவிடும் அந்த மூணேமுக்கால் நாழிகையும் வைரவர் மந்திரத்தை தியானித்துக்கொண்டே யிருக்கவேண்டும்.

## 292. தேவாலயமும் திருச்குளமும் உண்டாகும் ஜாலம்.

தனக்கு இஷ்டமானபேர்களை அழைத்துக்கொண்டு ஒரு மைதானத்திற் சென்று இந்த மைதானத்தில் தேவாலயமுந் திருக்குளமு முண்டாகச் செய்கிறேன் பாருங்களென்று சொல்லி வைரவரை தியானித்து தேவாலயமும் திருக்குளமு முண்டாக வேணுமென்று மனதில் எண்ணி ஐங்கோல மையைத் தந்திரமாக ஒரு கெச்சக்காயிற்றடவி வீசி முன்னே யெறிய உடனே தேவாலயமும் திருக்குளமு முண்டாகும் அதில் நால்வகைச் சாதியோரும் தடாகத்தி ஸ்நானபானஞ்செய்து ஆலயதரிசனஞ் செல்வதாகத் தோற்றும் பார்ப்போர்கள் பிரமித்கு மதிமயங்கி ஆச்சரியப்படுவார்கள்.

## 293. நந்தவன முண்டாகும் ஜாலம்.

ஒரு மைதான யிடத்தில் சென்று தன்னுடன்கூட யிருப்போர்களைப்பார்த்து நீங்கள் கண்ணைமூடித் திறப்பதற்குள்ளாக இங்கு நந்தவனம் உண்டாக்குகின்றேன் பாருங்களென்று சொல்லி வைரவரைத் தியானித்து நந்தவன முண்டாக வேணுமென்று மனதில் எண்ணி ஐங்கோலக்கருவை கொஞ்சம் விரலில் தொட்டு மண்ணைவாரி தனக்கு எந்த திக்கு இஷ்டமோ அந்த திக்கில் உறிய உடனே நந்தவனமும் பூந்தோட்டமுமாகத் தோற்றும் பார்த்தவர்கள் ஆச்சரியப்படுவார்கள் ஆனல் மண்ணை இறைக்கும்போது அங்குள்ளவர்கள் அனைவர்களையிங் கண்களை மூடிச்கொள்ளச் சொல்லவேண்டும்.

## 264. அந்தரத்தில் தேவர்களைக் காட்டும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் சென்று சபையோர்களைப் பார்த்து நீங்கள் கண்ணை மூடித்திறப்பதற் குள்ளாக அந்தரத்தில் முப்பத்து முக்கோடி தேவர்களையும்

வந்து நிற்கும்படிச் செய்கிறேன் பாருங்களென்று சொல்லி வைரவர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு உருசெபித்து தேவர்கள் யாவரையும் அந்தரமார்க்கமாக தோன்றச் செய்ய வேணுமென்று மனதில் யெண்ணி ஒரு பலகறை யெடுத்து அதில் ஐங்கோலமையைக் கொஞ்சந்தடவி ஆகாயமார்க்கமாக விட்டெறிந்து சபையோர்களை கண்ணைமூடி திறந்து ஆகாயத்தை பார்க்கச்சொல்ல அவாவர்கள் வாகனங்களுடன் ஆகாயத்திற் தோற்றப்படுவார்கள் அனைவரும் பார்த்து அண்டதேவர்களைத் துதித்து ஆச்சரியப்படுவார்கள்.

## 295 ரிஷிக்கூட்டங்களைக் காட்டும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் சபையோர்களைப் பார்த்து இப்போது தபம் செய்துக் கொண்டிருக்கும் ரிஷிக்கூட்டங்களை அழைப்பிக்கிறேன் பாரென்று சொல்லி வயிரவர் மந்திரத்தை தியானித்து ரிஷிகூட்டங்கள் தோற்றவேணுமென்று மனதில் எண்ணி ஐங்கோலமையை ஐந்துவிரலிலும் தொட்டுக்கொண்டு புளியன் இலையை யுருவி நாலு திக்கிலும்போட உடனே அவாவர்கள் சிஷியர்களொடு நாலுதிக்கும் திரளாகத்திரண்டு வருவார்கள் அதுகண்டு அனைவரும் பிர்மித்து ஆச்சரியப்படுவார்கள்.

## 296. புளியமரமுண்டாகுஞ் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு புளியன் கொட்டையை கையிலெடுத்து அனைவருக்குங்காட்டி இந்தக் கொட்டையைப் பூமியில்நட்டு இப்போதே மாமாக்கி பூ பூத்துக் காய் காய்த்துப் பழம் பழுக்கும்படி செய்கிறேன் பாருங்களென்றுசொல்லி வைரவர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து புளியமரமாக வேணுமென்று மனதில் ஐங்கோல மையை புளியங்கொட்டையில் தடவி பூமியில் கொஞ்சம் பள்ளந்தோண்டிக் கொட்டையைபுதைத்து மண்ணைமூடி பார்ப்பவர்கள் நம்பும்படியாக கொஞ்சம் ஜலம்விட்டு கூடை போட்டுமூடிவிடவும் வைரவர்மந்திரத்தை ஜெபித்துக்கொண்டே எழுதரம்திறந்து எழுதரமும் ஜலத்தைவிட்டு மூடி பின்பு அனைவரையுங் கண்ணை மூடிகொள்ளச் சொல்லிசட்டென்றுக் கூடையைதிறக்க புளியமரம் ஓங்கித்தோற்றும் அதில் பூ பிஞ்சு காய் பழம் நிறைந்து காணும் பார்ப்போர்கள் மதிமயங்கித்பிர்மித்து நின்று ஆச்சரியப்படுவார்கள்.

## 297 தென்னந்தோப்பு உண்டாகும் ஜாலம்

ஒருவெட்டவெளியான மைதானத்திற் சென்று தன்னுடன் வந்தவர்களை பார்த்து இந்தமைதானத்தில் ஒருக்ஷண நேரத்திற்குள் தென்னந்தோப்பு உண்டாகச் செய்கிறேன் பாரென்றுசொல்லி வைரவரை தியானித்து தென்னந்தோப்புண்டாக வேணுமென்று மனதில் எண்ணி மேல் தோல் போகாத ஒரு தேங்காய்நெத்தை யெடுத்து ஐங்கோலமையை அதற்குப்பூசி அந்தமைதானத்தில் ஒரு புறம் புதைத்து விட்டு நீ வைரவர் மந்திரத்தை ஜெபித்துக்கொண்டு கூட யிருப்போர்களைக் கண்ணை மூடித்திறந்து பார்க்கச்சொல்ல பெருந்தோப்பாகத் தோற்றும் மரங்களில் காய்களுந் காய்த்து தொங்கும் ஆச்சரியபடுவார்கள்

## 298. பனந்தோப்பு உண்டாகுஞ் ஜாலம்.

மேற்கூறிய வண்ணம் மைதானத்திற் சென்று ஒரு பனங்கொட்டையைக் கையிலெடுத்து தன்னுடன் யெத்தனைபேர் வந்தவர்களோ அத்தனைப் பேரு க்காட்டி இந்த ஒரு கொட்டையை நட்டு தோப்பாக்கிறேன் பாரென்றுசொல்லி வைரவர்மந்திரத்தை மரவாமல் ஜெபித்துக்கொண்டே பனந்தோப்பாக வேணு மென்று மனதிலெண்ணி ஐங்கோலமையை யெடுத்துப் பனங்கொட்டையிற் பூசி அந்த மைதானத்தில் ஒரு பக்கமாகப் புதைத்துவிட்டு கூடவந்தவர்களைக் கண்ணைமூடி திறந்துபார்க்கச்சொல்ல நாலுகாணி விஸ்தாரத்திற்குப் பனந்தோப் பாகத் தோற்றும் ஆண்மரமும் பெண்மரமுமாகக் கலந்து காய்களுங் காய்த்துத் தொங்குங் கண்டவர்கள் கண் மயங்கி ஆச்சரியப்படுவார்கள்.

## 299. வாழைத்தோப்பு உண்டாகுஞ் ஜாலம்.

காலியாக இருக்கின்ற ஒரு தோட்டத்திற்குள் சென்று ஒருவாழமரத்துண் டைக் கையிலெடுத்துத் தன்னுடன்கூட வந்திருப்பவர்கள் யாவருக்குங்காட்டி இந்த வாழைத்தண்டை நட்டு வாழைத்தோப்புகள் உண்டாக்குகிறேனென்றுச் சொல்லி வைரவர் மந்திரத்தை இடைவிடாமல் ஜெபித்துக்கொண்டு வாழத்தோ ப்புண்டாக வேணுமென்று மனதிலெண்ணி ஐங்கோமையை யெடுத்து வாழைக் கன்றுக்குப்பூசி அத்தோட்டத்தின் நடுமத்தியில் நட்டுவிட்டு அக்குள்ளவர்களை கண்ணைமூடி திறந்துப்பார்க்கச்சொல்ல தோட்டம் நிறைய வாழைத்தோப்பாகத் தோற்றும் ஆச்சரியப்படுவார்ாள்.

## 300. கமுகமரத் தோப்புண்டாகும் ஜாலம்.

மேல்தோல் நீக்காத ஒரு கொர்ட்டைப்பாக்கை கையில் யெடுத்து அனை வருக்குங்காட்டி இந்த கொட்டைப்பாக்கை நட்டு பாக்குமரந்தோப்பண்டாக்கி றேன் பாரென்று சொல்லி வைாவர் மந்திாத்தை ஜெபித்துக்கொண்டே கமுக மாத்தோர்ப்பாக வேணுமென்று மனதில்யெண்ணி ஐங்கோலமையை அந்த பாக் கிற்குப்பூசி ஒரு மைதானத்திற் கொண்டுபோய் பூமியிற் புதைத்துவிட்டு கூட வந்தவர்களை கண்ணை மூடித்திரந்து பார்க்கச்சொல்ல எங்கும் தோப்பாகத் தோற்றும் பார்ப்போர்கள் மதிமயங்குவார்கள் ஆனல் மந்திரத்தை மறவால் ஜெபித்துக்கொண்டே யிருக்கவேண்டும் மந்திரத்தை சொல்வது நிருத்தினல் உடனே மாயமாகப் பேய்விடும்.

## 301. பலவிதமான விருட்சங்களும் நிறைந்த தோப்புண்டாகும் ஜாலம்.

தனக்கு இஷ்டமான மாத்தின் விதைகளை யெல்லாம் ஒன்ருகச் சேர்த்து வைத்துக்கொள்ளவும் ஒருமைதானத்திற்குச் சென்று தன்னுடன் வந்திருப்ப

வர்களுக்கு மேற்படி விதைகள்யாவையுங் காட்டி இதை யிந்தமைதானத்திற் புதைத்து விடுகிறேன் பலவித விருட்சங்களும் உண்டாவதைப் பாருங்களென்று சொல்லிவைரவர் மந்திரத்தை தியானித்து பலவிதவிருக்ஷங்களுள்ள தோப்பாக வேணுமென்று மனதிலெண்ணி ஐங்கோலமையை அந்த விதைகளுக்கொல்லாம் படும்படியாகப்பூசி நாலுதிக்கிலும் பள்ளந்தோண்டிப்புதைத்து விட்டு அங்குள்ள வர்களைக் கண்ணை மூடித்திறந்து பார்க்கச்சொல்ல பலவித விருட்சமுள்ள தோப்புகளாகத்தோற்றும் அந்தந்த விருட்சங்களில் கனிவர்க்கங்கள் நிறையக் காய்த்திருக்கும் பார்ப்போர்கள் இதுகண்கட்டு வித்தையென்றும் கருவின்வேலை யென்றும் காளியின் வசியமென்று கருப்பண்ணன் வசியமென்றும் பலவாறுகப் பேசி பாதவித்து ஆச்சரியப்படுவார்கள்.

### 302. வேலமுள்ளின்மேல் படுக்கும் ஜாலம்.

நத்தைச்சூரிய செடியைக் கண்டிபிடித்து ஆதிவாரத்தில் மஞ்சள் நூலால் காப்புகட்டி வைரவர் மந்திரம் ஆயிரத்தெட்டு ஓதிவிட்டு வந்து விடவும் மருஆதி வாரம்சென்று சிறியகுடுவையில் பொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங்காட்டி வைரவர் மந்திரத்தை முன்போல் ஆயிரத்தெட்டு ஜெபித்து செடிக்குகாயம்படா மலும் வேர் அருமலும் பிடுங்கிக்கொண்டுவந்து அந்தசெடியை பூசையில் வைத் திஇருபத்தொருநாள் தவராமல் வேளைஒன்றுக்கு ஆயிரத்தெட்டு உருகொடுத்து வந்து இருபத்திரண்டாம்நாள் வேரையெடுத்து அதின்மேல் ஐங்கோலக் கருவைப்பூசி செம்பினுலாவது வெள்ளியினுலாவது கடையம்செய்து அதனுள் இந்த வேரைசெலுத்தி வாய்ப்புறத்தைமூடி பிகிந்து வைத்துத்கொள்ளவும் சாதாரணமாகவேலன்முள்ளை கிளைகிளையாக வெட்டிப்போடச்சொல்லி தந்திரமாக ஒருவருக்கும் தெரியாமல் கடயத்தை முள்ளின்மேல் போட்டு கூச்சமில்லாமல் படுத்துக் கொள்ளலாம்தேகத்தில் முள்ளுதைக்காது பார்ப்போர்கள் இது யெட்சணி வசியமென்று ஏமாந்துத் திகைப்பார்கள்.

### 303. சப்பாத்து முள்ளின்மேல் படுக்கும் ஜாலம்.

தாயைக்கொன்ருன் செடிக்கு கிராணத்தில் மஞ்சள் நூல் காப்புட்டி அதின்வடக்குபோகும் வேரைப்பிடுங்கி வந்து ஐங்கோலக் கருவை அவ்வேரின் மேல்பூசி வாசலைமெழுகி பிள்ளையார்பிடித்துவைத்து அதின்சிரசில் அருகன்பில் சூட்டிபழம்வெல்லம் வெத்திலைப்பாக்கு முதலானதும்வைத்து மேற்படிவேரைப் பூசையில்வைத்து வைரவர் மந்திரம் லட்சம் உருகோடுத்து வேரையெடுத்து குளிசமாடி வைத்துக்கொள்ளவும் ஜாலமாடுமிடத்தில் நாகதாளிமுள்ளை கொண்டு வந்து போடும்படிச்செய்து அந்தமுள்ளின்மேல் தந்திரமாகக் குளிசத்தைப் போட்டு பயமில்லாமல் படுத்துக்கொள்ளலாம் தேகத்தில் முள்ளுதைக்காது அனைவரும் ஆச்சரியப்படுவார்கள்.

### 304. வேறுமுறை எலுமிச்சம்பழம் குதிக்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் பத்து பதினைந்து எலுமிச்சம்பழம் கையிலெடுத்து அனைவருக்குங்காட்டி இந்தப்பழங்களைப் பூமியில் போட்டவுடன் ஒன்ருே

டொன்று தாக்கிக்குதிக்கும்படி செய்கிறேனென்று சொல்லிவைரவர் தியானம் செய்து இந்தஎலுமிச்சம் பழங்கள் ஒன்றேடொன்று தாக்கிகுதிக்க வேணு மென்று மனதிலெண்ணி தந்திரமாக ஐங்கோலக்கருவைப் படும்படியாகப் பூசி பூமியின் மேற்போட பூமியில் நில்லாமல் குதிக்கும் அனைவரும் பிரமித்து இது மலையாளபகவதி வேலையென்று மயங்குவார்கள்

## 305. வேறுமுறை தேங்காய் நடக்கும் ஜாலம்

தேங்காயைக்கொண்டுவந்து சபையோர்களுக்குக்காட்டி இந்ததேங்காயை நடக்கச் செய்கிறேனென்றுசொல்லி வைரவர்மந்திரத்தை தியானித்து தேங்கா நடக்கவேணுமென்று மனதில்யெண்ணி அந்த தேங்காயிற்கு மஞ்சள்பூசி குங்க மிட்டு தந்திரமாக ஐங்கோலமையை விரலில்தொட்டு தடவிதேங்கரயை பூமியின் மேல்விட அது ஒருவிடத்திலும் நில்லாமல் கடகடவென்று புறண்டுக் கொண் டே யிருக்கும் பார்ப்போர்கள் களிவசியமென்றுக் கலங்குவார்கள் உடனே தேங் காயை மறைத்துவிடவும்.

## 306. தேங்காய் வேடிக்கும் ஜாலம்.

நீர் முள்ளி விரையைக் கொண்டுவந்து பொடித்து வஸ்திரகாயம் செய்து விபூதியுடன் கலந்து வைத்துக்கொள்ளவும் ஜாலமாடுமிடத்தில் ஒரு தேங்காயை யெடுத்து அனைவருக்குங்காட்டி சூறைவிட்டாபோல் வெடிக் கும்படி செய்கிறேன் பாரென்றுசொல்லி வைரவரை தியானித்து தேங்காய் வெடிக்கவேணுமென்று மனதிலெண்ணி ஐங்கோலக் கருவைத்தொட்டு தேங்கா யிற்குத்தடவி மந்திரம் செய்பவர்போல் மேற்படி விபூதியை தேங்காயின்மேல் பூசி சபையில் வைத்தவுடன் சூரைவிட்டதுபோல் வெடிக்கும் பார்ப்பேபர்கள் இதுபத்திரக்காளி வசியமென்று பதருவார்கள்.

## 307. ஆகாயத்தில் எறிந்த முட்டை அந்திரமாக நிற்கும் ஜாலம்

ஒரு கோழிமுட்டையைக் கையிலெடுத்து சபையோர்களுக்குக் காட்டி இதை ஆகாயத்தில் எறிகிறேன் அந்திரமாக நிற்கும் வேடிக்கைப்பாருங்களெ ன்று சொல்லி வைரவர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து அந்திரமாக நிற்க வேணுமென்று மனதில் எண்ணி ஐங்கோல்க்கருவை விரலில்தொட்டு முட்டை க்குதடவி ஆகாயமார்க்கமாக விட்டெறிய அதுஅந்திரமாக நிற்கும் அனைவரும் ஆச்சரிப்பட்டு இது அந்திர தேவதை வசியமென்பார்கள்.

## 308. வேறுமுறை பாரந்தூக்கும் ஜாலம்

கீழ்காய்நெல்லிச் செடிக்கு மங்களவாரம் சூரியன் உதயமாகு முன்னே மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து பலிப்பூசைப் போட்டு வேரைப்பிடுங்கி கொண்டுவந்து அந்தவேரை சிம்மாட்டில் சுத்தி அதன்மேல் ஐங்கோலத்தைலத்தைப்பூசி வைரவரை தியானித்து அந்தவேர்சிம்மாட்டை சிர சின்மேல் வைத்து யெவ்வளவுபாரந்தூக்கினாலும்பளுவுதெரியாது பார்ப்போர்கள்

இது குட்டிச்சாத்தான் வேலையென்றுகூடிப் பேசிக்கொள்வார்கள் ஆனால் சிம் மாட்டை ஒருவருக்குந் தெரியாமல் தந்திரமாக வைத்துக்கொள்ளவேண்டும்.

## 309. கருங்கல்லை கையால்குத்தி உடைக்குஞ் ஜாலம்

எவ்வளவுபெரிய பாறையா யிருந்தபோதிலும் கொண்டுவந்து சபையில் வைக்கச்சொல்லி அங்குள்ள அனைவரையும் பார்த்து இந்தக் கருங்கல் பாறையைக் கையினால் ஒருகுத்து குத்தி இரண்டாகப் பிளக்கச் செய்கிறேன் பாரென் றுசொல்லி வைரவர் மந்திரத்தை செபித்துக்கொண்டே பார்ப்பவர்களுக்கு இந்த கல் இரண்டு பிளவாகத் தோற்றவேணுமென்று மனதில் எண்ணி கண் கட்டுமையை கொஞ்சம் விரலில்தொட்டு பாறையிற்றடவி பின்பு ஐங்கோலக்கரு வைப்பூசி கையை நோக்கிக் குத்துவதுபோல் குத்தினுல் இரண்டாக உடைந் தாற்போல் அனைவருக்குந் தோற்றும் அது அனுமார் வசியமென்று ஆச்சரியப் படுவார்கள்.

## 310. நினைத்தயிடத்தில் மாறிமாறி நிற்கும் ஜாலம்.

அருளாதி யென்னுஞ் செடிக்கு ஆதிவாரங் காலையிற் சென்று மஞ்சள் நூல் காப்புகட்டிப் பலிகொடுத்துப் பூசைகள் போட்டு அதனுடைய வேரைப் பிடுங்கிக்கொண்டுவந்து அதன் மேல் ஐங்கோலகருவைப்பூசி வைரவர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து செம்புத்தகட்டில் குளிசம்செய்து அதிலிந்த வேரை அடக்கி வாய்புறத்தைமூடி பிசிந்து வலதுகையில் கட்டிக்கொள்ளவும் ஜாலமாடுமிடத்தில் சபையோர்களைப் பார்த்து இதோ உங்கள் எதிரில் நிற்கும் யான் மாயமாக உங்கள்பக்கத்தில் பக்கத்தில் வந்து உட்காருகின்றேன் பாருங் ளென்று சொல்லி தந்திரமாக கொஞ்சம் மாப்புமையை எடுத்து திலர்த மிட்டு கொண்டால் ஆள்மறைந்து விடுவாய் உடனேபோய் அவர்பக்கத்திற் குந்திக் கொண்டு நீ பேசாமலிருக்க அப்போது சபையோர்கள் எதிரில் நின்றமனிதனை காணோமென்று திகைத்து சுற்றுமுற்று பார்ப்பார்கள் அது அறிந்து நீ மையைத் துடைத்துவிட அவர்கள் பக்கத்தில் தோற்றுவாய் பார்த்து ஆச்சரிய படுவார்கள் இப்படி எத்தனை தரமாகிலும் மையை இட்டுக்கொண்டு ஏமாற்றிக்காட்டலாம் ஆனல்மையை யிடுவதும் கலைப்பதும் ஒருவருக்குந் தெரியக்கூடாது அருளாதி யென்பது குலிசப்பாலை என்னும் மூலிகை.

## 311. வேறுமுறை தீயில் குதிக்கும் ஜாலம்.

கண்டசங்க மென்னும் செடியைக் கண்டு பிடித்து கிராணத்தில் மஞ் சள் நூல் காப்பு கட்டி விட்டு வந்து விடவும் கன்னியா லக்கினத்திற் சென்று பொங்க விட்டுப் பலி கொடுத்து தூபதீபங் காட்டி அதின் வடக்குப் போகும் வேரைப் பிடுங்கிக் கொண்டு வந்து அதின் மேல் ஐங்கோலக் கருவைப்பூசி பூசையில் வைத்து வைரவர் மந்திரத்தை இருபத் தோருநாள் தவராமல் காலை மாலை இரு வேளையும் வேளை யொன்றுக்கு லட்சம் உரு கொடுத்து வந்து இருபத்திரண்டாம்நாள் பெருத்த பூசைபோட்டு வேரையெடு

த்துக் குளிசமாடி வலதுகையில் கட்டிக்கொண்டு ஜாலமாடு மிடத்தில் கட்டைகளைப்போட்டுக் கொளுத்தச்சொல்லி அது காலாக்கினிபோல் பத்தியெறியும்போது அதை நீ சுத்திசுத்தி வருகவேண்டும் பார்ப்போர்களுக்கு எறிகின்ற தீ நடுவில் குதித்து வருவதுபோற் றோன்றும் அப்போது அங்குள்ளவர்கள் பிர்மித்து அக்கினியைக் கட்டிவிட்டானென்று ஆச்சரியப்படுவார்கள்.

## 312. குளவிகள் உண்டாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் புளியனிலையை இலையோடு ஒடித்துக் கையிற் பிடித்து சபையோர்களைப் பார்த்து இந்தப்புளியன் யிலையை உருவிப்போடுகிறேன் அவை குளவியாகப் பறக்கும் வேடிக்கைப் பாருங்களென்றுசொல்லி வைரவர் மந்திரத்தை தியானித்து குளவிகள் ஆகவேணுமென்று மனதில்யெண்ணி ஐங்கோலக்கருவை விரலில் தொட்டுக்கொண்டு புளியன்யிலையை உருவிப்பூமியில் போட உடனே குளவிக்கூட்டங்கள் உண்டாகும் பார்ப்போர்கள் இதுகண்கட்டு வித்தையென்று கண்டபடிப்பேசிக்கொள்வார்கள்.

## 313. வேறுமுறை தேள் உண்டாக்கும் திவ்விய ஜாலம்.

வேப்பிலைக்கொத்தைக் கையிலெடுத்து அனைவருக்குங்காட்டி தேள் உண்டாக்குகின்றேன் பாருங்களென்று சொல்லி வைரவர் மந்திரத்தை தியானித்து தேளாகவேணுமென்று மனதில் நினைத்து ஐங்கோலக்கருவை விரலில் தொட்டுகொண்டு வேப்பிலையை உருவிக் கீழேபோட புத்திலிருந்து ஈசல்புறப்பட்டாப்போல் தேள் கூட்டம் புறப்பட்டு ஓடும் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள்.

## 314. வேறுமுறை பாம்பு உண்டாக்கும் ஜாலம்.

தென்னம் ஓலையொன்றை கையில்எடுத்து சபையோர்களுக்குகாட்டி இந்த ஓலையை பாம்பாக்குகின்றேன் பாரென்றுசொல்லி வைரவர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஓதி பாம்பாக வேணுமென்று மனதில் நினைத்து ஐங்கோலக்கருவைத் தொட்டு தந்திரமாக ஓலையிற்றடவி பூமியின்மேல் போட்டவுடன் நல்லபாம்பைபோல் படம் விரித்தாடும் பார்ப்போர்கள் பிர்மித்து முழிப்பார்கள்.

## 315. பாம்பிற்கு சீட்டெழுதி அழைப்பிக்கும் அற்புத ஜாலம்.

ஒரு பனம் ஓலை துண்டையெடுத்து அதில் எழுத்தாணியினால் ஓ பாம்புக் கூட்டங்களே இந்த சீட்டைப்பார்த்தவுடன் உங்கள் கூட்டமெல்லாம் ஒன்றாக்சேர்த்து ஓடிவரவேணுமென்று எழுதி அந்தச்சீட்டை அனைவருக்குங்காட்டிப் படிக்கச்சொல்லி பின்பு அச்சீட்டைவாங்கி வைரவர் மந்திரத்தை தியானித்துக் கொண்டே பாம்பு கூட்டங்களாகத் தோற்றவேணுமென்று தந்திரமாக அச்சீட்டை ஐங்கோலக்கரு ஒரு மூலையிலும் மகாமாயமை ஒரு மூலையிலும் மறப்புமை ஒருமூலையிலும் கட்டுமை ஒருமூலையிலும் தடவி மந்திரத்தை ஜெபித்துக்கொண்டே அச்சீட்டோடு மண்ணைவாரி நாலுதிக்கிலும் இறைக்க பலவிதமானப் பாம்பு கூட்டங்கள் நாலுதிக்கிலுமிருந்து திரளாகத்திரண்டு சின்னதும் பெரியதுமாக

வருவல் போற் ஞேன்றும் அப்போது அங்குள்ள பாம்புக் கூட்டங்களைப் பார்த்து பதறிசிலர் ஓடுவார்கள் சிலர் இது மலையாள பகவதி வித்தையென்று மதி மயங்கி ஓடுவார்கள்.

## 316. மரபொம்மை நடக்கும் ஜாலம்.

எந்த மரத்திலாவது பொம்மைசெய்து அதற்கு வர்னமுதலானதும் பூசி நகைகள் பூட்டி ஆடையுடுத்தி ஆண் பெண்ணாக இரண்டு செய்து வைத்துக் கொள்ளவும் பின்பு புலிதொடக்கி என்னும் செடிக்குப்பூரண அமாவாசையில் சென்று மஞ்சள்நூல் காப்புகட்டி ஒன்பதுநாளும் தவராமல் வைரவர் மந்திரத்தை ஓதி பத்தாம்நாள் பொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங்காட்டி அதின் வேரை அருமல் பிடிங்கிக்கொண்டுவந்து அந்தவேரை பொம்மைக்காலுக்குஅளவாக வளையமாகச்சுற்றி அதின்மேல் வெள்ளிகம்பி பொன்கம்பிசுற்றி பூசையில் வைத்து வைரவர் மந்திரத்தை லட்சம் உருகொடுத்துமரபொம்மை நடக்கவேணுமென்று மனதிலெண்ணி தந்திரமாக அந்த வளையத்தை பொம்மைகாலில்மாட்டி மேஜையின்மேல் நிற்கவைக்க பார்ப்போர்களுக்கு அந்த மேஜையை சுற்றிசுற்றி நடப்பதுபோல் வேடிக்கையாகத் தோற்றும் அனைவரும் இது என்ன வசியமோ என்று ஏக்கம்பிடித்து பிர்மிப்பார்கள் வளையத்தை சுழட்டிவிட நடப்பது நின்று விடும்.

## 317. மரத்தைக் குத்தினல்பழங்களுதிரும் ஜாலம்.

இராங்கழிஞ்சி விதையைக் கொண்டுவந்து கல்வத்திலிட்டு முத்தெண்ணெய் விட்டு மைபோல் அறைத்து ஒரு அல்லிதமானச் சீலையில்தடவி உலர்த்தி திரி செய்து வைத்துக் கொள்ளவும் தலைமண்டை வோட்டில் முத்தெண்ணெய் நல்லெண்ணெய் நெய் இம்மூன்றும் அதில்விட்டு மேற்படித் திரியைப்போட்டு கொளுத்தி தயிலம்வாங்கி அத்தைலத்துடன் ஐங்கோலத்தைலம் கொஞ்சம் விட்டுக் கலந்து சிமிளில் வைத்துக்கொண்டு எந்த மரத்தடியிலாவது நின்றுக்கொண்டு வைரவர்மந்திரத்தை ஜெபித்துக்கொண்டே இந்த மையைதொட்டுமரத்திற்றடவி மரத்தை கையினற்குத்த அம்மரத்திலுள்ளப் பழங்காய் முதலானது பலபலவென்று பூமியின்மேல் விழுந்து விடும் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள்.

## 318. ஆகாய மோடி வித்தை.

ஆகாய மோடிவித்தை ஆடவேண்டுமெனில் தன்னுடன் சேர்ந்தவர்களை அழைத்துக்கொண்டு கீழ்சொல்லி வரும்படியான சாமான்களையும் சேகரித்து எடுத்துக்கொண்டு தகத்தாக ஒங்கும் கடைபஜார் தன்னிற் சென்று பந்தல்போட்டு அங்கனம் மேடையொன்று யேற்படுத்தி மணதை ஓர் நிலையாக நீ யிருத்தி மான்தோல் ஆசனம் போட்டுக்குந்தி உனக்கெதிரில் பசுஞ்சாணத்தில் மெழுகி மஞ்சளை அறைத்து பிள்ளையார்பிடித்து வைத்து அருகன்பிற்சூட்டி சாம்பிராணி வத்திக்கொளுத்திவைத்து கணபதியைசுற்றி கனிவகை முதலான வஸ்துக்களும் வைத்து தாம்பூலமும்கூடவைத்து தேங்காய் உடைத்து சித்தியாகும்படியாகவள

பைரவர் மந்திரத்தை தியானம்செய்து மூலமந்திரத்தை நூத்தியெட்டு உருகொடுத்து அண்டரண்டமும் பதினறுதிக்கும் பந்தனமென்று சொல்லி ஒருதட்டில் சேஷரிசியை வைத்து ஒருதட்டில் புளியன் யிலையைவைத்து சேஷரிசிவைத்திருக்குந்தட்டில் தேங்காய் ஒன்றுவைத்து பிள்ளையார்க்கு எதிரில் அருகோணசக்கரமெழுதி அந்தசக்கரத்தின் நடுவில் எழு எலுமிச்சம் பழம்வைத்து அதற்கு நடுவில் விராகன் ஒன்றுவைத்து அதர்க்கெதிரில் சத்தி யொன்றுநட்டு அதற்கெதிரில் உலக்கை ஒன்று நட்டுவிடவேண்டும்.

மேற்சொன்னபடி செய்து அதர்கப்பால் நாலுமார் தூரத்தில் முன்போல் அருகோணமிட்டு அந்த அருகோண சக்கரத்தின் நடுவில் ஒரு சிறு பையனிடத்தில் சேஷரிசிகொடுத்து உட்காரவைத்து அஷ்டமாத் தைலத்தை விரலில் தொட்டு அங்குள்ளவைகளுக் கெல்லாந்தடவி நீ எதிரியைமோடி யெடுக்கும்படியாக அழைப்பாயாகில் எட்டுதிக்கும் பந்தனம்செய்து காளபைரவர் வந்து உனக்குத் துணையாகயிருப்பார் அன்றியும் நீ தியானிக்கவேண்டியது என்னவெனில் அம்மணி இந்த ஊர்கார்க்கும் மகமாயி என்பங்கில் வாவா ஓம் ஸ்ரீயும் சவ்வும் வாவா அஷ்டவீரசத்தி வாவா அவ்வும் எம்வும் அஷ்டதிக்கும் உன்பதனம் அம்மணி வாலையும் வாராகியும் வந்து எனக்கருள் புரிந்து என்முன்வரும் எதிரினய என் வசமாக்குவாய் புவனகிரியும் பூமாதேவியும் புகழாகயிருந்து போனவன் வாவில் மண்ணைத் தெள்ளிப்போடுவாயென்று சொல்ல நீ நினைத்தபடி ஆகாச மோடியானது ஆடும்.

அன்றியும் ஓம் நங் உத் கிலியும் குட்டிச்சாதி நீயென் எதிரிவாயில் மண்ணைப்போடு என்றுசொல்லி நீ குந்திக்கொண்டிருக்க வேண்டும் அப்போது எதிரியானவன் மகா வலுமைகளைப்பேசி துள்ளிதுடித்து இந்த மோடியை இதோ க்ஷணத்தில் எடுத்து விடுகிறேனென்று மோடிக்குழல் ஊதிவருகுவான் இந்த மந்திரம் உச்சாடனம் இவையெல்லாம் தெருமண் சமானமென்று வரும் எதிரியின் மேல் சிறுபையனை சேஷரிசியை யெடுத்து வீசி அவன்மேல்போட அவன்தேகமெல்லாம் அக்கினிபோல் எரியும் தேளும் நண்டும் வக்காளிபுந்தோன்றிகொட்டும் மறுபடியும் சேஷரிசியை எடுத்து ஓம் என்று அவன்மேல்போட ஒருகாத தூரங்கொண்டுபோய் விட்டுவிடும்.

அப்படி ஒரு காததூரம்போனவன் மறுபடியும் மகா கோபத்துடன் படபடவென்று மோடிக்குழல் ஊதிக்கொண்டு வருவான் வந்து அருகோணசக்கரத்தின் அருகில் வந்து நிற்பான் அப்போது மறுபடி சேஷரிசியை அவன்மேல் போட அவன் ஊதிவந்த மகுடக்குழல் தூள் துளாகப்போகும் போவதுடன் அவன்பாதம் பூமியில் பதியாமல் தேள் கொட்டின விஷம் போலேறிட திகைத்து அழுதோடுவான்.

அவன் ஓடின உடனே இன்னெருவன் உச்சாடனம் முதலானதும்செய்து கொண்டு இந்த மோடியை நான் எடுக்கிறேமென்றும் மகிடக்குழை ஊதி இட-

பாகமாக அவன் வருவானுகில் அதுகண்டு சேஷரிசியை எடுத்து அவன்மேல் போட அவனை குட்டிச்சாத்தான் நெட்டித்தள்ளிக் கொண்டுபோய் இரண்டு காத தூரத்திற் கப்பால் விட்டுவிடும். அவன் மறுபடியும் திரும்பி மகுடக்குழல் ஊதிக்கொண்டு அருகோணத்தை தாண்டிவந்து சொல்லுவான் இந்த மோடி வைத்த தலைவனையும் மோடியையும் இதோ க்ஷணத்திற் கொண்டுபோகிறே னென்று உச்சாடன மந்திரத்தை உச்சரித்து மோடிக்குழை ஊதிவருவான்.

அது நீ கண்டு அஷ்டசித்தி மையை விரலில்தோட்டு அவன்முகத்தில் தெரிவிக்கும்படியாகச் செய்து கடுகளவாகிலும் அவன்முகத்தில் பட்ட உடனே வேதாளம் அவனைக்கொண்டுபோய் வனுந்திறத்திற் போட்டு விடும். மறுபடியும் இவன் குழை ஊதிக்கொண்டு உலக்கையருகில் வருவான் அப்போது உலக்கை யானது கிளம்பி மாறிமாறி அடிப்பதுடன் சாரைப்பாம்பும் பிடுங்கும். செய்யான் கருந்தேள் செந்தேள் செங்குளவி இவைகளெல்லாமுங் கொட்டி மரண மாகிவிடுவான்.

அவன் மரணமானவுடனே இன்னொருவன் எழுந்து இந்த மோடியை க்ஷணப்போதில் எடுத்துப்போடுகிறேன் பாரென்று மகிடக்குழையும் உச்சாடனம் செய்து பேதனத்தோடு திக்குக்கட்டு கட்டிக்கொண்டு வருவான் அது நீ கண்டு அஷ்டதிக்கு தைலத்தில் கைவிரலில் தொட்டுக்கொண்டு சேஷரிசியை எடுத்து யெதிரிமேல் விட்டு எரிய வேதாளம் ஓடிவந்து அவனைத்தூக்கிக் கொண்டுபோய் கால்காததூரத்தில் போட்டுவிடும் குழையானது உடைந்துப் பொடி பொடியாகப் போய்விடும். அப்படிப்போயினும் மறுபடியும் அவன் குழையை ஊதிக்கொண்டு உலக்கையைத் தாண்டிவருவான். அதுகண்டு அஷ்டசித்தி தைலத்தை விரலில்தொட்டு அவன்மீதிவெறிந்து கூட சேஷரிபோட உடனே கத்தியானது கிளம்பி ஐங்காததூரம் போகுமட்டும் துறத்திவிட்டும் ஆகாசமோடி யானது எழும்பி அருக்கடையாக வெட்டும் சபையோர்களெல்லாம் அதிசயமா கப் பார்ப்பார்கள் தேவனே தேசிகனே குகனேயென்று கூறி ஜனங்களெல் லாம் கும்பிடுவார்கள்.

அவர்கள்போக பின்னும் சிலபேர்கள் மோடிக்குழை யூதிவந்து இந்தமோடி யைவேரோடே பிடுங்கிப்போடுகிறோம் பாரென்று வித்வேசணமும் உச்சாடணமும் செய்து மகிடிகுழையூதி வருவோரைப் பார்த்தவுடன் அஷ்டசித்தி மையை விரலில்தொட்டு சேஷரியை ஒருபிடி அள்ளி அவர்கள் மேல்யெறிய கரியண்டு செய்யானும் குளவியு மாகத்தோன்றி அவர்களைப்பிடுங்கும். அத்துடன் தேகமெல்லாம் அக்கினிபோல் பத்தும் ஆடையானது பத்தியெறித்து போகும் ஊதி வந்த மகிடக்குழை உடைந்துபோகும் வாயிலும், மூக்கிலும், காதிலும், உதிரம்பெருகும் குட்டிசாத்தான் தூக்கிக்கொண்டுபோய் ஆறுகாதத்திற் கப்பால் போட்டுவிட்டு வருவான். ஆகாயமோடியை யாரும் வெல்லார்கள், குருமகிமையிதுவாகும்.

அப்படிக்கிருந்தும் சிலர் கத்தி நட்டிருப்பதையுந் தாண்டிநீ ருந்திக்கொண்டி ருக்குமிடத்திற்கு பின்வருவார், மந்திர உசகாடனங்கள் செய்து எலுமிச்சம் பழத்தையெடுக்க வருவார் அப்போது நீ அஷ்டமாரணத் தைலத்தைத்தொட்டு ஓம்-ஐயும் பகிரத்தென்று பழத்தைத்தொட்டு ஆகாயமார்க்கம் யெழும்பிவிடும், அப்போது மகிடக்குழை யூதிவந்த மந்திரக்காரரில் சிலர் பழத்தை தடிக்கும்படி உடனே அனைவரு பார்க்க ஆகாயமெழும்புவார்கள், அப்போது பழமானதுமே கத்தில் மறையம் அப்போது மந்திரக்காரர்கள் மதிமயங்கிதிகைத்து நிற்பார்கள்

அதுகண்டு அஷ்டமாசித்தி தைலத்தை விரலில்தொட்டு கத்திக்குத்தடவி உச்சாடனம் செய்தனுப்ப அந்த கத்தியானது ஆகாயமார்க்கமாகயெழும்பி அருக் கடையாக மந்திரக்காரர்களை யெல்லாம் வெட்டும் அப்போது அவர்மள் சிரசு சாங்கோத்தாற்போல் பூமியின்மேல் விழுகும் வேடிக்கைப் பார்க்கும் ஜெனங்க ளெல்லாம் வெருண்டுமெச்சி மகிழ்வார்கள். மகடக்குழையூதும் மந்திரக்காரர்க ளெல்லாம் மனதுவாடி இவன்நமக்கு ஒமனென்றுயெண்ண எங்கி அழுவார்கள்.

இப்படி அநேகர் அழுக அதிர் திலர் அசாத்தியமாகப் பேசிக்கொண்டு மகி டக்குழைவூதி கால்விருதி வெண்டையமுமிட்டு பற்பலவிருதுகள் பூண்டு பட்சி யிறகு கொக்கு, காடை இவைகளின் இறைகைசூடி தனித்தனியாக வெருமகிடி கள் ஊதிஸ்தம்பனம் உச்சாடனம்செய்து சபையில் வந்துநின்று இந்த மோடி வித்தை எதிரியைக்கட்டி இச்சணமே யெடுக்கிறோமென்று சொல்லி வருவார் கள். வந்தவுடன் நீகாயம்போன பழத்தை அழைப்பிக்கும்படி ஓம்-கிலியும்-கி ராம்-கிறியும்ர்கிலியும் எக்கணதேவகொண்டு வாவென்றழைக்க எழுபழமும் இரு ப்பிடம் வந்துசேரும் சேர்ந்தவுடன் மேற்சொன்ன மந்திரத்தை நூறுதரம் செ பித்து அஷ்டதிசித்திமையை விரலில்தொட்டு புளியன் இலையை உருவி மகிடி யூதிவந்த மந்திரக்காரர்மேல்போட அது கருந்தேள் செய்யாகத்தோன்றி அத னைப்பிடுங்கும் அதாவுமன்றி செங்குளவி கருங்குளவி கொட்டும். செந்நாய் கரு நாய்ப் பிடுங்கும் வாயால் உதிரங்கக்குவார்கள் மகிடியது உடைந்துப் பொடிபொ டியாகப்போகும் அத்துடன் அவர்கள் அசைந்துப்போய்விடுவார்கள்.

அவர்கள்போக இன்னும் சிலர்கள் மந்திர உச்சாடனம் செய்துக்கொண்டு மோடியில்வைத்திருக்கும் விராகனையெடுக்க வருவார்கள். அது அறிந்து நீ இறீம் ஓம் ஸ்ரீயும் அங்கிறியும் சக்கம்மா விராகனை ஆகாயங்கொண்டுபோவாய் தாயே யென்று அஷ்டசித்தி தைலத்தை விரலில்தொட்டு விராகனைத்தொட அது ஆகா யம் யெழும்பி மேகத்திற்போய் மறையும் அதுகண்டு மந்திரக்காரர் அத்துடன் மகிடியூதி ஆகாயம்யெழும்புவார்கள் அதையறிந்து நீ அஷ்டமாசித்தி தைலத் தைத்தொட்டு வேதாளம்மந்திரத்தை ஜெபிக்கும்விதம் எப்படியெனில் ஓம் கிலி யும் வங்யம் கிலியும் வேதாளமே யென்பங்கில் வாவாயென்று உரு நூறுஜெபித் து தைலத்தை கத்தியிற்றடவி பிரயோகஞ்செய்ய இந்தக்கத்தியானது ஆகாய மார்க்கமாக எழும்பி அநேகம் பேர்களை அருக்கடையாகவெட்டும் அதில் மாண் டுப்போவார் மந்திரக்காரும் மோடிக்காரரும் இப்படியாக நாற்றிசையிலுள்ளவ

ரும்மோடியை வந்தபார்த்து மகிடியூதும் மந்திரக்காரர்கள் உன்னைவந்து வணங்கி நாங்கள் கடைத்தேரும்படி கிருபைசெய்ய வேண்டும். கருவுள்ள தேவனே யென்றும் எங்கள் பெண்பிள்ளைகள் பிழைக்கும்படியா போகவிடை தருவீரென்றும் இந்தமோடியெடுக்க எங்களால் முடியாது எங்கள்மீது இரக்கம்வைத்து நீர் காப்பாற்றவேணுமென்று காலில்விழுந்தும் அவர்கள் பூண்டுவந்த விருதெல்லாங் கழட்டிவந்து வைப்பாராகில் அப்போது மரணமடைந்தவர்களை எழுப்பித் தருகிறேனென்றசொல்லி சிவமூர்த்தியை தியானம்செய்வதெப்படியெனில் ந-ம-யசி ஓம்-மறியிம்-மய்யும்-மருளுவாய்-ஸ்ரீவும்-சவ்வும் என்று இருநூறு ஜெபித்து செத்தபிணம் யெழுந்திருக்கவேண்டும் சிவாயநமாவென்று ஐங்கோலத்தைதொட்டு வெகுஜனம்பார்க்க தெரிக்க சஞ்சீவியான ஐங்கோலமை பட்டவுடன் செத்தபிணமெல்லாம் யெழுந்திருக்கும் எழுந்தவுடன் உன்காலில் விழுந்துப்பணிவார் அப்போது நீ அவர்களை வாழ்த்தி அவர்கள் விருதுகள் ளாவையுங்கொடுத்து அவரவர்கள் இருப்பிடம் அனுப்பிவைக்க அனைவரும் உன்னை வாழ்த்திகொண்டாடுவார்கள்.

## 319. நரியாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் நரியெலும்பைக் கையிலெடுத்து அனைவருக்கும்காட்டி இந்த எலும்புக்கு ஒரு மந்திரம்போட்டு நரியாகும்படி செய்கிறேன் பாகரன்று அவ்ஷ்டமாசித்திமையையும் ஐங்ரோலக்கருவையுந்தடவி கூடையின்மேல்போட நரியுருவாயோடும் பார்ப்போர்கள் பிரமித்து ஆச்சரியப்படுவார்கள் ஆனல் அந்த நரியைப்பிடித்து உடனே மறைத்துவிடவேண்டிம்.

## 320. நாயாகும் ஜாலம்.

நாயெலும்பைக் கையிலெடுத்து சபையோர்க்குக்காட்டி இந்தநாயெலும்பை நாய்க்குட்யாகச்செய்கிறேன் பாரென்று அவ்ஷ்டசித்திமையும் ஐங்ரோலக்கருவையும் பூசி பூமியில் வைத்து ஒரு கூடையைப் போட்டுமூடி மந்திரம் செய்பவன் போல் சற்றுநேரமிருந்து சல் மலையாளபகவதி நாய்குட்டியாகச் செய்யடியென்று மூன்றுதாம்சொல் கூடையைதிரக்க காய்குட்டி குலைத்துக்கொண்டு சபையிலோடும் பார்த்து ஆச்சரியப்படுவார்கள் உடனே முன்போல் மறைத்துவிடவும்.

## 321. பூனையாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் பூனையின் அஸ்தியை எடுத்து அனைவருக்குங் காட்டி இந்த அஸ்தியை பூனையாக்குகிறேனென்று அவ்ஷ்டமாசித்திமையும் ஐங்கோலக் கருவையும் அஸ்தியிற்பூசி தாழவைத்து ஒருகூடையைமேலே மூடிவிட்டு பின்பு மூன்றுசிரியக்கல்லை கையிலெடுத்து இருபதடி தொவவாகப்போய் நின்றுக்கொண்டு அந்த மூன்றுகல்லையும் மந்திரமோதி போடுவதபோல் ஒவ்வொன்ருகக் கூடையின்மேல்விட்டெரிந்து கூடையருகில் வந்து பகவதி காளி பூனைக்குட்டியாகச் செய்யடியென்று மூன்றுதாம்சொல்லி கூடையைத் திரந்துகாட்ட பூனைகுட்டியாகத் தோற்றப்படும் பார்ப்போர் இது காளிவசியமென்று களிப்படைவார்கள்.

## 322. முசலாகும் ஜாலம்.

முசல் அஸ்தியிலொன்றை கையிலெடுத்து அனைவர்களுக்குக் காட்டி இந்த அஸ்தியை முசலாக்குகிறேனென்று அஷ்டமாசித்தி மையையும் ஐங்கோலக்கருவையும் அந்த எலும்பிற்குப்பூசி பூமியிலவைத்து முன்போல் கூடைபோட்டுமூடி அடாகுட்டிச்சாத்தான் இந்த கூடையிலிருக்கிற எலும்பைக்கொண்டுபோய் காட்டிலெறிந்துவிட்டு காட்டிலிருக்கும் ஒருமுசல்குட்டிபிடித்துவந்து இந்தக்கூடைக்குள் வையடாவென்று சற்றுநேரம்பொருத்து கூடையைத்திறந்துகாட்ட முசல் துள்ளியோடும் சபையோர்களும் நம்பி ஆச்சரியப்படுவார்கள்.

## 323. முள்ளம்பன்றியாகும் ஜாலம்

முள்ளம்பன்றியின் முள்ளாகிலும் அஸ்தியாகிலும் எடுத்து சபையோர்களுக்குக்காட்டி அந்த அஸ்தியை முள்ளம்பன்றியாக செய்கிறேனென்று அஷ்டமாசித்தி மையைத்தொட்டுத்தடவி ஐங்கோலக்கருவைப்பூசி பூமியின்மேல் வைத்து பெரியத்கூடையை போட்டுமூடி சபையோர்களெல்லாம் மிரளும்படியாகக் குட்டிச்சாத்தான் நீ சீக்கிரமாகச்சென்று இந்த அஸ்தியைக்கொண்டுபோய் அடவியில் எரிந்துவிட்டு அடவியிலிருக்கும் முள்ளம்பன்றி ஒன்றை பிடித்துக்கொண்டுவந்து இந்த கூடைக்குள் வையடாவென்று அந்த பொம்மையை அப்பாலெரிந்துவிட்டு சற்றுநேரம்பொருத்து கூடையைத்திறந்துகாட்ட முள்ளம்பன்றியைப்போல் தோற்றவாகி முள்ளுகளைச் சிலுப்பிக்கொண்டு நிற்கும் கண்டோர்கள் கண்மயங்கிப் பிரமிப்பார்கள் ஆனால் முன்போல் பன்றியை மறைத்துவிடவும்.

## 324. மானாகும் ஜாலம்.

பின்னமில்லாமல் உரித்த மான்தோலை எடுத்து சபையோர்களுக்குக் காட்டி இந்ததோலுக்கு உயிர்கொடுக்கிறேன் பாரென்று அஷ்டமாசித்தி மையைவிரலில் தொட்டு தோலின்மேல்தெளித்து ஐங்கோலக்கருவையும்பூசி தோலின்கழுத்தில் ஒருகயர்கட்டி தோலின்மேல் வெள்ளைதுப்பட்டியைப் போட்டுமூடி மயானருத்திரி மான்தோலுக்கு உயிர்கொடடியென்று மூன்றுதரம்சொல்லி துணியையெடுக்க் மானுவாகி யெகுரும் அதைக்கண்டவர்கள் யாவரும் மயானருத்திரி வசியமென்று மயங்குவார்கள் உடனே மறைத்துவிடவும்.

## 325. மாடாகும் ஜாலம்.

பசுவின் தோலையாயினும் எருதின் தோலையாயினும் எடுத்து அனைவருக்குங்காட்டி இதோ ஒரு மந்திரம்சொல்லி க்ஷணநேரத்திற்குள் உயிர் ருண்டாகச் செய்கிறேன் பாரென்று வாலையைநியானித்து அஷ்டமாசித்திமையை விரலில் தொட்டு தோலின்மேல் தெளித்து ஐங்கோலக்ருவையும்பூசி பூமியில்வைத்து பெரியதுப்பட்டியைப் போட்டுமூடி தாக்கி சாமுண்டி சாமளாதேவி இந்ததோலுக்கு உயிர்கொடுப்பாயென்று மூன்றுதரம்சொல்லி மேல்மூடிய துணியைவாங்க மாடுருவாகத்தோற்றும் பார்ப்போர்கள் இது சாமளாதேவி வசியமென்று ஆச்சரியப்படுவார்கள்.

## 326. எறுமாடு ஆகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் எறுமைதோலாயினும் எறுமைக்கடாதோலாயினும் எடுத்து அனைவர்க்குங்காட்டி இந்ததோலுச்கு உயிர் கொடுக்கிறேன் பாரென்று வைரவரைத்தியானித்து அஷ்டமாசித்திமையை விரலில்தொட்டு தோலின்மேல் தெளித்து ஐங்கோலக்கருவையும்பூசி பூமியில்வைத்து ஒரு கறுப்பு கம்பிளியையதின் மேல்மூடி ஓ சங்கிலிக்கரும்பா சீக்கிரம் இந்தத்தோலுக்கு உயிர்கொடுப்பாயென்று சொல்லி சத்றுநேரம்பொருத்து மூடியகம்ளியைத்திரக்க தோல் எருமாடுறுவாகத் தோற்றும் சபையோர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

## 327. ஆடாகும் ஜாலம்.

ஆட்டுத்தோலைக் கையிலெடுத்து அனைவருக்குங்காட்டி இதோ இந்த தோலை கண்மூடி கண்திறக்குமுன் ஆடாகும்படி செய்கிறேன் பாருங்களென்று வாலையைதியானித்து பைரவர் மந்திரத்தை நூத்தியெட்டு ஜெபித்து அஷ்டமாசித்திமையை விரலில்தொட்டு தோலின்மேல்தெளித்து ஐங்கோலமையும்பூசி பூமியின் மேல்வைத்து துப்பட்டியை மேலேபோட்டுமூடி சற்றுநேரம்பொறுத்து திரந்துக்காட்டி ஆடுருவாகத் தோற்றமாகி எழுந்து நிற்கும் சபையோர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

## 328. ஆனையாகும் ஜாலம்.

ஒருவெட்டவெளியின் மைதானத்திற்சென்று யானையின் அஸ்தியை ஒன்று கையில்பிடித்து அனைவருக்குங்காட்டி இந்த யானையின் அஸ்தியைவிட்டெறிந்து யானையாக ஓடிவரும்படிசெய்கிறேனென்று பைரவர்மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து வாலையைதியானித்து ஒருவருக்குந் தெரியாமல் அஷ்டமாசித்திமையை விரலில்தொட்டு ஆனை அஸ்திக்குத்தடவி ஐங்கோலக்கருவிற் கொஞ்சம்பூசி அனைவரும்பார்க்க அதை ஓங்கி விட்டெரிய உடனே யானையுருவாகத் தோற்றமாகி எதிரில் வீரிட்டு ஓடிவரும் அப்போது வேடிக்கைப்பார்ப்போர்களெல்லாம் ஓடுவார்கள் உடனே மறைத்துவிடவும்.

## 329. புலியாகும் ஜாலம்.

புலியடங்கும்படியாக போன் ஒன்றுசெய்து அந்த போனை ஜாலமாடுமிடத்திற் கொண்டுவந்து நிறுத்தி பழுதில்லாமற் உரித்த புலித்தோலொன்றைக் கையிலெடுத்து சபையிலுள்ள யாவர்க்குங்காட்டி இந்ததோலை போனுக்குள் போடுகிறன் புலியாகுது பாரென்றுபைரவர் மந்திரத்தை ஆயிரத்தெட்டோதி அஷ்டமாசித்திமையை விரலில்தொம்டு தோலின்மேல்தடவி ஐங்கோலக்கருவும் பூசி போனுக்குள்போட்டு மேலே போன்மறையும்படியாகத் துணியைப்போட்டுமூடி சல்மலையாளபகவதி புலித்தோலை! புலிழாகச்செய்வாயென்று மூன்றுதரம் சொல்லி துணியைவாங்க புலிவுருவமாகத்தோற்றமாகி கற்சிக்கும் கண்டவர்கள் மனங்கலங்கி ஆச்சரியப்படுவோர்கள்.

## 330. கரடியாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்திலாவது இன்னம் எந்தவிடத்திலாவது ஒருகொம்பைநட்டு பின்பு கரடிதோலை எடுத்து வேடிக்கைப்பார்ப்போர்கள் அனைவருக்குங்காட்டி அதன்கழுத்தில் கயர்கட்டி நட்டிருக்குங் கொம்பிற்கட்டிவிட்டு இந்த தோலுக்கு உயிர்கொடுத்து கரடியாக்குகிறேனென்று பைரவர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து அஷ்டமாசித்திமையை விரலில்தொட்டு தோலின்மேல் தெளித்து ஐங்கோலக் கருவைப்பூசி தோலின்மேல் துப்பட்டிபோட்டு மூடிவிட்டு அம்மணி காளிகாதேவி கட்டினகரடி தோலுக்குயிர் கொடுப்பாயென்று மூன்றுதரஞ்சொவில் துணியைவாங்க கரடியுருவாக கர்ச்சிக்கும் பார்ப்போர்கள் பிர்மித்து இதுகாளியுடைய வசியமென்றுநம்புவார்கள்.

## 331. மந்தியாகும் ஜாலம்.

குரங்கின் தோலையெடுத்து அனைவருக்குங்காட்டி இந்த தோலுக்கு உயிர் கொடுக்கிறேன் பாரென்று வாலைமந்திரத்தை நூத்தியெட்டு தரம் ஓதி பைரவரைத் தியானித்து அஷ்டமாசித்திமையை விரலில்தொட்டு தோலின்மேல்தெளித்து ஐங்கோகலக்கருவையும் பூசி பெரியக்கூடையை போட்டுக் கவிழ்த்துவிட்டு அம்மணி வாலை பரமேஸ்வரி குரங்குதோலுக்கு கூடியசீக்கிரத்தில் உயிர் கொடுப்பாயென்று மூன்றுதரஞ்சொல்லி கூடையைத் திரந்துகாட்ட குரங்குருவாகிக் குதித்தோடி யெகுரும் அதனைப்பார்ப்பேர்கள் யாவரும் பிர்மித்து நிற்பார்கள்.

## 332. கீரிப்பிள்ளையாகும் ஜாலம்.

கீரிப்பிள்ளைதோலை பழுதில்லாமல் உரித்து வைத்திருந்து ஜாலமாடுமிடத்தில் அந்தத்தோலை அனைவருககுங்காட்டி அந்ததோலுக்கு உயிர் கொடுத்துக்ஷண நேரத்திற்குள் எழுப்புகிறேன் பாரென்று வாலைமந்திரத்தை நூத்தியெட்டுதரம் ஓதி பைரவரைத்தியானித்து அஷ்டமாசித்தி மையையும் ஐங்கோலக்கருவையும் தோலின்மேல் தெளித்து தாழவைத்து கூடையைப்போட்டுமூடி அடா குட்டிச் சாத்தான் சீக்கிரம் சீக்கிரம் ஜல்தி ஜல்தி கீரித்தோலுக்கு உயிர்கொடடா என்று மூன்றுதரஞ் சொல்லி கூடையைத்திரக்க உயிருள்ளக் கீரிப்பிள்யாகத்தோற்றும் பார்ப்போர்கள் பிரமித்து இது குட்டிச்சாத்தான் வேலையென்று ஆச்சரியப்படுவார்கள்.

## 333; அஸ்வமாகும்; ஜாலம்.

குதிரையின் முதுகெலும்பை எடுத்து அனைவருக்குங்காட்டி இந்தஎலும்பை விட்டெரிகிறேன் அஸ்வமாகவோடிவரும் அற்புதத்தைப் பாருங்களென்று பைரவர்மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து அஷ்டமாசித்திமையை விரலில்தொட்டு எலும்பிற்குத்தடவி ஐங்கோலக்கருவையும் பூசி அனைவரும்பார்க்க விட்டெரிய அஸ்வமாகஓடிவரும் அங்குள்ள பேர்கள்யாவரும் ஆச்சரியப்படுவார்கள்.

## 334. கழுதையாகும் ஜாலம்.

ஆண்கழுதை வாலாயினும் பெண்கழுதை வாலாயினும் எடுத்து ஜாலமாடு மிடத்தில் அனைவருக்குங்காட்டி இந்தவாலுக்கு உயிர்கொடுத்து கழுதையாக்குகி றேனென்று பைரவர் மந்திரத்தை முன்போல் ஓதி அஷ்டமாசித்தியையும் ஐங் கோலக் கருவையுந்தடவி வடக்குதிக்காக விட்டெரிய கழுதையுயிருண்டோடி வரும் பார்ப்போர்களெல்லாம் இதுபைரவருடைய வசியமென்று நம்பி ஆச்சரி யப்படுவார்கள்.

## 335. எலியாகும் ஜாலம்.

எலித்தோலை பழுதில்லாமல் உரித்து மேற்கூறியபடி ஒன்றுங்குறைவில் லாமற் செய்து அந்ததோலை எலிபோனில் போட்டு அதின்மேலொரு துணியை போட்டு மூடி சற்றுநேரம்பொருத்து துணியைவாங்க போனுக்குள் எலியுலாவும் ஆச்சரியபடுவார்கள்.

## 336. பெருச்சாளியாகும் ஜாலம்.

பெருச்சாளி தோலை பழுதில்லாமல் உரித்து மேற்சொன்னபடி ஒன்றுந்த வறுமல் முடித்து தோலைக்கீழேவைத்து ஒருகூடையைபோட்டுமூடிசற்றுநேரம் பொருத்து திரந்துகாட்ட உயிருள்ளப் பெருச்வாளியாகத்தோற்றும் அனைவரும் சந்தோஷிப்படுவார்கள்.

## 337 அணிப்பிள்ளையாகும் ஜாலம்

அணிப்பிள்ளையைத் தோலைபழுதில்லாமல் உரித்து மேற்சொல்லியபடி யா வையுமதற்குச் செய்து பூமியில் வைத்து கூடையைப்போட்டுமூடி சற்றுநேரம் பொருத்து திரந்துகாட்ட உயிருள்ள அணிப்பிள்ளையாகவிருச்கும் யாவரும்பார் த்து அதிக சந்தோஷபடுவார்கள்.

## 338 எறும்பாகும் ஜாலம்

ஐங்கோலக்கருவை கொஞ்சந் தொட்டு கையிற் பூசிக்கொண்டு அஷ்டமாசி த்துமையை விரலில் தொட்டுமண்ணை அள்ளி எறும்பாகவேணுமென்று போட எறும்பு புத்தீசல் புறப்படும் சபையோர்கள் மதிமயங்கி மனங்களிப்பார்கள்.

## 339. கோழியாகும் ஜாலம்.

கோழிமுட்டையில் ஒன்றையெடுத்து சபையோர்களுக்குக்காட்டி இந்த முட்டைக்கு உயிர்கொடுத்து கோழியாக்குகிறேன் பாரென்று வாலைமந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெயித்து பைரவரைத் தியானித்து அஷ்டமாசித்தமையை வி ரலில்தொட்டு முட்டையின்மேல் தடவி பிறகு ஐங்கோலக்கருவை தொட்டுபூசி பூமியின்மேல்வைத்து கூடையைப்போட்டுமூடி ஓம் பகவதிகாளி கோழிமுட் டைக்கு உயிர்கொடுத்து கோழியாகச்செய்வாய் அம்மணி என்று மூனறுதரஞ் சொல்லி கூடையைத்திரந்துகாட்ட உயிருள்ளகோழியைப்போல் தோற்றமாகி

கொக்கரவேோவென்றுக் கூவும் அங்குள்ள அனைவர்களும் ஆச்சரியப்படுவார்கள் ஆனால் சாவல்பொட்டை எதாக வேணுமென்று நினைத்து மையைத்தடவுகின்ற மோ அதுபோலாகும்.

## 340. வான்கோழியாகும் ஜாலம்.

வான்கோழியின் முட்டைக்கு மேற்கூறியவாறுசெய்து பெரியகூடை போட்டு கவிழ்த்துவிட்டு சல்மலையாளபகவதி உயிர்கொடடியென்று மாத்திரைக் கோலால் கூடையை மூன்றுதரந்தட்டி திரந்துபார்க்க உயிருள்ளவான்கோழி போல் தோற்றும் பார்ப்பவர்கள்கண்டு களிப்படைவார்கள்.

## 341. கோக்காகும் ஜாலம்.

கொக்கெலும்பை எடுத்து மேற்சொல்லியபடி செய்து பூமியில்வைத்து கூடையைப்போட்டு மூடி மாத்திரக்கோலால் முன்றுதரந்தட்டி திரந்துபார்க்க உயிருள்ள கொக்குபோல் தோற்றும் ஆச்சரியப்படுவார்கள்.

## 342. வாத்தாகும் ஜாலம்.

ஒரு வாத்துமுட்டையை எடுத்து மேற்சொல்லியபடி செய்து பூமியின் மேல் கூடையைப்போட்டு மூடி பைரவர்மந்திரத்தை 108-தரஞ்செபித்து மாத் திரக்கோலால் கூடையை முன்றுறுதரந் தட்டி பிறகு திறந்து பார்க்க உயிருள் ளவாத்துபோல் தோற்றும் ஆச்சரியப்படுவார்கள்.

## 343. காடையாகும் ஜாலம்.

காடைமுட்டை ஒன்றையெடுத்து மேற்சொல்லியபடி செய்து பூமியில் வைத்து தட்டைமூடி சல் மலையாளபகவதி காடைமுட்டையை காடையாக்கு வாயென்று முன்றுதரஞ்சொல்லி முன்றுதரம் மாத்திரக்கோலால் தட்டைதட்டி திறந்துபார்க்க காடைவுயிருடன் உலாவும் ஆச்சரியப் படுவார்கள்.

## 344. கௌதாரியாகும் ஜாலம்.

கௌதாரிமுட்டை ஒன்றையெடுத்து மேற்சொல்லியவாறு செய்து பூமி யின்மேல்வைத்து தட்டைமூடி பைரவரைத்தியாளித்து மாத்திரைக்கோலால் முன்றுதரம் தட்டி கூடையைத்திரக்க உயிருள்ள கவுதாரிஉலாவும் பார்ப்போர் கள் பிர்மிப்பார்கள்.

## 345. மைனாவாகும் ஜாலம்.

மைனாவின் முட்டையொன்றை எடுத்து மேற்சொல்லியவாறு செய்துபூமி யின்மேல்வைத்து கூடையை போட்டுமூடி அம்மணி மயானருத்திரிமைனா முட் டையை மைனாவாகச்செய் என்றுமுன்றுதரம் தட்டை மாத்திரைக்கோலால் தட்டி தட்டை திறந்துகாட்ட உயிருள்ள மைனாஉலாவும் பார்த்துதிகைப்பார்கள்.

## 346 கிளிப்பிள்ளையாகும் ஜாலம்.

கிளிமுட்டை யொன்றையெடுத்து மேற்சொல்லியவாறுசெய்து பூமியின் மேல்வைத்து துணியைப்போட்டுமறைத்து வாலையை தியானித்து துணியைத்திறந்துகாட்ட கிளிப்பிள்ளையானது கொஞ்சும் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள்.

எவ்விதப்பட்சி ஜாதிகளையும் மேற்சொல்லியவாறு செய்து காட்டலாம் ஆனால் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு தேவதைகளை தியானிக்கவேண்டும்.

மேற்சொல்லியமையின் மகிமையாதெனில் எந்தவித்தை செய்தபோதிலும் பார்ப்போர்கண்களுக்கு அவ்வவ்வுருவம்போல் தோற்றுமேயன்றி நிஜமானதாக ஒன்றுமேபாகாது தோற்றுவதும் மாயமாய் மறைந்துவிடும் பேரியோர்கள் கூறியவண்ணம் கருவில்லாதவித்தையில்லை குருவில்லாத சிஷியரில்லை யென்றனர் ஆதலால் கருவை முடித்துக்கொண்டால் சகல சித்தும் விளையாடலாம்.

## 347. நெல்லு பயிருண்டாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் நாலடி சதுரத்திற்குச் சதுரம்மமிட்டியால் கொத்திசுற்றிலும் வரப்புபோட்டு பிறகு அழாக்குப் பச்சைநெல்லை எடுத்து அனைவர்க்குங் காட்டி இந்த நெல்விதைத்து இந்தக்ஷணமே பயிராகிகதிர்விடும்படியாகச் செய்கிறேனென்று வாலைமந்திரத்தை ஆயிரத்தெட்டோதி பைரவரை தியானித்து அஷ்டமாசித்திமையைக் கையில்தொட்டு நெல்லின்மேல் தெளித்து ஐங்கோல கருவையுந்தெளித்து அந்த நெல்லை மேற்படி பாத்திரத்தில் விரைத்துஜலம்விட்டதன்மேல் அகலதுப்பட்டி யைப்போட்டு மூடிவிடவும் இப்படி எழுதாம்திறந்து திறந்து எழுதரம் ஜலம்விட்டு சல்மலையாளபகவதி என்று துப்பட்டியைத்திறக்க பயிருண்டாகி கதிர்விட்டிருப்பதுபோல யாவருக்கும் தோற்றப் படும் பிர்மித்து ஆச்சரியப் படுவார்கள் ஆனால் முதல் திறக்கும் போது முளைவி டிருக்கும் இரண்டாவது திறக்கும் போது இரண்டு யிலை வெடித் திருக்கும் மூன்றுவது திறக்கும் போது நாலைந்து யிலை விட்டிருக்கும் நாலாவது திறக்கும் போது இரண்டு விரக்கடை உயரந் தோற்றும் ஐந்தாவது தரந்து பார்க் கையில் ஜாண் உயரமாகத் தோற்றும் ஆறுவது தரந்து பார்க்கையில் குருத்தோடியிருக்கும் எழாவது தரந்து பார்க்கையில் கதிர்விட்டிருக்கும் கண்டோர்கள் யாவரும் பூரித்துக் களிப்படைவார்கள்.

## 348. கேழ்வரகு பயிருண்டாகும் ஜாலம்.

கேழ்வரகை எடுத்து அனைவருக்குங்காட்டி மேற்சொன்னபடியாகசெய்து பாத்தியில் விரைத்து ஜலம்விட்டு துப்பட்டியால் மூடித்திறக்க கேழ்விரகும் பயிராகி கதிர்விட்டிருக்கும் ஆச்சரியப்படுவெர்ர்கள்.

## 349. வரகு பயிருண்டாகும் ஜாலம்.

ஆடைபோக்காதவரகை எடுத்து அனைவருக்குங்காட்டி அதற்குமேற்சொன்னபடியாகச்செய்து விரைத்து துப்பட்டியை மூடித்திறந்துகாட்ட வரகுபயிராகி கதிர்விட்டிருக்கும்.

## 350. கம்பு பயிருண்டாகும் ஜாலம்.

கம்பை எடுத்து அனைவருக்குங்காட்டி மேற்சொன்னபடி அதற்குசெய்து வரைத்து ஜலம்விட்டு அந்த பாத்திக்கு நாலுபக்கங்களிலும் கொம்புநட்டு சுற்றி துணியினால் மரப்புகட்டி சற்றுநேரம்பொருத்து திரையைவாங்க கம்புபயிராகிக் கதிர்விட்டிருக்கும் கண்டவர்கள் பிரமித்து வாலைவசியமென்று வாய்மூடிக்கொள் வார்கள்.

## 351. சோளப்பயிர் உண்டாகும் ஜாலம்.

சோளத்தை யெடுத்து அனைவருக்குங்காட்டி மேற்சொன்னபடி அதற்கு செய்து விரைத்து முன்போல் சுற்றிலும் திரைமறவாகக்கட்டி சற்று நேரம் பொருத்து சல்மலையாளபகதி சோளப்பயிர் உண்டாக்கடி என்று திரையை வாங்க சோளப்பயிராகி கதிர்விட்டிருக்கும் அனைவரும் கண்குளிரப்பார்த்து களிப்படைவார்கள்.

## 352. நவதானியங்களின் பயிர் முதலானதும் உண்டாகும் ஜாலம்.

கடலை, மொச்சை, உளுந்து, தவரை, கொள்ளு, பச்சைப்பயறு, காராமணி, பட்டாணி, இன்னமுள்ள பயிர்வகைகள் யாவும் உண்டாக்கும் வித்தை யாடவேண்டில் அந்தந்தப் பயிர்களை யெடுத்து மேற்படி தவராமல்செய்து நடவேண்டியதை நட்டும் விதைக்கவேண்டியதை விதைத்தும் உடனேசெடியாகி காய்கள் காய்த்து தொங்கும்படியாக சபையோர்களுக்குக்காட்டவும் ஆச்சரியப்படுவார்கள்.

## 353. ஆகாயத்தில் கத்திசுழலும் ஜாலம்.

பட்டாக்கத்தி ஒன்று அல்லது இரண்டு எடுத்து ஜாலமாடுமிடத்தில் அனைவர்களுக்குங்காட்டி இந்தகத்தியை ஆகாயமார்க்கமாக விட்டெறிந்து அந்திரமாகச் சுழலும்படி செய்கிறேனென்று வாலை மந்திரத்தை ஆயிரத்தெட்டோதி பைரவர் மந்திரத்தை நூத்தியெட்டுதாம் சொல்லி ஆகாயவாணியை தியானித்து அஷ்டமாசித்து மையை விரலில் தொட்டு இரண்டு கத்திக்கும் தடவி ஆகாய மார்க்கமாக விட்டெறிய அது அந்தரமாக நின்று கரகரவென்று சுழலும் பார்ப்போர்கள் அந்தரதேவதை வசியமென்று சிந்தைமயங்கி ஆச்சரியப்படுவார்கள் ஆனல் நீ சற்றுநேரத்துக்கெல்லாம் சல் கத்தியே ஆடினது போதும் கீழேயிறங்கிவா யென்றழைக்க கத்திபூமியின்மேல் விழுந்துவிடும்.

## 354. ஆகாயத்தில் பாஞதடி சுழலும் ஜாலம்

ஒரு பாஞதடியையெடுத்து சபையோர்களுக்குக்காட்டி மேற்சொன்னபடி தியானித்து மையைத்தடவி ஆகாயமார்க்கமாக விட்டெறிய அது அந்தமார்க்கத்தில் நின்று மனிதர் எடுத்து சுழட்டுவதுபோல் சுழலும் ஆச்சரியப்படுவார்கள் ஆனல் முன்போல் அழைத்துக்கொள்ளவேண்டும்.

### 355. பந்து அந்தரமாக எகுறும் ஜாலம்.

தனக்கு எத்தனை பந்துகள் இஷ்டமோ அத்தனை பந்துகளெடுத்து ருத்ரா தேவி மந்திரத்தை தியானித்து அஷ்டமாசித்து மையைதொட்டு ஒவ்வொரு பந்திற்குந்தடவி பூமியின்மேல்போட ஒன்று கீழேநிற்காது ஆகாயமார்க்கமாகக் கிளம்பும் ஆச்சரியப்படுவார்கள்.

### 356. தேவகன்னிகைகளை காட்டும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் நாலுமிச்சம்பழமெடுத்து சபையோர்களுக்குக்காட்டி இந்த நாலுபழத்தை நாலுதிக்கிலெறிந்து நாலுதேவகன்னிகைகளை அழைப்பிக்கிறேனென்று வாலை மந்திரத்தை ஆயிரத்தொட்டு சபித்து அஷ்டமாசித்து மையைதொட்டு நாலுபழத்துக்குந்தடவி நாலுபக்கமும் விட்டெறிய நாலுதேவ கன்னியர்கள் தோற்றமாவார்கள். அனைவரும்பார்த்து அதிசயிதுவென்று அக மகிழ்வார்கள்.

### 357. இரவில் வேதாளத்தை காட்டும் ஜாலம்.

நாலு ஊமத்தங்காயை யெடுத்து அனைவருக்குங்காட்டி இந்தக் காயைநாலு பக்கமும் எரிகிறேன் நாலு வேதாளாம் வரும் வேடிக்கையைப் பாருங்களென்று பத்ரகாளியைத்தியானித்து பைரவா மந்திரத்தை நூற்றியெட்டு தரம் ஜெபித்து ஆஞ்சநேயரைப்பூசித்து அஷ்டமாசித்து மையை விரலில் தொட்டு நாலுகாயிற் குந்தடவி நாலுபக்கமும்விட்டெறிய உடனே ஒலென்ற சத்தத்துடன் நாலுபக் கமுமிருந்து வேதாளம் இறைந்துகொண்டுவரும் பார்த்தோர்கள் பயந்தோடுவார் கள் ஆனால் இந்த வேடிக்கையை வெட்ட வெளியான மைதானத்திற் காட்டவேணும்.

### 358. இரவில் பூதத்தைக்காட்டும் ஜாலம்.

ஒருமைதானத்திற்சென்று நாலு யெட்டிக்கொட்டையை கையிலெடுத்து அங்குள்ள அனைவர்களுக்குங்காட்டி இந்த கொட்டையை மந்திரஞ்சொல்லி நாலுபக்கமும் எரிகிறேன் நாலுபூதமாகத்தோற்றும் பாருங்களென்று ஆஞ்சநே யர்மந்திரத்தை நூற்றியெட்டுதரம் ஜெபித்து பைரவரைதியானித்து அஷ்டமா சித்து மையை புரவில்தொட்டு நாலுகொட்டைக்குந் தடவி பூதமாக தோற்றவே ணுமென்று நாலுபக்கத்தும் விட்டெறிய நாலுபக்கம் நாலுபூதமாகத்தோற்றும் பார்ப்போர்கள் மிரண்டு ஆச்சரியப்படுவார்கள்.

### 359. பாராங்கல் பறக்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு பெரிய பாராங்கல்லை கொண்டுவரும்படி சொல்லி சபையோர்களைப்பார்த்து இந்தபாராங்கல்லை அந்தரமாக நிற்கச்செய்கிறேனெ ன்று ஆச்சநேயர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து வாலையை தியானித்து அஷ்மோசித்து மையை விரலில் தொட்டு பாறையின்மேல் தடவி சல்பாறையே

அந்தரமாக நில்லென்று மூன்றுதரம் சொல்ல பாறை பூமியில்நின்று எழும்பி அந்தரமாகநிற்கும் ஆச்சரியப்படுவார்கள் சிலர் அனுமார்வசியமென்பார்கள் சீ சற்று நேரத்திற்கெல்லாம் பாறையே கீழிறங்கி விடுமென்று சொல்லவேண்டும்.

## 360. இரவில் பத்திரகாளியைக் காட்டும் ஜாலம்.

வெட்டவெளியான மைதானத்திற் சென்று ஒரு எலுமிச்சம்பழத்தை யெடுத்து அனைவருக்குங்காட்டி இந்தப்பழத்தை ஆகாயத்தில் எறிந்து பத்திரகாளியை அழைப்பிக்கிறேனென்று பத்திரகாளியை தியானித்து பைரவர் மந்திரத்தை நூற்றியெட்டு ஜெபித்து அஷ்டமாசித்து மையைவிரலில் தொட்டு பழத்தின்மேல் தடவி ஆகாயமார்க்கமாக விட்டெறிய உடனே பத்திரக்காளி சிம்மவாகனரூபமாய் தோற்றப்படுவாள் பார்த்துப்பணிந்து ஆச்சரியப்படுவார்கள்.

## 361. இரவில் மும்மூர்த்திகளைக் காட்டும் ஜாலம்.

முன்போல் ஒரு வெட்டவெளியான மைதானத்தில்சென்று மூன்றுஎலுமிச்சம்பழத்தை எடுத்து அங்குவந்தவர்களுக்கு காட்டி இந்த மூன்று பழத்தையும் ஆகாயம் விட்டெறிகிறேன் மும்மூர்த்திகளையும் அழைப்பிக்கின்றேனென்று மும்மூர்த்திகளையும் தியானித்து பைரவர் மந்திரத்தை நூற்றியெட்டோதி வாலையைப்பூசித்து அஷ்டமாசித்திமையை விரலில் தொட்டு மூன்றுபழத்திற்குந் தடவி ஆகாயமார்க்கமாக விட்டெறி உடனே ஈஸ்வரன் பார்வதிசமேதராய்ரிஷபவாகனத்தின் மீதேறியும் மஹா விஷ்ணு லட்சுமிசமேதராய் கெருடவாகனமீதேறியும் பிரமதேவன் சரஸ்வதி சமேதராய் அன்னவாகன மீதேறியும் அந்தரமார்க்கமாக தோற்றப்படுவார்கள் யாவரும் பார்த்து தேவர்களை தோத்தரித்து கொண்டாடிக் கூத்தாடிமகிழ்வார்கள்.

## 362. இரவில் விசித்திரமான சபாமண்டபம் காட்டும் ஜாலம்.

இரவில் வெட்டவெளியான மைதானத்திற்சென்று சதுரமாகக் கோடுகிழித்து அங்குள்ளவர்களைப் பார்த்து இந்தமைதானத்தில் விசித்திர சபாமண்டபம் பாருங்களென்று நாலுகெச்சவசக்கரையெரிடுத்து தந்திரமாக அஷ்டமாசித்திமையை விரலில்தொட்டு நாலுகயெகளுக்குந் தடவி ஓட்டின் நாலுமூலையிலும்வைத்து வாலைமந்திரத்தை 103 ஜெபித்து பைரவர் மந்திரத்தைஆயிரத்தெட்டோதி எரு எலுமிச்சப் பழத்தையெடுத்து நாலுபத்தையாக அறுத்து நாலுதிக்கிலும் விசி யெறிந்து விசித்திரமண்டபம் தோற்றும் சகலரும் பார்த்து இது சாமுண்டி வசியமென்று ஆச்சரியப்படுவார்கள் ஆனால் தோற்றமாகிஉடனே மறைந்துவிடும்

## 363. அந்தரத்தில் இந்திரன் சபையைக்காட்டும் ஜாலம்.

இரவில் நந்தவனத்தினிடமாகச் அங்குள்ளவர்களைப் பார்த்து தெய்வலோகத்தில் வாழும்படியான இந்திரனுடைய சபையை ஆகாயமார்க்கத்திற் காட்டுகிறேன்பாரென்று வாலைமந்திரத்தை ஆயிரத்தெட்டோதி பைரவர்மந்திரம் 108 ஜெபித்து ஆகாயவாணியை நினைத்து தேவேந்திரன் சபைதோற்ற வேணுமெ

ன்று மனதில் எண்ணி ஒன்பது எலுமிச்சடுபழம் சபைதோற்ற வேணுமென்று மனதில் எண்ணி ஒன்பது பழத்திற்குந் தந்திரமாகத் தடவி எட்டுதிக்கிலும் எட்டுப் பழத்தை விட்டெறிய உடனே முப்பது முக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் கின்னரர் கிம்புருடர் அஷ்டதிக்குபாலகர் காந்தர்வர் முதலான பேர்களும் புடைசூழ இந்திரன் கொலுவீற்றிருக்க அரம்பை மேனகை ஊர்வசி திலோர்த்தமை முதலான நடனமாதர்கள் நடனம் புரிய மகா உன்னமாகத் தோற்றும் பார்ப்போரெல்லாம் பிர்மித்து இதுவென்ன வசியமோஎன்ன மந்திரமகிமையோவென்று மதிமயங்கி மிரண்டு ஆகாயத்தையே பார்ப்பார்கள்.

## 364. விஜயமோடி விதவை.

காட்டிற்குள்ளாயினும் அல்லது இன்னமெந்த விடங்களி லாயினும் பச்சைப் பந்தல் போட்டு மேடை யேற்படுத்தி அந்த மேடையை பசுஞ்சாணத்தினல் மெழுகி மஞ்சளை அரைத்துப் பிள்ளையார் பிடித்து வைத்து ஆருகன் புல்சூடி பந்தலில் வாழைமரங் கட்டி சுற்றிலும் மாவிலை தோரண முக்கட்டி பிள்ளையார்க்கு முன் ஒருதட்டில் மூன்றுஎலுமிச்சம் பழமும் ஒரு விராகனும் வைத்து அதற்கெதிரில் குருக்கே ஒருகோடுகீறி கோட்டிற்கு நடுவில் பட்டாக்கத்தியொன்றுநாட்டி அதற்கு நாலடி தூரத்திற்கப்பால் ஒரு கோடுகீறி அதற்குநடுவில் ஒரு யீட்டியைநாட்டி அதற்கு யெட்டடிதூரத்தில் ஒருகோடுகீறி அதற்கு நடுவில் கட்டாரியைநாட்டி அதற்குப் பனிரண்டடிதூரத்தில் உலக்கை ஒன்றுநாட்டி அதற்குப் பதினாறடிதூரத்தில் தாம்புக்கயரைவைத்து அதற்கு இருபடிதூரத்தில் பாதரட்சையைவைத்து அதற்கு இருபத்துநாலடிதூரத்தில் முரம் ஒன்றுவைத்து அதற்குமுன குட்டிச்சாத்தான பொம்மையை நிற்கவைக்கவும் பிறகு ஒரு முறத்தில பச்சரிசிபோட்டு மஞ்சள்தண்ணீர் தெளித்துப் பிசரிவைத்துக்கொள்ளவும்.

இவ்விதமோடியை யெடுக்கும்படியாக விருதுபூண்ட மகாமந்திரக்காரர்கள் மகுடக்குழையூதி எடுக்கவருவாராகில் அப்போது குட்டிச்சாத்தான் பொம்மைக்குப் பின்னல் ஒருசிறுவனை குந்தவைத்து அஷ்டமாசித்திமையை சேஷரிசியில் தெளித்து அந்தமுறத்தை சிறுவனிடத்திற்கொடுத்து எதிரியின்மேல்கொஞ்சமெடுத்துப் போடச்சொல்ல அந்த அரிசி அவன்மேல் பட்டவுடன் தேகமெல்லாம் திகுதிகுவென்று எரிச்சலுண்டாகி அவனை பின்னுக்கு எட்டிக்கொண்டு போகவிடும். அதைக்கட்டிக்கொண்டு மறுபடியும் வருவானுகில் அஷ்டமாசித்திமையை விரலில்தொட்டுக்கொண்டு வேப்பிலையையுருவி அவன்மேல்போட செந்தேள் கருந்தேளாகப்போய் அவன் தேகமெங்கும் கொட்டிம். அதையுந்தடுத்து வருவானுகில் மேற்படிமையைத்தொட்டு புளியனிலையை உருவிப்போட செங்குளவி செய்யான் பூரான் இவைகள் பிடுங்கும், அதையும்கட்டிக்கொண்டு வருவானுகில் அடப்பக்கட்டைக்கு மேற்படி மையைத்தடவிவிட அதுகிளம்பி எதிரியைஜாடும் அதையுங்கட்டிக்கொண்டு வருவானுகில் மேற்படிமையைமுறத்துக்கு தடவிவிட முறமெழுந்துப்போஜாடும் அதையுந்தாண்டி வருவானுகில் மேற்படிமையைபாதரட்சையிற் தடவிவிட அதிகாகாவென்று சுழன்றுபோய் மாறிமாறி அடிக்கும்

அலையுந்தடுத்து வருவானுகில் மேற்படிமையைகட்டாரியில் தடவிவிட பாய்ந்து குத்தும் அதையுங்கட்டிக்கொண்டு வருவானுகில் ஈட்டியின்மேல்மேற்படிமையை தடவிவிட அதுகிளம்பி அவனைப் பாய்ந்து குத்தும் அதையுங் கட்டிக்கொண்டு வருவானுகில் மேற்படிமையைப் பட்டாக்கத்தியிற்றடவிவிட அது அவன் தேகத்தை சக்கைசக்கையாக வெட்டிப்பிளக்கும் அதையும் கட்டிக்கொண்டு வருவானுகில் மேற்படிமையை பட்டாங்கத்தியிற் றடவிவிட அது எதிரியின் தேகத்தை சக்கைசக்கையாக வெட்டிப்பிளக்குப்பிளக்கும் அதையும் கட்டிக்கொண்டு வருவானுகில் சேஷரிசியை அதன்மேல் எடுத்துப்போட பீஜமானது சித்தையைப் போல் பெருத்து தேகமெல்லாம் அக்கினி சுவாலையாகப் பற்றியெரியும் அதையுங்கட்டிக்கொண்டு வருவானுகில் மறுபடியும் சேஷ்ரிசியை எடுத்துப்போட வாயிலும் மூச்கிலும் காதிலும் இரத்தங்கொப்பளித்து வரும். மரணத்திற்குச்சரியான மூர்ச்சையடைவான் அதன்பின்பு சார்ந்தவர்கள்யாவரும் உன்காலில்வந்து விழுந்து உயிர்பிச்சை தரவேணுமென்று கெஞ்சி அழுவார்கள் அப்போது நீ அவர்கள் பூண்டுவந்த விருதுமுதலானதையும் கழட்டிவைக்கச்சொல்லி ஐங்கோலமையை யெடுத்து மூர்ச்சையாகக்கிடப்பவன் தடவ உடனே இவனெழுந்து உன்னைவணங்கி இந்த மோடியையெடுக்க எங்களாலும் இன்னம் எங்களாலும் முடியாதென்று பயந்தோடுவான் வேடிக்கைப்பார்க்க வந்தவர்களெல்லாம் உன் உன்னைக் கொண்டாடிப் புகழ்வார்கள்.

## 365. எவ்வித மோடிவைக்கினும் எடுக்கும் வித்தை.

எவ்விதக்கருவை ஸ்தாபித்து மந்திர உச்சாடனங்கள் செய்தவனுயிருந்தவனுலும் கொஞ்சமும் அச்சமில்லாமல் தீரமாய் எடுப்பேனென்று அனைவருக்குஞ்சொல்லி அனுமந்த தியானஞ்செய்து மயானருத்திர மந்திரத்தை ஆயிரத்தெட்டுசொல்லி மகாமாயமையும் ஐங்கோலக்கருவையும் மோடி பந்தலின்மேல் தெளித்து மறப்புமையை பொட்டிட்டுக்கொண்டு சரேலென்றுபோய் கண்மூடி கண்திறக்குமுன் எடுத்துக்கொண்டு தன்னுடைய யதாஸ்தானத்திற்கு வந்துவிடலாம். மோடிவைத்தவனும் வேடிக்கைப்பார்ப்பவர்களும் பிர்மித்து ஆச்சரியப்படுவார்கள். ஆனல் மோடியெடுத்துக்கொண்டு யதாஸ்தானம் வந்தவுடனே நெற்றியிலுள்ள பொட்டைக் கலைத்துவிடவேண்டும்

## 366. ஒருமனிதன் பனமரத்தை வேரோடுபிடுங்கும்ஜாலம்.

ஒரு பனமரத்தருகில்போய் நின்று கூடவந்தவர்களைப் பார்த்து இந்த மரத்தைநானொருவனே வேரோடுபிடுங்கிப்போடுகிறேனென்று ஆஞ்சநேயரைத்தியானித்து அஷ்டமாசித்திமையை விரலில்தொட்டு மரத்திற்றடவி பிறகு கண்கட்டுமையை கொஞ்சமெடுத்துக் கையிற்பூசிக்கொண்டு மரத்தைப் பிடுங்குவதுபோல் கண்ணுக்குத்தோற்றும். ஆச்சரியப்பட்டு ஆஞ்சநேயர் வசியமென்று நம்புவார்கள் மூணேமுக்கால் நாழிகையானவுடன் நாம் எப்போதும்போல்நிற்கும். அதற்குள் நீ சபையோர்களைப்பார்த்து இந்தமரத்தை முன்போல் நட்டுவிடுகிறேனென்று மையை துடைத்துவிடவேண்டும்.

### 367. பூமியில் புதைத்தமுட்டை பூமிவெடித்து ஆகாயமார்க்கமாக கிளம்பும் ஜாலம்.

ஜாலமபடுமிடத்தில் கருக்கோழி முட்டையொன்று கையிலெடுத்து அனைவருக்குங் காட்டி இந்த முட்டையை பூமியில் புதைத்து விடுகிறேன். பூமியானது வெடித்து முட்டை ஆகாயமார்க்கமாகப் போகும் அற்புத வேடிக்கை ப்பாருங்களென்று வாலைமந்திரத்தை நூற்றியெட்டுதரம் செபித்து ஜாலக்காளை பூசித்து இந்த முட்டை பூமி வெடித்து ஆகாயமார்க்கம் போகவேணு மென்று மனதிலெண்ணி அஷ்டமாசித்துமையை விரலில்தொட்டு முட்டையின்மேல் தடவி ஒருஜாண் பள்ளந்தோண்டி முட்டையை அதற்குள்வைத்து குழியைமறைத்து விட்டு குட்டிசாத்தான் பொம்மையைக் கையிலெடுத்து அடே குட்டிச்சாத்தான் பூமியில் புதைத்தமுட்டை ஆகாயம் ஜிவ்வென்று கிளம்பிப்போகும் பார்ப்போர்கள் ஆச்சரியப்பட்டு மகாமந்திரவாதியென்று பிரமிப்பார்கள்.

### 368. வீடு பத்தியெறியும் ஜாலம்.

கூரைவீடாகிலும் கல்லுவீடாகிலும் அதனை அங்குள்ளவர்களுக்குக் காட்டி இந்த வீட்டை பத்தியெறியும்படி செய்கிறறனென்று ஒரு சிறிய கூழாங்கல்லை எடுத்து அதன்மேல் அஷ்டமாசித்து மையைத்தடவி பைரவர் மந்திரத்தை நூற்றியெட்டுசொல்லி அந்தக்கல்லை அவ்வீட்டின்மேல் தாக்கும்படி விட்டெறிய கல்போய் தாக்கினவுடனே குபீலென்று பத்தியெறிவதுபோல் தோற்றப்படும் பார்ப்பவர்கள் குய்யோ முறையோவென்று கூச்சலிட்டு திகைத்து நிற்பார்கள் உடனே அவர்களுக்குமுன்னே இன்னொருகல்லை யெடுத்து எறியும் வீட்டின் மேல் விட்டெறிய வீடு யெப்போதும்போல் தோற்றும் இது கண்கட்டு வித்தை யென்பார்கள்.

### 369. வைக்கோல்போர் பத்தியெறியும் ஜாலம்.

வைக்கோல்போறை அனைவருக்குங்காட்டி இந்த வைக்கோல்போரை பத்தியெறியும்படி செய்கிறேன் பாருங்களென்றுசொல்லி மேற்கூறியபடிசெய்து கல்லைவிட்டெறிய குபீலென்றுப் பத்தியெறியும் ஆச்சரியப்பட்டு அக்கினிவசியமென்பார்கள்.

### 370. தண்ணீருள்ள தடாகத்தை தண்ணீரில்லாமல் செய்யும் ஜாலம்.

தடாகத்தின் அருகிற்சென்று அங்குள்ளவர்களைப் பார்த்து இந்த தடாகத்திலுள்ள நீரையெல்லாம் வத்திப்போகும்படிச் செய்கிறேனென்று வாலையைத் தியானித்து வைரவர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து அஷ்டமாசித்துமையை விரலில் தொட்டு தடாகஜலத்தில் தெரிக்கும்படியாக தெளித்து கண்கட்டு மையை கொஞ்சமெடுத்து கையிற் பூசிக்கொண்டு ஜலத்தைத்தொட உடனே

பார்ப்போர்களெல்லாம் கெங்காபவானியை வசியஞ்செய்தானென்று கலங்கி உன்னைப்பார்த்து மறுபடியும் சலத்தை உண்டாகச் செய்வாயென்று வணங்கிக் கேட்பாராகில் உடனே நீ கண்கட்டுமையை துடைத்துவிட்டு ஐங்கோலமையை கொஞ்சந்தொட்டு ஜலத்தில் தெளிக்க தடாகமானது முன்போல் தண்ணீருடன் தோற்றும்.

## 371. தண்ணீரில்லாத தடாகத்தில் தண்ணீர் உண்டாக்கும் ஜாலம்.

தண்ணீரில்லாமல் உலர்ந்திருக்கும் ஒருதடாகத்தி னருகிற்சென்று அங்குள்ள பேர்களைப்பார்த்து இந்த நீரில்லாமல் உலர்த்துகிடக்கும் தடாகத்தின் நிறைய தண்ணீர் உண்டாகச் செய்கிறேன்னென்று வாலைமந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து கங்காபவானியைத் தியானித்து ஐங்கோலக்கருவை விரலில் தொட்டு ஒரு எலுமிச்சம்பழத்தின் மேற்றடவி தடாகத்தில் விட்டெறிந்து கண்கட்டுமையை கையிற்பூசிக்கொண்டு அந்த குளத்தின் மேல் கையைவைத்துக் கொண்டு இருக்க பார்ப்போர்களுக்கெல்லாம் தடாகம் நிறைய தண்ணீரிருப்பது போல் தோற்றும் யாவரும் ஆச்சரியப்பட்டு கங்காபவானி வசியமென்பார்கள் சற்றுநேரம் பொருத்து கையில்பூசிய கண்கட்டு மையை கழுவி விட தாடகம் எப்போதும்போல் நீரில்லா மற்றோற்றும்.

## 372. ஒரு ஜாதிமரத்தில் பலவித பழங்கள் பழுக்கும் ஜாலம்.

மாமரம் விளாமரம் கிச்சிலிமரம் எலுமிச்சமரம் கொய்யாமரம் மாதளமரம். இந்த மரங்களில் எததனுமொன்றின் அருகிற்சென்று அங்குள்ளவர்களைப் பார்த்து எந்தமரமோ அந்த மரத்தைப்பார்த்து அதின் பெயரைச்சொல்லி இந்த மரத்தில் பழுக்கும் மழம்போலாக இன்னம் கொய்யாப்பழம் மாம்பழம் விளாம் பழம் கிச்சிலிப்பழம் எலுமிச்சம்பழம் மாதுளம்பழம் அத்திப்பழம் பெலாப்பழம் இவை முதலானதும் இந்த ஒரு மரத்திலேயே காய்த்து பழுத்து தொங்கும்படிச் செய்கிறேன் பாருங்களென்று அவ்ஷ்டமா சித்திமையையும் ஐங்கோலக்கருவையும் விரலில் தொட்டுக்கொண்டு வாலை மந்திரத்தை நூத்தியெட்டு ஒதி இந்த மரத்தில் மேற்சொல்லியபடி பலவிதக்கனிகள் பழுத்து தொங்கவேணுமென்று மனதில் நினைத்து ஐங்கோலக்கருவையும் மரத்திற்றடவி பிறகு கண்கட்டு மையை கொஞ்சம் விரலில்பூசி மரத்தின்மேல் விரலைவைத்துக் கொண்டிருக்க பார்ப்பவர்களுக்கு மேற்கூறிப கனிவர்க்கங்கயெல்லாம் பழுத்து தொங்கும் ஆச்சரியப்பட்டு இது காளபயிரவர்வசியமென்று கண்பூர்க்க பார்த்துநிற்பார்கள்.

## 373. காடுபத்தியெறியும் ஜாலம்.

இந்தவித்தை செய்துபார்க்க விருப்பமுண்டாயின் தனக்கு இஷ்டமான பெயர்களையும் இன்னும் எவர்களையாயினும் அழைத்துக்கொண்டு இரவில் ஒரு அடவியிற்சென்று தன்னுடன் வந்தவர்களைப் பார்த்து இந்தக்காட்டை எறியும்

படி செய்கிறேனென்று அஷ்டமாசித்திமைய் விரலில்தொட்டு சிறியகல்லொன்றையெடுத்து அந்தமைய் அதின் மேற்பூசி வாலைமந்திரத்தை அயிரத்தெட்டோதி பைரவர்மந்திரம் நூற்றெட்டு ஜெபித்து ஜாலக்காளைத்தொழுது அந்தக்கல்லை அனைவரும்பார்க்க அடவியில்விட்டெறிய உடனே காடானது குபீலென்று எறிவதுபோல் தோற்றும் அனைவரும் ஆச்சரியப்பட்டு அக்கினிதேவன் வசியமென்பார் உடனே அவத்துவிடுகிறேன் பாரென்று ஒரு சிறிய கல்லை எடுத்து ஐங்கோலக்கருவை தடவிவிட்டெறிய உடனே எறிவது விட்டமர்ந்து முன்போல்தோன்ற அப்போது உன்னை "மகாமந்திரவாதிஎன்றும் மதிமயங்கி திகிலடைந்துப் பிர்மித்து கொண்டாடுவார்கள்.

## 374. அரசன் படையெடுத்து வருவதுபோல் காட்டும் ஜாலம்.

வெட்டவெளியான மைதானத்தில் இஷ்டமானப் பெயர்களையும் இன்னும் மற்றவர்களையும் இரவில் அழைத்துச்சென்று இதோ பாருங்கள் இந்த மைதானத்தில் அரசன் தன்படைகளோடு வரும்படியாகச்செய்கிறேன் பாரென்று இஷ்டமாசித்திமையும் மகாமாயமையும் விரலில் தொட்டு ஒன்பது எலுமிச்சம் பழத்தை எடுத்து தந்திரமாக அதுகளின்மேல் தடவி எட்டும்க்கிலும் எட்டுபழத்தை விட்டெறிந்து அரசன்படை எதிர்த்து வருவதுபோல் தோற்றவேணுமென்று தனதில்நினைத்தவுடனே ரதகஜதுரகபதாதிகளுடனே திரளாகத்திரண்டு வருவதுடன் அரசன் யானையின்மீது ஏறிவருவதுபோல் தோற்றும் யாவரும் பார்த்து ஆனந்தசந்தோஷமடைந்து அது அருமையான வித்தையென்று ஆச்சரியப்படுவார்கள் உடனே நீ ஒரு எலுமிச்சம் பழத்தை எடுத்து ஐங்கோலக்கருவை தடவி அதை நாலுபிளவாக அருத்து நாலு திக்கிலும்போட அரசன்சேனைகளும் மாயமாகப் போய்விடும்.

## 375. குடத்தினுள் மனிதன் புகுறும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு மண்குடங்கொண்டு வரும்படியாகச்செய்து அங்குள்ளவர்களைப் பார்த்து இந்த குடத்தினுள் யான்புகுறுகிறேன் பாருங்களென்றுசொல்லி அஷ்டமர்சித்தி மையும் மகாமாயமையும் விரலில்தொட்டு குடத்தின்மேல்தடவி கண்கட்டுமையை கையிற்பூசிக்கொண்டு குடத்தின்மேல் னகயைவைத்து தலையை குடத்தின் வாய்க்குநேராக வைத்துக்கொண்டிருக்கபார்ப்போர்கள் அனைவருக்கும் குடத்துக்குள் நுழைந்து விட்டாப்போல் தோற்றும் இது ஆஞ்சநேயர் வசியமென்று ஆச்சரியப்படுவார்கள்.

## 376. மாட்டின் வயற்றில் மனிதன் புகுறும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் மாடொன்றைக் கொண்டுவந்தி நிறுத்தி சபையோர்களைப்பார்த்து இந்தமாட்டின் ஆசனவழியாகப் புகுந்து காதின்வழியாக வெளிவ

ருகிறேன் பாருக்கவென்று வாலைமந்திரத்தை ஆயிரத்தெட்டு சொல்லி பைரவர் மந்திரம் நூற்றியெட்டு ஜெபித்து அஷ்டமாசித்து மையை விரலில்தொட்டு மாட்டின்மேல் தெளித்து கண்கட்டுமையை கையிற்பூசிக்கொண்டு மாட்டின் ஆசனத்தில் கையைவைத்து காதுவரைக்குந் தடவிக்கொண்டேவர பார்ப்போர்களுக்கு ஆசனவழியாகப் பூர்ந்து காதுவழியாக வந்ததுபோலிருக்குவ இதுகுட்டிச் சாத்தான் ஏவல் வேலை யென்று ஆச்சரியப்படுவார்கள்.

## 377. பெட்டியில்போட்டு பூட்டினமனிதன் வெளிவரும் ஜாலம்.

ஜாலமாடும் சபையில் ஒரு பெட்டியைக் கொண்டுவரும்படியாகச்செய்து அங்குள்ள அனைவர்களையும் பார்த்து இந்த பெட்டியில் என்னைப்போட்டுமுடி விடுங்கள் பூட்டினபடியே பெட்டியிருக்க நான் வெளியே வருகிறேனென்று மபானருத்திரியைத்தியாளித்து வாலைமந்திரத்தை ஆயிரத்தெட்டோதி அஷ்டமாசித்திமையை பெட்டியின்பேரில் தெளித்து கண்கட்டு மையைகையிற் பூசிக்கொண்டு பெட்டியைத்திறந்து மூடிவிட்டு தந்தாமாக மறப்புமையை கொஞ்சம் தொட்டு பொட்டிட்டுக்கொள்ள பார்ப்போர்களுக்டி மனிதன் பெட்டிக்குள்யிருப்பதாகத்தோற்றும் அப்போது நீ ஜாக்கிரதையாய் மறப்புமையை துடைத்துவிட பெட்டியிலிருந்து வெளிவந்தாற்போல் தோற்றும் ஆச்சரியப்படுவார்கள்.

## 378. பாராங்கல் தண்ணியின்மேல் மிதக்கும் ஜாலம்.

தடாகத்தின் அருகில்சென்று பெரிய பாராங்கல் ஒன்றைகொண்டு வரும்படியாக அங்குள்ளவர்களைப் பார்த்து இந்தகல்லை தண்ணீரின்மேல் மிதக்கும்படிசெய்கிறேனென்று வாலைமந்திரத்தை ஆயிரத்தெட்டோதி பைரவர் மந்திரம் நூற்றியெட்டு ஜெபித்து அஷ்டமாசித்து மையைவிரலில் தொட்டு பாறையின்மேல் தெளித்து அடா குட்டிச்சாத்தான் இந்த பாறையை குளத்திற்போடுகிறேன் அது தண்ணியிலே முழுகவொட்டாமல் நீ அந்த கல்லின் அடியிலிருந்து தாங்கிக்கொண்டு யிருவென்று கல்லையுருட்டி குளத்திற்குள்விட பார்ப்போர்களுக்கு கல்மிதப்பதுபோல் தோற்றும் அனைவரும் ஆச்சரியப்பட்டு இது கங்காபவானி வடிவமென்றுநம்புவார்கள்.

## 379. சவரன் உண்டாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்திற் துமிட்டிக்காயொன்றை கையிலெடுத்து சபையைப் பார்த்து இந்தகாயை பூமியின்மேல் அடிக்கிறேன் அதிலிருந்து சவரன்கள் உண்டாகும் பாருங்களென்று வாலைமந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து பைரவர்மந்திரம் நூற்றியெட்டோதி அஷ்டமாசித்துமையை விரலில் தொட்டு சவரன் உண்டாகவேணுமென்று நினைத்து மையைக்காயின்மேல் தடவி பூமியின்மேல்மோதி

யடிக்க அந்த காயினுள்ளிருந்த விதை எத்தனையோ அத்தனை சவரான் உண்டாகும் ஆச்சரியப்படுவார்கள் உடனே எடுத்து மறைத்து விடலாம்.

## 380. வெள்ளி ரூபாவகையருக்கள் உண்டாகும் ஜாலம்.

ஜாலமாடு மிடத்தில் வந்து நின்று தந்திரமாக அஷ்ட மாசித்து மையை விரலில் தொட்டுக் கொண்டு பூமியில் வோர்பிடி மண்ணை கையில் அள்ளிச் சபை யோர்களைப் பார்த்து இந்த மண்ணைக் கீழே போடுகிறேன் முழுரூபா அரைரூபா கால்ரூபா அரிக்கால்ரூபா இவைகளாகும்படி செய்கிறேனென்று வாலைமந்திரத்தை ஆயிரத்தெட்டோதி பைரவர்மந்திரம் நூற்றியெட்டு ஜெபித்து ஜாலக்காளை துதித்து சல்மலையாயபகவதி ரூபாவகையருக்களாகவேணுமென்று மனதிலெண்ணி கையிலுள்ள மண்ணைக் கீழேபோட மேற்சொன்னபடி ரூபாம்கையராக்கள்தோற்று பார்ப்போர்கள் ஆச்சரியப்பட்டு இது குட்டிச்சாத்தான் எவலென்று நம்புவார்கள் முன்போல் இதையும் உடனே மறைத்து விடவும்.

## 381. செம்பு துட்டுவகையருக்கள் உண்டாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் வந்துநின்று மேற்கூறியவண்ணம் தவராமல்செய்து அரையணு காலணு அரைகாசு இவைகலாகவேணுமென்று மனதிலெண்ணி மண்ணைகீழேபோட செம்புதுட்டு வகையாக்கள் தோற்றும் அதுகண்டு சபையோர்கள்யாவரும் பிர்மித்து திகைத்து ஆச்சரியப்படுவார்கள் ஆனால் நீ முன்போல் உடனே மறைத்துவிடவேண்டும் ஏன் மறைத்துவிட வேண்டுமென்றால் மூனே முக்கால் நாழிக்குள் மாயமாகமறைந்துவிடும் அதற்குமுன் நாமே மறைத்துவிட்டால் சபையோர்களுக்கு இந்தச்சூது தெரியாது நிஜமென்று நம்புவார்கள்.

## 382. மண்பாத்திரங்கள் பித்தளைப்பாத்திரமாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் தனக்கு இஷ்டமான மண்பாத்திரங்களைக் கொண்டுவந்துவைத்து சபையோர்களைப்பார்த்து இந்த மண்பாத்துரங்களையெல்லாம் பித்தளை பாத்திரமாக்குகிறேனென்று |வாலைமந்திரத்தை ஆயிரத்தெட்டு தரம் ஜெபித்து பைரவர் மந்திரத்தை நூற்றியெட்டுதரஞ் சொல்லி அஷ்டமாசித்து மையையும் ஐங்கோலக்கருவையும் விரலில்தொட்டு இந்த மண்பாத்ரமெல்லாம் பித்தளைபாத்திரமாகவேணுமென்று மனதிலேண்ணி ஜாலக்காளைஜெபித்து மேற்படிமைகளை பாத்ரங்களின்மீதுதெளிக்க உடனே பித்தளைபாத்ரங்களாகத்தோற்றும் யாவருங் கண்டு அதிசயிப்பார்கள் பிறகு நீ அந்தபாத்ரங்களைப் பார்த்து சல் மலையாளபகவதி முன்போல் மண்பாத்திரமாகச்செய்வாயென்று துணியைப்போட்டு மறைத்துவிடவேண்டும்.

## 383. வெள்ளிபாத்திரம் பொன்பாத்திரமாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் வெள்ளிபாத்ரங்களைக் கொண்டுவந்துவைத்து இதை பொன்பாத்ரமாக்குகிறேனென்று மேற்கூறியபடி மந்த்ரமுதலானதுஞ்செபித்து

வெள்ளிபாத்ரத்தை பொன்பாத்ர மாக்கவேணுமென்று மனதில்யெண்ணி முன் போல் மைகளைத்தொட்டு பாத்ரத்தின்மேல் தெளிக்க பொன்பாத்ரமாகத் தோற்றும் பார்ப்போருடைய கண்கள்பூர்த்து பலவிதமாக உன்னைகொண்டாடுவார்கள் ஆனல் நீ மேற்சொல்லியபடி சொல்லி நீ மறைத்துவிடவேண்டும்.

## 384. பித்தளைபாத்திரம் வெள்ளிபபாத்திரமாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் பித்தளை பாத்திரங்களைக் கொண்டுவந்து வைத்து மேற்சொல்லியவாறு மந்த்ரமுதலானது மோதி பித்தளைபாத்ரம் வெள்ளிபாத்ர மாக வேணுமென்று மனதிலெண்ணி மைகளைத் தெளித்தவுடன் வெள்ளிபாத்ரமாகத் தோற்றும் பார்ப்போர்கள் யாவரும்பிர்மித்து ஆச்சரியப்படுவார்கள் ஆனல் மேற்சொல்லியவாறு சொல்லி மறைத்துவிடவேண்டும்,

## 385. வஸ்திரங்கள் உண்டாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்திலேனும் இன்னம் எந்த இடங்களிலேனும் ஒரு மூங்கிற் பெட்டியைக் கொண்டுவந்து வைத்து அந்த பெட்டியைத் திறந்து யாவருக்குங் காட்டி இந்தப்பெட்டியில் பஞ்சைப்போட்டு மூடிவிடுகிறேன் வஸ்திரங்களாகும் விநோதங்களை பாருங்களென்று அஷ்டமாசித்துமையையும் ஜங்கோலக் கருவையும் விரலில்தொட்டு வாலைமந்தரத்தை ஆயிரத்தெட்டுஜெபித்து கொஞ்சம் பஞ்சைகையிலெடுத்து மையையதிற்றடவி இந்தப்பஞ்சு வஸ்திரங்களாக வேணுமென்று மனதில் எண்ணி மூங்கிற்பெட்டியிற் போட்டுமூடி பிறகு குட்டிச்சாத்தான் மெம்மையை கையிலெடுத்து சபையோர்கள் நம்பும்படியாக அடே குட்டிச்சாத்தான் இந்த பெட்டிக்குள் யிருக்கும் பஞ்சியை பட்டுவஸ்திரங்களாகத் தோற்றும்படியாகச் செய்வாய்யென்றுசொல்ல பட்டுவஸ்திரங்களாகவே தோற்றும் பார்ப்போர்களனைவரும் இது என்ன ஆசசரியமென்று எண்ணுதும் எண்ணி உன்னை வகா மந்தரக்காறனென்று கொண்டாடுவார்கள் உடனே மேற்சொன்னபடி மறைத்விடவேண்டும்.

## 386. ஜெகஜால வித்தைகளாட கரு

கத்தியால்வெட்டுண்டு இரந்தவர்களின் கொழுப்பை எடுத்துருக்கி அதை நெய்யுடன் சேர்த்துவைத்துக்கொண்டு அவனுடைய சிரசை கத்தியால்வெட்டி உரலிலிட்டு இடித்து உலர்த்தி சரகுபோல் ஆனபின்பு செல்லாமணக்கு பலம் எட்டு இவை இரண்டையும் இடித்து அதனுடன்சேர்த்து நாதவிந்துபலம் இரண்டும்!சிரியானங்கைசமூலம் இரண்டுபலமும் எட்டிக்கொட்டைபலம் எட்டும் இவை இவைகளையிடித்து அத்துடன்சேர்த்து மேற்படிநெய்யுங் கொழுப்பையும் கலந்து கோரோசனை கஸ்தூரி புனுகு இவைமூன்றும் காற்பலமாகச்சேர்த்து இரந்தவரை சமாதியில்வைத்யெலும்பு பலமெட்டும் பஞ்சள்பலமாக இவையிரண்டையுமிடித்தே அதிற்கலந்து ஒருபுதுபாண்டத்தில் மேற்கூறிய வகைகள்யாவையும் ஒன்றாகக்

கலந் ததிவிட்டு மேல் ஒருபாண்டத்தைமூடி எழுமண்சீலைசெய்து இரண்டுமுழம் குழி பூமியில்வெட்டி அந்தகுழிமத்தியில் எழுசிறிய கலசம்வைத்து பாண்டத்திற் கடியில் சிறியதுவாரஞ்செய்து அந்தபாண்டத்தை கலசத்தின்மேல்வைத்து சமா தியெருவைக்கொண்டுவந்து குழியைமூடி அதன்மேல் காலாக்கினியாகத் தீமூட்டி ஒரு சாமம்வரைக்கு மெறித்து விட்டுவிட வேண்டும் பிறகு ஒருமண்டலம் பொ றுத்து குழியைதோண்டி பாண்டத்தை யெடுத்து அப்புறம் வைத்துவிட்டு கலச த்தை எடுத்துப்பார்க்க தயிலமிறங்கி யிருக்கும் அதை சீசாவிலிட்டு வைத்துக்கொ ண்டு குருபரனை தியானித்து சக்கலாதேவி பூசைசெய்ய சித்தியாகும்.

பூசைமந்திரம் செபிக்கும்விதம் எவ்விதமெனில் மையை பூசையில்வைத்து ஓம் றீம் கிரியும் அரியும் சவ்வுமென்று ஒருமண்டலம் தவராமல் நாள்தோறும் மூன்றுவேளையும் வேளையொன்றுக்கு முன்னூறு உருகொடுத்துவர சக்கலாதே விப் பிரசன்னமாவாள் அப்படி பிரசன்ன மானவுடனே மையை யெடுத்து பத் திரப்படுத்தி வைத்துக்கொண்டு மனம்போல ஜாலவித்தை யாடலாம்.

## 387. கல்பிள்ளையாரை நகரவைக்கும் ஜாலம்.

விநாயகருடைய ஆலயத்திற்சென்று அங்குள்ளவர்களைப் பார்த்து இந்தப் பிள்ளையாரைப் பூசைசெய்து என்வசமாக்கி அவரிருக்கும் இடத்தைவிட்டு அப் பால் நகரும்படி செய்கிறேன் பாரென்றுசொல்லி ஜெகஜாலக்கருவை விரலில் தொட்டு சக்கலாதேவியை நினைத்து தந்திரமாகக் கருவை பிள்ளையார் சிரதில் தடவிவிட்டு ஆலயத்திற்கு வெளியில் வந்து பாதையில் நின்று ஸ்மரிக்க பிள்ளை யார் தன்னிருப்பிடம்விட்டு அப்பால் நகருவதுபோல் தோற்றும் பார்ப்பவர்கள் யாவரும் புதுமையாயிருக்குதென்று அதிசயிப்பார்கள்.

## 388. நோக்கர் கெடைகம்பம் போடியாகும் ஜாலம்.

நோக்கர் கெடைகம்பம் நட்டு ஆடுமிடத்திற்குப் போகுமுன்னமே ஜெகஜா லக்கருவில் அரை குண்டுமணியெடுத்து கோட்டான் இரத்தங்கொஞ்சம் விட்டு இரண்டையும் மத்தித்து வைத்துக்கொள்ளவும் நோக்கர் ஆடுமிடத்திற்குச் செ ன்று வேடிக்கைப் பார்ப்பவன்போய் நின்று சக்கலாதேவியுட மூலமந்திரத்தை செபித்து ஷெ தயிலத்தை அவர்களாடும் கம்பத்திற்றடவி விட்டு நீ உன்னுடைய வீட்டிற்கு வந்துவிடுவையாகில் உடனே நோக்கர் சமர்த்தாக ஊரெங்குந்திரிந்து ஆடும்படியான கம்பமானது பலபலவென்று முறிந்து பொடிப்பொடியாய்போய் விடும் வெகுபேர்கள் மூர்ச்சையாக விழுவார்கள் நோக்கனும் வாடியோடிப்போ வான் வேடிக்கைப் பார்ப்பவர்களெல்லாம் வெருண்டு மிரளுவார்கள்.

## 389. ஆலமரம் அடியோடு சாயும் அற்புதஜாலம்

இஷ்டமான பெயர்களை அழைத்துக்கொண்டு ஆலவிருட்சத்தருகிற்சென் றிந்த வேரோடு சாய்ந்துவிடும்படி செய்கிறேனென்று மேற்சொன்னபடி ஜெக

ஜாலக்கருவையும் கோட்டான் இரத்தத்தையும் மத்தித்து விரலிற்தொட்டு சக்க லாதேவி மந்திரத்தை செபித்து மையை மரத்தில் தடவிவிட்டு அப்பால்வந்து விட ஆலமரம் அடியோடே சாயும் பார்க்கும் பெயர்களெல்லாம் பயந்தோடுவார் கள் சிலர் அனுமார் வசியமென்று நம்புவார்கள்.

## 390. கருங்கல் பாறையை பொடிப்பொடியாக வேடிக்கச்செய்யும் ஜாலம்.

ஒரு பெருங் கருங்கல்லைக் கொண்டுவருப்படிச் செய்பவும் அல்லது பாரை யிருக்குமிடத்திலேனும் சென்று இந்த பாறையை கண்முடி கண்திறக்குமுன்ன மே பொடிபொடியாகச் செய்கிறேனென்று சபதங்கள்கூறி பந்தயங்கட்டுவாரா யினும் கட்டிக்கொண்டு முன்போல்மையை விரலில் தொட்டு சக்கலாதேவி மூல மந்திரத்தை செபித்து பாறையின்மேல் படும்படி தெளிக்க உடனே பாறையான துபடாலென்று வெடித்து சுக்கல் சுக்கலாகப்போகும் பார்ப்பவர்களெல்லாம் பதைத்து பயந்து மிரண்டோடுவார்கள்.

## 391. எதிரிசெய்யும் பாணுதடியைப் பொடிப்பொடியாகச் செய்யும் ஜாலம்.

பாணுசெய்யுமிடத்தில் வேடிக்கைப் பார்ப்பவர்கள்போல் நின்று மேற்படி கருவை விரலிற்தொட்டு சக்கலாதேவி மூலமந்திரத்தை செபித்து தந்திரமாக பாணுதடியில் படும்படியாகத் தெளித்துவிட்டு நீ யுன்னிருப்பிடம் வந்துவிட அந்த தடியானது பொடிப்பொடியாக முறிந்தொடிந்துப் போய்விடும் அனைவ ரும் ஆச்சரியப்படுவார்கள்.

## 392. எதிரிசெய்யும் பட்டாக்கத்தியை இரண்டு துண்டாக்கும் ஜாலம்

மேற்சொன்னபடி சக்கலாதேவி மூலமந்திரத்தை செபித்து ஜெகஜாலக் கருவை பட்டாக்கத்தியில் தடவிவிட்டு நீ வேடிக்கைப் பார்ப்பவன்போல் நின்று கொண்டிருக்கவும் அவன் அந்த பட்டாக்கத்தியை யெடுத்து ஒரு சுழட்டு சுழட்டு முன்னே ஒன்பது துண்டாக ஒடிந்துபோகும் பார்ப்போர்கள் இது என்ன புது மையென்று எண்ணி திகைப்பார்கள்.

## 393. தேங்காய்தள் ஒன்றோடொன்று தாக்கப் பொடிப்பொடியாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் முக்கோண சக்கரங்கீறி அந்த ஒன்பது கோணத்திலும் தேங்காய்வைத்து நடுமேத்தியில் ஒரு தேங்காய்வைத்து அதற்கு மஞ்சள்நீர் தெளி

த்து குங்குமமிட்டு பிறகு சபையோர்களைப்பார்த்து இந்த பத்து தேங்காயும் ஒன்றோடொன்று எதிர்த்துப் போர்புரிவதுபோல் புரிந்து பொடிப்பொடியாகப் போகச்செய்கிறேன் பாருங்களென்று மேற்படி ஜெகஜாலக் கருவை விரலிற் தொட்டு சக்கலாதேவி மூலமந்திரத்தை செபித்துப் பத்துத் தேங்காய்களிலும் மை படும்படியாகத் தெளித்துவிட உடனே அந்த தேங்காய்கள் பூமியில் நிற்கா மல் கிளம்பி வேடிக்கையாக ஒன்றோடொன்று சடால்படாலென்று தாக்கி பொடிப்பொடியாகப் பூமியில் உதிர்ந்து விடும் அனைவரும் பார்த்து ஆச்சரியப் பட்டு மந்திரவாதி என்று உன்னை மதித்துக் கொண்டாடுவார்கள்.

## 394. உடைந்த தேங்காயை மறுபடியும் முழுத்தேங்காயாக்கும் ஜாலம்.

மேற்படி உடைந்த தேங்காய்ப்பொடி யெல்லாம் ஒன்ருகச்சேர்த்து சபை யோர்களைப்பார்த்து இந்த தேங்காய் பொடிகளை முழுதேங்காயாகச்செய்கி றேன் பாருங்களென்று முன்கீரியதுபோலவே நவகோண சக்கரமொன்றுகீறி இந்த தேங்காய்ச்சுக்கலைப் பத்து பங்காகச்செய்து ஒன்பது மூலையிலும் ஒன்பது பங்குவைத்து ஒருபங்கு நடுவில்வைத்து ஐங்கோலக்கருவை விரலில்தொட்டு வாலைமூலமந்திரத்தை ஆயிரத்தொட்டு ஜெபித்து இந்தத் தேங்காய்ப்பொடியை முழுதேங்காயாகப் தோற்றச் செய்வாயென்று கருவை அக்கூறுகளின்மேல் தெளித்து ஒரு தட்டுபோட்டு மூடி சபையோர்கள் நம்பும்படியாக மாத்திரைக் கோலை கையிலெடுத்து அடேகுட்டிச்சாத்தான் இந்தக் கூடைக்குள்ளிருக்கும் தேங்காய்ப்பொடியை எல்லாங்கொண்டுபோய் ஆற்றிலெறிந்துவிட்டு தேங்காய் கடைக்குச்சென்று கடைக்காரனையேமாற்றி நன்ருய்த்தேரின தேங்காய் பத்து கொண்டுவந்து கூடைக்குள் சீக்கிரம் வையடாவென்று மாத்திரைக்கோலால் தட்டின்மேல் மூன்றுதரம்தட்டி தட்டைத் திறந்துக்காட்ட முன்வைத்ததுபோல வேமுழுதேங்காய் களாகத்தோற்றும் ஆச்சரியப்படுவார்கள்.

## 395. ஆடு பற்றியெரியும் வித்தை.

ஜாலமாடு மிடத்திலாவது இன்னமெந்த விடத்திலாவது ஒரு ஆட்டை கொண்டுவந்து நிருத்தச்சொல்லி அங்குள்ளபேர்கள் அனைவரையும் பார்த்து இந்த ஆட்டை பற்றியெறிந்துபோகும்படி செய்கிறேன் பாருங்களென்று ஜெக ஜாலக்காருவை அரைகுண்டுமணி யிடையெடுத்து அதனில் கோட்டான் ரத்தம் விட்டு முன்பாகவே கலந்துவைத்திருந்து அந்தகருவை கையில்தொட்டு சக்கலா தேவி மூலமந்திரத்தை ஜெபித்து இந்தஆட்டை எரிந்து போகச்செய்வாயென்று மனதில் எண்ணி அந்தக்கருவை ஆட்டின்மேல் தெளிக்க உடனே குபீலென்றுப் பத்தியெரித்து சாம்பலாகப்போகும் பார்ப்பவர்கள் அனைவரும் திடுக்கிட்டு இது அக்கினிதேவன் வசியமென்று ஆச்சரியப்படுவார்கள்.

## 396. எரிந்துபோன ஆட்டை மறுபடியும் உண்டாக்கும் ஜாலம்.

அந்தக்ஷணமே நீ சபையோர்களைப்பார்த்து இப்போது எரிந்துபோன ஆட்டை எப்போதும்போல் உண்டாக்குகிறேன் பாருங்களென்று எரிந்த ஆட்டின் சாம்பலையெல்லாம் ஒன்றாகச்சேர்த்து ஐங்கோலக்கருவையும் கண்கட்டு மைய் விரலில்தொட்டு வாலைமந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து பைரவர் மந்திரத்தை நூற்றெட்டோதி எறிந்துபோன ஆட்டை எப்போதும்போல் உருவாகத்தோற்றக் செய்யவேணுமென்று மனதில் எண்ணி மைய் அந்த சாம்பலில் தெளித்து ஒரு பெரிய துப்பட்டியைப்போட்டு மூடி சற்றுநேரம்பொருத்து துப்பட்டியைவாங்க முன்போல் ஆடாகத்தோற்றும் அனைவரும் ஆச்சரியப்பட்டு உன்னை மகாமந்திரவாதியென்று நிச்சயித்துக் கொண்டாடுவார்கள். ஆனால் இவையெல்லாம் மூணேமுக்கால் நாழிகை வரைக்குந்தான் மையின்மறைவு தோற்றமாகும் அதக்குள் வித்தை யாடவேண்டும்.

## 397. எத்தமரம் முறியும் வித்தை.

எத்தமிறைக்கு மிடத்திற்சென்று வேடிக்கைப்பார்ப்பவன்போல் அங்கு நின்று ஜெகஜாலக்கருவும் கோட்டான் ரத்தமுங்கலந்து விரலில்தொட்டுக் கொண்டு சக்கலாதேவி மூலமந்திரத்தை ஜெபித்து கருவை எத்தமரத்தில்தடவ உடனே எத்தமரத்தின்மே லிருப்பவர்களோடு எத்தமரம் அடியோடே சாய்ந்து விடும் அப்போதங்குள்ளவர்கள் அலறி குய்யோ முறையோவென்றுக் கூச்சலிடுவார்கள்.

## 398. எதிரியை வெல்லும் வித்தை.

தான் தனியாக காட்டுவழியிலேனும் இன்னம் எந்தவிடங்களிலேனும்போகும்போது கள்ளர்களாயினும் தனக்கெதிரிகளாயினும் வந்து வழிமறித்து தொந்திரவுசெய்ய வருவார்களாயின் அப்போது உடனே நீ ஜெகஜாலக்கருவை விரலில்தொட்டு சக்கலாதேவியை தியானித்து எதிரிகள் கைகால் அசக்காமல் அப்படியே நிற்கவேணுமென்று மனதிலெண்ணி கருவை அவர்கள்மேல் தெளிக்க கருவுமேலே பட்டவுடனே வீரமொடு வந்தவர்கள் வீரங்குலைந்து நின்றவிடத்திலேயே நிற்பார்கள் பின்பு அவர்களுன்னைப் பார்த்து ஐயா யாங்கள் அறியாமற் செய்த பிழையைப் பொருத்து எங்களை இவ்விடம் விட்டுப்பேகும்படி செய்வீரென்று மிகவும் வருந்துவார்கள் அப்போது நீ ஐங்கோலக்கருவை விரலில் தொட்டு வாலைமந்திரத்தை ஜெபித்து அவர்கள் மேல்தெளிக்க உன்னைப்பார்த்து பயந்து வந்தவழி தெரியாமல் வோடிப்போவார்கள் நீ போகுமிடத்தில் அச்சமில்லாமற் போகலாம்.

## 399 பச்சைமரம் பற்றியெரியும் வித்தை.

எந்தஜாதி மரமாயினும் பச்சென்று தழைத்திருப்பதைப் பார்த்து இந்த மரத்தை காலாக்கினிபோல் பத்திஎரியும்படி செய்கிறேன் பாருங்களென்று

ஜெகஜாலக்கருவை முன்போலே கூட்டி விரலில் தொட்டுக்கொண்டு சக கலதேவி மூலமந்திரத்தை ஜெபித்து பச்சைமரம் பற்றியெரிய வேண்டும் மென்று மனதில் ஸ்மரித்து கருவை அம்மரத்தின்மேல் தெளிக்க உடனே சாலாக் கினிபோல் பற்றியெரியும் பார்ப்பவர்கள் ஆச்சரியப்பட்டு உன்னு டைய அருகில்வந்து ஐயா வென்று வணங்கி இப்போது எரிகின்ற தீயை அட க்கி மரத்தை முன்போல் பச்சென்று தழைத்திருக்கும்படி செய்வாயா யென் பாராகில் அப்போது நீ அப்படியே செய்கிறேனென்று ஐங்கோலக்கருவை யா ருக்கும் தெரியாமல் விரலில்தொட்டு வாலைமந்திரத்தை ஜெபித்து தந்திரமாக மரத்தின்மேல் தெளிக்க உடனே தீயானது அடங்கி முன்போல் பச்சென்றிரு ப்பதுபோல் தழைத்து தோற்றும் அனைவரும் ஆச்சரியப்பட்டு அடிபணிவார்கள்

## 400. பனைமரம் இரண்டாய்ப் பிளந்துவிழும் ஜாலம்.

பனைமரத்தின் அருகிற்சென்று தன்னுடன் வந்தவர்களைப்பார்த்து இந்த பனமரத்தை யாவரும்பார்த்து ஆச்சரியப்படும்படியாக இரண்டு பிளவாய்பிளந்து பூமியில் விழும்படியாக செய்கிறேன் பாருங்களென்று ஜெகஜாலக் கருவையும் கோட்டான் இரத்தமுங்கலந்து விரலில்தொட்டு சக்கலாதேவி மூலமந்திரத்தை ஜெபித்து இந்தமரம் இரண்டுபிளவாக விழவேணுமென்று மனதில் நினைத்துகரு வை மரத்தின்மேல் தெளிக்க உடனே மரமானது படாலென்று பிளந்து இரண் டுபக்கமும் விழுகும் பார்ப்போர்கள் யாவரும் பிரமித்து இது மகா புதுமையாக இருக்குதென்று உன்னைப்புகழ்ந்து மருபடியும் மரத்தை ஒன்ருகச் செய்வையா என்பருகில் அப்போது நீயாவரும் மிரளும்படியாக இதோக்ஷணநேரத்திற்குள் முன் போல் செய்கிறேன் பாரென்று ஐங்கோலக்கருவை விரலில்தொட்டு வா லையை தியானித்து மரத்தின்மேல்தெளிக்க எப்போதும் போல் தோற்றும் பார் ப்போர்களும் இது கண்கட்டுவித்தை யென்று பலவாருக பேசிக்கொள்வார்கள்.

## 401. மணிச்சிலம் புடையும் ஜாலம்.

பூசாலிகளின் மணிச்சிலம்பை உடைக்கும்வித மெளவிதமெனில் ஜெகஜால கருவில் அரைகுண்டுமெணியிடை எடுத்து நழநரியின் பித்தை யதனுடன்கலந்து மத்தித்து ஒருபானை ஓட்டில்பூசி அந்தஓட்டை எட்டி இலையிபூல்மூடி வங்-சிங்-ஓம்.விரிம்-சளவும்-ஓம் என்று நூற்றியெட்டு உருகொடுத்து எதிரிகளின் பெயரை மாறி தியானஞ்செய்து பின்பு அவர்பள் வாழும்படியான தெருவீதியிற்சென்று ஷே ஓட்டை பூமியில்வைத்து இடது காலை அதின்மேல்வைத்து மூன்று அரக்க ரக்க எதிரியுடையமணிச்சிலம்பு பொடிபொடியாகப்போகும் அப்போம பூசாலி யும் மிரளுவான் சபையோர்களும் ஆச்சரியப்பட்டு யாரோயேவல் செய்தானெ ன்று பலவாருகப் பேசிக்கொள்வார்கள்.

## 402. தம்புருடையும் ஜாலம்.

ஜெகஜாலமையில் அரைகுண்டுமெணியிடை எடுத்து அரணையின் பித்துடன் சேர்த்து மத்தித்து தலசன் பிடிலேயின் தலைமண்டையோடு சம்பாதித்து மேற்

படிக்கருவை அந்த ஒரு ஓட்டிற்பூசி கருஊமத்தன் இலையை அதின்மேல் பரப்பி வங்-அங்-உங்-யூரி அரியும் என்று உரு நூற்றியெட்டு கொடுத்து வைத்துக்கொள்ளவும் அதன்பிறகு தம்பூர் வாசிக்குமிடத்தில் சென்று ஒருவருக்குந்தெரியாமல் மேற்படி மண்டையோட்டை பூமியில் விட்டு இடதுகாலினுல் மூன்றுஅறக்கு அறக்க தம்புருகம்பி பொடிபொடியாக அறந்துபோகும் அப்போது வாசிப்போனும் அங்குள்ளவர்களும் பார்த்து இது என்ன புதுமையென்று ஏங்கி எவனோ ஏவல்செய்தானென்று பலவாருகப்பேசிக்கொள்வார்கள்.

## 403. கின்னரியுடையும் ஜாலம்.

கின்னரி வாசிக்கு மிடத்திற்சென்று ஒருவருக்கும் தெரியாமலிருக்கும்படியாக மரப்புமையை திலர்தமிட்டிக்கொண்டு மேற்கூறியபடியே செய்து மண்டையோட்டை முன்போல் பூமியில்போட்டு அறக்ககின்னரி சின்னபின்னமாக உடைந்துபோகும் வாசிப்பவன் மதிமயங்கி மிரளுவான்.

## 404 உடுக்கையுடையும் ஜாலம்.

ஜெகஜால கருவில் அரை குண்டுமணி யெடுத்து அத்துடன் நரியின் ரத்தம் சேர்த்து அந்த ஓட்டிற்பூசி பேய்மிரட்டி இலையை அதின்மேல் பரப்பி ஓம்-மங்-சிங்- வங்--கிலியும்-வவ்வுமென்று நூற்றியெட்டு உருஜெபித்து பூசாலிகள் உடுக்கையெடுத்து வன்னிக்கு மிடஞ்சென்று வேடிக்கைப் பார்ப்பவன்போல் ஒரு மூலையில் உட்கார்ந்துக்கொண்டு மேற்படி ஓட்டை பூமியில்வைத்து இடது உள்ளங் கையினுல் மூன்று அறக்கு அறக்க உடனே அங்கு எத்தனை உடுக்கை அடித்துக்கொண்டிருந்தார்களோ, அத்தனை உடுக்கை கிழிந்துபோகும் வேறே உடுக்கையெடுத்து அடித்தாலும் அதுவுங் கிழிந்துபோகும் பூசாலி முதலானவர்களும் மிரண்டு எவனோ எதிரியேவல் செய்தானென்பார்கள்.

## 405. பம்பையுடையும் ஜாலம்.

மேற்சொன்னபடியாவும் செய்து முடித்துக்கொண்டு மூலமந்திரம் அம்-உம்-சம்-நசி-மசி-சவ்வும் என்று நூற்றியெட்டு ஜெபித்து பம்பையடிக்குமிடத்திற் போய்நின்று மேற்படி ஓட்டைபூமியில்போட்டு இடதுகாலால் மூன்று அறக்கு அறக்க உடனேபம்பையானது படாலென்று வெடித்துப்பேகும் வேறேஎத்தனை எடுத்தடித்தாலும் அத்தனை பம்பை உடைந்துப்போகும் பம்பைக்காரன் முதலானவர்களும் பதரி மயங்கி நிபற்பார்கள்.

## 406. மேளமுடையும் ஜாலம்.

ஜெகஜாலக்கருவில் கொஞ்சமெடுத்து கரும்பூனை ரத்தம்விட்டு மத்தித்து முன்போல் தலைப் பிள்ளை மண்டை யோடு சம்பா தித்து அந்த வோட்

டில் மேற்படி கருவைப் பூசி ஊமத்தன் இலையை அதன் மேல் பூசி வங்-அங் உங்-யூரி-அரியும்- என்று நூற்றியெட்டு உருஜெபித்து மேளம் வாசிக்கு மிடத் திற்சென்று மேற்படி ஒட்டை ஒருவருக்குந் தெரியாமல் பூமியில்போட்டு இடது காலால் மூன்று அறக்கு அறக்க அங்கு அடித்துக் கொண்டிருக்கும் படியான மேளங்கள் யாவும் படால்படால் என்று கிழிந்து பொடிபொடியாகப் போகும் மேளம் வாசிப்பவர்களும் திகைத்து வேறேமேளம் எடுத்து அடித்தாலும் அது வும் கிழிந்துபோகும் பிறகு எவனோ வசியஞ்செய்து விட்டானென்று ஏங்கி நிற்பார்கள்.

## 407. மத்தளமுடையும் ஜாலம்.

ஜெகஜாலக்கருவில் ஒருகுண்டுமணியிடை எடுத்து கோட்டான் இரத்தத் தைவிட்டு மத்தித்து கரும்பூனையின் மண்டையோடு சம்பாதித்து அந்த வோட் டில் மேற்படி மையைத்தடவி கருஊமத்தன் இலையை அதின்மேல் பாப்பி வங் சிங்-ஓம்-யலிரீம்-சவ்வும் என்று நூற்றியெட்டு உருஜெபித்து மத்தளம்வாசிக்கு மிடத்துக்குச்சென்று வேடிக்கைப் பார்ப்பவன்போல் நின்றுக்கொண்டேனும் அல்லது குந்திக்கொண்டேனும் ஒருவருக்குந் தெரியாமல் மேற்படியோட்டை கீழேபோட்டு இடதுகாலே அதின்மேல் வைத்து மூன்று அறக்கு அறக்கஉடனே மத்தளமானது இரண்டுபக்கமும் கிழிந்துபோம் மத்தளக்கட்டையும் பொடிப் பொடியாகப் போய்விடும் மத்தளம் வாசிப்பவனும் மிரண்டுமுழிப்பான் மற்று முள்ளவர்களும் திகிலடைந்து இதுயாரோ எதிரிவசியஞ்செய்து மத்தளத்தை உடைத்து விட்டானென்று மயங்கி திகைப்பார்கள்.

## 408. பேரிகையுடையுஞ் ஜாலம்.

ஜெகஜாலக்கருவில் அரைகுண்டுமணி யிடையெடுத்து முன்போல் நழநரி யின் ரத்தத்தைவிட்டு தலசன் பிள்ளையின் மண்டையோடு சம்பாதித்து அந்த ஓட்டின்மேல்தடவி எட்டியிலையை அதின்மேல்மூடி வங்-சிங்-ஓம்-யலிரீம்-சவ்வும் என்று நூற்றியெட் ஜெபித்து பேரிகை முழங்கு மிடஞ்சென்று ஒருவருக்குந் தெரியாமல் மேற்படி ஒட்டைக் கீழேபோட்டு இடதுகாலே யதன்மேல்வைத்து மூன்றறக்கு அறக்க பேரிகையானது படாலென்று கிழிந்து பொடிப்பொடியா கப் போகும் பேரிகைவாசிப்பவனும் இன்னு மூள்ளவர்களும் பிர்மிப்பார்கள்.

## 409. தாளமுடையும் ஜாலம்.

ஜெகஜாலக்கருவில் ஒரு குண்டுமணியிடை எடுத்து அத்துடன் கோட்டான் ரத்தம் விட்டு குழைத்து குரங்கு மண்டையோடு சம்பாதித்து மேற்படி கருவை யதிற்பூசி அதன்மேல் கருவூமத்தன் யிலையைப்பிரப்பி ஓம்-மங்-மங்-சிங்-சிங்-வங் வங்-சவ்வும் என்று நூற்றியெட்டு உருஜெபித்து பஜனைகூடப் நாடகம் கோயில்

முதலான இடங்களில் தாளம் அல்லது பிரமதாளம் அல்லது சாலர் வாசிக்குமிடத்தில் நீ வேடிக்கைப்பார்ப்பவன்போல் நின்றுக்கொண்டு மேற்படி மண்டையோட்டை பூமியில்போட்டு காலால் மூன்று உதையுதைக்க மேற்சொன்ன தாளவகைகளெல்லாம் பொடிபொடியாக ஒடிந்துபோகும் ஆலயம் போவோரும் மற்றுமுள்ளவர்களும் மதிமயங்கி மனந்திடுக்கிட்டு நின்றுவிடுவார்கள்.

## 410. பிட்டிலுடையும் ஜாலம்.

ஜெகஜாலக்கருவில் மிளகு பிரமாணமெடுத்து தேவாங்கு ரத்தம்விட்டு குழைத்து மனிதர் தலை மண்டையோட்டிற்பூசி பேயத்தியிலையை அதன்மேல் பரப்பி வங்-மங்-உங்-நசிமசி என்று நூற்றியெட்டுரு ஜெபித்து கச்சேரி காலக்ஷேபங்கள் செய்யுமிடத்திலேனும் பிட்டில் வாசிக்கு மிடத்திற் சென்று ஒருவருக்குந் தெரியாமல் பூமியில் மேற்படி ஓட்டைப்போட்டு மேற்சொன்ன மூலமந்திரத்தை சொல்லிக்கொண்டே மூன்றரக்கு இடதுகாலால் அறக்க பிட்டிலின் நரம்புகள் துண்டுதுண்டாக அருந்து பிட்டிலும் பொடிபொடியாக உடைந்துபேய்விடும் பிட்டில் வாசிப்பவனும் சபையோர்களும் இதென்ன புதுமையாயிருக்கிறதென்று எக்கம் பிடிப்பார்கள் சிலர் கண்திருஷ்டியோவென்று கவலைப்படுவார்கள்.

## 411. நாகசுர மிரண்டாய் பிளக்கும் ஜாலம்.

ஜெகஜாலக்கருவில் அறைகுண்டுமணி இடையெடுத்து அத்துடன் நழுநரி ரத்தம்விட்டு குழைத்து தலைசன்பிள்ளை மண்டையோட்டில் அந்தகருவைப்பூசி அதன்மேல் எட்டியிலையைமூடி வங்-சிங்-ஓம்-யலிரிப்-சவ்வும் என்று நூற்றியெட்டு உருஜெபித்து அம்பட்டர்கள் நாகசுரம் வாசிக்குமிடத்திலாவது அவர்கள் வீட்டிற்கெதிரிலாவது மேற்படி ஓட்டை பூமியில்போட்டு இடதுகாலால் மூன்று அறக்கறக்கி மேற்படி மூலமந்திரத்தை நூற்றியெட்டு ஜெபிக்க வாயில் வைத்தூதும் நாகசுரமானது படாலெனறு இரண்டு பத்தகலகாகப் பிளந்துபோகும் வேரே எத்தனை நாகசுரமெடுத்து ஊதினாலும் அது பிளந்தேபோகும்

## 412. துத்திகிழியும் ஜாலம்.

மேற்சொல்லபடி ஒன்றும் தவறாமல்செய்து மூலமந்திரம் ஓம்-சிங்-வங்-யங் ரீம்-சவ்வும் என்று நூற்றியெட்டு உருஜெபித்து துத்திபிடிப்பவனெதிரில் நின்று முன்போல் பூமியில்போட்டு இடதுகாலால் மூன்று அறக்கறக்க துத்தி படாலென்று கிழிந்துபோகும் அவனேவரும் திடுக்கிட்டு மயங்குவார்கள்.

## 413. சகல வாத்தியங்களையும் முழக்கமில்லாது செய்யும் ஜாலம்.

ஜெகஜாலக்கருவை குண்டுமணி இடை எடுத்து அதில் கூளியின் ரத்தம் விட்டு மர்த்தித்து ஒருபானை யோட்டில்தடவி பேயத்தியிலையை அதுமேல்

சுத்தி ஓம் ஸ்ரீம் றிம் வங் சிங் மங் சவ்விம் என்று ஆயிரத்தெட்டு உரு ஜெபித்து சகல வாத்தியங்களும் கூட்டமாக முழங்கு மிடத்திற் சென்று வேடிக்கைப்பார்ப் போர்போல் ஒரு பக்கமாய் நின்றுக்கொண்டு மேற்படி ஓட்டை ஒருவருக்குந் தெரியாமல் பூமியில் போட்டு இடதுகாலால் மூன்று அற க்கு இடதுபக்கமாகத் திரும்பியறக்கி உடன் அங்குமுழங்கும் வாத்தியம் பொட் டென்று நின்றுபோகும் அவர்கள் எவ்விதமாக பிரயாசைபட்டாலும் முழங்கமா ட்டாது அப்போது யாவரும் மதிமயங்கி எவனோஎதிரி கட்டிவிட்டானென்று திகைத்துநிற்பார்கள் அப்போது நீ யாரோ ஒருவனைப்போல்வந்து அவர்களைப் பார்த்து எதிரி எவனோ வாத்தியம் முழங்காமற்படிக்கு கட்டுகட்டிவிட்டான் அதையான் திருப்பிவிடுகிறேனென்று உனக்குஇஷ்டமான பொருளைக்கேட்டு வாங்கிக்கொண்டு மேற்படி ஓட்டைக்கண்டு அதின்மேல் வலதுகால்வைத்து வல துபக்கமாக மூன்றுதரம் அறக்கி சும்மா விபூதியை யெடுத்து அனைவருக்குக்கொ டுத்து அணிந்துகொள்ளச் சொல்லி பிறகு வாத்தியங்களை வாசிக்கச்சொல்லி சகல வாத்தியமும் முன்போல் வேடிக்கையாக முழங்கும் வாத்தியக்காரரும் வேடிக்கைபார்ப்போர்களும் உன்னைப்புகழ்ந்து கொண்டாடுவார்கள்.

## 414. வில்லம்பு குண்டாயுதங்களோடுவரும் படையை சிதரச்செய்யும் வித்தை.

எதிரிகளானவர் படைகளோடுவந்து எதிர்த்து வில்லு அம்பு தடி குண்டு சத்தி வளைதடி சக்கரம் செல்லாக்கோல் நேரிசம் சமுதாளி பாணம் அஸ்திரம்அக் கினி மந்திரம் பில்லி ஏவல் குத்துவெட்டு அடியல் தடியல் இவை முதலானதை யும் தடைசெய்ய வேண்டுமெனில் ஜெகஜாலக்கருவில் அறைகுண்டுமணிப் பிர மாணமெடுத்து அத்துடன் சிரியநங்கைசார்விட்டு புலியினிடபித்துங் கூடசேர் த்து மர்த்தித்து அந்த தயிலத்தை நெற்றியில் பொட்டிட்டுக்கொண்டு இரண்டு புருவத்திலும் பூசிக்கொண்டு மந்திரம் ஓம் கிறீயும் கிறுங்கிலியும் சவ்வும் என்று நூற்றியெட்டுதரம் ஜெபித்து எப்பேர்கொத்த யுத்தரங்க ரணக்களத்தி நடுவே போய் நின்று மேற்கூறிய மூலமந்திரத்தை விடாமல் ஜெபித்துக்கொண்டேயிரு க்க எதிரிகள் மேற்கூறிய ஆயுதங்களினால் எவ்விதமாக ஜாடினும் யாவும் தெறிப் போகும் அவர்கள் அடிப்பதெல்லாம் புஷ்பமாரிப்பொழிவது போலிருக்கும் எதி கரும் கைசலித்து ஓய்ந்து உன்னைப் புகழ்ந்து கொண்டாடுவார்கள்.

## 415 இடி மழை மின்னல் காற்று இவைகள் சிதறும்படி செய்யும் வித்தை.

ஜெகஜாலக்கருவில் அரைகுண்டுமணிப் பிரமாணம் வாங்கி அத்துடன் செய் யான் ரத்தமும் பித்தும் உடும்பினுடைய பித்தும்ரத்தமும் சேர்த்து மர்திக்கவே

முகுபோலாகும் அதை யெடுத்துவைத்துக்கொண்டு தாம்பரத்தகட்டில் குலிசஞ் செய்து அதில் மேற்படி மெழுக்கை அடைத்து கிரியும் ஐயும் அங் செயா வெய்யலே என்று நூற்றியெட்டு உருஜெபித்து குலிசத்தை வலதுகையில் கட்டிக் கொண்டு இடி-மழை-மின்னல் காற்று இவைகள் பிரசண்டமாகப் பொழியும் போது போனல் இடி காற்று மழைமின்னல் முதலானமும் சிதரிப்போகும் பய மில்லாமற் போகலாம்.

## 416. வசியமை ஜாலம்.

ஆள்காட்டிகுறிவியின் முட்டையும் அரணையினுடைய பித்தும் சேர்த்து அத்துடன் கருங்கோழி ரத்தமொருபலமும் பிண்டம் நெய் பலமிரண்டுஞ் சேர்த்து கோரோசனை கஸ்தூரி புனுகு இவைகள் ஓரிடையாககூடச்சேர்த்து கல்வத்திலிட்டு நாவிந்து பலம் இரண்டு சூரியகாந்தம் பலம் ஒன்றும் செனறையுருவிச வார் பலம்விட்டு இரண்டு ஜாமம் வரையிலு மரைக்க பழம் புளிபோல்வரும்அதை வழித்து செய்புபாத்திரத்தில் வைத்து வாலையினுடையபூசை ஒருமண்டலம் செய்துவர தேவதைகள் வசியமாகும் அரசர்களும் வசியமாவார்கள் பேய் பூதம். வேதாளம் இவைமுதலரனதும் வசியமாகும் குட்டிசாத்தானும் வசியமாகுவான்

## 417. மோகன மை.

கட்டுக்காடை முட்டையும் நரியினுடைய பித்தும் மூன்று பலமாகத் தூக்கி கழுகின் கொழுப்பும் பேரண்டத்தயிலம் புழுகத்தம் பலம் நாதவிந்து பலம் ஜெக ஜாலக்கருவை அரைபலம் சேர்த்து கஸ்தூரிமஞ்சள் புனுகு கஸ்தூரி கோரோசனை இவைகள் வகைக்கு கால் கழஞ்சியாகச்சேர்த்து திருசபலமொன்றுகூட்டி இவைகளையெல்லாங் கல்வத்திலிட்டு குப்பமேனிச்சார் பலம் விட்டு இரண்டு ஜாமம் வரையிலு மெழுகுபோல் அரைதது வழித்து செம்பு சிமிளில் வைத்துக் கொள்ளவும் பிறகு அகார புவனையுடபூசை ஒரு மண்டலம்செய்து வரசகல்முஞ் சித்தியாகும் சராசரங்களுந் அதிக மோகமாகும் இந்த மோகனமையை திலர்த மிட்டுக்கொண்டு அடிபணி வாயாகில் ஸ்திரீமுதல் புருஷர்களுங் மேசிக அரசரெல்லாம் மோகநாடெல்லா மோக யானைமுதல் மிருகங்களெல்லா மோக மாந்திரீகர் மோகர் தேவதைகள்மோக தேவகணமொடு பூதவேதாளங்களு மோகமாகும்

## 418. உச்சாடன மை.

தேவாங்கின் முட்டையோடு மந்தியின் பிச்சும் கொழுப்பு பலமுங் கூடச்சேர்த்து மாட்டு உண்ணியுஞ் சேர்த்து கட்டுக் காடை ரத்தமுக மாதர்களுடைர நாதமும்விந்து வகைக்கு பலமாகச் சேர்த்து வாணியன் இறந்து போனவுடன் அவனை கொளுத்தும் போது அதில் வடியு நெய் ஒரு பலமு தம்புலப்பூச்சி ஒருபலமு சேர்த்து கஸ்தூரி பலம் ஒன்று புழுகு கால்கழுஞ்சியு கோரோசனை கால்கழஞ்சியு மூலைப்பால் பலம் ஒன்று இவைக

ளையும் சேர்த்து சிந்தில்கொடிரசம் பலம் அறையும் கொடிவேலியின்ரசம் பலம் நாலும்விட்டு மேற்சொன்னவைகளையெல்லாம் கல்வத்தில்போட்டு இரண்டுஜாமம்விடாமல் அறைக்க புளிபோல் வருகும் அப்போது ஜாதிலிங்கம் ஒருபலம் அதிற்போட்டு கிளிரத்தம் மூன்றுபலம் விட்டு மறுபடியும் இரண்டுசாமமறைத்து வழித்தெடுத்து செம்புசிமிளில்வைத்து வைரவர்பூசை ஒருமண்டலம் செய்துவர ஜெகசித்தி பிரசன்னமாகுவாள். ஆனவுடன் மையையெடுத்து திலர்தமிட்டுக்கொண்டு வெளியேவருவாயாகில் காட்டிலுள்ள ஸ்திரீபுருஷரும் உச்சாடனமாவார். உலகாளும் அரசர்களும் உச்சாடனமாவார் தேவகணங்களும் பூதபேதவேதாளங்களும் நாட்டிலுள்ள பல உயிர்களும் உச்சாடனமாகும் பிதுர்தேவதைகளும் குட்டிச்சாத்தானும் உச்சாடனமாவார் நவக்கிரகங்களும் உச்சசடனமாகும்.

## 419. தம்பன மை.

கோட்டான் முட்டையுடன் முசலின் கொழுப்பும் பிச்சும் சேர்த்து கருநாரைரத்தம் ஒருபலமும் தூக்கணங்குருவிப்பிச்சும் நத்தையும்சேர்த்து நேர்வாளம் பலம் ஒன்றும் கேசரிசியின் நெய்பலம் ஒன்றும் நாதவிந்து இரண்டுபலமும்சேர்த்து கருநாயின் இரண்டுகண்ணுஞ்சேர்த்து அழுஞ்சி விரைத்யிலம் பலம் ஒன்றும்சேர்த்து புழுகு ஜெகஜாலக்கருவு காற்பலஞ்சேர்த்து அவ்விடையே கஸ்தூரி மஞ்சளும்சேர்த்து புழுகு காற்கழஞ்சியம் இவைகளை யெல்லாம் கல்வத்திலிட்டு எருக்கன்சார் பலம் ஒன்று செவ்வாமணக்கினிலை சாறுபலம் நாலு அவரி இலைச்சார் பலம் இரண்டு இவைகளைவிட்டு இரண்டுஜாமம் அரைத்து மெழுகு பதமாகவரும்போது பார்த்து சித்தாமணக்கெண்ணை பலம்வார்த்து மறுபடியும் ஒருநாழி அறைத்துவழித்துசெம்பு சிமிளில்வைத்து நாப்பதுநாளுந் தவறுமல் வராகிப் பூசைசெய்து தம்பனக்கரு வைத்துப்பணிந்து சித்தியானபிறகு இந்தமையில் கடுகளவு எடுத்து வதனத்தில் திலர்தம் தீட்டிக்கொண்டு நீ திசைகளை நோக்கிப் பார்ப்பாயாகில் திரிபுவனமும் அண்டசராசரமும் தம்பனமாகும். இன்னம் ஸ்திரீ புருஷரும் லோகமுழுதும் தேவதைகளும் பூதபேத வேதாளங்களும் நவக்கிரகங்களும் கருவிரணுதிகளும் மிருகங்களும் காளிகாதேவியும் வாசியும் இவை முதலானவைகளும் தம்பனமாகும்.

## 420. பேதன மை.

உடும்பின்முட்டையுடன் கரும்பூனை பித்தும் சென்னுயின் கொழுப்பும் பித்தும் சேர்த்து அத்துடன் நட்டுவக்காளி முழுமையும் சேர்த்து ஆந்தையின்ரத்தம் பலம் ஒன்றும் சலம் சுழவிவண்டு ஒருபழமும் பிராமணப்பெண்ணெய்யும் சேர்த்து நஞ்சுக்கொடி ஒருபலமும் நாதவிந்து இரண்டுபலமும் கருப்பு குண்டுமணி பலம் ஒன்றும் ஜெகஜாலக்கருவில் காற்பலமும் லீரத்தில் ஒருபலமும் எருமை யுணி அறைப்பலமும் முதலைநெய்யில் பலம் ஒன்றும்சேர்த்து கருங்குரங்கின் கண்ணும்சேர்த்து பேய்பீர்க்கன்சார் பலம் ஒன்றும் ஆவாரம்பிசினி பலம் ஒன்

றம்சேர்த்து விஷ்ணுகிரந்திச்சாறு பலம்மூன்றும் நத்தைச்சூரிச்சார் பலம்மூன்றம் மஞ்சள் கஸ்தூரி புனுகு கோரோசனை இவைகள் காற்கழஞ்சும்சேர்த்து சாராயம் 6-பலமும் வார்த்து கல்வத்தில் மேற்சொல்லியவைகளை எல்லாம்போட்டு இரண்டுஜாமம் அரைத்துப்பார்க்க மைபோலாகும். அதைவழித்து செம்பு சிமிளில் அடைத்துவைத்து திரிபுராதேவியின் பூசை ஒருமண்டலம் தவறாமற்செய்து சித்தியாகும்படி அம்மனடியைப்பணிந்து பேதனச்கருவை கடுகளவு எடுத்து திலர்தமிட்டுக்கொண்டு வருவையானல் பாசபந்தமும் பேதனமாகும் லோகமெல்லாம் பேதனமும் இன்னம் வாசிபூதப்பிரேதம் அஷ்டகணம் தேவர்களும் ஸ்திரீ புருஷாளும் புலியாளும் மன்னரும் வேதாளமும் மிருகஜாதிகளும் குட்டிச்சாத்தானும் பேதனமாவான்.

## 421. ஆக்ருஷ்ண மை.

வக்காவின்முட்டையோடு கழுதையினுடைய கொழுப்பும் பிச்சும்சேர்த்து தலைச்சன்பிள்ளை பிண்டகருவு பலம் ஒன்றும் நஞ்சுகொடிபலம் ஒன்றும்சேர்த்து இன்னம் நாதவிந்து பலம் இரண்டும் மண்ணெண்ணை இரண்டுபலம்விட்டு வாலைரசம் பலம் ஒன்றும் வாத்தினுடைய ரத்தம்பலம் இரண்டும் சேர்த்து வரப்பெலி பிச்சும் கண்ணும் கூடசேர்த்து சமாதியினுடைய எலும்பின்தயிலம் ஒருபலமும் சேர்த்து சிரியாநங்கையின் வடக்கே போகும்வேர்பலம் ஒன்றும் கஸ்தூரிமலைமஞ்சள் புனுகு கோரோசனை இவைகள்வகைக்கு காற்கழஞ்சும் சந்தனம்பலம் ஒன்றுசேர்த்து ஆடாதொடையிலைச்சார் பலம்மூன்று பேய்ச்சுரையின் தைலம்பலம் நாலு இவைகளையெல்லா மொன்றாகச்சேர்த்து கல்வத்திலிட்டு நாளொன்றுக்கு நாலுசாமமரைத்து மைபோலானபின்புவழித்து செம்புசிமிளில்வைத்து கருவைக் கைதொழுதுப்பணிந்து சாமளாதேவி பூசை ஒருமண்டலம் தவறாமல்செய்து அம்மன்பிரசன்னமானவுடன் ஆக்குருஷ்ண மையைத்தொழுது அந்தமையை நெற்றியிலிட்டுக்கொண்டு நீ நாலுதிசையும் பார்ப்பாயாகில் நவசாரசரங்களு ஆக்கிருஷ்ணமாகும். இன்னம் வாசியுந் தேவதைகளுந் தேவகணங்களும் பூதபேதங்களுங் குட்டிச்சாத்தானுந் தாராமுதலானதும் ஆக்கிருஷ்ணமாகும் இன்னம் ஸ்திரீபுருஷர்களும் லோகமாதியந்தமும் மிருகஜாதிகளும் ஆனைபடை சேனைதளங்களும் மணிமந்திரமும் வாத வைத்திய மிவைகள் முதலானது ஆக்குருஷ்ணமாகும்.

## 422. வித்துவேஷண மை.

செம்பருந்தின் முட்டைக்கொண்டுவந்து அத்துடன் விச்சுளியின் பிச்சுங்கண்ணுஞ்செவ்வாத்தின் கொழுப்பும் பிச்சுந்தலைச்சன்பிள்ளையின்கருபலமொன்றும் அரிஞ்சில் ரத்தம் பலம் மூன்றும் பல்லிமுட்டை குழியானை பலம் ஒன்று நாதவிந்து இரண்டுபலம் நஞ்சுகொடி இரண்டுபலம் இலைப்பாசி பலம் ஒன்று கெந்தி பலம் ஒன்றும் கர்ப்பூரவள்ளிச்சார் பலம் மூன்றும் புங்கன்கொட்டை

தைலம் பலம் ஒன்றும் ஆனைநெருஞ்சியின் சார் பலம் மூன்றும் பன்றிநெய் பலம் ஒன்றும் வடக்கேபோகும் பூனைக்காலிவேர்சார் பலம்ஒன்றும் கோரோசனை புனுகு கஸ்தூரி பலம் ஒன்றும் கொச்சி மஞ்சள் பலம் அரையும் இவைகள் யாவையும் ஒன்றாகச்சேர்த்து கல்வத்திலிட்டு பனிநீர் ஐந்து பலம்விட்டு இரண்டுஜாமம் விடாமல் அரைத்து வழித்து செம்புசிமிளில் வைத்துக்கொள்ளவும், பின்பு சாமளாதேவி பூசை ஒருமண்டலந் தவறாமல் செய்து சித்தியானவுடன் மையை நெற்றியிலிட்டுக் கொண்டு வெளிவருவாயாகில் ஸ்திரீ புருஷாளும் தேவதைகளும் ஜெகமுழுதும் பூதவேத வேதாளமும் சகலபுவனங்களும் நவக்கிரகங்களும் வாதமும் வைத்தியமும் வாசிமுதலானதும் மிருகஜாதிகளும் மூலிகைகளும் பிதுர்களும் தேவகணங்களும் செய்தொழில் முதலானதும் அண்டசராசாமும் அஷ்டகஜமும் பேய்கள் முதலானதும் சவங்கள் மேற்கூறிய இவைகள் யாவும் வித்துவேஷணமாகும்.

## 423. மாரண மை.

அணிப்பிள்ளையின் முட்டையுடன் அண்டங்காக்கை ரத்தம் பலம் ஒன்றும் வெண்கூவியிச்சும் பச்சோந்தியின் பிச்சும் அதின் ரத்தமும் பலம் ஒன்றும் பிச்சைத்தவளை பிச்சும் தேரையின் பிச்சும் கொழுப்பும் ஜெகஜாலக்கரு•ஒருபலமும் நாபி பலம் ஒன்றும் பாம்பின் விஷம் பலம் ஒன்றும் எட்டிகொட்டை தைலம் பலம் ஒன்றும் நாதவிந்து பலம் ஒன்றும் நாய்விந்து பலம் இரண்டும்சீந்திற்கொடியின் வடக்கேபோகும்வேரும் கோரோசனை கஸ்தூரி புனுகு இவைகள் வகைக்கு காற்கழஞ்சு மேற்கூறிய இவைகள் யாவையும் ஒன்றாகச்சேர்த்து கல்வத்திலிட்டு அழுகண்ணியிலையின்சாறு மூன்றுபலமும்விட்டு சுத்தநீர் இரண்டு பலம் விட்டு தில்லைப்பால் இரண்டுபலம்விட்டு வாழுள்ளிசார் மூன்றுபலம் விட்டு இரண்டு ஜாமம் விடாமற் அரைத்து மைபோலானபின்பு வழித்து எட்டிமரத்துவேர் சிமிளில் வைத்துக்கொள்ளவும் பிறகு சக்கலாதேவியின்பூசை ஒருமண்டலம் தவறாமல் செய்துவாசித்தியாகும் அஷ்டமாசித்தியாட மாரணக்கருவையும் சக்கலாதேவியையும் பணிந்து சகலசித்துமாடலாம் மாரணக்கருவின் தொழில்யாதெனில்:— தாளிப்பனையோலை ஒரு அங்குலம் அண்டிவில் சக்கலாதேவியின் சக்கரத்தை யெழிதி மாரணத்தின் கோஜமும் பீஜமும் அடைத்து உனக்கு எதிரியின் பேரையறிந்து அதைத் தலைக்காலால் மாறி மாரணமையப்பூசி அனலிட்டு சக்கலாதேவியைப்பூசித்து மாரணமூலமந்திரத்தை நூற்றியெட்டு ஜெபிக்க உன்னெதிரி ஒரு வாரத்தில் தேகமெல்லாம் வெடித்து அந்தகன் பட்டணமேக வழிபார்ப்பான் அல்லது குஷ்டநோய் கண்டமாலை நாலுநாளில் காணும் இதைத்திருப்ப யாவராலும் ஆகாது உன்னைதேடிவந்து உன்னை அடிதொழுவாராகில் அப்போது நீ பசம்பால் விட்டு சக்கரத்தைக்கழுவிவிட பாதகர்களுக்கு கண்டபிணியானது தீர்ந்து சுகப்படுவார்கள் இத்தொழில் செய்வது பாபம் கருமிகளுக்குச்செய்தால் தோஷமில்லையென முன்னோர் கூறுகின்றனர்.

## 424. பந்திசெண்டு அழைப்பிக்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு பூக்குடலையெடுத்து அனைவருக்குங்காட்டி இந்த பூக்குடலை நிறையப்பூ அழைப்பித்து அனைவருக்கும் கொடுக்கிறேன் என்று அந்தக்கூடையை பூமியிற்வைத்து அதன்மேல் ஒரு துணியைப் போட்டுமூடி வேதாளமந்திரத்தை நினைத்து ஜெகஜாலமையை கூடையின் மேல் தெளித்து உச்சாடன மையை விரலில் தொட்டு நெற்றியில் பொட்டிட்டுக்கொண்டு குட்டிசாத்தானை நினைக்க ஒருவர் கண்ணுக்கும் தோற்றாமல் உன்னெதிரேவந்துநிற்பான் அப்போது நீ அவனைப்பார்த்து இந்தப் பூக்குடலை நிறை புஷ்பச்செண்டு கொண்டுவாவென்று சொல்லுவாயாகில் உடனே அந்த குட்டிச்சாத்தான் பூந்தோட்டத்திற்சென்று பூபறித்து பந்திசெண்டு கட்டி பூக்குடலையில் கொணர்ந்துவைப்பான் அதன்பிறகு நீ துணியைத்திறந்து காண்பிக்க பூக்குடலைநிறைய பூசெண்டு இருக்கும் சபையோர்களும் ஆச்சரியப்படுவார்கள் புஷ்பத்தை யெடுத்து அப்புறம் வைத்துக்கொள்ளவும் ஆனால் இது உண்மையான புஷ்பமாகையால் மறைந்துப்போகாது.

## 425. சந்தனமழைப்பிக்கும் ஜாலம்.

ஒரு சந்தனக்கிண்ணத்தையெடுத்து சபையோர்களுககுங்காட்டி சந்தனமழைப்பிக்கிறேன் பாருங்களென்று அந்தக்கிண்ணத்தை மேசையின்மேல்வைத்து ஒரு வெள்ளைத்துணியைபோட்டு மூடி முன்போல் மந்திரத்தை ஜெபித்து குட்டிசாத்தானை அழைக்க முன்போல் வருவான் சந்தனம் கொண்டுவரும்படியாகச் சொல்ல உடனே சந்தனங்கொண்டு வந்து கிண்ணத்தில் நிறையவைப்பான் பிறகு துணியைத்திறந்து பார்க்க சந்தனம் நிறையவிருக்கும் சபையோர்களுக்கு காட்டி அதையெடுத்து அப்புறம் வைத்துக்கொள்ளவேண்டியது.

## 426. பன்னீரழைப்பிக்கும் ஜாலம்.

எரு பன்னீர்பிட்டியை யெடுத்து அனைவருக்குங்காட்டி பன்னீர் அழைப்பிக்கிறேனென்று மேற்கூறிய வாறுசெய்து ஜெபிக்க முன்போல் குட்டிச்சாத்தான் வருவான் பன்னீர் கொண்டுவாவென்று சொல்ல அப்படியே கொண்டு வந்து வைப்பான் பிறகு துணியை நீக்கிப் பார்க்க புட்டி நிறைய பன்னீரிரும் பார்ப்பவர்கள் ஆச்சரியப்படுவார்கள் அதையெடுத்து அப்புறம் வைத்துக்கொள்ளதவண்டியது-

## 427. வெற்றிலையழைப்பிக்கும் ஜாலம்.

ஒரு பிறப்பன் கூடையையெடுத்து அனைவருக்குங்காட்டி இந்த கூடை நிறைய வெற்றிலை அழைப்பிக்கிறேன் என்று முன்போல் துணிபோட்டு மூடி மேற்கூறியவாறுசெய்து ஜெபிக்க குட்டிச்சாத்தான் வருவான் அவனுடன் வெ

ற்றிலேயைக் கொண்டுவரும்படிச்சொல்ல அந்த க்ஷணமே கூடை நிறைய வெற்றிலேகொண்டுவந்து வைப்பான் சற்றுநேரம்பொருத்து கூடையைத்திறந்து பார்க்க வெற்றிலே நிறையவிருக்கும் பார்த்தவர்கள் பிரமிப்பார்கள் அதையும் அப்பிரமெடுத்து வைத்துக்கொள்ளவேண்டியது.

## 428. பாக்கழைப்பிக்கும் ஜாலம்.

சபையோர்களைப் பார்த்து வெற்றிலே அழைப்பித்தேன் இதோ பாக்கு அழைப்பிக்கிறேன் என்று மேற்கூறியவாறு செய்து ஜெபித்து ஒரு சிறிய கூடையை மேசைமேல்வைத்து முன்போல் துணிபோடு மூடி குட்டையைநினைத்து வருவான் பாக்கு கொண்டுவாவென்று சொல்ல அதத க்ஷணமே நல்ல பீமன்பாக்காய் கூடைநிறைய கொண்டுவந்து வைப்பான் பிறகு சற்றுநேரம் பொருத்து துணியைத்திறந்து பார்க்க பாக்கு கூடைநிறைய விருக்கும் ஆச்சரியப்படுவார்கள் அதையும் அப்புறமெடுத்து வைத்துக்கொள்ளவேண்டியது.

## 429. ஜாதிக்காயழைப்பிக்கும் ஜாலம்

ஒரு தாம்பாளத்தையெடுத்து சபையோர்களுக்குக்காட்டி மேசையின்மேல் வைத்து து்லிதமான சிலேயைப்போட்டு மூடி மேற்சொல்லியவாறு செய்து ஜெபிக்க குட்டி வருவான் ஜாதிக்காய் கொண்டுவாவென்று சொல்வாயாகில் உடனே தட்டுநிறைய கொண்டுவந்து வைப்பான் சற்றுநேரம் பொருத்துதிறந்து பார்க்க ஜாதிக்காய் வந்திருக்கும் சந்தோஷப்படுவார்கள் அதையும் அப்புறமெடுத்து வைத்துக்கொள்ளவேண்டியது,

## 430. ஜாபத்திரி யழைப்பிக்கும் ஜாலம்.

மேற்சொல்லியபடி தாம்பாளத்தை வைத்துமூடி செபிக்க குட்டிவருவான் ஜாபத்திரி கொண்டுவாவென்று சொல்வாகிகில் உடனே கொண்டுவந்து வைப்பான் சற்றுநேரம்பொருத்து திறந்துபார்க்க ஜாபத்திரி வந்திருக்கும் அதையும் அப்புறமெடுத்து வைத்துக்கொள்ளவேண்டியது

## 431. ஏலக்காயழைப்பிக்கும் ஜாலம்.

மேற்சொல்லியபடி தாம்பாளத்தை வைத்துமூடி முன்போல் கருவை தெளித்து செபிங்க குட்டிச்சாத்தான் வருவான் ஏலக்காய் கொண்டுவாவென்று சொல்ல உடனே கொண்டுவந்து வைப்பான் சற்றுநேரம்பொருத்து திறந்துபார்க்க ஏலக்காய் வந்திருக்கும் அதையும் சபையோர்களுக்குக்காட்டி அப்புறம் வைத்துக்கொள்ளவேண்டியது.

## 432 லவுங்கமழைப்பிக்கும் ஜாலம்.

மேற்சொல்லியபடி தாம்பாளத்தைவைத்து மூடி முன்போல் கருவைத்தெளித்து செபிக்க குட்டிச்சாத்தான் வருவான் லவுங்கம் கொண்டுவரும் படியாகச்

சொல்ல அந்தக்ஷணமே லவுங்கம் கொண்டுவந்து வைப்பான் சற்றுநேரம்பொரு த்து திரந்துபார்க்க லவுங்கம் வந்திருக்கும் அதையும் சபையோர்களுக்குகாட்டி அப்புறம் வைத்துக்கொள்ளவேண்டியது.

## 433. வால்மிளகழைப்பிக்கும் ஜாலம்.

ஒரு டப்பியையெடுத்து திறந்து சபையோர்களுக்குக்காட்டி மேற்சொல் லியபடி முடிவைத்து கருவைத்தெளித்து செபிக்க குட்டிவருவான் வால்மிளகு கொண்டுவாவென உடனே கொண்டுவந்து வைப்பான் சற்றுநேரம்பொருத்து டப்பியைத்திறந்து பார்க்க மிளகு வந்திருக்கும் அதையும் சபையோர்களுக்குக் காட்டி அப்புறம் வைத்துக்கொள்ளவேண்டியது.

## 434. கோப்பறைத்தேங்கா யழைப்பிக்கும் ஜாலம்.

ஒருகூடையை மேசைமேல்வைத்து அதன்மேல் துணியைப்போட்டு முடி மேற்சொல்லியபடி யாவும் செய்து கருவைத்தெளித்து செபிக்க குட்டிச்சாத் தான் வயிவான் கோப்பரைத்தேங்காய் கொண்டுவாவென்று சொல்வாயாகில் உடனே கொண்டுவந்து வைப்பான் சற்றுநேரம்பொருத்து முடிய துணியைத் திரந்துபார்கக தேங்காய் வந்திருக்கும் அதையும சபையோர்களுக்குக்காட்டிஅப் புறம் வைத்துக்கொள்ளவேண்டியது.

## 435. மாம்பழமழைப்பிக்கும் ஜாலம்.

ஒரு தட்டை மேசைமேல்வைத்து மேலே துணியைப்போட்டு முடி முன் போல் கருமுதலானதும் தெளித்து உச்சாடன மைய் திலர்தமிட்டுக்கொண்டு குட்டிச்சாத்தானை தியானிக்க குட்டிவருவான் மாம்பழத்தை கொண்டுவரும்படி சொல்ல அந்தக்ஷணமே கொண்டுவந்து தட்டை நிறையவைப்பான் சற்றுநேரம் பொருத்து முடியதுணியைத் திறந்துபார்க்க பாமபழமவந்திருக்கும் அதையும் சபையோர்களுக்குக்காட்டி அப்பால் எடுத்து வைத்துக்கொள்ளவும்.

## 436. வாழைப்பழ மழைப்பிக்கும் ஜாலம்.

ஒரு மூங்கிற் பெட்டியை எடுத்து அனைவருக்குங்காட்டி பெட்டித் துள்ளே கருவு முதலானதும் தெளிக்க மேல்முடியை முடி சக்கலாதேவி மூலமந்திரத்தை நூற்றியெட்டுதரஞ்செபித்து மேற்படி திலர்தத்தை யிட்டுக் கொண்டு குட்டியைதியானிக்க குட்டிவருவான் வாழைப்பழம் கொண்டுவாடா என்றுசொல்ல அப்படியே கொண்டுவந்து மூங்கிற்பெட்டியில் வைப்பான் முன் போல் சற்றுநேரம் பொருத்து பெட்டியைத்திறந்துபார்க்க வாழைப்பழங் குலை வந்திருக்கும் அதையும் சபையோர்களுக்கு காண்பித்து அப்பாலெடுத்து வைத் துக்கொள்ளவும் ஆனால் நாம் எத்தனை குலைகொண்டுவரும்படி சொல்லுகின்ற மோ அத்தனை குலைவந்திருக்கும்.

## 437. கோய்யாப்பழ மழைப்பிக்கும் வித்தை.

முன்போல் ஒரு கூடையை மேஜைமேல்வைத்து துணியைப்போட்டு மூடி மேற்கூறியபடி செய்து பைரவர் மூலமந்திரத்தை நூற்றியெட்டு ஓதி உச்சாடனமையை திலர்தமிட்டுக்கொண்டு குட்டிச்சாத்தனை தியானிக்க குட்டிச்சாத்தான் உன்கண்ணுக்குப் பிரசன்னமாவான் கொய்யாப்பழம் கொண்டுவாடாவென்றுசொல்ல அப்படியேகொண்டுவந்து வைப்பான் முன்போல் சற்றுநேரம்பொருத்து மூடியதுணியைத் திரந்துபார்க்க கூடைநிறைய கொய்யாப்பழ மிருக்கும் அதையுஞ்சபையோர்களுக்குக்காட்டி அப்பால் வைத்துவிடவேண்டியது.

## 438. பேலாப்பழமழைப்பிக்கும் வித்தை.

ஒரு பெரிய கூடையையெடுத்து அனைவருக்குங்காட்டி மூடிவைத்து மேற்கூறியபடிசெய்து வேதாளமந்திரத்தை நூற்றியெட்டு ஜெபித்துமேற்படிமையை திலர்தமிட்டுக்கொண்டு குட்டிச்சாத்தானை தியானிக்க முன்போல்வருவான் பெலாப்பழம் கொண்டுவாடா வென்றுசொல்ல அப்படியே அந்தக்ஷணம் கொண்டுவந்து வைப்பான சற்றுநேரம் பொருத்து திரந்துபார்க்க பெலாப்பழம் வந்திருக்கும் அனைவருக்குங்காண்பித்து அப்பாலெடுத்து வைத்துக்கொள்ளவும்.

## 439. எலுமிச்சம்பழ மழைப்பிக்கும் வித்தை.

எந்த கூடையாகிலும் கூடையையெடுத்து அனைவருக்குங்காட்டி மேற்கூறியபடிசெய்து துணியைப்போட்டுமூடி முன்போல் மந்திரத்தை தியானித்து குட்டியை வாவென்று அழைக்க குட்டிச்சாத்தான் ஓடிவருவான் அவனைப்பார்த்து எலுமிச்சம்பழங் கொண்டுவாடாசொல்லி அந்தக்ஷணமே எலுமிச்சம்பழங்கொண்டுவந்துவைப்பான் நீ சற்றுநேரம்பொருத்து மூடியதுணியை திறந்துபார்க்க எலுமிச்சம்பழம் வந்திருக்கும் அனைவருக்குங்காட்டி அப்பால் எடுத்துவைத்துக்கொள்ளவும் ஆனல் கருவைமாத்திரங் கூடையில் மறவாமல் தெளிக்கவேண்டியது.

## 440. மாதுளம்பழ மழைப்பிக்கும் ஜாலம்.

முன்போலொரு சிறியகூடையையெடுத்து அனைவருக்குங்காட்டிமேற்சொன்னபடிக் கருமுதலான துபூசி சக்கலாதேவி மூலந்திரத்தை நூற்றிஎட்டு ஓதி கூடைமேல் துணிபோட்டு மூடி குட்டிச்சாத்தானை தியானிக்கவருவான் அவனை மாதுளம்பழங்கொண்டுவரச்சொல்ல அந்தக்ஷணமே கொண்டுவந்து கூடைநிறையவைப்பான் நீ முன்போல் சற்றுநேரம்பொருத்து மூடியதுணியை திரந்துபார்க்க மாதுளம்பழம் வந்திருக்க அனைவருக்குங்காட்டு அப்பாலெடுத்து வைத்துக் கொள்ளவேண்டியது

## 441. விளாம்பழ மழைப்பிக்கும் வித்தை.

மேற்கூறியபடி ஒருகூடையை எடுத்து அனைவருக்குங்காட்டி முன்போல் யாவும்செய்து கூடைமேல் துணியைப்போட்டுமூடி வேதாளமந்திரத்தை நூற்

யெட்டு ஒதி மேற்படி திலர்தத்தை இட்டுக்கொண்டு குட்டிச்சாத்தானை தியானிக்கவருவான் அடேகுட்டிச்சாத்தான விளாம்பழங் கூடைநிறையக் கொண்டுவந்து வைப்பான் நீமுனம்பால் சற்றுநேரம்பொருத்து மூடியதுணியைத் திரந்துபார்க்க விளாம்பழம் வந்திருக்கும் அதையுஞ் சபையோர்களுக்குக்காட்டி அப்பால் எடுத்துவைத்துக்கொள்ளவேண்டியது.

## 442. பொமபுளிமாஸ்பழ மழைப்பிக்கும் ஜாலம்.

ஒரு மூங்கிற கூடையை எடுத்து அனைவருக்குங்காட்டி மேற்சொன்னகருவையதுல்தெளித்து மேலேதுணியைப்போட்டு மூடி வராகமந்தரத்தை நூறறியெட்டுதரம் ஒத குட்டிச்சாத்தானை தியானிக்கவருவான் அவனைப்பார்த்து பம்புலிமாஸ்பழம் கொண்டுவாடாவென்றுசொல்ல உடனேகொண்டுவந்து மூங்கிற் கூடைநிறைய வைப்பாப்பான் நீ முன்போல் சற்றுநேரம்பொருத்து மேலேமூடிதுணியை திறந்துபார்க்க பம்புலிமாஸ்பழம் வைத்திருக்கு மதையெடுத்து சபையோர்களுக்குக்காட்டி அப்பால் வைத்துக்கொள்ளவேண்டியது.

## 443. அன்னுசிப்பழ மழைப்பிக்கும் வித்தை.

முன்போலொரு முககிற்கூடையை எடுத்து அனைவருக்குங்காட்டி இந்த கூடைநிறைய அன்னுசிப்பழ மழைப்பிக்கிறேனென்று ஜெகஜாலக்கருவும் ஐங்கோலக்கருவும் அந்த கூடையில்தெளித்து மேலே துணியைப்போட்டுமூடி சக்கலாதேவிமந்திரத்தை நூற்றியெட்டு ஒதி உச்சாடனக்கருவை முன்போல் திதர்தமிட்டுக்கொண்டு குட்டிச்சாத்தானை தியானிக்க வருவான் அவனைப்பார்த்து சிக்கிரம் அன்னுசிப்பழங்கொண்டுவாடாவென்றுசொல்ல அந்தக்ஷணமே கொண்டுவந்து கூடைநிறையசேர்ப்பான் நீ முன்போல் சற்றுநேரம்பொருத்து மூடியதுணியைத் திரந்துபார்க்க அன்னுசிப்பழம் வந்திருக்குமதையெடுத்து அனைவருக்குங்காட்டி அப்பாலெடுத்து வைத்துக்கொள்ளவேண்டியது.

## 444. ஆரஞ்சிப்பழ மழைப்பிக்கும் ஜாலம்.

எந்த கூடையாகிலும் ஒரு கூடையெடுத்து அனைவருக்குங்காட்டி பூமியின்மேல் வைத்து மேற் சொல்லியவாறு கருவுகளைப் பூசி வாலை மந்திரத்தை நூற்றியெட்டு ஒதி கூடையின்மேல் துணியைப்போட்டு மூடி குட்டிச்சாத்தான் சிக்கிரம் ஆரஞ்சிபழம் கொண்டுவாடா என்று சொல்ல அந்தக்ஷணமே கொண்டுவந்து கூடை நிறயவைப்பான் நீ முன்போல் சற்று பெருத்து மூடியதுணியைதிரந்துபார்க்க பழம் வந்திருக்கும் அதையெடுத்து அனைவருக்குங்காட்டி அப்பாலெடுத்துவைத்துக் கொள்ளவும்.

## 445. கிச்சிலிப்பழ மழைப்பிக்கும் ஜாலம்.

முன்போல் எந்த கூடையாகிலும் ஒன்றையெடுத்து அனைவருக்கும்காட்டி இந்த கூடைநிறைய கிச்சிலிப்பழம் அழைப்பிக்கிறேன் பாருங்களென்று மேற்

கூறியபடி கருவுகளைபூசி வேதாளமந்திரத்தை நூற்றியெட்டு ஜெபித்து கூடை பூமியில்வைத்து மேலே துணியைப் போட்டுமூடி மேற்படி மையைமரவாமல் திலர்தமிட்டுக்கொண்டு குட்டிச்சாத்தானை தியாணிக்க வருவான் அவனைப் பார்த்து கிச்சிலிப்பழங் கொண்டுவாடா வென்றுசொல்ல அப்படியே அந்த க்ஷணம் கொண்டுவந்து கூடைநிறையவைப்பான் நீ மூன்போல் சற்றுநேரம் பொருத்து மூடியதுணியைத் திரந்துபார்க்க பழம் வந்திருக்கும் அதையெடுத்து சபையோர்களுக்குக்காட்டி அப்பாலெடுத்து வைத்துக்கொள்ளவும்.

## 446. பேரிச்சம்பழ மழைப்பிக்கும் ஜாலம்.

ஒரு பெரியதாம்பாளத்தை எடுத்து சபையோர் அனைவருக்குங்காட்டி இந்த தட்டு நிறைய பேரிச்சம்பழம் அழைப்பிக்கிறேன் பாரென்று ஜெகஜாலக்கருவை ஐங்கோலக்கருவை தாம்பாளத்திறபூசி பைரவர்மந்தரத்தை நூறற்யெட்டு உரு கொடுத்து உச்சாடனமைய் திலர்தமிட்டுக்கொண்டு தாம்பாளத்தின் ஒரு கூடை போட்டு மூடி குட்டிச்சாததானை நினைக்க வருவான் அவனைப்பார்த்து பேரிச் சம்பழம் கொண்டுவாடா வெனறுச்சொல் அந்தக்ஷணமே தட்டின் நிறை பேரிச் சம்பழத்தைக்கொண்டுவந்து வைப்பான் நீ மூன்போல் சற்றுநேரம் பொருத்து மூடிய துணியைத்திறந்து பார்க்க பழம்வந்திருக்கும் அதையெடுத்து அனைவருக் குங்காட்டி அப்பாலெடுத்து வைத்துக்கொள்ளவும்.

## 447. திராட்சப்பழ மழைப்பிக்கும் ஜாலம்.

மேல்மூடியோடிருக்கும் ஒரு மூங்கிற்கூடை யெடுத்து சபையோர் களுக் குக்காட்டி இதோ இந்தக்கூடைநிறை திராட்சிபழம் அழைப்பிக் கின்றேன பாரென்று ஜெகஜாலக்கருவை ஐங்கோலக்கருவை கூடையிற்பூசி மேல்மூடி அதினமேல் துணியைப்போட்டுமூடி சக்கலாதேவி மந்தரத்தை நூற்றியெட்டு ஜெபித்து மேறபடிமைய் திலர்தமிட்டுக்கொண்டு குட்டிச்சாத்தானை தியானித் தால் குட்டிசாத்தான வரப்பார்த்து திராட்சிப்பழம் கொண்டுவாடா வென்று சொல்லி வாய்மூடுமுன்னே கொண்டுவந்து வைப்பான் நீமூன்போல் சற்றுநேர பொருத்து மூடியதுணியைத்திரந்துபார்க்க திராட்சப்பழம் வந்திருக்கும் அதை எடுத்து அனைவருக்குங் காட்டி அப்பாலெடுத்து வைத்துக்கொள்.

## 448. அத்திப்பழ மழைப்பிக்கும் ஜாலம்.

எந்த கூடையாகிலும் ஒரு தட்டுநிறைய அத்திப்பழம் அழைப்பிக்கின்றே னென்று முன்போல் தட்டியில் கருவுகளைப்பூசி துணிபோட்டு பைரவர் மந்திரத் தை நூற்றியெட்டு ஜெபித்து உச்சாடனமைய் திலர்தமிட்டுக்கொண்டு குட்டிச் சாத்தானை தியானிக்க குட்டிச்சாத்தான் வருவான் அவனைப்பார்த்து அடே அதிசீக்கிரமாக அத்திபழம் கொண்டுவாடா வென்றுசொல்ல உடனே பழங் கொண்டு வந்துதட்டுநிறைச வைப்பான் நீமுன்போலவே சற்றுநேரம்பொருத்து

மூடிய துணியைத் திறந்துபார்க்க பழம் வந்திருக்கும் அனைவருக்குங்காட்டி அப் பாலெடுத்து வைத்துக்கொள்.

### 449. சக்கரையழைப்பிக்கும் ஜாலம்.

புது தோண்டியொன்று எடுத்து சபையோர்களுக்குககாட்டி இந்தத்தோண் டிநிறைய சக்கரை அழைப்பிக்கிறேன் பாரென்று ஜெகஜாலக்கருவை விரலில் தொட்டு தோண்டியிற்பூசி சக்கலாதேவியைத் தியானித்து வேதாளம்மந்திரத் தை நூற்றியெட்டு ஓதி ஜாலக்காளைப்பூசித்து உச்சாடனமைய் பொட்டிட்டுக் கொண்டு தோண்டிமேல் ஒரு துணியைப்போட்டு மூடிகுட்டிச்சாத்தானை தியா னிக்க பிரசன்னமாகவருவான் அவனைப்பார்த்து அடேகுட்டிச்சாத்தான் சீக்கிர மாக இந்த தோண்டிநிறைய சக்கரை கொண்டுவாடாவென்று சொல்ல அந்த க்ஷணமே கொண்டுவந்து வைப்பான் நீசற்றுநேரம் பொருந்து மூடிய துணியைத் திறந்து பார்த்து குடத்தின்நிறைய சக்கரைவந்திருக்கும் அதை அனைவருக்குங் காட்டி அப்பால் எடுத்து வைத்துக்கொள்.

### 450. கற்கண்டழைபிபிக்கும் ஜாலம்.

ஒரு பீங்கான் ஜாடியை எடுத்துச் சபையோர்களுக்குக்காட்டி இந்தஜாடி நிறைய கண்கண்டு அழைப்பிக்கிறே னென்றுசொல்லி அஷ்டமாசித்திமைய் விரலில்தொட்டு ஜாடிமேல் தெளித்து துணியைப்போட்டு மூடிவிட்டு பைரவர் மந்தரத்தை நூற்றெட்டோதி வேதாளமந்திரத்தைய மப்படியேஓதி ஜாலக்காளை பூசித்தி உச்சாடனமைய் திலர்தமிட்டு குட்டிச்சாத்தானை நினைக்க பிரசன்ன மாக வருவான் அவனைப்பார்த்து அடே இந்தஜாடி நிறைய கற்கண்டு கொண்டுவாடா வென்றுசொல்ல அப்படியே அந்தக்ஷணம் கொண்டுவந்து வைப்பான் நீ முன்போல் சற்றுநேரமிருந்து முடிதுணியைத்திறந்துபார்க்க கற் கண்டு வந்திருக்குமதை அனைவருக்குங்காட்டி அபாலெடுத்து வைத்துக்கொள்ள வேண்டியது.

### 451. தேன் அழைப்பிக்கும் ஜாலம்.

புட்டியொன்றை எடுத்து அனைவருக்குங்காட்டி இந்த புட்டிநிறைய தேன் அழைப்பிக்கிறேன் என்று மகாமாயமையை விரலில் தொட்டு புட்டியின்மேல் தெளித்து மேஜையின்மேல்வைத்து கூடையைப்போட்டு மூடிவிட்டு வாகிமந் திரத்தை நூத்தியெட்டு ஓதி ஆஞ்சநேயரை தியானித்து ஜாலக்காளைப் பூசித்து உச்சாடனமையை திலர்தமிட்டுக்கொண்டு குட்டிச்சாத்தானை நினைக்க உடனே வருவான் அவனைப்பார்த்து அடேகுட்டிச்சான் இந்த புட்டிநிறைய தேன் கொ ண்டுவாடாவென்றுசொல்ல அந்தக்ஷணமே கொண்டுவந்து வைப்பான் நீ முன் மீபால் சற்றுநேரம்பொருத்து முடியகூடையைத்திறந்துபார்க்க தேன் வந்திருக் குங் காட்டி அப்பால் எடுத்துவைத்துக் கொள்ளவேண்டியது.

## 452. பசும்பால் அழைப்பிக்கும் ஜாலம்.

பெரியசொம்பு ஒன்றையெடுத்து அங்குள்ளயாவருக்குங்காட்டி இந்தசொம்புநிறைய பசும்பால் அழைப்பிக்கிறேனென்று அஷ்டமாசித்திமையை விரலில் தொட்டு சொம்பின்மேல் தெளித்து முன்போல் துணியைப்போட்டு மூடிவிட்டு வாலைமந்திரத்தை நூத்தியெட்டு ஒதி பைரவரைத் தியானித்து ஜாலக்காளைப் பூசித்து உச்சாடனமையை திலர்தமிட்டுக்கொண்டு குட்டிச்சாத்தானை நினைக்க வருவான் அவனைனப்பார்த்து அடே குட்டிச்சாத்தான் சீக்கிரமாக பசும்பால் கொண்டுவாடா வென்றுசொல்ல உடனே சொம்புநிறைய கொண்டுவந்து வைப்பான் நீ சற்றுநேரம்பொருத்து மூடியதுணியைத்திரந்து பசும்பால் வந்திருக்கும அதை அனைவருக்குங்காட்டி அப்பால் எடுத்து வைத்துக்கொள்ளவேண்டியது.

## 453. நெய் அழைப்பிக்கும் ஜாலம்.

காலியான நெய்சித்தையைக் கொண்டுவந்து சபையோர்களுக்குக் காட்டி இதோ இந்த நெய்சித்தைநிறைய நெய் அழைப்பிக்கிறேனென்று ஜங்கோலக்கருவை விரலில்தொட்டு சித்தையின்மேல் தெளித்து அதின்மேல் துப்பட்டியைப் போட்டுமூடி சக்கலாதேவி மூலமந்திரத்தை நூத்தியெட்டு ஜெபித்து வேதாளமந்திரத்தையும அப்படியே ஜெபித்து ஜாலக்காளை தியானித்து உச்சாடனமையை திலர்தமிட்டுற்கொண்டு குட்டிச்சாத்தானை நினைக்கவருவான் அவனுடன் சீக்கிரமிந்த சித்தைநிறைய நெய்கொண்டுவாடா வென்றுசொல்ல அப்படியே அந்தக்ஷணம கொண்டுவந்து வைப்பான் நீ முன்போல் மூடியதுணியைத் திறந்து பார்க்க நெய்வந்திருக்கும அதையுமனைவருக்குங்காட்டி அப்பால் எடுத்து வைத்துக்கொள்ளவேண்டியது.

## 454. சபையில் நரகல் வந்துவிழும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்திலாவது இன்னமெந்த யிடங்களிலாவது இருக்குஞ் சபையோர்களைப்பார்த்து இந்த சபைநடுவில் நரகல்வந்து விழும்படி செய்கிறேன் பாருங்களென்று மயானருத்திரி மந்திரத்தை நூற்றியெட்டு ஜெபித்து சபித்து சங்கிலிக்கருப்பனை தியானித்து தம்பனக்கருவில் கடுகு பிரமாணமெடுத்து நெற்றியில் திலர்தமிட்டுக்கொண்டு குட்டிச்சாத்தானை நினைக்க வருவான் அவனைப்பார்த்து அடே குட்டி இந்த சபையோர்களெல்லாம் மிரளும்படியாக நரகலைக்கொண்டுவந்து வையடாவென்றுசொல்ல அந்தக்ஷணமே அப்படியே கொண்டுவந்து வைப்பான் அதை பார்த்தபேர்களெல்லாம் இது என்ன புதுமையென்று அந்த நாற்றம் பொருக்காமல் ஓடுவார்கள் அவர்களைத்தடுத்து நீ இதோ யிந்தநரகலை மாயமாகப் போகும்படிச்செய்கிறேன் பாருங்களென்று முன்போல் குட்டிச்சாத்தானை அழைத்து நரகலை எடுத்துப்போகச்சொல்ல யெடுத்தேகுவான் சபையோர்களும் இதுயென்ன விந்தையா யிருக்குதென்று ஆச்சரியப்படுவார்கள்.

## 455. சபையில் பாராங்கல் வந்துவிழும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்திலாவது இன்னமெந்த விடங்களிலாவது அங்குள்ளவர்களைப்பார்த்து இப்போது இந்தசபையில் திடும்பிரவேசமாக ஒருபெரியப் பாராங்கல் வந்துவிழும்படிசெய்கிறேனென்று அஷ்டமாசித்திமையை விரலில் தொட்டுக்கொண்டுஆஞ்சநேயர் மந்திரத்தை ஆயிரத்தெட்டோதி வேதாளமந்திரத்தை நூற்றியெட்டோதி கையிற்றொட்ட கருவை நாலுதிக்கிலும தெளித்துவிட உச்சாடன மையை திலர்தமிட்டுக்கொண்டு குட்டிச்சாத்தானை தியானிக்க உடனே வருவான் அவனைப்பார்த்து ஓகுட்டிச்சாத்தான் நீ இந்தக்ஷணமே ஒரு பெரிய பாராங்கல்லை தூக்கிக்கொண்டு ஆருக்குத்தெரியாமல் அந்திரமார்க்கவந்து இந்த சபையிலுள்ளவர்கள் மேல்படாமல் சபைக்குநடுவில் பேரிடி முழக்கம்போல் திமலென்று போடவேண்டு மென்றுசொல்ல அப்படியே குட்டிச்சாத்தான் கல்லை தூக்கிக்கொண்டுவந்து சபைநடுவில் தபாலென்று போடுவான் அப்போது அங்குள்ள சிறியோர் பெரியோர் விருத்தர் ஸ்திரீகள் முதலானவர்களும் திடுக்கிட்டு மெய்மரந்து மிரண்டு முழிப்பார்கள் சிலர் இதுகுட்டிச்சாத்தான் வேலையென்று கொண்டாடுவார்கள்.

## 456. நெருப்பு மழைபெய்யும் ஜாலம்.

சபையோர்களைப்பார்த்து இப்போது அகஸ்மாத்தாய் நெருப்புமழை பெய்யும்படிசெய்கிறேன் ஜாக்கிரதையாகயிருந்து பாருக்களென்று சக்கலாதேவி மந்திரத்தை ஆயிரத்தெட்டோதி வேதாளமந்திரம நூற்றியெட்டோதி ஜெகஜாலக் கருவை விரலில்தொட்டு ஒரு எலுமிச்சம்பழத்திற்றடவி கையில் வைத்துக்கொ முன்போல் குட்டிச்சாத்தானை தியானிக்க வருவான் அவனைப் பார்த்து அடே குட்டிச்சாத்தான் சபையிலுள்ளவர்கள்மேல்படாமற்படிக்கு அக்கினிமழைபெய்யும்படிச் செய்வாயென்றுசொல்ல கையிலுள்ள எலுமிச்சம்பழநாலுபத்தையாக அருத்து நாலுதிக்கிலு விட்டெறிய உடனே குட்டிச்சாத்தான் கெச்சக்காய்ப்பிரமாணமாக சலசலவென்று சபையில் அக்கினிமழை பெய்யும்படி செய்வான் அதுகண்டு சிலர் மிரண்டோடுவார்கள் சிலர் இதுயென்ன விபரீதமென்று யேக்கம் பிடிப்பார்கள் சிலர் மதிமயங்கிப் பிர்மிப்பார்கள் சிலர் இதுயென்ன நமதுமேலே விழாமல் பங்கங்களில் விழுகும் புதுமையிதுயென்னமோவென்று ஆச்சரியப்படுவார்கள் சிலர் இது அக்கினிதேவனுடைய வசியமென்பார்கள் அப்போது நீ இதோமழையை நிருத்துவிடுகிறேன் பாரென்று தந்திரமாக ஐங்கோலக்கருவை விரலில்தொட்டு அதனுடன் மண்ணை சேர்த்து வாரிமுன்போல் நாலுதிச்கிலும விட்டெறிந்துகுட்டியை தியானிக்க நெருப்புமழை நின்றுவிடும அனைவரும் உன்னை கொண்டாடுவார்கள்.

## 457. புஷ்பமாரி போழியும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்திலாவது இன்ன மெவ்விடங்களிலாவது அங்குள்ள யாவர்களையும்பார்த்து இப்போது யாவரும சந்தோஷிக்கும்படியாய் புஷ்பமாரிபொழி

யும்படி செய்கிறேன் பாருங்களென்று சக்கலாதேவி மூலமந்திரத்தை ஆயிரத் தெட்டோதி வேதாள மந்திரத்தை நூற்றியெட்டு செபித்து உச்சாடனகருவை கடுகளவு எடுத்து திலர்தமிட்டுக்கொண்டு குட்டிச்சாத்தானை நினைத்து தியானிக்க உடனே வருவான் அவனைப்பார்த்து அடே குட்டி நீ இந்தக்ஷணமே பூந்தோட் டத்திற்சென்று பலவிதமான புஷ்பங்களையும பரித்துக்கொண்டுவந்து இந்த சபையோர்கள் மகிழும்படியாக புஷ்பவருஷம வருஷிப்பாயென்று சொல்ல அப்படியே அவன் வருஷிப்பான் அப்போது சபையோர்கள் யாவருமபார்த்து அதிக சந்தோஷத்தையடைந்து ஆனந்தப்பரவச மாவார்கள் உன்னை மகா மாந் திரீகசித்தனென்று புகழ்ந்து கொண்டடுவார்கள்.

மேற்சொன்னபடி அழைப்பித்த பலவகைகளையும் சபையோர் முதலான வர்களுக்குக் கொடுத்துப் புசிக்கும்படிசெய்யலாம் தானும தன்வர்க்கங்களும் உப யோகிக்க வேண்டாம் ஏனென்றால் அப்படி உபயோகிப்பாராகில் பின்பு எந்த வித்தையும பலியாமற்போமென்று மேலோர்சொல்லியிருப்பதால் யோசித்து நடக்கவேண்டும் அன்றியும் பகலில் அழைம்பிப்பது இரவில் மாய்மாய்ப்போகும் ஆகையால் அழைப்பித்த வுடனே அனுபவிக்க வேண்டு மென்பது முன்னோர் வாக்கியம்.

## 458. காளிகாதேவி வசிய தியானம்.

காளியுடன் தியானம் செய்வது எவ்விதமெனில் அரிகாளி ஆகாசகாளி ஒடிகாளி வீரகாளி சூலகபாலி மோடிதேவி பூமிகாளி ஓங்காளி பிடாரிகாளிமசா னபோடிகாளி மந்திரகாளி என்று மாலைசொல்லி பிறகு ஓம் ஆம் கோதண்டரூபி யாளிவாகனத்திலேறி அரசர்களோடும் சபையோர்களும் மெச்ச விருதுகை கொடியுடன் வேதாளஞ்சூழ ஆங்காரசத்திகொண்டுவருவாளென்று இருபத்தொரு வெள்ளிக்கிழமையும் பூசைசெய்து நாள்தோரும் தவராமல் மேற்சொல்லிய மூலமந்திரத்தை லட்சம உருஜெபித்துவா காளிகாதேவி பிரசன்னமாகி சித்தி யாக வந்தருளுவாள்.

## 459. மாடன் வசிய தியானம்.

நஞ்சுண்டு இறந்துபோன மனிதரை தகனம்செய்து மறுநாள் காடாற்று முன்னே நீ சென்று அந்தக்கரியை எடுத்துவந்து அதின்மேல் ஜங்கோலக்கரு வைப்பூசி வான்போல் மண்டைகீறி முகம் தோற்றும்படியாக சுவாலையில் யெ ழுதி எதிரி பெயரை அதின்கீழ் எழுதி ஆகாசமாடன் மந்திரத்தை லட்சம்உரு ஓதிடவேண்டுவ தெவ்விதமெனில் ஓம் நமோ பகவதேபடுசுவாக வென்று மேற் சொன்ன கணக்கைப்போல் ஜெபித்து பெருத்த பூசைபோட்டு பலிகொடுத்து மாடனைத் தியானஞ்செய்து மாடனைக் கட்டிக்கொண்டு ஓ ஆகாசமாடாவென்று சொல்லி பின்பு கல்லை தகட்டின்மேல்வைக்க கல்லும் ஒருகோடிபூதங்கள் சுற்றி யும் பார்த்துக்கொண்டிருக்க கல்லானது எறியும் அப்படி எறிவதுடன் மண்ணை

யும் சாலேகளையும் மாட்டெலும்பையும் செங்கல்லேயும் வரட்டியையும் பாண்ட ங்களையும் அரிசி உப்பு மிளகு தீட்டுசீலே குப்பை இவைகளோடு கண்டதை யெல்லாம் எதிரியுடைய வீட்டிலிருந்து வெளியேவாரி யெரியும் எதிரிபேபகுமிட மெல்லாங் கூடவேபோகும் அப்போது எதிரியானவன் மிரண்டு பயந்தோடி யுன்னேவணங்கிவந்தால் நீயுமனமிரங்கி மாடனே அமர்த்தி ஓ மாடா கல்லேத்தா வென்று வாங்கிக்கொண்டு பிறகு அந்த மாடனே சாணமிட்டு யெழுதியபின்பு சக்கரத்தைகழுவி ஜலத்தில் விட்டுவிட்டு மாடனேப் பூசைசெய்ய சகலமும் நிவர்த்தியாகும்.

## 460. கலசமந்திரம்.

கலசமந்திரம் ஜெபிக்கு விதம் எவ்விதமெனில் ரீங்காரமாகிய வெள்ளிதகட்டில் இம் உம் கம் ரம் ரங் சிங் யாயிடாகினி மாங்கினி விஷ்ணு சகோதரி சர்வாணி உமாதேவி பராசத்தி நமசி என்று லட்சம் உரு ஜெபித்து சத்திபூசை செய்து விபூதிப்பூசி வருவையாகில் ஜெகத்தில் ஏவல் முதலானதுடன் பிசாசு பூதம் பேர்சொல்லின போதையில் வேர்பிடுங்குதல் கருத்தடவி சக்காங்கல்லாட்டல் வைப்புபார்வை குற்றியேவல் மற்றுமுள்ள சூனியங்கள் கல்லெறிதல்இவை முதலானதும் இந்த மந்திரத்தை எழுதிக்கட்ட நிவர்த்தியாகும்.

## 461. சகலதோஷமும்நீங்க ஒண்டிமூலிகை.

ஒண்டி மூலிகையைக்கண்டு பிடித்து அமாவாசையும சூரிய ஆதிவாரத்தில் மஞ்சள் நூல் காப்புகட்டி பொங்கலிட்டு பலிபூசைசெய்து அந்தவேரைப் பிடிங்கிவந்து குலிசமாடிக் கட்டிக்கொள்ள இப்பூமியின கண் எவ்விதத்துன்பங்களும் அணுகாது பூதபேத பிசாசுகள் முதலான துஷ்டவைப்பு சூனியங்களும் எருமலோடும்.

## 462. சேப்பிடு வித்தை.

செப்பிடு வித்தையாடுமவிதம கேழ்ப்பாயாக செமபஞ்சுபந்து ஐந்துமகோல் ஒன்றும எடுத்துக்கொண்டு சபையில்வந்து காளியுடைய தியானத்தை ஓதி பக்தியோடு ஜாமெமையைக் கையில்தேய்த்து பந்தையாட ஆடும அன்றியும் ஐந்து பத்து பார்வைக்கு லட்சம பந்துலோடும அனேவரும் ஆச்சரியப்படுவார்கள்.

## 463. கொள்ளி ஜாலம்.

கொள்ளியிடைய வசியமந்தரம ஓதுவது எவ்விதமெனில் சிவ சிவ என்று லட்சம் உருஜெபித்து பூசைமுதலானதும் செய்துவர சித்தியாகும் சித்தியானவுடன் அக்கினியைத் துணியில்வைத்துச்சுற்றி தகட்டில் அட்சரத்தக்கிரி அதின மேல் ஐங்காயமும் ஐங்கோலமும சுடலேக்கருவும் பூசி அதில் உனக்கு எதிரியினு

டைய பெயரைநாட்டிப் பூசைசெய்து கொள்ளியைதியானித்து பந்தையெடுத்து தகட்டின் மேல்வைத்து இருதலைக்கொள்ளி என் மொழியைக்கேளாய் சத்துரு வின் மனைகள் தோறும் வைத்துக்கொளுத்துவாயென்று தியானமோதிட அப்படியே எதிரிகள் திடுக்கிடும்படியாக பந்தானது திரிந்து கொளுத்தும்.

### 464. மலக்குட்டி வசியம்.

மலக்குட்டி தியானஞ்செய்வது எவ்விதமெனில் ஓம் ரீம் வா மலக்குட்டிச் சாத்தான் நான் வைத்தப் பூசையைக்கொண்டு நான் சொல்லும வேலையைக் கேட்டு மலத்தைவாரி நான் நினைத்த யிடத்திற் போடென்று சொல்லி பலி பூசை பலக்கச் செய்துவர மலக்குட்டி வசியமாவான்.

### 465. மலக்குட்டி ஜாலம்.

மேற்கூறியபடி சித்தியானவுடன் மந்திரத்தை தகட்டிற்கீறி அதன்மேல் ஐங்காயமும ஐங்கோலமும் சுடலைக்கரு இம்மூனறையுங்கூட்டி மத்தித்து தகட்டிற்பூசி அதில் எதிரியினுடைய பெயரையுமநாட்டி மேறசொல்லிய மந்திரத்தை லட்சம் ஓதி பலிபூசை பலக்கச்செய்து பிறகுமலத்தையெடுத்து தகட்டில்வைத்து சொல்லவேண்டியது மலமிந்தா மலக்குடி என்று மந்தரத்தை தியானஞ்செய் வாயாகில் குட்டி வலக்கையில் மலத்தை வாரிக்கொண்டுபோய் நீ நினைத்தவிடத் திற்போடுவான் அப்போது நீ தகட்டைஜலம்விட்டுக் கழுவிப்போடுவாயாகில் கொண்டுபோய் போட்ட மலமெல்லாம் மாயமாகப்போய்விடும்.

### 466. வனமடக்க வித்தை.

வனமடக்கமாவது சொல்லக்கேட்பாயாக அவையடக்கம அங்கமடக்கம் பங்கமடக்கம வழியடக்கம் சுவாகாவென்று ஜெபித்து ஆதிவாரத்தில் தண்ணி விட்டான் கிழங்கின் செடிக்குக்காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத்துப் பூசை போட்டு மேற்சொல்லிய மந்தரத்தை ஆயிரமோதி வேரைப்பிடிங்கிவந்து ஐங்காயம் ஐங்கோலம சுடலைக்கரு இவை மூன்றையுஞ் சேர்த்து மத்தித்து வேறில் தடவி காலில்போட்டு மிதித்துக்கொண்டு வனத்தைபார்த்து மந்திரமோதி நிற்கவனமடக்கமாகி வெட்டும் அந்தரத்திற் செல்லாது.

### 467. குறிசோல்லும் வித்தை.

ஆடையொட்டி சமூலமுடன் நின்ரிட தீஞ்சமூலி சவிஞ்சிலை இவை முன் றையும் கருக்கிமைபோல் அறைத்து சுடலைத்தயிலஞ் சேர்த்து மருபடியும் மை போல் அறைத்து வழித்து சிமிளில்வைத்து பிறகு அனுமாரை தியானஞ்செய்து மையயெடுத்து நெற்றியில் பொட்டிட்டுக்கொண்டு ஓ அஞ்சனாதேவிபுத்ரா வாயு மைந்தா பருஷரூபவல்லபா அனுமந்தா ராமதூதாவந்து குறிசொல்லென்று

வணங்கி கொள்வாயாகில் நினைத்ததை யெல்லாம் வந்து சொல்வான் நாட்டி லுள்ளோர்களும் உன்னைப்புகழ்வார்கள்.

### 468. வஸ்துபாண்ட முடையும் வித்தை.

சாராயத்தில் ஊறும் பட்டைக் கொண்டுவந்து அதின்மேல் கருச்சிலைசுற்றி காளி காளிகோயில்முன்னே கொண்டுபோய்வைக்க யானைகள்யாவும் ஆடி உடையும் விற்காதுக் கெட்டுப்போகும் அதை எடுத்து விட்டால் பானை உடை யாது எப்போதும்போல் விற்கும்.

### 469. வாழத்தோப்பை பெருகச்செய்யும் வித்தை.

வாழைத்தோப்பு பொருக்கச் செய்யவேண்டில் முன்போல் நாயுருவிச் செடிக்கு மஞ்சள்நூல் காப்புகட்டு சிறியகுடுவையில் பொங்கலிட்டு பூசை போட்டு பலிகொடுத்துவேரைப் பிடிங்கிவந்து அஷ்டமாசித்திமையும் ஐங்கோலக் கருவையும் மத்தித்து வேரியின்மேல் பூசி கலசத்தில் வைத்து மூடி வாழைத் தோப்பின் கிழக்குதிக்கில் புதைத்துவிட நன்ருய்வாழைவிருத்தியோங்கி குலை கள் விசெஷமாகிவிடும்.

### 470. தென்னந்தோப்பு ஈடேருதபடி செய்யும் ஜாலம்.

கொடிவேலிச்செடிக்கு கிராணத்தில் காப்புகட்டி பலிபூசைசெய்துவேரை பிடுங்கிக் கொண்டுவந்து சுடலைக்கருவும் ஜெகஜாலக்கருவுஞ் சேர்த்து மத்தித்து வேரின்மேல்பூசி காளியைத் தியானித்து கலசத்திலுள்ளே வைத்துமூடி தென னந்தோப்பண்டை கொண்டுபோய் அக்கினிமூலை பக்கமாய் புதைத்துவிட தேங் காய் காய்த்தாலுங் கருகிப்போகும் புதைத்ததை யெடுத்தால் எப்போதும்போல் விருத்தியடையும்.

### 471. தென்னந்தோப்பு விருத்தியாகும் ஜாலம்.

நாயுருவிச்செடிக்கு ஞாயிற்றுக்கிழமையில் மஞ்சள்நூல் காப்புகட்டி பலி பூசைபோட்டு வேரைப்பிடுங்கிவந்து ஐங்கோலக்கருவும் அஷ்டமாசித்துமையுங் கலந்து வேரின்மேல்பூசி கலசத்திலுள்வைத்து வாயைமூடி தென்னந்தோப்பிற் கொண்டுபோய் நிருதிமூலையில் புதைக்க தோப்பு நாளுக்குநாள் நன்ருக செழி த்து விருத்தியாகும்.

### 472. காடு காய்ந்துபோகும் ஜாலம்.

கள்ளிமடையான் செடிக்கு ஞாயிற்றுக்கிழமையில் மஞ்சள்நூல்காப்பு கட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங்காட்டி வேரைப்பிடுங்கிவந்து அதன்மேல்

சுடலைக்கருவும் ஜெகஜாலமையும்பூசி கலசத்தில் அந்த வேரைப்போட்டு கொள்ளியைத் தியானித்து காட்டில்கொண்டுபோய் புதைத்துவிட காடுகாய்ந்து உலர்ந்துவிடும் புதைத்த கலசத்தை எடுத்தால் காடுதளுக்கும்.

## 473. காடு தழைக்கும் ஜாலம்.

விலித்தொடங்கி யென்னும் செடிக்கு நல்லபருவத்தில் மஞ்சள் நூல் காப்புகட்டி பலிபூசை முதலானதும் கொடுத்து வேரைப்பிடுங்கிவந்து அதின்மேல் அஷ்டமாசித்திமையும் ஐங்கோலக்கருவையும் பூசி கலசத்திற்போட்டு பைத்வர் மந்திர மோதி காட்டிற்கொண்டுபோய் புதைக்க காய்ந்துகிடக்கும் காடாயினும் துளுத்து செழித்தோங்கும்.

## 474. கரும்புகோல்லையை கருகச்செய்யும் ஜாலம்.

பேருமுட்டி செடிக்கு மஞ்சள் நூல் காப்புகட்டி குரளியை தியானித்து தூபதீபங்கட்டி வேரைப்பிடுங்கிவந்து அதன்மேல் சுடலைக்கருவையும் பூசி தம்பன மையையுந்தடவி கலசத்திற்போட்டு மூடி கரும்புபயிராகாது அப்படியாகினும் எல்லாம் சொத்தைவிழுந்து உலர்ந்துபோகும் புதைத்தகலசத்தை எடுத்துவிட்டால் எப்போதும்போல் பயிராகும்.

## 475. கரும்புகோல்லையை விருத்திசெய்யும் ஜாலம்.

சிறியாநங்கை செடிக்கு மஞ்சள்நூல் காப்புகட்டி வாலைமந்திரத்தை நூற்றியெட்டுதரம் ஓதி அஷ்டமாசித்து மையைஅந்தச்செடிமேல் கொஞ்சம்தெளித்துவிட்டு வந்துவிடவும் மருவாரம் எந்தநாளில் காப்புகட்டினையோ அந்தகிழமையில் சென்று பொங்கலிட்டு பலிகொடுத்து பூசைமுதலானதும் போட்டு வேரைப்பிடுங்கிவந்து உச்சாடனமையும் ஐங்கோலக்கருவையும் வேரின்மேல்பூசி கரும்புகொல்லையில் கொண்டுபோய் புதைத்துவிட கரும்பு நன்றாய்கனத்து ஓங்கி வளர்ந்து தழைக்கும்.

## 476. வேத்திலைக்கோடி காய்ந்துபோகச்செய்யும் வித்தை.

வெள்ளைச்செடிக்கு கிராணத்தில் மஞ்சள்நூல் காப்பு கட்டி விட்டு வந்துவிடவும் பிறகு விருச்சிகலக்கினத்திக்சென்று பலிபூசை முதலானதும்போட்டு அதின்வடக்குப்போகும் வேதைப்பிடுங்கிக் கொண்டுவந்து அறன்மேல் சுடலைக்கருவும் ஜெகஜாலக்கருவும் பூசிக்குறளியை தியானித்து கலசத்திற்போட்டு மூடி வெத்திலை தோட்டத்திற் கொண்டுபோய் புதைதது விட்டு வந்துவிட அந்த தோட்டம் பாழாவதுடன் கொடிகளெல்லாம் கருகிப்போகும் வெத்திலை துளிர்க்காது புதைத்த கலசத்தை எடுத்துவிட எப்போதும்போல் துளிர்ம்ம்.

## 477. தாமரையை அழுகச்செய்யும் ஜாலம்.

கருஊமத்தஞ்செடிக்கு செவ்வாய்க்கிழமை மஞ்சள் நூல்காப்புகட்டி கொள்ளியை தியானித்து பூசைமுதலானதும்போட்டு அதின்வேரைப்பிடிங்கிவந்து சடலைக்கருவும் தம்பனமையும் அதின்மேற்பூசி மாடன் மந்திரத்தை நூத்தியெட்டு ஜெபித்து கலசத்திற் போட்டுமூடி தாமரைத்தழைதோங்கி இருக்கும் தடாகம் மடுவு முதலான இடங்களில் இதை கொண்டுபோய்போட அந்த தடாகத்திலுள்ள தாமரைகளெல்லாம் அழிகிப்போகும் போட்ட கலசத்தை எடுத்துவிட்டால் மறுபடியும் முன்போல் தழைக்கும் புஷ்பிக்கும்.

## 478. தாமரை தழைக்கும் ஜாலம்.

நீர்முள்ளிசெடிக்கு ஆதிவாரத்தில் மஞ்சள் நூல்காப்புகட்டி பொங்கலிட்டுப் பூசைபோட்டு பலிகொடுத்து வாலைமந்திரத்தை நூத்தியெட்டோதி வேரைப்பிடுங்கிவந்து ஐங்கோலக்கருவும் அஷ்டமாசித்திமையையும் அதின்மேல்பூசி பைரவரைத் தியானித்து கலசத்திற் போட்டுமூடி தாமரைதடாகத்திற் போட்டுவிட முன்னிருப்பதுடன் அதிகமாகபடர்ந்து விர்த்தியாகி புஷ்பங்களும் புஷ்பித்து தழைக்கும்.

## 479. புளியமரத் தோப்பை உலரச்செய்யும் ஜாலம்.

சுணைக்கோரைச்செடிக்கு செவ்வாய்க்கிழமையும் அமாவாசையும் கூடிய தினத்தில் மஞ்சள் நூல் காப்புகட்டி மாடன்மந்திரத்தை நூத்தியெட்டு ஓதி பொங்களிட்டு பூசைபோட்டுபலிகொடுத்து வேரைப்பிடுங்கிவந்து சுடலைக்கருவையும் மாரணமையையும் அதின்மேல்பூசி கலசத்திற்போட்டு மூடி கொள்ளிடை தியானித்துபுளியமரம் விசேஷமாகயிருக்குந் தோப்பிற்குள் நடுமத்தியில் புதைத்துவிட அத்தோட்டம் பாழாவதுடன் மரங்களெல்லாம் உலர்ந்துபோகும் பூவெடுத்துக் காய்காய்க்காது அப்படிகாய்கினும் கருகிப்போகும்.

## 480 புளியமரத்தோப்பை விருத்திசெய்யும் ஜாலம்.

பூனைக்காலிச்செடிக்கு பூரணபருவமும் ஆதிவாரமும் கூடியதிணத்தில் மஞ்சள் நூல்காப்புகட்டி பைரவர்மந்திரத்தை நூத்தியெட்டோதி பொங்களிட்டுப்பலிகொடுத்து பூஸ்சமுதலானதும்போட்டு வேரைப்பிடுங்கிவந்து அஷ்டமாசித்திமையையும் ஐங்கோலக்கருவும் உச்சாடனமை இவைமுன்றையும் வேயின்மேல்பூசி மாலையைதியானித்து கலசத்திற்போட்டு புளியந்தோப்பில் முன்போல் வைத்துவிட அங்குள்ள புளியமரங்கள்யாவிம் விருத்தியாகி விசேஷமான காய்வள் காய்த்துப் பழம்புளிக்கும் பூச்சி புழுகு சொத்தை இவைகள் ஆகாது.

## 481. பாக்குமரத்தோப்பை பாழாகச்செய்யும் ஜாலம்.

கண்டங்கத்திரி செடிக்கு கிரணத்தில் மஞ்சள் நூல் காப்புகட்டி மாடன் மந்திரத்தை நூற்றியெட்டு ஜெபித்து பலிபூசைமுதலானதும்செய்து அதின்வட

க்குபோகும் வேரைப்பிடுங்கிவந்து சுடலைக்கருவையும் மாரணமையையும் வேரின்மேல்பூசி வாராகியைதியானித்து கலசத்தில்போட்டு பாக்குமரம் விசேஷமாக இருக்கும் தோப்புக்குள் இதை கொண்டுபோய் அக்கினிமூலையில் புதைத்துவிட பாக்குமரமெல்லாம் பட்டுப்போவதுன் பாளைவிடாது பாக்கு உண்டாகாது அப்படிப்பாளை விடினும் கருகிப்போய்விடும் புதைத்ததை எடுத்துவிட்டால் எப்போதும்போல் பாளைாள்விட்டுப் பாக்குகாய்க்கும் விசேஷப்படாது.

## 482. பாக்குமரத்தோப்பு விருத்தியாகும் ஜாலம்.

நிண்ணுவாடிச்செடிக்கு வளர்பிறையில் ஆதிவாரத்தில் வஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட்டுப் பலிகொடுத்து பூசைப்போட்டு மகா காளி மந்திரத்தை நூற்றியெட்டு ஜெபித்து வேரையறுமல் பிடுங்கிவந்து ஐங்கோலக்கருவும் அஷ்டமாசித்திமையும் அச்சாடனமையும் வேரின்மேல்தடவி வாலையைதியானித்து கலசத்திற்போட்டுமூடி பாக்குமரந்தோப்பிற் கொண்டுபோய் முன்போல் புதைத்துவிட அங்குள்ள பாக்குமரங்கள் நாளுக்குநாள் விருத்தியாகி விசேஷமாய் பாளைகள்விட்டுப் பாக்குக்காய்க்கும்.

## 483. பலவிதமான மரங்கள் நிறைந்த தோட்டத்தை பாழாக்கும் ஜாலம்.

கொல்லைப்பல்லி என்னுஞ்செடிக்கு அமாவாசையும் ஆதிவாரமும் விருச்சிகலக்கினமுங் கூடிறதினத்தில் காப்புகட்டி வாராகிமந்திரத்தை 108-செபித்து பொங்கலிட்டு பலிகொடுத்து அந்தசெடியை சமூலத்தோடு பிடுங்கிவந்து சுடலைகருவுந் தம்பனமையுந்தடவி மாடன்மந்திரத்தை 108-ஓதி கலசத்திற்போட்டு மறைத்து பலவிதமரங்கள் நிறைந்திருக்கும் தோப்புக்குள் கொண்டுபோய் ஈசானியமூலையில் புதைத்துவிட அத்தோட்டம் பாழாகப் போவதுடன் அங்குள்ள ஒவ்வொருமரமும் காய்த்துக் கருகிப்போகும் அப்படிப் பூத்துக்காய்க்கினு மழுகி உதிர்ந்துப்போகும் புதைத்ததைத்தோண்டி எடுத்துவிட்டால் தோட்டமெப்போடும்போல் செழிக்கும் ஆனால் இப்படிசெய்வது மகாதோஷமாகையால் வித்தையைப் பரிட்சித்துப் பார்த்து உடனே புதைத்ததை தோண்டியெடுத்து விடவேண்டும்.

## 484. மாந்தோப்பை பாழாக்கும் ஜாலம்.

கள்ளிச்செடிக்கு செவ்வாய்கிழமையில் மஞ்சள்நூல் காப்புகட்டி பலிபூசை முதலானதுங் கொடுத்து அதன்வடக்குபக்கம்போகும் வேரைப்பிடுங்கி வந்து சுடலைக்கருவும் பேதனமையும் அதன்மேல்தடவி கொள்ளியைதியானித்து கலசத்திற்போட்டு மூடி தழைத்தோங்கிய மாந்தோப்பிற் கொண்டுபுதைத்துவிட அந்ததோட்டம் பாழாவதுடன் அங்குள்ள மரத்தில் காய்கள் காய்க்காது அப்படிக் காய்க்கினும் பூ பிஞ்சியாக யிருக்கும்போதே கருகிப்போகும் புதைத்தகலசத்தை எடுத்துவிட்டால் எப்போதும் போலாக பூக்கும்.

## 485. மாங்தோப்பை விருத்திசெய்யும் ஜாலம்.

சிவப்புபசளை செடிக்கு ஆதிவாரமும் பருவமுங் கூடியதினத்தில் மஞ்சள் நூல் காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து பூசைமுதலானதும் போட்டு வேறைஅறுமல் பிடுங்கிவந்து அதன்மேல் அஷ்டமாசித்திமையும் ஐங்கோலக் கருவும் உச்சாடன மை இம்மூன்றையுந்தடவி வாலைமந்திரம் நூற்றியெட்டு ஒதி முன்போல் கலசத்திற்போட்டுமூடி மாங்தோப்பிற் கொண்டுபோய் நிருத்தி மூலையில் புதைத்துவிட மாங்தோப்பு நாளுக்கு நாள் விருத்தியாகி விசேஷமாக காய்கள்காய்த்துப் பழம்பழுக்கும்.

## 486. விளைவை விளையாமற்செய்யும் வித்தை.

எதிரியினுடைய விளைவைக் கெடுக்கவேண்டில் கொடிவேலிச்செடிக்கு மஞ்சள் நூல் காப்புகட்டி ஓம் என்று லட்சம் உருஜெபித்து வேரைப்பிடிங்கி வந்து சுடலைக்கருவைப்பூசி கலசத்தில் வைத்துமூடி விளைவுமிடத்தில் கொண்டு போய்வைக்க விளையாது வேரையெடுத்து விட்டால் பிறகு விளைவு நன்றாய்விளையும்.

## 487. விளைவுநன்றாய் விளையும் வித்தை

விளைவு நன்றாகவிளைய செய்யவேண்டில் நாயுருவிச்செடிக்கு மஞ்சள் நூல் காப்புகட்டி ஸ்ரீம் என்று லட்சம் உருஜெபித்து வேரைபபிடிங்கிவந்து ஐங்கோலக்கருவை யதின்மேற்பூசி கலசத்தில் வைத்து விளைவு மிடத்தில் கொண்டுபோய் புதைக்க விசேஷமாக விளையும்.

## 488. வாழமரம் குலைவிடாதிருக்கும் ஜாலம்.

மெற்சொல்லிபடி கொடிவேலிசெடிக்கு ஆதிவாரத்தில் மஞ்சள் நூல்காப்பு கட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து நாபதீங்காட்டி வேரைப்பிடிங்கிவந்து சுடலைக்கருவை யதின்மேல் பூசி கலசத்தில் வைத்துமுடி வாழைத்தோப்பிற் கொண்டுபோய் ஈசான்னியமூலையில் புதைத்துவிட வாழைமரமும் ஒங்கிவளராவது எத்தனைகாலமிருந்தாலும் கொலைவிடாது புதைத்த கலசத்தை யெடுத்து விட்டால் வளரும் குலைவிடும்.

## 489. பூந்தோட்டத்தை கருகிப்போகச்செய்யும் ஜாலம்.

தொட்டாசினிக்கி செடிக்கு அமாவாசையில் மஞ்சள் நாள்காப்புகட்டி வாராகிமந்திரத்தை நூற்றியெட்டு வோதி அதன் வேரைப்பிடுங்கிவந்து சுடலைகருவும் ஸ்தம்பன மையும் அதன்மேல் தடவி பைரவரை தியானித்துகலசத்தில்போட்டு நந்தவனத்திற் கொண்டுபோய் புதைக்க நந்தவனங்களில் தீய்ந்துபோவதுடன்

என்ன பிரயாசைப்பட்டாலும் புஷ்பங்கள் பூர்க்காது அப்படி பூக்கினும் கருகின் அழிகிப்போகும் மணமிராது புதைத்தை எடுத்துவிட்டால் முன்போல் பூர்க்கும்.

### 490. பூந்தோட்டத்தை விருத்திசெய்யும் ஜாலம்.

மஞ்சள்செடிக்கு ஆதிவாரத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி வாலைமந்திரத்தை நூத்தியெட்டுஓதி பலிபூசை முதலானதுங் கொடுத்து வேரையும் கிழங்கோ பிடிங்கிவந்து ஐங்கோலக்கருவையும் அதின்மேல்பூசி அனுமாரை தியானித்து கலசத்திற்போட்டுமூடி பூந்தோட்டத்திற் கொண்டுபோய் குபேரமூலையில் புதைக்கப் பூந்தோட்டம் நாளுக்கு நாள் விருத்தியாவதுடன் விசேஷமாக புஷ்பிக்கும் பரிமளமும் அதிகமாக இருக்கும்.

### 491. வெத்திலை தோட்டத்தை விருத்திசெய்யும் வித்தை

எத்தைசொன்னாலும் கேட்கும் நத்தைசூரிசெடியென்னும் செடிக்கு ஆதிவாரத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத்துபூசைமுதலானதும் போட்டு அதின் வேரைப்பிடுங்கிவந்து அதின்மேல் ஐங்கோலகருவைதடவி கலசத்திற்போட்டு மூடி பைரவர்மந்திரத்தை நூற்றியெட்டு ஓதி வெத்திலை தோட்டத்திற்கொண்டுபோய் ஈசானிய மூலையிற் புதைத்துவிட்டுவர தோட்டம் நாளுக்குநாள் விருத்தியாகி கொடிகள் தழைத்து கிளைத்தோடி வெத்திலை விசேஷமாகும் தளுக்கும்.

### 492. பலவித மரங்கள் நிறைந்த தோட்டத்தை விருத்திசெய்யும் வித்தை.

தண்ணீர்விட்டான் கிழங்கின் செடிக்கு பூரணபருவமும் சுக்கிரவாரமுங் கன்னியாலக்கினமுங் கூடியதினத்தில் மஞ்சள்நூல்காப்புகட்டி பொங்கலிட்டுப் பலிகொடுத்து பூசை முதலானதும்போட்டு வாலைமந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்துவேரைப்பிடுங்கிவந்து ஐங்கோலவும் அஷ்டமாசித்திமையும் உச்சாடனமையும் இம்மூன்றையும் வேரின்மேல்பூசி கலசத்திற்போட்டு முடி பைரவரைத் தியானித்து இதைகொண்டுபோய் பலவிருட்சங்களும் நிறைந்துள்ள தோட்டத்தில் மத்தியில் புதைத்துவிட அத்தோட்டமானது நாளுக்குநாள் விர்த்தியாகும் பலவிதமான மரங்களும் காய்களை காய்க்கும்

### 493. வேறுமுறை தண்ணீர்மேல் நடக்கும் ஜாலம்.

தன்னோடுகூட சிலரை அழைத்துக்கொண்டு தண்ணீர் நிறைந்துள்ள தடாகத்தின் அருகிற்சென்று தன்னுடன் வந்தவர்களைப் பார்த்து இந்த தடாகத்திலுள்ள தண்ணீரின்மேல் நடந்து போகிறேன் பாருங்களென்று ஆஞ்சநேயரை தியானித்து எருவருக்குந் தெரியாமல் கண்கட்டு மையைவிரலில் தொட்டு நெத்

தியில் திலர்தமிட்டுக்கொண்டு அனைவரும்பார்க்க நீ கரையின்பேரில் நடந்து போனால் பார்ப்போர்களுக்கு தண்ணீரின்மேல் நடந்து போவதுபோலிருக்கும் பார்ப்போர் பிர்மித்து ஆச்சரியப்பட்டு இது கங்காபவானி வசியமென்பார்கள்.

### 494. பூதப்பிசாசுகளை ஆட்டும் விநோத வித்தை.

சொரி தவளையைப்பிடித்துவந்து சாம்பிராணியைப் போதுமானமட்டும் அதின் வாயின் வழியாகச்சேர்த்து வாவைத்தைத்து புகையூறும்படியாக தலைகீழாகக்கட்டி ஒரு மண்டலம் வரைக்குந் தொங்கினபின்பு அதையெடுத்து அதனுள் செலுத்தின சாம்பிராணியை எடுத்துக்கொண்டு அதனுடன் தலைமஞ்சங்கொடியை சேர்த்து வைத்துக்கொள்ளவும் பேயாட்டவேண்டில் மேற்படி சாம்பிராணியை நெருப்பில்போட்டு அதில் வரும்புகையை அவர்கள் நாசிக்கேரும்படியாக பிடிக்க புகையேறின மாத்திரத்தில் பிசாசு பூதம் தேவர் சடாமுனி வாழ்முனி செம்முனி கருமுனி கருப்பான் பிர்மராட்சதன் குட்டிச்சாத்தான் லாடமுனி சுப்பாணி இவை பிடித்தபேர்கள் தலையை விரித்து ஆடி பேரும் ஊரும் சொல்லுவார்கள் உடனே செய்யவேண்டிய சடங்குகள் எல்லாம் செய்துமுடித்துக்கொள்ளவேண்டும்.

### 495. தேவதைகளை ஆட்டும் ஜாலம்.

மனிதருடைய அஸ்தி கழுதையினுடைய அஸ்தி கழுதையின் தண்டுச்சிலை மனிதருடையமலம் பண்ணியின் அஸ்திகரச்கணம் வேர் சிந்தில் வேர் குப்பமேனிவேர் முட்டை கொஞ்சமும் இவை முதலானதும் சேர்த்து இடித்து வைத்துகொண்டு புகைபோட தேவதைகள் முதலானதும் தேவர்களும் மருள்பிடித்தவர் போலாடுவார்கள் பார்ப்போர்கள் உன்னை மகா மந்திரவாதி யென்று மதித்துக் கொண்டாடுவார்கள்.

### 496. தேவர்கள் திருநடனமாடும் ஜாலம்.

உச்சாடன சக்கரத்தைக்கீறி பிரமாண ஜாதியில் பிரமாச்சாரியாயிருக்கப்பட்டவன் இரந்தபின் அவனை கொண்டுபோய் தகனம் செய்து மறுநாள் காடாற்று முன்னமேநீ போய் அஸ்தியில் ஒன்று எடுத்து வந்து வைத்து பேர்வாங்கி வராகி மந்திரத்தை ஒரு லட்சம் ஓதி சக்கரத்தை தேவாலயங்களுக்கு முன்னும் புதைத்து வைத்து அஸ்தியை அவர்க்கு முன்புவைத்து பலிபூசை முதலானதும் செய்வாயாகில் தேவர்கள் அதைப்பார்க்க ஜெனக்கூட்டமும் திரளும்.

### 497. ஒருவரை கோட்டினதேள் விஷத்தை இன்னொருவர்க் கேற்றும் ஜாலம்.

செம்பொத்தியினுடைய நாக்கும் உடும்பினுடைய நாக்கையுங் கூட்டி அதனுடன் கீழ்காய்நெல்லி காமப்பால் விராகன் ஒன்றும் சேர்த்து இவைகளை

யெல்லாம் ஆண்கழர்ச்சிக் காயினுள்செலுத்தி கிராணம் தீண்டும்போது எடுத்து கொசுகின் மெழுகால் மூடிவைத்துக் கொள்ளவும் தேள் கடித்துவந்தபேர்களை கையை நீட்டச்சொல்லி அடி கழற்சிக் காயைக்கொடுத்து உடனே அதை இன்னொருவர் கையிற்கொடுக்க அந்த விஷமானது இவளைவிட்டு அவன்மேல்போகும் அப்போது அவன் தேள்விஷமேறி நடுநடுங்கி அழுவான் கொட்டினபக்கம் நெரியானது கட்டும் அப்போது நீ காயைக் கீழேபோடென்று சொல்ல போட்டவுடன் விஷமானது இரங்கிவிடும் ஆனல் இப்படி எத்தனைபேர்கள் மீதிலேனு மேற்றியிரக்கலாம்.

## 498. வேறுமுறை பேயாட்டல்.

பேயாட்டும் மூலமந்திர மெவ்விதமெனில் வங் சிங் வயநமவென்று லட்சமுருசெபிக்க உடனே பேய் பிசாசு பூதமிவைகளெல்லாம் அழுதுக்கொண்டுட அலறியோடும்.

## 499. உடுக்கை கட்டும் ஜாலம்.

உடுக்கையைக் கட்டுகிறவித மெப்படியெனில் சிவன் ஆணை பகவதியாணை ஐயுங் கிலியுய சவ்வும் கட்டு மதவாரணகட்டு ஐயும் கிலிதம் சுவகாவென்று ஜெபித்து ஆதியந்தமுலங் கட்டெட்டு ஜெபித்தவுடன் உடுக்கையைக் கட்டிவிடும் எவ்விதமாக அடித்தாலும் ஓசைகிளம்பாது.

## 500. வியாதிபோக்க ஜாலம்

சகலவியாதிகளையும் போக்கவேண்டில் தியானம் தூளி தூளு உன்னிரு கண்ணிற் பின் தூளி என்று ஜெபித்து காச்சல் தலைவலி முதலானதும் பரந்தோடச் செய்வாய் சுவாமி குருவாணை போவைன்று விபூதி மந்திரித்தால் கழுப்புகள் பலபிணிகளும் அகன்றுபோகும் . உன்னைப்புகழ்வார்கள்.

## 501. பார்வை மை.

பார்வைமைசெய்யும் முறை யெவ்வித மெனில் ஆமை ஒன்று தலை ஒன்று கோழிமுட்டை ஒன்று மனிதரை புதைத்த எலும்பு பலம் இரண்டு ஈசல் பலம் இரண்டு நிலவங்கைவிதை பலம் இரண்டு மரக்கொடி விராகன் மூன்று இவைகளை எல்லாம் சேர்த்து தயிலம்வாங்கி ஆலமுள்ள கல்வத்திற்போட்டுஅத்துடன் அஞ்சனக்கல் விராகன் ஒனறு சேர்த்து ஆள்காட்டிகுருவியின் முட்டை நெய் சொஞ்சம்விட்டு ஒரு ஜாமம் நன்றாயரைத்து வழித்து சிமிளியில்வைத்து அனுமானையும் அஞ்சனதேவியையும் பூசைசெய்து பின்பு மையை எடுத்து பார்ப்பாயாகில் கள்வு முதலினதுடன் யேவல் தொழில் மூன்ற தெய்வம் பூதம்

பிசாசு ராட்சதக் கணங்கள் ஒருவன் செய்யும் மோடியும் இவை முதலானதும் கண்ணிற்கு நன்ருகத்தோற்றும் நேராகப்போய் கண்டுபிடிக்கலாம் ஒருவருக்கும் தீரமாகச்சொல்லலாம்.

## 502. வசிய அஞ்சனம்.

ஊசிகாந்தம் நீலம் ஆமை மஞ்சள் வேசியினுடைய கைவெத்திலை செங்கழ நீர்வேர் மலைமஞ்சங்கொடி கோரோசனம் குங்குமப்பூ இவைகள் வகைக்கு விரா கன் ஒன்று நிறுத்தெடுத்து குழியம்மியிலிட்டு மாடப்புருவொன்றை யறுத்து அதின் இரத்தம் முழுமையும்விட்டு செகப்பு பசுவெண்ணெய் விராகன் பணிரெ ண்டு இவைகளை அதில்விட்டு தவராமல் மூன்றுநாளரைத்து எடுத்து சிமிளிய் வைத்து காளிகோயில் முன்பாகக்கொண்டுபோய் புதைத்துவைத்து எட்டுநாள் பொருத்தெடுத்து அத்துடன் புனுகு சவ்வாது வகைக்கு விராகனென்று சேர்த் தமத்தித்துக்கொண்டு ஜெபிக்கும் மூலமந்திரம் சர்வலோக வசீகரி ஓம் என்று ஆயிரத்தெட்டு ஜெபித்து நெற்றியில் திலர்தமிட்டுக்கொள்ள புருஷாள்பெண்கள் நீ கேட்டதையெல்லாந் தருவார்கள் உனக்குண்டாகி இருக்கும் பகையெல்லாம் நசிந்துப்போகும உன்மேல் ஒரு குற்றம நேராது.

## 503. பாதாள அஞ்சனம்.

பாதாள அஞ்சனம செய்யும் முறைவெவ்விதமேனில் வேரில் பழுத்து வெடித்து பலாபழத்தின் கொட்டையைக்கருவி விராகனிடை பத்து எடுத்து அத்துடன் அஞ்சன பாஷாணம விராகன் ஒன்று சேர்த்து கல்வத்திலிட்டு விளக்கெண்ணை விட்டு அறைத்து ஒரு ஜாமம் நன்ருய் அறைத்து வழித்து சிமி ளில் வைத்து அஞ்சனதேவிக்கும் அனுமானுக்கும் பூசைசெய்து பின்பு மைய் கையிலிட்டுப்பார்க்க ஜெகத்திலுள்ள நிதிகள் யாவும் தோற்றும் எடுத்துக்கொள் ளலாம் பாதாளத்திலுள்ளப் பொருளையும் கண்ணுக்கு நேராகக்கண்டு எடுக்க.

## 504. வேறுமுறை மாரணம்.

மாரணம் செய்வது கொடிய பாதகமாயினும் செய்யவேண்டில் மாரணசக் கரத்தைக்கீறி எதிரியின் சிறுநீரும மலமும காலடி மண்ணும் கருவும் சேர்த்து அறைத்து சக்கரத்திற்பூசி அதிலவன்பேரை எழுதி அந்த சக்கரத்தை பாம்பின் வாயில் வைத்து அதை தலைகீழாகத் தூக்கிகட்டி பிறகு எலுமிச்சம்பழச்சாறும் நெய்யும சேர்த்து ஓமம் வளர்த்தி அதில் அந்தப்பாமபை வெட்டிப்போட்டு தென்முகமாக வைத்துக்கொண்டு ஜெபிக்கும் மந்திரமானது மசி நசி என்று எட் நாளும இருவேளையும மறவாமல் உருஜெபித்து வருவையானல் உனக்கெதிரி யாரானாலும் விரைவில் மரணமாவார்கள்.

## 505. வேறுமுறை பேதனம்.

இரட்டை ஊமத்தங்காயைக் கொண்டுவந்து பகையாளியுடைய இடதுகால் மண்ணெடுத்து அக்காயில் சேர்த்து அக்காயில் அவன் பெயரைவரைந்து பேத னமந்திரத்தைச்சொல்லி அவனிருக்கும ஊரைச்சுற்றி மயானத்திற் கொண்டு போய் புதைக்கவும புதைத்தவுடன பகைவனுக்கு பக்கத்திற் பிரமேகத்துடன் அனே நோய்கள் தோன்றி பாதைசெய்யும, தேசமெங்கும் சுற்றிமாள்வான் அனைவருமபார்த்து பழித்துச் சிரிப்பார்கள். அவன் பதைபதைத்தழுகுவான். அப்படி பதைத்து உன்னை வணங்கி வருவானுனல் புதைத்ததை எடுத்து ஆற்றி விட எதிரியினுடைய பிணியானது அகனறு சுகப்படுவான்.

## 506. வேறுமுறை வித்துவேஷனம்.

வேப்பமரத்தின்மேல் கட்டியிருக்கும் காக்கையின் கூடும் கழுதையுடைய சடையும் மாங்கிலியஸ்திரீ அவிழ்த்தகயறும் பஞ்சுகொட்டியில் அருந்துபோன நரம்பும் பன்றிரோமமும் பித்த கசம் பித்தக்கூடையும் முறமும் இதை முச்சந்தி மண்ணிறகொளுத்தி அடுப்பில்வைத்து நீ தெற்கு முகமாக நிர்வாணரூபமாக நின்று சுட்டுச்சாம்பலாக்கி அதில் அறுகோணச் சக்கரத்தைக்கீரி அதனுள் தூம சியென்று வரைத்து ஓதும் அட்சரமாவது தூம்-தூம்-சீசீ-ஓம்-நசி-நசி-ஒன்றுசொ ல்லி யெடுத்துவந்து பகைவனது பெயரைவரைந்து அவன் வசிக்கும் படியான வீட்டின் இரப்பில் கொண்டுபோய்வைக்க புருஷனும் பெண்டும் ஊரைவிட்டு வெவ்வேருவார்கள்.

## 507. இதுவுமது.

மேற்சொன்னபடி நரம்பு எலும்பு மயிர் சுடலையினுடைய சாம்பலும் உடும் பினுடைய தலை நாய்பல்லும் இவை முதலானதும ஒன்ருய்ச்சேர்த்து எட்டிப் பலகையில் மாடன்செய்து புதுகலசத்தில்வைத்து மேற்சொன்னவைகளை யெல் லாமதனிற்போட்டு மாடன்மந்திரத்தை யோதக்கேட்பாயாக.

வண்ணுர உதிரமாடன் அக்னிசாமுண்டி விஞ்சையாகப்பார்க்க கருகருத்தாற் போலும் குரங்குபோலும் பூனைபோலும் புலிபோலும் காடிபோலும் பன்றிபோ லும் தோன்றுவதுடன் பேய்போலும் பூதம்போலும் பிடித்து இளித்துக்கடிப் பதுபோற் செய்வான் மாடன் அந்த மாடனை மறவாமல் பூசித்து பகைவன் முன் மேற்படிகலசத்தைக் கொண்டுபோய் உடைத்துவிட பகைவன்குலம் நாச மாகும்- வியாதியில் பாதைப்படுவார்கள் மாடு கன்றுகளும் சேதமாகும் பொன் பொருளும் அழிந்துபோம ஆண்மை ஆங்கார மூன்று அன்றி பகைவனுடைய பெயரை காரியத்தகட்டில் வரைந்து ஐங்காயமறைத்து அதின்மேற்பூசி கலசத் திறபோட்டுவிடவும் சத்துருக்களானபேர்கள் உன்னை வணங்கி வருவாராகில் மேற்படி தகட்டை எடுத்து பாலிற்போட்டு கழுவி ஓடுகின்ற ஜலத்திற் போடுவா யானுல் எதிரிகளுக்கு மேற்சொன்ன நோய்கள் யாவும் நீங்கி சுகப்படுவார்கள்.

## 508. பூமியில் பூதங்கள் புறப்படும் ஜாலம்

சபையிலுள்ளவர் களைப்பார்த்து இதோ உங்கள் முன்னிலையில் பூமியைக் கையால் தட்டுகிறேன் பூமியானது வெடித்துப் பூதங்களை புறப்படச்செய்கி றேன் பாருங்களென்று ஒருவருக்குந் தெரியாமல் ஜெகஜாலக்கருவை விரலில் தொட்டு மயானருத்திரியின் அட்சரத்தை நூற்றி எட்டு சொல்லி அம்மணி மயா னருத்திரியே இப்போது பூமியானது வெடித்து பூதகூட்டங்கள் புறப்பட்டுவரு வதுபோல் தோற்றமாகச் செய்வாயென்று மனதில் நினைத்து ஜாலக்காளை ஜபித்து சபையோர்கள் மிரளும்படியாக சல் மலையாளபகவதி என்று கருவை தொட்டுவைத்திருக்கும் வலதுகையால் பூமியை யோங்கித்தட்ட உடனே பூமி யானது படாலென்று வெடித்தாப்போலும் அதனுள்ளிருந்து பூதக்கூட்டங்கள் பிரவேசமாவதுபோலும் தோற்றப்படும். அப்போது வேடிக்கைபார்த்திருந்த பேர்கள் யாவரும் மிரண்டு ஒருவர்மேலொருமர் விழுந்து ஓடுவார்கள். அப்போ து நீ அவர்களை ஓடவொட்டாகல் தடுத்து மறுபடியும் சபையோர்களைப்பார்த்து இப்போது இந்த பூதங்களையெல்லாம் வந்தவழியாக பூமிக்குள் போகும்படி செய்கிறேன் பயப்படாமல் நின்று பாருங்களென்று உடனே ஒருவருக்குந் தெரியாமல் ஐங்கோலக்கருவைக் கையில்தொட்டுக்கொண்டு வைரவர் அட்சரத் தை நூற்றியெட்டு ஜெபித்து முன்போல் சல்மலையாளபகவதா பூதங்களைபாதா ளத்திற்குள இறங்கி விட்டாற்போலும் வெடித்த நிலம் மூடிக்கொண்டாற்போ லும் பார்ப்போர்களுக்குத் தோன்றும் எல்லாரும் ஆச்சரியப்படுவார்கள்.

## 509. தடாகத்திலுள்ள தண்ணீரை யெல்லாம் குடிக்கும் ஜாலம்.

தண்ணீர் நிறைந்துள்ள தடாகத்தினருகிற்சென்று தன்னுடன் தந்தவர்க ளைப்பார்த்து உங்கள் முன்பாகவே இந்த தடாகத்திலுள்ள குடித்துவிடுகிறேன் பாருங்களென்று கண்கட்டுமையை தொட்டு திலர்தமிட்டுக்கொண்டு வாலைமந்தி ரத்தை 103.சொல்லி அஷ்டமாசித்திமையை தொட்டு சாமூண்டியை ஸ்மரணை செய்து அந்தமையை தடாகதண்ணீரில் தெளித்து நீகுளத்தின் படிகட்டிரங்கி சல்மலையாளபகவதா இந்ததடாகத்திலுள்ள் தண்ணீரையெல்லாம் என்வயற்றிற் குள் போகச்செய்யடியென்று மனதிலெண்ணி அனைவரும் கேட்கும்படியாக உரக்கச்சொல்ல நீ தண்ணீரில் வாயைவைத்துக்கொண்டு ஒருநாழிகைபரியந்த மிருக்கப் பார்ப்போர்கள் யாவருக்கும் குளத்துத் தண்ணீரைக் குடித்துவிட்டா னென்று மதிமயங்கி ஆச்சரியப்படுவார்கள். அப்போது நீ அவர்களைப் பார்த்து இப்போதுயான் குடித்ததண்ணீரையெல்லாம் குயத்தில் வரும்படிசெய்கிறேன் பாருங்களென்று காளியைநினைத்து ஒருவருக்குந்தெரியாமல் ஐங்கோலக்கருவை விரலில்தொட்டு மேற்படி தடாகத்திற் றெளித்து ஆவென்று கக்குவதைப்போல கக்கி தந்திரமாக நெற்றியிலிட்டுக் கொண்டிருக்கும் பொட்டைத் துடைத்துவிட எப்போதும்போல் தடாகத்தண்ணீர் தோற்றும்.

## 510. கிணற்றில்போட்ட மோதிரத்தை அழைப்பிக்கும் ஜாலம்.

ஜாலமாடும் ஜாகையில் வேடிக்கைப்பார்க்க வருபவர்கள் கையில்போட்டிருக்கும் மோதிரமொன்று வாங்கி அவர்களைப்பார்த்து இதோ இந்த மோதிரத்தை ஒருதுணியில் முடிந்து கிணற்றில் போட்டுவிடுகிறேன் மறுகிணற்றில் ஜலமொண்டுவருவீராகில் அதிலந்த மோதிரத்தை வரும்படிசெய்கிறேன் பாருங்களென்று ஒருவருக்குந்தெரியாமல் தந்திரமாக கண்கட்டுமையைதொட்டு மேற்படி மோதிரத்தின் மேற்றடவி பூமியின்மேல்வைக்க அது ஒருவர் கண்ணிற்கும் தெரியாமலிருக்கும் உடனே அம்மாதிரியான ஒரு மோதிரத்தை எடுத்து அனைவருக்குங்காட்டி ஒருதுண்டு கந்தத்துணியில் முடிந்து ஒருவர்கையில் கொடுத்து அவர்களுக்கு இஷ்டமானகிணற்றில்போட்டு வரும்படியாகச்சொல்ல அப்படியே அவன் போட்டுவிட்டு வந்தவுடன் அவன்கையிலேயே ஒரு சிறு சொமபைச் கொடுத்து அந்தகிணருதவிர இன்னம் எந்த கிணற்றிலாவது ஜலமொண்டு வரும்படியாகச்செய்து மேற்படி ஜலத்தில்போட்டு அவனையே கைபோட்டு மோதிரம் இருக்குதாபாரென்றுசொல்ல அவன் கைபோட்டு மோதிரமிருக்குதென்று எடுத்துக்கொடுக்க அனைவரும் சந்தோஷமடைந்து இது குட்டிச்சாத்தான் வேலையென்று புகழ்வார்கள்.

## 511. ஒருவனை மூர்ச்சையாக்கி மறுபடியும் எழுப்பும் ஜாலம்.

ஒருவனை சபையோர்களுக்குமுன் நிற்கவைத்து இவனை மூர்ச்சையாகவிழும்படிச்செய்து மறுபடியும் மூர்ச்சை தெளியவைக்கிறேன் பாரென்று ஜெகஜாலக்கருவை கைவிரலில்தொட்டு சக்கலாதேவி மந்திரத்தை நூற்றியெட்டு ஜெபித்து அந்தக்கருவை அவன்மேல்தெளிக்க அவன் உடனே பூமியின்மேல் சுருண்டு விழுந்து மூர்ச்சையாகுவான் சபையிலுள்ள யாவர்களும்பார்த்து மயங்கி அவருவார்கள் அப்போது நீ அவனைப்பார்த்து இவனை மூர்ச்சைதெளிந்து எழுந்திருக்கும்படி செய்கிறேன் பாருங்களென்று ஐங்கோலக் கருவைதொட்டு பைரவர் மந்திரத்தைசொல்லி கருவை அவன்மேல்தெளித்து ஒருதுணியைப் போட்டுமூடி சற்றுநேரமபொருத்து துணியை வாங்கிவிட நித்திரைபோய் எழுந்திருப்பான் ஆச்சரிவப்படுவார்.

## 512 ஒருவனை இரத்தம் கக்கும்படி செய்யும் விநோத ஜாலம்.

ஜாலமாடும் ஜாகையில் தங்களுக்குள் ஒருவனைசபையில்நிற்கவைத்து சபையோர்களைப்பார்த்து இதோ இவன் வாயில் ரத்தம் சக்கும்படி செய்கிறேன் பாரென்று ஜெலஜாலக்கருவை விரலில்தொட்டு சக்கலாதேவி அட்சரத்தை ஆயிரத்

தொருஜெபித்து அம்மணி இவன் வாயில்ரத்தங் கக்குவதுபோல் தோற்றச்செய் வாயென்று மனதில் தியானித்து அந்தக்கருவை அவன்மேல் படும்படித்தெளிக்க உடனே அவன்வாயிலிருந்து குபீல்குபீலென்று ரத்தங் கக்குவதுபோல் பார்ப் பபோர்யாவர்களுக்குந்தோற்றும் அப்போது அவர்களு மய்யையோ இ யெ ன்ன கோரமையென்று தங்கள் கண்களை மூடிக்கொள்வார்கள் உடனேநீயதை நிருத்திவிடுகிறேன்பாரென்று ஐங்கோலக்கருவை விரலில்தொட்டு பைரவர் அட் சரத்தை நூத்தியெட்டுசொல்லி கருவை யவன்மேல்தெளிக்கஉடனே ரத்தங்கரு வது நின்றுவிடும் அனைவரும்பார்கத்து அதிசயிப்பார்கள்.

## 513. மல்லிகைமோக்கை வாயால்கக்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் வேடிக்கைப்பார்க்க வந்திருக்கும் சபையோர்களைப்பார் த்து என்வாயிலிருந்து மல்லிகைமொக்கை கக்குகிறேன் பாரென்று அஷ்டமாசி த்திமையை விரலில்தொட்டுக்கொண்டு காளியினுடைய திலர்தமிட்டுக்கொண்டு காளியினுடைய அட்சரத்தை நூற்றியெட்டு செபித்து கண்கன்டுமையை திலர் தமிட்டுக்கொண்டு ஜாலக்காளை தியானித்து ஒரு நூல்விதமான துணியைக்கீழே போட்டு அனைவரும் எதிரில் ஆவெனறு வாயைத்திறந்துகக்க குபுகுபுவென்று மல்லிகைமொக்கு சொரிவதுபோல் பார்ப்போர்கள் கண்களுக்குத் தோற்றும் ஆச்சரியப்படுவார்வள் ஆனல் உடனே கக்கிய புஷ்பத்தை மறைத்து சல்வோடி ப்போவென்று நீ சொல்லவேண்டும்.

## 514. சாமந்திப்பூ கக்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் அங்குள்ள பேர்களைப்பார்த்து இப்போது மல்லிகை மொக்கை கக்கினதைப் பார்த்தீர்கள் இதோ சாமந்திப்பூவைக் கக்குகிறேன்பாரு ங்களென்று கண்கட்டுமையை திலர்தமிட்டுக்கொண்டு ஜெகஜாலக்கருவை விர லிற்தொட்டு சக்கலாதேவி அட்சரத்தை ஆயிரத்தெட்டு செபித்து ஜாலக்காளைப் பூசித்து அம்மணி சாமந்தி புஷ்பம் கக்குவதுபோல் பார்ப்போர்கள் கண்ணுக்குத் தோற்றம்படி செய்குவாயென்று ஒருதுணியைக் கீழேபோட்டு கபகபவென்று இப்போதுதான் செடியில்கொய்த புஷ்பம்போல் தோற்றம் பார்ப்போர்கள் பிர மித்து நிற்பார்கள் நீ உடனே முன்போல் மறைத்துவிடவேண்டும்.

## 515. ரோஜாப்புஷ்பம் கக்கும் ஜாலம்

ஜாலமாடுமிடத்தில் சபையோர்களைம்பார்த்து சாமந்திப்பூ கக்கினதை யாவ ரும் பார்த்தீர்கள் இதோ ரோஜாபுஷ்பம் கக்குகின்றேன் பாருங்களென்று கண் கட்டுமையை திலர்மிட்டுக்கொண்டு மகாமாயமையை விரலில்தொட்டு மயான ருத்தரி அட்சரத்தை ஆயிரத்தெட்டு செபித்து ஜாலக்காளைப்பூசித்து அம்மணி ரோஜாபுஷ்பம் கக்குவதுபோல் பார்ப்போர்களுக்கு தோற்றச்செய்வாயென்று

மனதில் நினைத்து முன்போல் துணியை பூமியில் விரித்துப்போட்டு சல் மலையா ளபகவதியென்று ஆவென்று வாயைத்திறந்து கக்க ரோஜாபுட்பங்கள் சொரிவ துபோல் எதிரிகளுடைய கண்களுக்குத் தோற்றும் இது அபுரூபமான வித்தை யென்று ஆச்சரியப்படுவார்கள் அதையும் முன்போல் மறைத்துவிடவும்.

## 516. மனோரஞ்சித புஷ்பங்கக்கும் ஜாலம்.

முன்போல் சபையோர்களைப் பார்த்து ரோஜாபுஷ்பம் கக்கினதைப் பார்த் தீர்கள் இதோ மனோரஞ்சித புஷ்பம் கக்குகிறேன் பாருங்களென்று கண்கட்டு மையை திலர்தமிட்டுக்கொண்டு இந்திர ஜாலமையை விரலில்தொட்டுசாமுண்டி அட்சரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து ஜாலக்காளை தியானித்து அம்மணி மனோ ரஞ்சித புஷ்பம் கக்குவதுபோல் தோற்றும்படி செய்குவாயென்று முன்போல் துணியை விரித்து பூமியின்மேல் போட்டு சல்மலையாளபகவதி ஓடிவாடியென்று ஆவென்று வாயைத்திறந்து கக்க புஷ்பம் சொரிவதுபோல் தோற்றும் அனைவ ரும் ஆச்சரியப்பட்டானதும் முன்போல் மறைத்துவிடவும்.

## 517. பலவிதமான புஷ்பங்கள் கக்கும் வித்தை.

ஜாலமாடும் ஜாகையில் உள்ள சபையோர்களைப்பார்த்து இப்போது நாலு வித புஷ்பங்களை கக்கின் விநோதங்களைப் பார்த்தீர்கள் இதோபாருங்கள் பல விதமான புஷ்பங்களும் கக்குகிறேன் பாருங்களென்று சக்கலாதேவி அட்சரத் தை ஆயிரத்தெட்டு உருஜெபித்து அஷ்டமாசித்திமையும் ஐங்கோலக் கருவும் மகாமாயமையும் ஒன்றாய் மத்தித்து கையிற்பூசிக்கொண்டு கண்கட்டுமையைதில ர்தமிட்டுக்கொண்டு அஞ்சனாதேவியையும் ஆஞ்சநேயரையும் மனதில் தியானி த்து இரண்டுகையையும் இரண்டுதொடையின்மேல்வைத்து முன்போல் பலவித புஷ்பங்கள் கக்குவதுபோல் பார்போர்கள் கண்களுக்குத் தோற்றவேணுமென்று மனதிலெண்ணி வாயை ஆவென்று திரந்துபார்க்க பலவித புஷ்பங்கள் கக்குவது போல் தோற்றும் அனைவரும் இதுமகா புதுமையென்று பிர்மித்து ஆச்சரியப்படு வார்கள் நீ முன்போல் மறைத்துவிடவேண்டும்.

## 518. சவரன்கள் கக்கும் ஜாலம்.

ஜாலமாடும் ஜாகையில் ஒரு தாம்பாளத்தை மேஜையின்மேல் வைத்து இந் ததாம்பாளத்தின் நிறைய சவரன்களை வயிற்றிலிருந்து கக்குகின்றேன் பாருங்க ளென்று அஷ்டமாசித்தி மையை விரலில்தடவி அம் அட்சரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து அந்தமையை தட்டில்தடவி அம்மணி இந்த தட்டு நிறைய சவரன்இரு ப்பதுபோல் தோற்றச்செய்குவாயென்று மனதில் தியானித்து கட்கட்டுமையை எடுத்து திலர்தமிட்டுக்கொண்டு ஜாலக்காளைபூசித்து தட்டிற்கு நோராய் தலையை குனிந்து ஆவென்று வாயைத்திரந்துபார்க்க பார்ப்போர்களுக்கு தட்டுநிறையசவ

ரன்கக்கினதுபோல் தோற்றப்படும் ஆச்சரியப்படுவார்கள் உடனே முன்போல் மறைத்துவிடவேண்டும்

## 519. ரூபாய்கள் கக்கும் ஜாலம்.

முன்போலொரு தாம்பாளத்தை சபையோர்களுக்குக் காட்டிவைத்து சவரன்கக்கின விநோதங்களைப்பார்த்தீர்கள் இதோ ரூபாய்களைக் கக்குகின்றேன் பாருங்களென்று சொல்லி அஷ்டமாசித்தி மையையெடுத்து ஒருவருக்குந் தெரியாமல் விரலில்தொட்டு வாலை அட்சரத்தை ஆயிரத்தெட்டு உருஜெபித்து அந்த மையை தட்டில் தடவி ஜாலக்காளைப் பூசித்து இந்த தட்டின் நிறைய ரூபாய்கள் தோற்றும்படி செய்வாயென்று தியானித்து கண்கட்டுமையை திலர்தமிட்டுக்கொண்டு முன்போல் கக்க பார்ப்போர்களுக்கு ரூபாய்கக்கினதுபோல் தோற்றும் பிர்மித்து ஆச்சரியப்படுவார்கள் அதையும் முன்போல் மறைத்துவிடவும்.

## 520. பவழங்கள் கக்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் வேடிக்கைப்பார்க்க வந்திருக்கும் யாவரையும் மனமகிட்ச்சி யடைந்தீர்கள் இதோ பவழங்கள் கக்குகின்றேன் பாருங்களென்று ஜெகஜாலக்கருவை விரலில்தொட்டுக்கொண்டு காளபைரவர் அட்சரத்தை நூற்றியெட்டு ஜெபித்து கண்கட்டுமையை திலர்தமிட்டுக்கொண்டு மேற்படி மையை முன்போல் தட்டில் பூசி ஜாலக்காளை தியானித்து முன்போல் கக்க பவழங்களாகத் தோற்றும் இது மகா புதுமையான வித்தையென்று உன்னைபுகழ்வார்கள் அதையும் முன்போல் மறைத்துவிடவும்.

## 521 முத்துகள் கக்கும் ஜாலம்.

சபையோர்களைப்பார்த்து இப்போது பவழம்கக்கின விநோதங்களைப் பார்த்து மகிழ்ந்தீர்கள் இதோ முத்துக்கள் கக்குகிறேன் பாருங்களென்று மகாமாயமையை விரலில்தொட்டு மயானருத்திரி அட்சரத்தை நூத்தியெட்டு ஜெபித்து அந்தமையை தந்திரமாகத் தாம்பாளத்திற்றடவி பின்பு கண்கட்டுமையை திலர்தமிட்டுக்கொண்டு பைரவரை தியானித்து முத்துகக்குவதுபோல் தோற்றச்செய்குவாரென்று மனதிலெண்ணி ஜாலக்காளை தியானித்து முன்போற்கக்க பார்ப்போர்கள் பிர்மித்ததாக முத்துகக்கினதுபோல் தோற்றும் அனைவரும் ஆச்சரியபடுவார்கள் ஆனல் நீ முன்போல் மறைத்து கல்மலையாளபகவதி முத்தைக்கொ. ண்டுபோவென்று சொல்லவேண்டும்.

## 522. கெம்புகள் கக்கும் ஜாலம்.

முன்போலவே சபையோர்களைப்பார்த்து முத்துகக்கின விநோதங்களைப் பார்த்தீர்கள் இப்போது கெம்புகள் கக்குகிறேன் பாருங்களென்று இந்திரஜால

மையை விரலில் தொட்டு ருத்திராதேவி அட்சரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து தந்திரமகாமையை தட்டிற்பூசி கண்கட்டுமையைத் திலர்தமிட்டுக்கொண்டு காள பைரவரை தியானித்து கெம்புகள் கக்குவதுபோல் தோன்றச்செய்யவேணுமெ ன்று மனதில்யெண்ணிமுன்போல் பிரகாசமாககெம்பு கக்கியதுபோல்தோற்றும் கண்டவர்கள் கண்கள் பூர்த்து மதிமயங்கி நிர்ப்பார்கள் நீ முன்போல் மறைத்தி விடபவண்டும்.

## 523. ஸ்படிகக்கற்கள் கக்கும் ஜாலம்

ஜாலமாடுமிடத்தில் யாவரையும்பார்த்து கெம்புகள் கக்கினதைப் பார்த்தீர் கள் இதோ ஸ்படிக்கற்களைக் கக்குகின்றேன் பாருங்களென்று அஷ்டமாதித்தி மையை விரலில்தொட்டு வாலை அட்சரத்தை ஆயிரத்தெட்டோதி பைரவர் அட் சரம் நூற்றியெட்டு ஜெபித்து மையைதட்டில் பூசி ஜாலக்காளை தியானித்து அம்மணி ஸ்படிகம் கக்குவதுபோல் தோற்றச்செய்குவாயென்று மனதிலெண்ணி மயானருத்திரியை பூசித்து முன்போல் வாயைத்திறந்து ஆவென்று கக்க ஸ்படி கம் கக்குவதுபோல் தோறும் ஆச்சரியப்படுவார்கள் நீ முன்போல் மறைத்து விடவும.

## 524. புஷ்பராகம் கக்கும் ஜாலம்.

முன்போல் சபையோர்களைப்பார்த்து ஸ்படிக்கம் கக்கினதைப்பார்த்து மகிழ்ந்தீர்கள் இதோ புஷ்பராகம் கக்குகின்றேன் பாருங்களென்று மகாமாயம் இந்திர ஜாலமை ஐங்கோலமை இது மூன்றுங்கலந்து தாம்பாளத்தில் பூசி சாமு ண்டி அட்சரத்தை நூத்தியெட்டு ஜெபித்து புஷ்பராகம கக்குவதுபோல் தோற் றச்செய்குவாயென்று மனதிலெண்ணி ஜாலக்காளை தியானித்து முன்போல் வாயைத்திறந்து கக்க புஷ்பராகம் ககுவதுபோல் தோற்றும் இது மகாபுதுமை யென்று அனைவரும் ஆச்சரியப்படுவார்கள் நீ முன்போல் சல் மலையாளபகவதி யென்று மறைத்து விடவேண்டும்.

## 525. ரவைகள் கக்கும் ஜாலம்.

வேடிக்கைப்பார்க்க வந்திருக்கும் சபையோர்களைப்பார்த்து புஷ்பராகம் கக்கினதை பர்த்தானந்த மடைந்தீர்கள் இதோ ரவகளைக் கக்குகின்றேன் இந்த விநோதங்களைப் பாருங்களென்று ஜெகஜால மைய் விரலில்தொட்டு சக்கலா தேவி தியாணித்து அட்சரம் ஆயிரத்தெட்டோதி மைய் தாம்பளத்திற்றடவி கண்கட்டு மைய் திலர்தமிட்டுக்கொண்டு ஜாலக்காளை தியானித்து அம்மணி ரவைகள் கக்குவதுபோற் பார்ப்போர்கள் கண்ணுக்குத் தோற்றும்படியாகச் செய்வாய் என்று மனதில் எண்ணி முன்போல் அனைவரும் பார்க்க வாயைத் திறந்து அவென்று கக்க குபுகுபென்று ரவைகள் கக்குவதுபோல் தோற்றும் பர்ப்பேர்கள் யர்வரும் பிர்துத்து இது கண்கட்டு வித்தை யென்றும் காளி

புடைய வசியமென்றும் வாலையனுடைய வசியமென்றும் வராகியினுடைய வசியமென்றும் பைரவருடைய வசியமென்றும் மயானருத்ரி வசியமென்றும் சக்கலாதேவி வசியமென்றும் கருவினுடைய வேலையென்று கண்டபடி பேசிக்கொள்வார்கள் ஆனால் நீ முன்போல் சல் மலையாளமீதேவியென்று மறைத்துவிடவேண்டும்.

## 526. பச்சைக்கல் கக்கும் ஜாலம்

ஜாலமாடும் ஜாகையில் சனங்களைப்பார்த்து இப்போது ரவைகக்கினதைப் பார்த்தீர்கள் இதோ நற்பச்சைக்கல் கக்குகிறேன பாருங்களென்று ஜெகஜாலக் கருவை விரலில்தொட்டு சக்கலாதேவி அட்சரத்தை நூத்தியெட்டு ஜெபித்து அம்மணி பச்சைக்கல் கக்குவதுபோல் பார்ப்போர்களுக்கு தோற்றச்செய்வாயென்று மனதில் எண்ணி மையை தட்டிற்றடவி பின்பு கண்கட்டுமைப் திலர்தமிட்டுக்கொண்டு ஜாலக்காளைப் பூசித்து முன்பேபல் வாயைத்திறந்து ஆவென்று கக்க குபுகுபென்று பச்சைகல் வயற்றுக்குள்ளிருந்து வருவதுபோல் தோற்றும் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள் நீ உடனே முன்போல் சல் ஓடிப்போவென்று கல்லைமறைத்து விடவேண்டும்.

## 527. எலுமிச்சம்பழத்தை அறுக்க சத்தமன்னிகைகள் தோற்றும் வித்தை.

ஜாலமாடும் ஜாகையில் சபையோர்களைப்பார்த்து ஒரு எலுமிச்சம்பழத்தை கையிலெடுத்து இந்த எலுமிச்சம் பழத்தினுள்ளிருந்து சத்தகன்னிகளை அழைப்பிக்கின்றேன் பாருங்களென்று அஷ்டமாசித்திமைய் விரலில்தொட்டு வாலையை தியானக்க சத்தகன்னிகளை தோற்றும்படி செய்வாயென்று மேற்படி மைய்யைபழத்தில் தடவி பழத்தை இடது கையில் பிடித்து வலது கையில் சூரிகத்தியெடுத்து இரண்டாய் அறுத்து பூமியில்போட சத்தகன்னிகளும் பார்ப்போர்கள் கண்களுக்கு தோற்றமாகும் இது புதுமையான வித்தையென்று உன்னைப் புகழ்வார்கள் உடனே நீ அறுத்துப்போட்ட பழத்தை எடுத்து மறைத்துவிட சத்தகன்னிகளும் மாயமாக மறைந்துவிடுவார்கள் ஆனால் கண்கட்டுமைய் மறவாமல் திலர்தமிட்டுக் கொள்ளவேண்டும்.

## 528. வாழைப்பழத்தை அறுக்க மயில் தோற்றும் வித்தை.

ஒரு வாழைப்பழத்தை எடுத்து சனங்களுக்குக் காட்டி இந்த வாழைப்பழத்தைஅருத்து மயில் தோன்றும்படி செய்கிறேன் பாருங்களென்று ஜெகஜாலமைய் விரலில்தொட்டு பைரவர் அட்சரத்தை நூத்தியெட்டு ஜெபித்து மயிலைப்போல் பார்ப்போர்களுக்குத் தோற்றும்படி செய்வாயென்று மைய் வாழைப்பழத்தின்மேல் தடவி முன்போல் அருத்துக் கீழேபோட பார்ப்போர்களுக்கு

மயில்போல் தோற்றமாகி திருநடனமாடும் அனைவருங்கண்டு பிர்மித்து அதிசயப்படுவார்கள் உடனே முன்போல் பழத்தையெடுத்து மறைத்துவிடவேண்டும்.

## 529. கோய்யாப்பழத்தை அறுக்க ரிஷிகள் தோற்றும் ஜாலம்

ஜாலமாடும் ஜாகையிலாவது இன்னமொர் இடத்திலாவது ஒருகொய்யாப் பழத்தை கையிலெடுத்து அங்குள்ள யாவருக்குங்காட்டி இந்த பழத்தை அருக்க ரிஷிகள் தோற்றும்படி செய்கிறேன் பாரென்று இந்திரஜாலமையை விரலில் தொட்டு சரமுண்டி அட்சரத்தை நூத்தியெட்டு ஜெபித்து ரிஷிகள் தோற்றும் படி செய்வரயென்று மனதில் எண்ணி மையை பழத்தின்மேல் தடவி இரண்டாக அருத்து புமியின்மேல்போட ரிஷிகள் தபஞ்செய்துக்கொண்டு இருப்பது போல் பார்ப்போர்கள் அனைவருங்குந் தோற்றுக் ஆச்சரியப்படுவார்கள் முன் போல் பழத்தையெடுத்து மறைத்து விடவேண்டும்.

## 530. கிச்சிலிப்பழத்தை அறுக்க தேவர்கள் தோற்றும் வித்தை.

கிச்சிலிபழம் ஒன்றையெடுத்து சபையோர்களுக்குக் காட்டி இதை அருத்து தேவர்கள் தோற்றும்படி செய்கிறேன் பாரென்று மகாமாயமையை விரலில் தொட்டு மயானருத்ரி அட்சரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து அம்மணி தேவர் வர்கள் தோற்றும்படி செய்குவா யென்று மனதில் எண்ணி மையைபழத்தின் மேல்தடவி முன்போலருத்து தரையில்போட தேவர்கள் கூட்டமாகத் தோற்றுவார்கள் பார்ப்போர்களும் பிர்மித்து மெய்மறந்து நிற்பார்கள் நீ உடனேமுன் போல் பழத்தையெடுத்து மறைத்துவிடவும்.

## 531. கரு ஊமத்தன்காயை அறுக்க ராட்சதர்கள் தோற்றும் ஜாலம்.

ஜாலமாடுஞ் சபையில் கரு ஊமத்தங்காய் ஒன்றை யெடுத்து அதை சபையோர்கள் யாவர்களுக்குங்காட்டி இந்தக்காயை அறுக்கின்றேன் இராட்சதர்கள் தோற்றமாகும் விநோதங்களைப் பாருங்களென்று உச்சாடனக்கருவை விரலில்தொட்டு மயானருத்திரியின் மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து மையை காயின்மேல்தடவி ராட்சதாள் தோற்றமாகவேணுமென்று மனதில் தியானித்து காயை அருத்தி முன்போல் கீழேபோட உடனே விகாரரூபங்களோடு அனேக தலைகளும் அனேககரங்களும் கோரப்பல்லுகளோடு தோற்றமார்கள் அதுகண்டு வேடிக்கைப்பார்க்க வந்திருப்பவர்கள் பயந்து மிரண்டோடுவார்கள் அவர்களை ஓடவொட்டாமல் தடுத்து இந்த இராட்சத கூட்டங்களை மாயமாகப்போகும்படி செய்கிறேன் பாருங்களென்று தந்திரமாக முன்போல் காயையெடுத்து மறைத்துவிட மறைந்துபோய்விடும் யாவரும் ஆச்சருயப்பட்டு உன்னைப்புகழ்வார்கள்.

## 532. தேங்காயை உடைக்க சூரிய சந்திரர்கள் தோன்றும் வித்தை.

முன்போல் சபையில்நின்று தேங்காயையெடுத்து சபையோர்களுக்குக்காட்டி இத்ததேங்காயை உடைத்தவுடன் சந்திர சூரியாள்தோற்றும் விநோதங்களைப் பாருக்களென்று ஐங்கோல்க்கருவை விரலில்தொட்டு பைரவர்மந்திரத்தை ஆயிரத்தெட்டு உருஜெபித்து சந்திரசூரியால் தோற்றவேணுமென்று மனதில்தியானித்து சபையோர்களுக்கு முன்னே தேங்காயை உடைக்க உடனேபார்ப்போர்கள் கண்கள்பூர்க்கும்படியாய் சூரிய யந்திராள் தோல்றுவார்கள் அப்போதனைவரும் இதுமகா அற்புதமான வித்தையென்று ஆச்சரியத்தோடு உன்னைப் புகழ்வார்கள் உடனேநீ தேங்காயையெடுத்து மறைத்துவிட மாயமாக மறைந்துபோகும்.

## 533. விளாம்பழத்தை உடைக்க நட்சத்திரங்கள் தோற்றும் ஜாலம்

ஒருவிளாம்பழத்தை கையிலெடுத்து சபையோர்களுக்குக்காட்டி இந்தபழத்தை உடைக்கிறேன் உடனே நட்சத்திரங்கள் தோர்றும் விநோதங்களைபாருங்களென்று முன்போல் ஐங்கோலக்கருவை விரலில்தொட்டு பைரவர் மந்திரத்தை ஆயிரத்தெட்டோதிமையை காயின்மேல்பூசி நட்சத்திரங்கள் தோற்றமாகவேணுமென்று மனதில்நினைத்து அனைவருக்குமுன்பாக விளாம்பழத்தை உடைக்க நட்சத்திரங்கள் தோற்றமாகும் பார்ப்போர்களும் இதுமகா அருமையான வித்தையென்று ஆச்சரியப்படுவார்கள் நீ முன்போல்காயை மறைத்துவிட மாயமாய்ப் போகும்.

## 534 கத்தரிக்காயை அறுக்க காந்திருவர் தோற்றும் ஜாலம்.

ஜாலமாடும் சபையில்நின்று ஒரு கத்திரிக்காயை எடுத்து அனைவருக்குங் காட்டி இதை அருத்தவுடன் காந்திருவர்கள் தோற்றமாகும் அர்புதத்தைப் பாருங்களென்று ஐங்கோலக்கருவை விரலில்தொட்டு வராகிமந்திரத்தை ஆயிரத்தெட்டுஜெபித்து காந்திருவர்தோற்றவேணுமென்று மனதில் எண்ணி மையைகாயின் மேல் தந்திரமாசத்தடவி முன்போல் காயை அருத்து பூமியின்மேல்போட உடனே காந்திருவர் கூட்டம் தோற்றமாகும் பார்ப்போர்கள் பிர்மித்து நிற்பார்கள் நீ முன்போல் காயைமறைத்துவிட மாயமாய்ப்போகும்.

## 535 பீர்க்கங்காயைப்பிளக்க பட்டாளங்கள் தோற்றும் ஜாலம்.

ஜாலமாடும் சபையில்வந்துநின்று ஒரு பீர்க்கன்காயை எடுத்து அனைவருக்குங்காட்டி இந்தக்காயை இரண்டாகப் பிளக்கிறேன் பட்டாளங்கள் தோற்றும்

வினோதங்களைப்பாருங்களென்று ஐங்கோலக்கருவை விரலில்தொட்டு மயானருத்திரி மந்திரத்தை ஆயிரத்தெட்டு உருஜெபித்து பட்டாளங்கள் தோற்றவேணுமென்று மனதில் எண்ணி கருவைக்காய்மேல்தடவி உச்சாடன மந்திரத்தை ஓதி காயைகையிலெடுத்து குருக்காக இரண்டாய்பிளக்க உடனே பட்டாளம் ரிஜாமெண்டு துருப்புகள் முதலானதும கண்ணுக்கெதிரே நிஜரூபமாகத் தோற்றும் சபையோர்களுப்பார்த்து பிர்மித்து இதுமகா வினோதஜாலமென்று விழித்தக் கண் சிமிட்டாமல் பார்ப்பவர்கள் நீ முன்போல் காயையெடுத்து மறைத்துவிட மாயமாகப் போய்விடும்.

## 536. புடலங்காயைப் பிளக்க பூமி வெடிக்கும் புதுமையான ஜாலம்.

முன்போலவே சபையில்நின்று ஒரு புடலங்காயையெடுத்து அனைவருக்குங்காட்டி இந்தகாயை இரண்டாக பிளக்கிறேன் உடனே பூமி படாரென்று வெடிக்கும் வேடிக்கையைப் பாருங்களென்று ஜெகஜாலக்கரு அஷ்டமாசித்திமை ஐங்கோலக்கரு இம்மூன்றையும் சேர்த்து மத்தித்து விரலில்தொட்டுக்கொண்டு சக்கலாதேவி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து பூமி வெடித்தாபோல் தோற்றச்செய்வாயென்று மனதில்எண்ணி மையை காயின்மேல் தடவினதை நெடுக்கே இரண்டாகப்பிளந்து பூமியின்மேல்போட்டவுடன் பார்ப்போர்களுக்கு பூமி பத்தலாகப் பிளந்தாற்போல் தோற்றம் நிற்பார்கள் நீ உடனே முன்போல் காயையெடுத்து மறைத்துவிட பூமியெப்போதும்போல் தோற்றம்.

## 537. மணலைவாரியிறைக்க மழைபெய்யும் ஜாலம்.

ஒரு மைதானத்திற்சென்று ஒருபிடிமண்ணை கையில் எடுத்து தன்னுடன் வந்திருப்போர்களுக்கு காட்டி இந்தமண்ணை நாலுதிக்கிலும் இறைக்கிறேன் இறைத்தவுடனே மவழகெய்யும் வேடிக்கையைப்பாருங்களென்று மேற்படிகருவை கையிற்பூசிக்கொண்டு காளபைரவர் மந்திரத்தை ·ஆயிரத்தெட்டு செபித்து மழை பெய்வதுபோல் தோற்றச்செய்வாயென்று மனதிலெண்ணி மண்ணைவாரி நாலு திக்கிலுமிறைக்க உடனேமேகமானது இருண்டு எழும்பியது போலும் படபட வென்று தாரல் தாருவதுபோலுமிருக்கும் பார்ப்பவர்கள் மிரண்டு ஓடுவார்கள்.

## 538. அம்மிக்குழவியை முழுங்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு அம்மியின் குழவியை கொண்டுவரும்படியாகச்செய்து இந்தக் குழவியை முழுங்கிவிடுகிறேன் பாருங்களென்று மரப்புமையை ஒருவிரலிலும் ஐங்கோலக்கருவை ஒருவிரலிலும் தொட்டுக்கொண்டு வாலைமந்திரத்தை நூத்தியெட்டுஜெபித்து ஐங்கோலக்கரு வாயின்மேல்பூசி மரப்புமையை திலர்தமிட்டுக்கொண்டு கல்லையெடுத்து வாயின் அருகில்கொண்டுபோய் பின்புர

மாகப்போட்டு கல்லைமறைத்துவிட பார்ப்போர்கள் கண்களுக்கு கல்லை முழுங்கி விட்டதுபோல் தோற்றும் உடனே நீ முழுங்கினகல்லை கக்கிவிடுகிறேன் பாருங்களென்று மறைத்துவைத்தகல்லை தந்திரமாக எடுத்து முன்னேபோட்டு ஆவென்றுகக்கியதுபோல் திலர்தத்தை துடைத்துவிட முழுங்கின கல்லை கட்கிவிட்டது போல் தோற்றும் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள்.

## 539. ஒருமனிதனைப் பார்த்தால் மத்துமனிதனுகத் தோற்றும் ஜாலம்.

எத்தைச் சொன்னாலுங் கேட்கும் நத்தைச்சூரி யென்னும் செடிக்கு ஆதிவாரத்தில் மஞ்சள் நூல் காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங்காட்டி வேரைப் பிடுங்கி வந்து அந்த வேரின்மேல் ஐங்கோலக்கருவைபூசி வாராகி மந்திரத்தை லட்சம் உரு ஜெபித்து பிறகு அந்த வேரை எடுத்து குலிசமாடி வைத்துக்கொள்ளவும் ஜாலமாடும் சபையில் வந்து நின்று தங்களில் ஒருவனை சபையில்நிறுத்தி சபையோர்களைப் பார்த்து இதோ இந்தமனிதன் முகத்தைப் பாருங்களென்று கண்கட்டுமையை மேற்படி குலிசத்தின்மேல் தடவி அந்த குலிசத்தை தந்திரமாக ஒருவருக்குந்தெரியாமல் அவன் சிரசின்மேல் வைக்க உடனே பார்ப்போர்கள் கண்ணுக்கு பத்து முகமாகத் தெரியும் அனைவரும் ஆச்சரியப்பட்டு பத்துதலை ராவணனேவென பலவாருகப் பேசி மகிழ்வார்கள் உடனே அந்தகுலிசத்தை எடுத்துவிட ஒரு முகமாகத் தெரியும்.

## 540. ஒரு ஆட்டை ஒரு மந்தை ஆடாகக் காட்டும் வித்தை.

ஜாலமாடும ஜாகையிலாவது இன்னமெந்த விடத்திலாவது ஒரு ஆட்டை பிடித்து வந்து நிருத்தி அங்குள்ள யாவர்களையும் பார்த்து இதோ இந்த ஒரு ஆட்டை ஒரு மந்தையாடாகக் காட்டுகிறேன் பாருங்களென்று அஷ்டமாசித்தியையும் ஐங்கோலக்கருவையும் விரலில் தொட்டுக்கொண்டு மயானருத்ரி மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து ஜாலக்காளை தியானித்து அமமணி இந்த ஒரு ஆட்டை மந்தை ஆடாகப் பார்ப்போர் . கண்களுக்கு தெரியச்செய்வாயென்று மேற்படி இரண்டு கருவையும் தந்திரமாக ஆட்டின்மேரி தெளிக்க உடனே ஒரு மந்தை யாடாகத் தோற்றும் ஆச்சரியப்படுவார்கள்.

## 541. ஒரு அஸ்வத்தை நூறு அஸ்வமாக காட்டும் ஜாலம்.

முன்போல் ஒரு அஸ்ஞுத்தை கொண்டுவந்து நிருத்தி அங்குள்ளவர்களைப் பார்த்து இந்த ஒரு அஸ்வத்தை நூறு அஸ்வமாகததோற்றும்படி காட்டும்விநோதத்தைப் பாருங்களென்று மேற்சொன்னபடி மையைத்தொட்டு வாராகி மந்திரத்தை லட்சம் ஒதி ஜாலக்காளை தியானித்து அம்மணி பார்ப்போர் கண்களுக்கு ஒரு அஸ்வம் நூறு அஸ்வமாகத் தெரியும்படிச் செய்வாயென்று தியானித்து

தந்திரமாக கருவை அஸ்வத்தின்மேள தெளிக்க உடனே பார்ப்போர் கண்களு க்கு நூறு அஸ்வமாமத்தெரியும் இதுமகா புதுமையென ஜாலமென்று ஆச்சரிய படுவார்கள்.

### 542. ஒருபசுவை நூறு பசுவாக காட்டும் வித்தை.

மேற்கூறிய படியே ஒரு பசுவைக் கொண்டுவந்து விருத்தி சபையோர்க ளைப்பார்த்து இந்த ஒரு பசுவை நூறு பசுவாக தோற்றும் படி காட்டுகிறேன் பாருங்கபுளன்று அஷ்டமாசித்திமையும் ஐங்கோலக் கருவையும் விரலிதொட்டு சாமுண்டி மந்திரத்தை நூற்றியெட்டு ஜெபித்து அம்மணி இந்தஒரு பசுவை நூரு பசுவாகப் பார்ப்போர்களுக்குத் தெரியும்படி செய்வாயென்று மனதிலெண்ணி ஜாலக்காளை தியானித்து மேற்படி மையை தந்திரமாகப் பசுவின்மேல் தெளிக்க உடனே நூறு பசுவாகப் பார்போர்கண்களுக்கு தோற்றம் உன்னை புகழ்வார்கள்

### 543. ஒருபுறுவை நூறுபுறுவாக காட்டும் வித்தை.

சாலமாடுமிடத்தில் ஒரு புறுவை கையிலெடுத்து அனைவருக்குங் காட்டி இந்த ஒரு புறுவை நூறு புறுவாகத்தோற்றும்படி காட்டுகிறேன் பாருங்களெ ன்று செகசாலக்கருவும் ஐங்கோலக் கருவும் விரலில் தொட்டுக்கொண்டு காள பைரவர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து இந்த ஒரு புறுவை நூறு புறுவா கத்தோற்றும்படி செய்வாயென்று மனதிலெண்ணி சாலக்காளை தியானித்து கருவை தந்திரமாக புறுவின்மேல் தடவி பூமியில்விட உடனே அது பார்ப்போர் கண்களுக்கு நூறு புறுவாகத் தோக்றம் அனைவரும் இது மகா புதுமையான வித்தையென்று புகழ்வார்கள்.

### 544. ஒருகிளியை நூறுகிளியாக காட்டும் வித்தை.

மேற்சொல்லியதுபோல் ஒரு கிளியைக் கையிலெடுத்து அங்குள்ள அனை வருக்குங் காட்டி இந்த ஒரு கிளியை நூறு கிளியாகத் தோற்றும்படி காட்டுகி றேன் பாருங்களென்று இந்திரஜாலமையும் ஐங்கோயிக்கருவையும் விரலில்தொ ட்டு மயானருத்திரி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து அம்மணி இந்த ஒரு கிளியை நூறு கிளியாகத் தோற்றும்படி செய்வாயென்று சாலக்காளை தியானி த்து கருவை தந்திரமாக கிளியின்மேல் தடவி பூமியில்விட உடனே பார்ப்போர் கள் யாவருங்கும் நூறு கிளியாகத் தெரியும் ஆச்சரியப்படுவார்கள்.

### 545. ஒருகோழியை நூறுகோழியாக காட்டும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு கோழியை எடுத்து சபையோர்களுக்குக் காட்டி இந்த ஒரு கோழியை நூறு கோழியாகத் தோற்றும்படி செய்கிறேன் பாருங்க ளென்று செகசாலக்கருவும் ஐங்கோலக்கருவும் விரலில் தொட்டு சக்கலாதேவி

மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து அம்மணி இந்த ஒரு கோழியை நூறு கோழியாகத் தெரியும்படி செய்வாயென்று சாலக்காளே தியானித்து தந்திரமாகக் கருவை கோழியின் மேல் தடவி பூமியில்விட உடனே பார்ப்பவர்கள் யாவருக்கும் நூறு கோழியாகத் தோற்றும் ஆச்சரியப்படுவரேர்கள்.

## 546. ஒருமயிலை நூறுமயிலாக காட்டும் ஜாலம்.

ஒரு மைதானத்திலாவது அல்லது ஜாலமாடுமிடத்திலாவது ஒரு மயிலைக் கொண்டுவந்து நிருத்தி சபையோர்களைப்பார்த்து இந்த ஒரு மயிலை நூறு மயிலாகத் தோற்றும் படி செய்கிறேன் பாருங்களென்று செகசாலக் கருவையும் ஐங்கோலக்கருவையும் விரலில்தொட்டுக்கொண்டு சக்கலாதேவி மந்திரத்தை நூற்றியெட்டு செபித்துபைரவர் மந்திரத்தை நூற்றியெட்டு செபித்து இந்த ஒரு மயிலை 100-மயிலாகத் தோற்றும்படி செல்யவேண்டுமென்று பூசித்து சாலக்காளை தியானித்து கருவைத் தந்திரமாக மயிலின் பேரில் தெளிக்க உடனே பார்ப்போர்கள் கண்ணுககு 100-மயிலாப்த்தோற்றும் அவர்கள் இது மகா புதுமையான சாலமென்று புகழ்வார்கள்.

## 547. ஒருமைனவை நூறுமைனவாக காட்டும் ஜாலம்.

ஒரு மயினவை சபையோர்களுக்குகாட்டி இதை நூறு மயினவாகக் காட்டுகிறேன் பாருங்களென்று அஷ்டமாசித்திமையும் ஐங்கோலக்கருவும் விரலால் தொட்டு வாலையைத்தியானித்து மந்திரம் நூற்றியெட்டு செபித்து ஜாலக்காளை நினைத்து மையை மயினவின்மீது தந்திரமாகத்தடவி தரையில்விட அது உடனே பார்ப்போர் யாவருக்கும் நூற மலனவாகத்தோற்றும். சந்தேகமில்லாமல் ஒவ்வொன்ருக எண்ணியுங்காட்டலாம ஆனல் கண்கட்டுமையைகையில் தடவிக்கொண்டு எண்ணிக்காட்டவேண்டியது.

## 548. ஒருவாத்தை நூறுவாத்தாக காட்டும் வித்தை.

ஜாலமாடுமிடத்தில் ஒரு வாத்தைப்பிடித்து சபையோர்களுக்குகாட்டி இந்த ஒருவாத்தை நூறுவாத்தாகச்செய்கிறேன் பாருங்களேன்று அஷ்டமாசித்திமையும் ஐங்கோலக்கருவும் விரலில்தொட்டுக்கொண்டு வாலையினுடைய அட்சரத்தை நூத்தியெட்டுசெபித்து அம்மனி இந்த ஒருவார்த்தை நூறுவாத்தாக பார்ப்போர் கண்களுக்கு தோற்றும்படி செய்வாயென்று மனதில்நினைத்து ஜாலக்காளைப் மையை வாத்தின்மேல் தந்திரமாகத்தடவ உடனே நூறு வாத்தாகத்தெரியும. சபையோர் ஆச்சரியப்படுவார்கள்.

## 549. ஒரு கீரிப்பிள்ளையை நூறு கீரிப்பிள்ளையாக காட்டும் ஜாலம்.

ஒரு கீரிப்பிள்ளையையெடுத்து அங்குள்ளயாவர்களுக்குங்காட்டி இதைமுன்போல் கருவை விரலில்தொட்டுக்கொண்டு அர்க்காதேவி மந்திரத்தை நூற்றியெ

ட்டுசொல்லி அம்மனி இந்த ஒரு கிரிப்பிள்ளையை நூறு கிரிப்பிள்ளைகப் பார்ப்போர்கண்களுக்கு தெரியும்படி செய்வாயென்று ஜாலக்காளை தியானித்து மையை தந்திரமாகக் கிரிப்பிள்ளையின்மே தடவி உடனே பார்ப்போர் கண்களுக்கு நூறு கிரிப்பிள்ளையாகத் தோற்றும் ஆச்சரியப்படுவார்கள்.

## 550. ஒருபூனையை நூறுபூனையாக காட்டும் ஜாலம்.

பூனையொன்றைப்பிடித்துவந்து சபையோருக்குக்காட்டி இந்த ஒரு பூனையை நூறுபூனையாகச் செய்கிறேன பாருங்களென்று மகாமாயமையும் ஐங்கோலக்கருவும் விரலில்தொட்டு பத்திரகாளி சக்கரத்தை ஆயிரத்தெட்டு செபித்து அம்மனி இந்த ஒரு பூனையை பார்ப்போர்களுக்கு நூறுபூனையாக தோற்றும்படி செய்குவாயென்று ஜாலக்காளைநினைத்து மையை பூமியினமேதடவிவிட உடனே பார்ப்போர்கண்களுக்கு நூறு பூனையாகத்தோற்றும் பார்ப்போர்கள் இதென்ன புதுமையென்பார்கள்.

## 551. ஒருநாயை நூறு நாயாகக் காட்டும் ஜாலம்.

ஒரு நாயைக்கொண்டுவந்து நிறுத்தி சபையோர்களைப் பார்த்து இந்த ஒரு நாயை நூறுநாயாகக் காட்டுகிறேன் பாருங்களென்று ஜெகசாலக்கருவை விரலில் தொட்டு சக்கலாதேவி மந்திரத்தை ஆயிரத்தெட்டு மந்திரித்து ஜாலக்காளை தியானித்து மையை நாயின்மேல்தடவ உடனே நூறு நாயாகத் தோற்றமாகி வளைய வளைய ஓடுவதுபோல் தோற்றும் சகலரும் ஆச்சரியப்படுவார்கள்

## 552. ஒரு அணிப்பிள்ளையை நூறு அணிப்பிள்ளையாக காட்டும் ஜாலம்.

ஒரு அணிப்பிள்ளையை சபையோர்களுக்குக்காட்டி இந்த ஒரு அணிப்பிள்ளையை நூறு அணிப்பிள்ளையாக காட்டுகிறேன பாருங்களென்று கருவைவிரலில் தொட்டு ஈஸ்வரி இந்த ஒரு அணிப்பிள்ளையை நூறாகக்காட்டுவா யென்றுசொல்லி சாலக்காளையும் நினைத்து கருவை அணிப்பிள்ளைமேல்தடவ நூறு அணிப்பிள்ளையாகத்தோற்றும் எல்லோரும் ஆச்சரியப்படுவார்கள்.

## 553. ஒரு எலுமிச்சம்பழத்தை நூறு எலுமிச்சம்பழமாக காட்டும் ஜாலம்.

ஒருகூடையை கொண்டுவந்துவைத்து அதில் கண்கட்டுமைய் முன்னதாய் தடவி சபையோர்கள் முனபுவைத்து ஒரு எலுமிச்சம்பழத்தையெடுத்து அதற்கு மஞ்சள்பூசி குங்குமமிட்டு மேறபடிகூடையில்வைத்து சபையோர்களைப்பார்த்து இந்த ஒருப்பழம் கூடைநிறைய் ஆகும்படி செய்கின்றேன் பாருங்களென்று அஷ்

டமாசித்திமையும் ஜங்கோலக்கருவையும் பழத்திற்றடவி மேலே ஒருதுணியைப் போட்டுமூடி ஜாலக்காளைப்பூசித்து கொஞ்சம் விபூதியை எடுத்து சபையோர்கள் மிரளும்படியாக சல்மலையாளபகவதி என்று மூனறுதரம் விபூதியை கூடையின்மேல்போட்டு பிறகு அடேகுட்டிச்சாத்தான் கூடைநிறையபழங்கொண்டுவந்தாயாவென்று மூன்றுதரம்கேட்டு பினபு கூடைமேல் மூடியதுணியைத் திறந்து பார்க்க பழம் கூடைநிறையத்தோற்றும். வேடிக்கைப் பார்ப்போர்களும் வெகுவினோதமென்று ஆச்சரியப்படுவார்கள் உடனே நீ முன்போல் துணியை மூடி சல் மாயமாகப் போவென்று சொல்லி சற்றுநேரம் பொருத்து துணியை திறந்துகாட்ட மாயமாக மறைந்து கூடையும் ஒரு பழமுந்தோற்றும் ஆனல் நீ பழத்தை எடுத்து தந்திரமாகக்கழுவி விடவேண்டும் சபையோர்கள் பிரமிப்பார்கள்.

## 554. ஒரு தேங்காயை நூறு தேங்காயாக காட்டும் ஜாலம்.

ஒரு தேங்காயை எடுத்து சாலமாடுமிடத்தில் சபையோர்களுக்குக் காட்டி இந்த ஒரு தேங்காயை மந்திரம்செய்து நூறு தேங்காயாகச்செய்கிறேன் பாருங்களென்று செகசாலக்கருவை விரலில்தொட்டு சக்கலாதேவிமந்திரத்தை நூறறியெட்டுசெபித்து அம்மணி இந்தத்தேங்காயை நூறுதேங்காயாகப் பார்போர்கண்களுக்கு தோறறும்படிசெய்யென்று மனதில் தியானித்து சாலக்காளைப் பூசித்து மையைத்தந்திரமாகத் தேங்காயிற்றடவி பூமியின்மேல் போடப் பார்ப்போர்கண்களுக்கு நூறுதேங்காயாகத் தோறறும் அதுகண்டு அனைவரும் இதுமகா புதுமையான சாதமெனறு புகழ்ந்து கொண்டாடுவாககள் உடனே நீ தேங்காயை எடுத்துவிறைத்துவிட மாயமாக மறைந்துபோகும் பார்ப்பவர்களுக்கும ஆச்சரியமாவிருக்கு.

## 555. ஒரு மாம்பழத்தை ஒருகூடை மாம்பழமாக காட்டும் வித்தை.

சபையோர்கள் முன்னே ஒரு மாம்பழத்தை எடுத்துக்காட்டி இந்த ஒரு மாம்பழத்தை கூடைபளிமாகும் மந்திரம்செய்கிறேன் பாருங்களெனறு அஷ்டமாசித்துமையும் ஜங்கோலக்கருவும் விரலில்தொட்டு ருத்திராதேவியை நினைத்து பைரவர் மந்திரத்தை நூற்றியெட்டு ஓதி இந்த ஒரு மாம்பழத்தை கூடைநிறைய இருப்பதுபோல் தோற்றும்படி செய்வாயென்று மனதில் நினைத்து அந்த கருவையும் மையையும் தந்திரமாக ஒருவருக்கும் தெரியாமல் பழத்தின்மேல் தடவி கூடையில்போட்டு மேலே ஒருதுணியைமூடி ஜாலக்காளை நினைத்து சற்றுநேரம் மந்திரம்செய்பவன்போல் வாயைமூடி முணமுணவென்று மந்திரஞ் சொல்வதுபோலிருந்து பிறகு கூடைமேல்மூடின துணியைத் திறப்துபார்க்க கூடைநிறைய பழங்கள் நிறைந்திருப்பதாகத் தெரியும் நீ மறுபடியும் துணியைப்போட்டு மூடி மாம்பழங்களே ஒரு பழந்தவிர மற்ற பழங்களெல்லாம் ஓடிப்போங்களென்று பழத்தை தந்திரமாக கழுவிவிட்டுஉபடியுங் கூடையைத் திறந்தக்காட்டினல் இதுவென்ன புதுமையென்று ஆச்சரியப்படுவோர்கள்.

## 556. ஒரு கோய்யாப்பழத்தை கூடைப ழமாகக் காட்டும் ஜாலம்.

ஜாலமாடுஞ்சபையில் ஒரு கூடைவைத்து பிறகு கொய்யாப்பழத்தை யெடுத்து அனைவருக்குங்காட்டி இந்த ஒரு கொய்யாப்பழத்தை இந்தக் கூடையில் போட்டு நிறைய பழமாகும்படிசெய்கிறேன் பாருங்களென்று அஷ்டமாசித்திமையும் ஐங்கோலக்கருவும் விரலிற்தொட்டு மயானருத்திர மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து அம்மணி இந்த ஒரு பழத்தை கூடைபழமாக பார்ப்போர்கண்களுக்கு தோற்றும்படி செய்வாயெனறு மனதிலெண்ணி ஜாலக்காளை நினைத்து மையைப்பழத்தின்மேல் தந்திரமாகப்பூசி கூடையில்போட்டு முன்போல் துணியால்மூடி சற்றுநேரம் பொருத்து துணியைத் திறந்துபார்க்க கூடைநிறையபழம் இருப்பதுபோல் தோற்றும் அனைவரும் ஆச்சரியப்படுவாகள் நீ உடனே பழத்தைககழுவி முன்போல் கூடையில்போட்டு மூடித்திறக்க மாயமாய்ப்போகும் ஒருபழமாத்திர மிருக்கும் பிர்மிப்பார்கள்.

## 557. ஒரு வாழைக்குலையை நூறு வாழைக்குலையாகக் காட்டும் ஜாலம்.

எந்த இடங்களிலேனும் அல்லது ஜால்மாடுமிடத்திலேனும ஒரு வாழைக்குலை கொண்டுவந்து சபையோர்களுக்குக்காட்டி இந்த ஒரு வாழைக்குலை நூறு குலையாகும் அற்புத மந்திரத்தைப் பாருங்களென்று இந்திரசாலக்கருவும் ஐங்கோலக்கருவும் விரலில்தொட்டு வராகிமந்திரத்தை ஆயிரத்தெட்டுசெபித்து அஞ்சனுதேவியையும் ஆஞ்சநேயரையுந்தியானித்து சாலக்காளைப்பூசித்து இந்த ஒரு வாழைக்குலை நூறுகுலையாக தோற்றவேணுமென்று மனதிலெண்ணி விரலிலிருக்குங்கருவைத் தந்திரமாக வாழைக்குலையின்மேல் தடவி பெரிய துப்பட்டியால் மூடி சற்றுப்பொறுத்து துப்பட்டியைத் திறந்துபார்க்க நூறுகுலையாகத் தோன்றும் அதுகண்டு அனைவரும் மதிமயங்கிநிற்பார்கள் உடனே பையைத்துடைநறது துப்பட்டியை மூடித்திறக்க ஒரு குலைமாத்திர மிருக்கும் அனைவரும் மதிமயங்கி ஆச்சரியப்படுவார்கள்.

## 558. ஒரு திராட்சப் பழக்குலையை நூறு குலையாகக் காட்டும் ஜாலம்.

ஒரு திராட்சப்பழக் கொலையை சபையோர்களுக்குக்காட்டி இந்தஒருகுலையை நூறுகுலைகளாககாட்டும் என்னுடைய மந்திர் மகிமையைப்பாருங்களென்று மகாமாயமையும் ஐங்கோலக்கருவையும் விரலில் தொட்டு சாமுண்டீஸ்வரியின மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து இந்த ஒரு திராட்சப்பழக் குலையை நூறு குலையாகப் பார்ப்போர் கண்களுக்கு தோற்றுமபடிச் செய்வாயென்று மனதில்

நினைத்து சாலக்காளைப் பூசித்து மையைதந்திரமாக குலையின்மேல் தடவி முன் போல் மூடி திறந்துகாட்ட நூறு குலையாகத்தோற்றும் பார்ப்போர்களும் இது என்ன புதுமையென்று திகைத்து நிற்பார்கள் அப்போது மையை தந்திரமாகத் துடைத்துவிட்டு மறுபடியும்மூடித்திறக்கஒரு குலைதோற்றும்ஆச்சரியபடுவார்கள்

## 559. ஒரு விளாம்பழத்தை நூறு விளாம்பழமாக காட்டும் ஜாலம்.

சாலமாடும் சபையில் வந்து நின்று ஒரு விளாம்பழத்தை எடுத்து அனைவருக்குங்காட்டி இந்த ஒரு பழத்தை மந்திரம் போட்டு நூறு பழமாகக் காட்டுகிறேன் பாருங்களென்று இந்திரசாலமையும் ஐங்கோலக் கருவையும் விரலில் தொட்டு துர்காதேவி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து அம்மணி இந்த ஒரு விளாம்பழத்தை 100 விளாம்பழமாக பார்ப்போர் கண்களுக்கு தோற்றுமபடி செய்வவாயென்று மனதில் எண்ணி சாலக்காளை நினைத்து மையை காயின்மேல் தடவி முன்போல் துணியைப்போட்டு மூடி சற்றுநேரம பொருத்து திறந்துபார்க்க 100 பழமாக இருக்கும் அனைவரும் பார்த்து திகைத்து முழிப்பார்கள் அப்போது நீ காயின் மேல் பூசினமையை தந்திரமாகத் துடைத்துவிட்டு முன்போல் மூடித்திறந்து காட்ட யுரு பழமாத்திரமிருக்கும் அட இது புதுமை யான மந்திரமென்று ஆச்சரியப்படுவார்கள்.

## 560. ஒரு ஆரஞ்சிபழத்தை நூறு ஆரஞ்சி பழமாக காட்டும் ஜாலம்.

எவ்விடத்திலேனும் நின்று ஒரு ஆரஞ்சிபழத்தைக் கையிலெடுத்து அங்குள்ள அனைவர்களுக்குங் காட்டி இந்த ஒறு பழத்தை என் மந்திரத்தால் நூறுபழமாசுகாட்டுகிறேன் பாறுங்களென்று மகாமாயமையும் ஐங்கோலக்கறுவையும் விரலில் தொட்டுக்கொண்டு மயானருத்திரி மந்திரத்தை ஆயிரத்தெட்டு உரு ஜெபித்து அம்மணி இந்த ஒரு ஆரஞ்சிப்பழம் நூறு பழமாக பார்ப்போர்கண்களுக்கு தோற்றும்படி செய்யவேண்டுமென்று மனதிலெண்ணி சாலக்காளை நினைத்து மைடை பழத்தின்மேல் ஒருவருக்குந் தெரியாமல் தத்திரமாகத்தடவி மேசையின்மேல் வைத்து துணியைப்போட்டு மூடி சற்று நேரம்பொருத்து திறந்துபார்க்க நூறுபழமாக அனைவர்கண்களுக்குத் தோற்றும் ஆச்சரியப்படுவார்கள் நீ உடனே அந்தப்பழத்தின்மேல் பூசியமைதய துடைத்தாகிலும் கழுவியாகிலும் மறுபடியும் மேசையின்மேல்வைத்து முன்போல் மூடித்திறந்து காட்ட ஒருபழமாத்திரம் இருக்கும் இது மகா சாலமென்றுபுகழுவாகள்.

## 561. ஒரு மாதுளம்பழத்தை நூறு மாதுளம்பழமாக காட்டும் ஜாலம்.

பெரியோர் சிறியோர் முதலானபேரும் நிறைந்திருக்கும் சபையில்வந்து நின்று ஒருமாதுளம்பழத்தை எடுத்து அனைவருக்குங்காட்டி இதோ ஒருமந்திரம்

போடுகிறேன் இந்தமாதுளம்பழம் நூறுபழமாகும் விநோதத்தைப்பாருங்களென ஜெகஜாலககருவையும் ஐங்கோலக்கருவையும் விரலில்தொட்டு காளபைரவர் மந்திரம் நூற்றியெட்டுஜெபித்து இந்த ஒரு மாதுளம்பழம் பார்ப்போர் கண்கஇக்கு நூறுபழமாகத் தோற்றும்படி செய்வாயென்று 'மனதில்எண்ணி ஜாலக்காளெனித்து கருவைதந்திரமாக பழமேல் தடவி மேசைமேல்வைத்து முன்போல் ஒரு துணியை மூடி சற்றுநேரம்பொருத்து திறந்துகாட்ட அனைவர்கண்களுக்கும் நூறு பழமாகத்தோற்றும் ஆச்சரியப்படுவார்கள். நீ முன்போல் பழத்தின்மேலிருக்கும் மையைத்துடைத்து மூடித்திறக்க அந்த ஒரு பழமாத்திரமிருக்கும் இது மகாமந்திர மென்று மகிழ்வார்கள்.

## 562. ஒருபடி நெல்லிக்காயை ஒருகூடை நெல்லிக்காயாக காட்டும் ஜாலம்.

ஜாலமாடும் பனங்களில் ஒருபெரிய தட்டை.க்கொண்டுவந்து வைத்து பின்பு ஒருபடி நெல்லிக்காயை அளந்து அனைவருக்குங்காட்டி ஒருபடிநெல்லிக்காயை ஒரு கூடைநெல்லிக்காயாக என் மந்திரத்தால் செய்கிறேன் பாருங்களென்று ஜெகஜாலக்கருவும் ஐங்கோலக்கருவும் விரலில் தொட்டுக்கொண்டு சக்கலாதேவி மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து அம்மணி ஒருபடிகாயை ஒரு கூடையாக பார்ப்போர் கண்களுக்கு தோற்றும்படிச் செய்வாயென்று மனதிலெண்ணி ஜாலக்காளை தியானித்து மையை தந்திரமாக ஒரு காயின்மேல் தடவி ஒரு படிகாயும் கூடையில் கொட்டி மைதடவினகாய் அடியாளமாகமேலே வைத்து முன்போல் துணியைமுடி சற்றுநேரம்பொருத்து திறந்தக்காட்ட தட்டுநிறை நெல்லிக்காயிருப்பதுபோல் தோற்றும் அனைவரும் அதிசயிப்பார்கள். நீ உடனே மைதட வினகாயை மகாதந்திரமாக எடுத்துவிட்டு முன்போல் மூடித்திறக்க காயெல்லாம் மாயமாகப்போய் ஒருபடி காய்மாத்திரம் தட்டியிலிருக்கும் அப்போது அனைவரும் மகாபுதுமை யென்று மகிழ்வார்கள்.

## 563. ஒருபடி கெச்சக்காயை ஒருகூடை கெச்சக்காயாக காட்டும் வித்தை.

ஜாலமாடும் மிடத்தில் ஒரு கெச்சைக்காய் எடுத்து சனங்களுக்குக்காட்டி ஒரு மந்திரம்போட்டு இந்த ஒரு கெச்சக்காய் ஒருபடி கெச்சக்காயாகச் செய்கிறேனென்று அஷ்டமாசித்தி மையும் ஐங்கோலக்கருவையும் விரலில்தொட்டு வராகி மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து அம்மணி இந்த ஒரு கெச்சக்காயை ஒருபடி கெச்சக்காயாக பார்போர்களுக்கு தோற்றும்படி செய்வாயென்று மனதில் எண்ணி ஜாலக்காளை தியானித்து மையைத்தந்திரமாக கெச்சக்காயில் தடவிபடியொன்றை யெடுத்து அனைவருக்குங்காட்டி மோஜையின்மேல வைத்து அதில் இந்தக்காயைப்போட்டு முன்போல் துணியால்மூடி சற்றுநேரம்பொருத்து துணியை வாங்கிப்பார்க்க படிநிறைய இருப்பதுபோல் தோற்றும் பார்ப்போர்

கள் பிர்மிப்பார்கள். அப்போது நீ உடனேகாயிலுள்ள மையைத் தந்திரமாகப் போக்கி மறுபடியும் படியில் போட்டுத்திறந்துகாட்ட ஒரு காயிருக்கும் ஆச்சரியப்படுவார்கள்.

## 564. ஒரு அன்னாசிப்பழத்தை நூறு அன்னாசிப்பழமாக காட்டும் ஜாலம்.

ஜாலமாடும் சபையிலாவது இன்னம் எந்த இடங்களிலாவது நின்று ஒரு அன்னாசிப்பழத்தை எடுத்து ஒரு மந்திரம்போட்டு இந்த ஒரு பழத்தை நூறுமழமாகச்செய்கிறேன் பாருங்களென்று ஜெகஜாலக்கருவும் ஐங்கோலக்கருவும் விரலில் தொட்டு காளியுடைய மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து அம்மணி இந்தஒரு அன்னாசிப்பழத்தை பார்ப்போர் கண்களுக்கு நூறு பழமாக தோற்றும்படி செய்வாயென்று மனதில் தியானித்து ஜாலக்காளைப் பூசித்து மையை தந்திரமாக பழத்தில் பூசி மேசையின்மேல்வைத்து முன்போல் துப்பட்டியைப்போடிடு மூடி சற்றுநேரம் பொருத்து துணியைத்திறந்து காட்ட பார்ப்போர் கண்களுக்கு நூறு பழமாகத்தோற்றும். அதிக ஆனந்த சந்தோஷத்தை அடைவார்கள். நீ உடனே மூன்போல் பழந்திற்பூசிய மையைப்போக்கி மறுபடியும் முடித்திறந்து காட்ட ஒரு பழமாகத்தெரியும் அப்போது இது கண்கட்டு வித்தை என்பார்கள்.

## 565. ஒரு கிச்சிலிப்பழத்தை ஒருகூடை கிச்சிலிப்பழமாக காட்டும் ஜாலம்.

சபையில் ஒருபெரிய கூடையைக் கொண்டுவந்து வைத்து புன்பு ஒரு கிச்சிலிப்பழத்தைக் கையிலெடுத்து சனங்களைப்பார்த்து இந்த ஒரு கிச்சிலிப்பழத்தைக் கூடைபழமாக ஒரு மந்திரம் செய்கிறேன் பாருங்களென்று அஷ்டமாசித்திமையும் ஐங்கோலக்கருவும் விரலில்தொட்டு மயானருத்திரியின் அட்சரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து அம்மணி இந்த ஒரு கிச்சிலிபழத்தை ஒரு தட்டு பழமாகப் பார்ப்போர் கண்களுக்கு தோற்றும்படி செய்வாயென்று மனதில் தியானித்து ஜாலங்காளைப் பூசித்து மையைத்தந்திரமாகக் காயில்தடவி தட்டில் போட்டு முன்போல் துணியைப்போட்டு மூடி சற்றுநேரம்பொருத்து திறந்து பார்க்க தட்டுநிறை பழமிருப்பதுபோல் பார்ப்போர்களுக்கு தோற்றும் ஆச்சரியப்படுவார்கள். நீ உடனே பழத்தின்மேல்பூசிய மையைப்போக்கி திறந்துகாட்டினால் ஒருபழமாத்திரந் தெரியும். சபையோர் ஆச்சரியப்படுவார்கள்.

## 566. ஒரு பூசனிக்காயை நூறு பூசனிக்காத்தாக காட்டும் ஜாலம்.

ஒரு பூசினிக்காயைக் கொண்டுவந்து அதை சனங்களுக்குக் காட்டி மந்திரம்போட்டு நூறு காயாகக் காட்டுகிறேன் பாருங்களென்று இந்திரஜாலக்கருவையும் ஐங்கோலக்கருவையும் விரலில்தொட்டு வாலைமந்திரத்தை ஆயிரத்தெட்டு

ஜெபித்து அம்மணி இந்த ஒரு பூசணிக்காயை நூறு காயாகச் செய்வாயென்று மனதிலெண்ணி ஜாலக்காளே நினைத்து தந்திரமாக மையைகாயின்மேல் தடவி தரையில்வைத்து ஒரு துப்பட்டியை போட்டுமூடி சற்றுநேரம்பொருத்து துப் பட்டியை எடுத்துக்காட்ட பார்ப்போர்கண்களுக்கு நூறு பூசணிக்காயும் ஒரு போர்போலக் கும்பலாகத் தோற்றும் கண்டோர்கள் பூர்க்கும்படியாகப் பார்த்து பிர்மித்து நிற்பார்கள் அப்போது நீ காயின்மேல் தடவிய மையை தந்திரமாகப் போக்கி மறுபடியும் முன்போல் துணியை மூடிதிறக்க ஒரு காயாகத்தோற் றும் அனைவரும் இது புதுமையான ஜாலமென்று புகழ்வார்கள்.

## 567. ஒரு பலாப்பழத்தை நூறு பலாப்பழமாகக் காட்டும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்திலேனும் இன்னம் வேறெந்த இடங்களிலேனும் ஒருபலாப் பழத்தைக் கொண்டுவரும் படியாகச்செய்து அதை அங்குள்ள யாவர்களுக்குங் காட்டி இந்த ஒரு பழத்தை ஒரு மந்திரம்போட்டு 100 பழமாகக் காட்டுகிறேன் பாருங்களென்று அஷ்டமாசித்து மையையும் ஜங்கோலக்கருவையும் விரலில் தொட்டு காளபைரவர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து இந்த ஒரு பலாப் பழத்தை 100 பழமாக பார்ப்போர் கண்களுக்கு தோற்றும்படி செய்குவா யென்று மனதிலெண்ணி ஜாலக்காளே தியானித்துமையை பழத்தின்மேல் தடவி தரையில்வைத்து ஒரு பெரிய துப்பட்டியைப்போட்டு மூடி சற்றுநேரம் பொருத்து திறந்துகாட்ட பார்ப்போர் கண்களுக்குபலாப்பழம் போராகத்தோற் றும் பார்த்துப்பார்த்து இது என்ன புதுமையென்று பிர்மித்து நிற்பார்கள். அப் போது நீ பழத்திற்றடவிய மையைப்போக்கி முன்போல் மூடித்திறந்துகாட்ட ஒரு பழமாகத்தெரியும் அனைவரும்மிரண்டு இது காளியுடைய வசியமென்று கண்டபடி பேசிக்கொள்வார்கள்.

## 568. ஒரு பம்புளிமாஸ் பழத்தை நூறு பழமாகக் காக்டும் ஜாலம்.

ஒரு பம்புளிமாஸ் பழத்தை எடுத்து அனைவருக்குங்காட்டி இந்த ஒருபம்பு ளிமாஸ் பழத்தை மந்திர உச்சாடனத்தினால் நூறு பழமாகக்காட்டுகிறேன் பாரு ங்களென ஜெகசாலக்கருவை விரலில்தொட்டு மயானருத்திரி மந்திரத்தை ஆயி ரத்தெட்டு செபித்து அம்மணி இந்த ஒரு பம்புளிமாஸ் பழத்தை பார்ப்போர் கண் களுக்கு நூறு பழமாகக காணப்படும்படி செய்விப்பாய் என எனதில் எண்ணி ஜாலக்காளே தியானித்து மையை தந்திரமாக மழத்தின்மேல் தடவி ஒரு துப்பட் டியைப்போட்டு மூடி கொஞ்சநேரம் பொருத்து திறந்துகாட்ட பார்ப்போர்கண் களுக்கு பழம் போராகக் காணப்படும். இதென்ன புதுமையென ஆச்சரியப்படு வார்கள் அப்போது நீ பழத்தில் தடவிய மையைப்போக்கி முன்போல் மூடித்தி றந்துக்காட்ட ஒரு பழமாகக் காணப்படும். இது குட்டிச்சாத்தான் வேலையென கெட்டியாக நம்புவார்கள்.

## 569. ஒரு அத்திப்பழத்தை கூடைபழமாகக் காட்டும் ஜாலம்.

ஒரு அத்திப்பழத்தை எடுத்து சபையோர்கள் யாவருக்குங் காட்டி இந்த ஒரு அத்திப்பழத்தை கூடைபழமாகக் காட்டுகிறேன் பாருங்களென ஜெகசாலக் கருவை விரலில் தொட்டுக்கொண்டு வாராகிமந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து அம்மணி இந்த ஒரு அத்திப்பழத்தை பார்ப்போர் கண்களுக்கு ஒருகூடை பழமாகத்தோற்றவேண்டுமென மனதில் தியானித்து ஒரு கூடையெடுத்து அனைவருக்குங்காட்டி அந்த கூடையில் பழத்தைப்போட்டு முன்போல் ஒரு துப்பட்டிவயைப் போட்டு மூடி கொஞ்சநேரம்பொருத்து துணியைத்திறந்துகாட்ட கூடைநிறைய பழமிருப்பதுபோல் பார்ப்போருடைய கண்களுக்குக் காணப்படும் ஆச்சரியம்படுவோர்கள். அப்போது நீ பழத்திற்றடவிப மையைப்போக்கி முன்போல் மூடித் திறந்துகாட்ட ஒரு பழமாத்திரமிருக்கும். இது அருமையான வித்தையென்பார்.

## 570. ஒருபடிநெல்லை ஒருமரக்கா நெல்லாகக் காட்டும் ஜாலம்.

ஜாலமாடும் சபையில் ஒருபடி நெல்லையளந்து அனைவருக்குங்காட்டி இந்த ஒருபடி நெல்லை ஒரு மரக்கா நெல்லாகும்படி செய்கிறேன் பாருங்களென அவஷ்டமாசித்துமையும் ஐங்கோலக்கருவும் விரலில்தொட்டு காளபைரவர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து இந்த ஒருபடிநெல் ஒருமரக்கா நெல்லாகப் பார்ப்போர் கண்களுக்கு தெரியும்படி செய்வாயென ஜாலக்காளை தியானித்து மையை மரக்காலில் தடவி மரக்காலை அனைவருக்குங்காட்டி அந்த ஒருபடி நெல்லையும் அதில் கொட்டி அதின்மேல் ஒரு துணியைப்போட்டு மூடி சற்றுநேரம் பொருத்து திறந்துக்காட்ட மரக்காநிறைய நெல்லிருப்பதுபோல் பார்ப்போருடைய கண்களுக்குத்தோற்றும் கண்டுமதிமங்கி நிற்பார்கள். அப்போது நீரக்காலில் தடவின மையைப்போக்கி மறுபடியும் மூடித்திறக்க ஒருபடி நெல்லுமாத்திரமிருக்கும் பார்ப்போர்கள் இது இந்திரஜாலமாயிருக்குதென்று எக்கம்பிடித்து எண்ணுதுமெண்ணுவார்கள்.

## 571. எருதீபம் பலவர்ன தீபமாகத் தோற்றும் ஜாலம்.

பச்சைத்தவளையின் கொழுப்பை எடுத்து அதில் வெள்ளைச்சிலையை நனைத்து நிழலில் உலர்த்தி திரிசெய்து மரிசெய்து மனிதருடைய தலைமண்டையோட்டில் நெல்லெண்ணெய் புங்கெண்ணெய் வேப்பெண்ணெய் இலுப்பெண்ணெய் தேங்காயெண்ணெய் நெய் முதலானதையும் கலந்து மேற்படி மண்டையோட்டில் வார்த்து திரியின்மேல் ஐங்கோலக்கருவைபூசி கொள்ளி மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து அம்மணி தீபமேற்றி பார்த்தால் பலவித வர்ணமாகவும் லட்சந்தீபமாகவும் பார்ப்பார் கண்களுக்கு தெரியும்படி செய்வாயென்று மனதில் எண்ணி வத்தியை மண்டையோட்டில் போட்டு தீபமேற்றிவிட லட்சம் தீபமாகிவிடும் பலவிதவர்ணங்களாகவும் தெரியும் அனைவரும் கண்டு ஆச்சரியப்படுவோர்கள்.

### 572. வியாதி உண்டாகும் ஜாலம்.

முஞ்சுரைப்பிடித்து வந்து அதனுள்ளிருக்கும் குடல் ஈரல் முதலானதையும் போக்கி அதனில் எதிரியினுடைய நீர் மலம் இவையிரண்டையும் உள்ளே செலுத்தி அந்தவாயைப் பஞ்சுகொட்டும் நரம்பால் அருக்கிப்பிடித்துக்கட்டி நாற்பது நாள்வரைக்கும் வைத்திருந்து ஓம் நமோ பகவதி சுவாகா என்று லட்சம் உரு கொடுக்க சித்தியாகும் எதிரி வியாதிபடுவான்.

### 573. வேறுமுறை வியாதியுண்டாகும் வித்தை.

கருநாபி பச்சைநாபி இவையிரண்டையும் கொண்டுபோய் ஒரு ஊரில் காற்றுவாட்டம் பார்த்து வரட்டியை அடுக்கிப் புடம்போட அந்தப் புகை பட்டபேர்களெல்லாம் நடுநடுங்கிக் காய்ச்சல் குளிரும் தலைவலியுமாக வியாதிகொள்வார்கள். அந்த வியாதியைத்தீர்க்க ஒருவராலும் முடியாது. நீயே அந்த ஊரில் சென்று அவிழ்தங்கொடுத்துத் தீர்ப்பேனென்று சொல்வாயாகில் உன்னைத் தெய்வமாகப் பாவித்து அடிபணிவார்கள். அப்போது நீ அவிழ்தம் செலுத்தும் விதம் எவ்விதமெனில் நீலிவேர் சிறுகிரைவேர் மிளகு இவை மூன்றையும் சேர்த்து கியாழம்வைத்து வடிகட்டி அதில் பஸ்பம் போடுவதுபோல் விபூதியைப்போட்டு மூன்றுவேளையும் தவறாமல் உள்ளுக்குக்கொடுக்க வியாதி தீரும். உனக்கு வேண்டிய பொருளுங்கொடுத்து புகழ்ந்து யொண்டாடுவார்கள்.

### 574. வேமுறை வியாதியுண்டாகும் வித்தை.

கள்ளிச்சார் கார்த்திகையின்மூலம் பாஷாணம் துருசு நேர்வாளம் கருநாபி இவைகளையுல்லாம் சேர்த்து இடித்து சீலையில் மூட்டைகட்டி ஒரு கலசத்திற்போட்டு அது அழுந்துபடியாக ஒரு கல்லைகட்டி துரவில் கழுத்தளவு தண்ணீரில் விட அந்த துரவில் நீரைக் குடித்தவர்களெல்லாம் வாந்தியும் பேதியுமாகி மயக்கத்தில் விழுந்துகிடப்பார்கள் அவர்களிடம் நீ சென்று இந்த ஊரிலுள்ள யாவரையுமழைத்து இது தேவதையின் குற்றம்பூசைபோடவேணுமென்று சொல்லி பூசைமுதலானதும் போட்டு பிறகு அந்ததுறவிலுள்ள கலசத்தை எடுத்து நீரையெல்லாம் இறைக்கும்படி செய்து பின்பு கணபதிக்கு அபிஷேகஞ்செய்து ஒருவருக்குந் தெரியாமல் அவுரிவேரை இடித்துக்கொண்டுபோய் அந்தக்கிணற்றில்போட்டு பிறகு விபூதியை யெடுத்து கணபதியை தியானித்து அனைவருக்குங்கொடுத்து இட்டுக்கொள்ளும்படியாகச் சொல்ல வியாதியானது நீங்கிவிடும் உன்னையும் புகழ்ந்து நீ கேட்டபொருளையுங் கொடுப்பார்கள்.

### 575. உலோகவசிய தியானம்.

உலோகவசியதியான மந்திரம் செபிக்கும்வித மெவ்விதமெனில் ரீம் ஐயும் கிலியும் ஸ்ரீயும் சவ்வும் றீம் கிலீம் ஓம் என்று லட்சமுருசெபிக்க க்ஷணத்திற்குள் சித்தியாகும் வறுமையானது அகன்றுபோகும் மன்னர்கள் தேவதைகள் உலோகமுதலானதும் வசியமாகும் தொழில் முதலானதுஞ் சித்தியாகும்.

## 576. எக்காள விநோத ஜாலம்.

எக்காள ஜாலமந்திரம் எவ்விதமெனில் ஆம் ஓம் கம் வாயாவென்று லட்ச முருசெயித்து ஜாலக்காளைப் பூசைசெய்து நத்தைச்சூரி செடிக்கு காப்புகட்டி வேரைப்பிடுங்கிவந்து அந்த வேரின்மேல் ஐங்கோலக் கருவைப்பூசி கையில்வைத் துக்கொண்டு வேரைமுருக்கி மந்திரத்தை தியானித்து மண்ணை யெடுத்து எதி ரில்போட எக்காளம் தாரை சின்னம் கர்ணு நாகசுரம் மகிடிக்குழை சங்கு இவை களெல்லாம் உடைந்துபோகும் வாசிக்காது.

## 577. ஈடுமுறை வித்தை.

ஈடுமுறைக்கூட்டுவது எவ்விதமெனில் ஆண் சிட்டுக்குருவியைப்பிடித்துவந் தபானவாயைத் தைத்து அதன்வாயில் ஊசிக்காந்தத்தை உள்ளேசெலுத்தி வா வைத்தைத்து ஒருசிறிய பாண்டத்தில் ஒருபடி வஸ்துவையூற்றி பாண்டத்தின் வாயைமூடி சீலைசெய்து பிறகு அடுப்பின்மேல்வைத்து தீமூட்டி ஒருஜாதி விரகி னல் ஒருசாமமெரித்து எடுத்துக்கொண்டு அதை கல்வத்திற்போட்டு ரோமத்தை யும் அஸ்திகளையும்நீக்கி மாக்கொடி ஊமத்தன்வித்து மின்னற்பூச்சி சுழல்வண்டு குழியானை இந்திரகோபம் தொட்டால்வாடிவேர் நாயுருவிவேர் கையான்தகரை வேர் திகைப்பூண்டுபூச்சி இவை வகையொன்றுக்கு விராகன் ஒன்ருகத்தூக்கி அதனுடன் ஈப்புலி ஈயமுஞ்சேர்த்து ஆடையொட்டி ஐவிரல்கெஞ்சா பேய்க்கரு ப்பன்சார் இவையெல்லாம் சரியிடையாகவிட்டு அரைத்து பின்பு துவரைப்பிர மாணமாக மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு சொல்லும் மந் திரமாவது கேட்பாயாக நமோ இங் இங் சுவகாவென்று ஆயிரத்தெட்டுருசெபி த்து வைத்துக்கொள்ளவும் உள்ளுக்கு செலுத்தும்விதம் ஒரு மாத்திரையெடுத்து விந்துவிட்டுக் குழைத்து ஸ்திரீகளுக்கு அறுசுவையில் தாம்பூலத்தில் வைத்து உள்ளுக்குச்செலுத்த மங்கையர்கள் மையல்மீறி அணையவருவார்கள்.

## 278. பிரிவுசெய்யும் வித்தை.

பிரிவுசெய்யுங் குளிகைசெய்வது எவ்விதமெனில் செத்த ஆட்டுஉண்ணி விஷ வாலம்பட்டை இவையிரண்டையுங்கூட்டி தண்ணீர்விட்டு மைபோலறைத்து துவரைப்பிரமாணங் குளிகைசெய்து அறுசுவையில் கலந்துகொடுக்க நாளுக்கு நாள் பிரிந்துபோகச்செய்யும்.

## 579. வசிய வித்தை.

வசியமாகும்படிசெய்வது எவ்விதமெனில் பொன்னுவாரை வேரைக்கொ ண்டுவந்து நருக்கி நிலவில் உலர்த்தி அதைக்குழித்தயிலமாக வாங்கி கல்வத்தில் விட்டு அதனுடன் கோழிமுட்டையின் வெள்ளை அம்புலியும்விட்டறைத்து மாக் கொடி புனுகு பூரம் கோரோசனை இவைகளை ஒரிடையாகத்தூக்கி அதில்சேர்த் தலைறத்து வழித்து சிமிளில் வைத்துக்கொண்டு போவாயாகில் புருஷர் முதல்

ஸ்திரீகளும் வசியமாவார்கள் கேட்ட பொருளுந்தருவார்கள் உன் வாசலில்வந்து காத்துக்கொண்டிருப்பார்கள் உனக்கு அடிமையான வேலைகள் செல்வார்கள் உன்னைக்காணவிட்டால் தேடி சிணுங்குவார்கள்.

## 580. வேறுமுறை வசியவித்தை.

வேறுமுறையாவது என்னவெனில் புல்லாமணக்குச் சமூலத்துடன் ஸ்திரீகள் மாதவிடாயான சீலையில் விராக்னிடை ஒன்றுங்கூட்டி உன் சிறுநீர்விட்டு மைபோலறைத்து துவரைப்பிரமாணமாக மாத்திரைகள்செய்து வைத்துக்கொள்ளவும் உள்ளுக்குச் செலுத்தவேண்டில் தாம்பூலம் அல்லது அறுசுவைப்பதார்த்தங்கள் இவைகளில் ஒருமாத்திரைக்கலந்து உள்ளுக்குச்செலுத்த உடனே அவர்கள் மயங்குவார்கள் ஸ்திரீகளுக்குக்கொடுக்கில் அவர்கள் உனனைவிட்டுப்பிரியார்கள் மறுமுகத்தைப் பாரார்கள் சுகமாக உன்னுடன் மருவுவார்கள் கேட்டவைகளுங்கொடுப்பார்கள் ஏவல் செய்வார்கள் சாகுமளவும் உன்னைவிட்டுப் பிரியாமல் மகிட்சியோடு மதனும ரதியும்போல கூடியிருப்பார்கள்.

## 581. பேண்பிரிவுக்குக் குளிகை வித்தை.

பெண்பிரிவு குளிகைசெய்யும் விதமெவ்விதமெனில் கடுகுபானைச்சாம்பல் குடிபோனவீட்டின் மண் ஆதிவாரம் இரவில் கழுதைபுரண்டமண் இரந்த இரண்டுமெண்ஞு சேகரித்து வைத்துச்கொண்டு ஜெபிக்குமந்திர மெவ்விதமெனில் ஓம் ஸ்ரீம் பெரிய் நசி மசி என்று இவர்களுடைய பெயைமாறி அந்த தீகட்டில் ஐங்காயத்தை அறைத்துப்பூசி மேறசொன்ன மூலமந்திரத்தை மறவாமல் ஆயிரத்தெட்டோதி ஷ்டி வகைகளையெல்லாம் கீலையில் வைத்துக்கட்டி பூசைசெய்து பின்பு எதிரிவாழும்படியான வீட்டின இரப்பில் கொண்டுபோய் வைத்த எட்டு நாளுக்குள் இருவர்களும் வெவ்வேருகப் பிரிந்துப்பேரவார்கள்.

## 582. தாதுபுஷ்டியாகும் ஜாலம்.

சந்தனம் தேற்ருங்கொட்டை பூமிசர்க்கரைகிழங்கு பூனைக்காலிவிரை முருங்கைவேர் ஷ்டி பட்டை இவைவகைக்கு விராகனிடை இரண்டு நிறுத்தரைத்து தேங்காய்பாலில் கரைத்து சினிபிட்டு 12-நாளும் காலைமாலை இருவேளைகுடித்து வர தாது புஷ்டியாகும் வீரியம் வினையும்போது சூடானது தணியும் தேகமானது பளபளப்பாய் காத்தியானது உண்டாகும் மாதர்களைப் புணர்வாயாகில் மன்மதனே வென்பார்கள்.

## 583. உழக்குமல்லிகை மோக்கை ஒரு மரக்காலாக்கும் ஜாலம்.

ஜாலமாடும் சபையில் உழக்கு மல்லிக்கைமொக்கை அளந்து அனைவருக்குங்காட்டு அந்த உழக்கு மொக்கை ஒருமரக்கால் மொக்காகக் காட்டுப் வினேதங்களைப் பாருங்களென்று அஷ்டமாசித்து மையும் ஐங்கோலக்கருவையும் விர

வில்தொட்டு காளபைரவர் மந்திரத்தை நூற்றியெட்டு ஜெபித்து ஜாலக்காளைத் தியாணித்து ஒருவருக்குந்தெரியாமல் கருவை தந்திரமாக மரக்காலில் ஓர் புரமா கத்தடவி அம்மணி உழற்கு மொக்கு ஒரு மரக்காலா கப்பார்ப்போர்கள் கண் களுககுத்தோற்றும்படி செய்யவேண்டு மென்றுமனதில் தியானித்து மொக்கை மரக்காலில் கொட்டி மேலே ஒரு துணியைப்போட்டு மூடி சற்றுநேரம் பொரு த்து திரந்துகாட்ட மரக்கால்நிறைய மொக்கு இருப்பதாக பார்ப்பவர் கண்களுக் குத்தெரியும். இது மகாபுதுமை என்று ஆச்சரியப்படுவார்கள்.

## 584. ஒரு சாமந்தி புஷ்பத்தை நூறுபுஷ்பமாகக் காட்டும் ஜாலம்.

ஜாலமாடும் மிடத்தில் ஒரு சாமந்தி புஷ்பத்தைஎடுத்து அனைவருக்குங் காட்டி இந்த ஒரு புஷ்பமாகக்காட்டும் என்னுடைய மந்திரத்தை பாருங்க ளென் அவ்ஷடமாசித்துமையும் ஐங்கோலக்கருவையும் விரலில்தொட்டு காளபைர வர் மந்திரத்தை 103 ஜெபித்து அம்மணி இந்த ஒரு சாமந்திபுஷ்பத்தை நூறு புஷ்பபாகத் தெரியும்படி செய்குவாயென்று ஜாலக்காளை தியானித்து ஒருவருக் குந்தெரியாமல்தந்திர மாககருவை புஷ்பத்தில்தடவி மேஜையின்மேல்வைத்து முன்போல் துணியைப்போட்டு மூடி சற்றுநேரம் பொருத்து மூடிய துணியைத் திறந்துகாட்ட பார்ப்போர்கண்களுக்கு நூறு புஷ்பமாகத்தோற்றும் இது அரு மையான வித்தையென்று மகிழ்வார்கள். ஆனால் உடனே புஷ்பத்திலிருக்கும் மையைப்போக்கி முன்போல் மேஜையின்மேல் வைத்து மூடித்திறக்க ஒரு புஷ் பந்தோற்றும் அப்போது இது கண்கட்டுவித்தை என்பார்கள்.

## 585 ஒரு ரோஜபுஷ்பத்தை நூறு புஷ்பமாகக் காட்டும் ஜாலம்.

பெரியோர்களும் சிறியோர்களும் நிறைந்த சபையில் வந்துநின்று ஒருரோ ஜா புஷ்பத்தை எடுத்து அனைவருக் குங்காட்டி இந்த புஷ்பத்தை நூறு புஷ்ப மகாகக் காட்டும் விநோதத்தை பாருங்களென்று இந்திர ஜாலக்கருவும் ஐங்கோ லக்கருவையும் விரலில் தொட்டுக்கொண்டு வாராகிமந்திரத்தை ஜபித்து அம்மணி இந்த ஒரு புஷ்பத்தை நூறு புஷ்பமாக பார்ப்போர் கண்களுக்கு தோற்றும்படி செய்குவாய் என்று மனதில் நினைத்து ஜாலக்காளைப்பூசித்து தந்திரமாக மை பை புஷ்பத்தில் தடவி மேஜையின்மேல் வைத்து காளபைரவர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து முன்போல் துணியைப்போட்டு மூடிசற்றுநேரம்பொ ருத்து திரந்துக்காட்ட நூறு புஷ்பமாகத்தோற்றும் ஆச்சரியப்படுவார்கள் மீ போல் புஷ்பத்திலுள்ள கருவைப்போக்கி மேஜைமேல்வைத்து மூடித்திற காட்ட ஒரு புஷ்பமாக விருக்கும் இது பசுர் கட்டென்பார்கள்.

து ஐங் த்து து திரங் ச்

## 586. ஓர்தாமரை புட்பத்தை நூறு தாமரை புட்பமாக காட்டும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்திலாவது இன்னம் எந்த இடத்திலாவது ஒரு தாமரை பத்தை எடுத்து இந்த ஒரு புஷ்பத்தை 100 புஷ்பத்தை காட்டும் விநோதத்தை

ங்காட்டி ன் பாரு

பாருங்களென்று மகா மாயமையும் ஐங்கோலக்கருவையும் விரலில்தொட்டு மயானத்ரி மந்திரத்தை ஆயிரத்தெட்டு மாயனருத்ரி மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து அம்மணி இந்த ஒரு தாமரை புஷ்பத்தை 100 புஷ்பமாக பார்ப்போர் கண்களுக்கு தோற்றும்படி செய்வயென்று மனதில் நினைத்து மையைப் புஷ்பத்தின்மேல் தடவி ஜாலக்காளேம் பூசித்து மேஜையின்மேல் வைத்து ஒரு துணியைப்போட்டு மூடித் திறந்து காட்ட 100 புஷ்பமாகத் தோற்றும் ஆச்சரியப்படுவார்கள். உடனே புஷ்பத்தின் மேல்தடவி மையைப்போக்கி மேஜையின் மேல்வைத்து மூடித் திறந்துக்காட்ட ஒரு புஷ்பமாகத் தோற்றும் அப்போது இது வாராகிய வசியமென்பார்கள்.

## 587. ஓர் சவரனை நூறு சவரனாக காட்டும் ஜாலம்.

ஜாலமாடும் சபையில் வந்து நின்று ஓர் சவரனை எடுத்து அங்குள்ள அனைவர்களுக்குங்காட்டி இந்த ஓர் சவரனை 100 சவரனாகத் தெரியும்படிக் காட்டும் விநோதங்களைக் காணுங்களென்று இந்திரசாலமையும் ஐங்கோலங்கருவும் விரலில் தொட்டுக்கொண்டு காளபைரவர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து இந்த ஓர் சவரத்தை பார்ப்போர் கண்களுக்கு 100 சவரன்போல் தோற்றச் செய்வாயென்று மனதில் எண்ணி சாலக்காளைத் தியகனித்து கருவை தந்திரமாக சதரன் பேரில் தடவி மேசையின்மேல் வைத்து துணியைப்போட்டு மூடி சற்றுநேரம் கழித்து மூடிய துணியைத்திறந்து காட்ட 100 சவரமாகத் தெரியும் அப்போது பார்ப்போர்கள் இது மகாமந்திர உச்சாடன வித்தை என்று புகழ்வார்கள் அப்போது தந்திரமாக சவரன்மேய் பூசிய கருவைப்போக்கி மறுபடியுய் மூடி திறந்துகாட்ட ஓர்சவரன் இருக்கும். குட்டிசாத்தன் ஏவலென்பர்.

## 588. ஓர் ரூபாயை நூறு ரூபாயாக காட்டும் ஜாலம்.

முன்போல் சபையில்வந்துநின்று ஒரு ரூபாயைக் கையிலெடுத்து அங்குள்ள அனைவருக்குங்காட்டி இந்த ஒரு ரூபாயை நூறு ரூபாயாகக்காட்டும் விநோதத்தைப்பாருங்களென்று இந்திர ஜாலக்கருவையும் ஐங்கோலக்கருவையும் விரல்தொட்டுக் சாமுண்டிமந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து அம்மணி இந்த ஒரு ரூபாயை நூறு ரூபாயாக பார்ப்போர் கண்களுக்கு தோற்றும்படி செய்வா ...ன்று மனதில் நினைத்து ஜாலக்காளை தியானித்து கருவை ரூபாயின்மேல் ...திரமாகத்தடவி மேல்வைத்து துணியைப்போட்டு மூடி சற்றுநேரம்பொருத்து ...துகாட்ட நூறு ரூபாயாக தோற்றும் இது என்ன ஆச்சரியமென்று எண்ணி ...கைப்பார்கள் நீ அந்தக்ஷணமே ரூபாயின்மேல்பூசின கருவைப் போக்கி ...டயும் திறந்துகாட்ட ஒருரூபாயாகத் தெரியும் அப்போதுஇது குறளிவசியம் ...ர்கள்.

## 589. உடைந்த தேங்காயை உவாக்கும் ஜாலம்.

...ரு தேங்காயையெடுத்து சபையோர் முதலானவர்களுக்குங் காட்டி இந்த ...ாயை சூரைக்காயைப்பிபால் உடைத்து மறுபடியும் முன்னிருந்ததுபோல்

முழுக்காயாகச் செய்கிறேனென்று மாப்புமையை அந்த தேங்காயில்தடவி ஒரு புறம்வைக்க அது ஒருவருடைய கண்ணுக்குத்தெரியாது நீ தந்திரமாய்வேறொரு தேங்காய் வைத்திருந்தெடுத்து அதை யாவருக்கு முன்பு பொடிப்பொடியாக்கி இதோ இந்த தேங்காய் பொடியை முழுதேங்காயாக்குகிறேன் என்று முன் போல் மறப்பு மைய் தேங்கால் பொடிமேல் தெளித்து தட்டைப்போட்டு மூடி சற்றுநேரம் பொருத்து திறந்து முழுத்தேங்காயாக எடுத்துக்காட்ட பிரமிப் பார்கள்.

## 590. கொளுத்திய துணியை மறுபடியும் காட்டும் ஜாலம்.

ஜாலமாடும் சனங்கலில் வந்துநின்று ஒரு துணியைக் கையிலெடுத்து அனை வருக்குங்காட்டி இந்த துணியைக் கொளுத்திவிடுகிறேன், மறுபடியும் துணியை அழைப்பிக்கிறேன் பாருங்களென்று ஜெகஜாலக்கருவை விரலில்தொட்டு சக் கலாதேவி மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து அம்மணி இந்த துணி பத்தி யெறிந்து சாம்பலானதுபோல் பார்ப்போர்களுக்கு தெரியச் செய்வாயென்று கருவை துணியின்மேல் தெளிக்க குபீலென்றுபத்தி எறிந்து சாம்பலாகப் போன துபோல் தோற்றும் அனைவரும் ஆச்சரியப்பட்டு நிற்பார்கள் அப்போது நீ அவர் களைப்பார்த்து இப்போகொளுத்திய துணியை மருபடியும் அழைப்பிக்கிறேன் பாருங்களென்று தந்திரமாக ஐங்கோலக்கருவை தொட்டு பைரவர் மந்திரத்தை நூத்தியெட்டு ஜெதத்து சாம்பல்போல் தோற்றும் துணியின்மேல் தெளித்து தட்டைப்போட்டு மூடி திறந்துக்காட்ட முன்போல் துணியிருக்கும் கண்டு ஆச் சரியப்படுவார்கள்.

## 591. குடத்தை உடைத்து மறுபடியும் குடமாக்கும் ஜாலம்.

ஜாலமாடும் சபையில் ஒரு மண்குடத்தை எடுத்து அனைவருர்குங் காட்டி இந்த குடத்தை உடைத்து மறுபடியும் முன்னிருந்ததுபோல் செய்கிறேனென்று குடத்தை பூமியில் வைத்து ஜெகஜாலங்கருவை விரலில் தொன்டுசக்கசாதேவி மந்திரத்தை நூற்றியெட்டு ஜெபித்து குடம் பார்ப்போர் கண்களுக்கு உடைந் தாற்போல் தோற்றவேணு மென்று மனதில் எண்ணி கருவை குடத்தின்மேல் தெளித்து தடியை குடத்தின் பக்கத்தில் அடிக்கப் பார்ப்போர்களுக்கு குடம் பொடிப்பொடியாகப் போனது போல்தோற்றும் உடனே நீ அவர்களைப்பார்த்து இதோ ஒடிந்துப்போன குடத்தை உருவாக செய்கிறேன் பாருங்களென்று ஐங் கோலக்கருவை விரலில் தொட்டு பைரவர் மந்திரத்தை' நூத்தியெட்டு ஜெபித்து குடத்தின் மேல் தடவி துணியைப்போட்டு மூடி சற்றுநேரம் பொருத்து திறந் துகாட்ட முன்போல் குடமிருக்கும் ஆச்சரியப்படுவார்கள்.

## 592. துணியை இரண்டாகக்கிழிந்து மறுபடியும் ஒன்ருகச் செய்யும் ஜாலம்.

எவ்விதமான துணிானுலுமெடுத்து சபையிலுள்ள அனைவருக்குங்காட்டி இந்த துணினை இரண்டாகக்கிழித்து மறுபடியும் ஒன்ருகச் செய்கிறேன் பாரு

ங்களென்று கண்கட்டுமையை திலர்தமிட்டுக் கொண்டு மாகமாயமைய் விரலில் தடவிக்கொண்டு ஜாலக்காளை தியானித்து துணியை எடுத்துமுருக்கி கீழேபோட பார்ப்போர்களுக்கு 2 துண்டாக கிழித்துப்போட்டாற் போல்தெரியும். அப்போது நீ அதை எடுத்து மறுபடியும் அனைவருக்குங்காட்டி இதை முன்போல் ஒரு துண்டாகச் செய்கிறேனென்று ஐங்கோலக்கருவை தந்திரமாக துணியில் தடவி பந்துபோல் சுருட்டி பூமியின்மேல் சற்றுநேரம்வைத்த எடுத்துப்பிரித்துக்காட்ட இரண்டு துண்டும் ஒரு துண்டாகத்தெரியும் காண்போர் ஆச்சரியப் படுவார்கள்.

## 593. அருத்த நூலை ஒட்டமைக்கும் ஜாலம்.

நாலுமுழம் நூலைக்கையிலெடுத்து சபையோர்களுக்குக்காட்டி இந்த நூலை இரண்டு துண்டாக அறுத்து மறுபடியும் முன்னிருந்ததுபோல் ஒருதுண்டாகக் காட்டுகிறேன் பாருங்களென்று தந்திரமாக கண்கட்டு மைய் விரலில் தொட்டு நூலில் தடவி அருப்பதுபோல் இரண்டாய் மடித்துக் கீழேபோட பார்ப்போர் களுக்கு இரண்டு துண்டாக அருத்துப் போட்டதுபோல் தோற்றும் உடனே நீ அதையெடுத்து அனைவருக்குங்காட்டி உண்டையாகச்சுத்தி ஐங்கோலக்கருவைத் தடவி நூலை பிரித்துக்காட்ட முன்போல் நிகளமாகத்தோற்றும் பிர்மிப்பார்கள்.

## 594. கரும்புகோலை துண்டு துண்டாக வெட்டி மறுபடியும் ஒன்றுகச் செய்யும் ஜாலம்.

ஜாலமாடும் மிடத்தில் ஒரு கரும்புகோலை எடுத்து அனைவருக்குங்காட்டி இந்த கோலை துண்டுதுண்டாக வெட்டி மறுபடியும் முழு கோலாகச் செய்கிறேன் பாருங்களென்று ஜெகஜாலக்கருவை விரலில் தொட்டுசக்கலாதேவி யைத்தியானித்து அம்மணி பார்ப்போர்கண்களுக்கு கரும்பை நான் துண்டுதுண்டாக அருப்பதுபோல் தோற்றும்படி செய்வாயென்று மனதில் எண்ணி கத்தியில் மேற்படி கருவைத்தடவி கரும்புகெடை அருப்பதுபோல் அருக்க பார்ப்போர் கண்களுக்கு துண்டுதுண்டாகத் தோற்றும் உடனே நீஅவர்களைப்பார்த்து இந்த துண்டை எல்லாம் ஒன்றுய்ச்சேர்த்து முன்போல் முழு கரும்புகிடையாக் குகிறேன் பாருமென்று ஐங்கோலக்கருவை விரலில்தொட்டு பைரவரைத் தியனித்து கரும்பு கிடையாகத் தோற்றும் ஆனந்திப்பார்-

## 595. எலுமிச்சம் பழத்தை நாலுபத்தையாக அறுத்து மறுபடியும் முழுபழமாக்கும் ஜாலம்.

முன்போல் ஜாலமாடும் சபையில் ஒரு எலுமிச்சம்பழத்தை எடுத்து அனைவருக்குங்காட்டி இதை நாலுபத்தையாக அறுத்து மறுபடியும் முன்னிருந்தது போல் ஒரு பழமாகச்செய் கிறேனென்று ஜெகஜாலக்கருவை விரலில் தொட்டு சக்கலாதேவி மந்திரத்தை 108 ஜெபித்து கத்தியில் கருவைத்தடவி பழத்தை

ஒன்றாகச்செய் கிறேனென்று ஐங்கோலக்கருவை விரலில் தொட்டு பைரவர் மந்திரத்தை 108 ஜெபித்து பழத்தின்மேல் தடவி கீழேபோட முன்போல்பழம் உருவாகத்தோற்றும் ஆச்சரியப்படுவார்கள்.

## 596. காடை சண்டை ஜாலம்.

காடை இரண்டு கொண்டு வந்து சபையில் அனைவர் களுக்குங் காட்டி இவைகளை சண்டை விடுகிறேன் பாரென்று ஐங்கோலக் கருவை விரலில் தொட்டு காளபைரவர் மந்திரத்தை 108 ஜெபித்து கருவை ஒருகாடையின்மேல் தடவி மற்றொரு காடையைச் சும்மாய்விட கருவை மூசியிருக்கும் காடை நன்றாக எதிர்ப்பாய்ந்து சண்டைபோடும் எதிரிநின்ற காடை உறக்கம்பிடித்தோடும்.

## 597. கௌதாரி சண்டை ஜாலம்

முன்போல் கௌதாரி யிரண்டை கொண்டுவந்து சபையோர்களுக்குக் காட்டி இதை சண்டை விடுகிறேன் பாருங்களென்று மேற்சொன்னபடி கருவை யெடுத்து தியானித்துப் பூசிவிட கருவுபூசின கவுதாரி ஜெயிக்கும் எதிரில் நிற்கும் கவுதாரி சுருண்டு விழுந்துவிடும்.

## 598. கோழி சண்டை ஜாலம்.

இரண்டு சாவலைக்கொண்டுவந்து கத்திகட்டியாவது சும்மாயாவது நிருத்தி அங்குள்ளவர்களைப்பார்த்து இந்த சாவல்களிரண்டும் சண்டைபோடும் வேடிக்கையைப் பாருங்களெனறு ஐங்கோலக்கருவை விரலில்தொட்டு வாலைமந்திரத்தைச் செபித்து அந்தக்கருவை ஒருசாவல்மேல் மாத்திரந் தடவி மற்றொருசாவலைசும்மாவிட இரண்டும் விநோதமாக சண்டைபோடும். ஆனால் கருவு பூசிவிட்ட சாவல் எவ்வளவுநேரம் சண்டை போட்டாலும் சளிக்காது. காயம்பட்டாலும் ரத்தம் வாராது. கத்திபட்டாலும் அராது. எதிர் நிற்கும்சாவல் உறக்கம் பிடித்தாப் போலிருக்கும். ஆச்சரியப்படுவார்கள்.

## 599. புறாவை பறக்கவிடும் ஜாலம்.

ஒருபுறாவைக் கொண்டுவந்து அனைவருக்குங் காட்டிஇந்தப் புறாவை பறக்கவிட்டு மேகத்தில்போய் மறையும்படி செய்கிறேன் பாருங்களென்று ஜெகசாலக் கருவைத்தொட்டு சக்கலாதேவி மந்திரத்தைச் செபித்து அம்மணி இந்த புறாவை மேகத்தில் மறையச்செய்வாயென்று நைதிலெண்ணி கருவைப் புறாவின்மேல் தடவிவிட அது ஜிவ்வென்று ஆகாயமார்க்கமாகப் பறந்துபோய் மேகத்தில்மறைந்துவிடும். பார்ப்போரெல்லாம் புறாவை காணோமே என்று பாத்துப் பார்த்து கண்பூர்த்துநிற்பார்கள் அப்போது நீ அவர்களைப்பார்த்து ஆகாயத்தில் மறைந்த புறாவை இதோ வரவழைக்கிறேனென்று உச்சாடனமையை நெற்றியிலிட்டுக் கொண்டு வேதாள மந்திரம் ஆயிரத்தெட்டு செபிக்க உடனே மேகத்தில் மறைந்த புறா வட்டமிட்டபடியே கீழே வந்திறங்கிவிடும் எல்லோரும் ஆச்சரியப் படுவாங்கள்.

## 600. எலுமிச்சம்பழம் மேகத்தில் மறையும் ஜாலம்.

ஜாலமாடும் சபையில் ஒரு எலுமிச்சம் பழத்தைக்காட்டி இதை ஆகாயமார்க்கமாக விட்டெறிகிறேன் அது மேகத்தில் மறைந்துபோம் அற்புதத்தைப்பாருங்களென்று ஜெகசாலக் கருவை விரலில்தொட்டு வேதாளமந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து கருவை பழத்தின்மேல் தடவி ஆகாயத்தில் விட்டெறிய உடனே பழம் மறைந்துபோம் உடனே நீ உச்சாடன மையை விரலில்தொட்டு வேதாள மததிரத்தை நூற்றியெட்டு செபிக்க அக்கினி கீழேவந்து விழும் உன்னை இந்திர சித்தனென்பார்கள்.

## 601. தேங்காய் மேகத்தில் மறையும் ஜாலம்.

ஒரு தேங்காயையெடுத்து சபையோர்களுக்குக்காட்டி பிறகு மஞ்சள் பூசி குங்குமமிட்டு என்னுடைய மத்திரத்தினுல் ஆகாயத்தில் விடுகிறேன் பாருங்களென்று ஜெகசாலக்கருவை விரலில்தொட்டு சக்கலாதேவி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து கருவைதேங்காயின்மேல் தடவி பூமியில்வைக்க அது சிட்டுக்குருவி பறப்பதுபோல் கிளம்பி உடனே மேகமண்டலத்தில் மறைந்துபோம் பார்ப்பவர்கள் பிரமிப்பார்கள். அப்போது நீ அவர்களைப் பார்த்து அந்தரத்தில் மறைந்த அத்தேங்காயை வரவழைக்கிறேன் பாருங்களென்று உச்சாடன மையை விரலில்தொட்டு திலர்தமிட்டுக்கொண்டு வேதாளமந்திரம் நூத்தியெட்டு செபிக்க தேங்காயானது கரகரவென்று சுயன்றுவமது பூமியில் விழும். பார்ப்பவர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

## 602. விநாயகர் வசியமாக பூசை.

வில்வமரத்துக்கு ஆதிவாரத்திெ மஞ்சள் நூல் காப்புகட்டி வேரைப்பிடுங்கி வந்து அதின்மேல் ஐங்கோலக்கருவைப்பூசி பூசையில் வைத்து ஓம் ஸ்ரீரீம் ரீம் ஐயும் கிலியும் சவ்வும் ஓம் வவாகாவென்று நாளொன்றுக்கு லட்சம் உரு செபித்து இப்படி 21-நாள் ஜெபித்து 22-நாள் விநாயகருக்கு அபிஷேகம் பூசை நைவேத்தியம் முதலானதும் செய்யசித்தியாகும் நினைத்தகாரியமும் முடியும்.

## 603. சுப்பிரமணியர் வசியம்.

கொன்றை மரத்துக்கு சுக்கிரவாரத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி வேரைப் பிடுங்கிவந்து அதின்மேள ஐங்கோலக்கருவை பூசி பூமியில்வைத்து சரவணபவா ஐயும் கிலியும் சவ்வும் ஓம் சுவாகாவென்று இருபத்தொருநாள் தவருவல் காலையும் மாலையும் வேளை ஒன்றுக்கு 1008-உருசெபிதது 22-ம்நாள் பூசை முதலானதும்போட்டு வேரை குளிசமாடி கட்டிக்கொள்ள வசியமாகும்.

## 604. திரிமூர்த்திகள் வசியம்.

அரசமரத்திற்கு ஆதிவாரத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி தூபதீபங்கொடுத்து வேரைப்பிடுங்கிவந்து அதின்மேல் ஐங்கோலக் கருவைப்பூசி பூசையில்வைத்து திரிமூர்த்திகளையும் மனதில் நினைத்து வேரையெடுத்து குளிசமடிக கட்டிக்கொள்ள வசியமாவார்கள்.

## 605. தேவர்கள் வசியம்.

மஞ்சள் செடிக்கு சுக்கிரவாரத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி தூபதீபங்காட்டி அதின்வேரைப் பிடுங்கிவந்து ஐங்கோலக் கருவைப் பூசி பூசையில்வைத்து தேவர்களை தியானித்து வேரை யெடுத்து குலிசமாடி கட்டிக்கொள்ள வசியமாவார்கள்.

## 606. அஷ்டதிக்குப் பாலர்கள்.

அருகம்புல்லுக்கு சுக்கிரவாரத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி தூபதீபங்கொடுத்து பூசைபோட்டு வேரைப்பிடுங்கிவந்து அதின்மேல் ஐங்கோயிக்கருவைப்பூசி அஷ்டதிக்குப் பாலர்களை தியானித்து வேரை குலிசமாடி கட்டிககொள்ள வசியமாவார்கள்.

## 607. சூரியன் வசியம்.

செம்முருங்கைச் செடிக்கு ஆதிவார தினத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி பூசைபோட்டு சூரியனை தியானம் பண்ணி மறு ஆதிவாரஞ் சென்று வேரைப் பிடுங்கிவந்து அதன்மேல் ஐங்கோலக்கருவைத்தடவி பூசையில்வைத்து ஒன்பது நாள் தியானஞ்செய்து பத்தாநாள் வேரையெடுத்துக் குளிசமாடி கட்டிக்கொள்ள வசியமாவார்.

## 608. சந்திரன் வசியம்.

மரமஞ்சள்செடிக்கு திங்கட்கிழமையில் மஞ்சள்நூல் காப்புகட்டி பூசைமுதலானதும்போட்டு சந்திரதியானஞ்செய்து மறு திங்கட்கிழமையதினஞ்சென்றுபிடிங்கிவந்து முன்போல் ஒன்பதுநாளுஞ் சந்திரனைத்தியானித்து குளிசமாடி கட்டிக்கொள்ள வசியமாவார்.

## 609. அங்காரகன் வசியம்.

இரும்புக்கொல்லி என்னுஞ்செடிக்கு செவ்வாய்க்கிழமையில் காப்புகட்டி பூசைமுதலானதும் போட்டு செவ்வாயை தினஞ்செபித்து மறு செவ்வாய்க்கிழ வேரைப்பிடிங்கிவந்து அதன்மேல் ஐங்கோலக்கருவைத்தடவி பூசையில்வைத்து முன்போல் ஒன்பதுநாளு மறவாமல் செவ்வாயைத் தியானித்து எடுத்து குளிசமாடிக்கட்டிக்கொள்ள செவ்வாய் வசியமாவார். (இரும்புக்கொல்லி என்பது சிவனார்வேம்பு.)

## 610. புதன் வசியம்.

இருவேலி என்னுஞ்செடிக்கு புதன்கிழமையதினங் காப்புகட்டி பூசைமுதலானதும்போட்டு புதனைத் தியானஞ்செய்து மறு புதன்கிழமையன்று வேரைப் பிடிங்கிவந்து அதற்கு ஐங்கோலக்கருவைத்தடவி பூசையில்வைத்து புதனை தியானஞ்செய்து வேரைக்குளிசமாடி கட்டிக்கொள்ள றதன்வசியமாவார்.

## 611. வியாழன் வசியம்.

செங்கழுநீர்செடிக்கு வியாழக்கிழமை மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து மறுவியாழக்கிழமை வேரைப்பிடுங்கிவந்து பூசையில்வைத்

து அயின்மேல் ஐங்கோலக்கருவைதடவி முன்போல் பூசையில்வைத்து கட்டிக் கொள்ள வியாழன் வசியமாவார்.

## 612. சுக்கிரன் வசியம்.

கருவூமத்தன்செடிக்கு வெள்ளிக்கிழமை மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்க விட்டு பலிகொடுத்து தூபதீபங்காட்டி மறு வெள்ளிக்கிழமை வேரைப்பிடுங்கி வந்து முன்போல் ஐங்கோலக்கருவைத்தடவி பூசையில்வைத்து சுக்கிரனை தியா னஞ்செய்து ஒன்பதாநாளெடுத்து குளிசமாடிக் கட்டிக்கொள்ள சுக்கிரன் வசிய மாவார்-

## 613. சனி வசியம்.

செவ்வலரிச்செடிக்கு சனிக்கிழமை மஞ்சள்நூல் காப்புகட்டி சனிபகவா னைத் தியானித்து பூசைமுதலானதும்போட்டு மறு சனிக்கிழமையில் வேரைப் பிடுங்கிவந்து அந்த வேரின்மேல் கருவைத்தடவிவைத்து சனிபகவானை தியான ஞ்செய்து குளிசமாடிக் கட்டிக்கொள்ள பனிபகவான் வசியமாவார்.

## 614. இராகு வசியம்.

எட்டிமரத்திற்கு அமாவாசையில் மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட்டுப் பலிகொடுத்து தூபதீபங்காட்டி எட்டாநாள்சென்று வேரைப்பிடுங்கிவந்து ஐங் கோலக்கருவை வேர்மேல்தடவி பூசையில்வைத்து நவநாளுஞ்சென்று எடுத்து குளிசமாடி கட்டிக்கொள்ள இராகுவசியமாவார்.

## 615. கேது வசியம்.

வேப்பமரத்திற்கு கிராணத்தில் காப்புகட்டி பொங்கல் பலிமுதலானதுஞ் செய்து கேதுவைத்தியானித்து எட்டாநாளசென்று வேரைப்பிடுங்கிவந்து அத ற்கு கருவைத்தடவி பூசையில்வைத்து கேதுவைத் தியானித்து வேரைக்குளிச மாடி கட்டிக்கொள்ள கேதுசித்தியாவார்.

## 616. காளி வசியம்.

குண்டுமணிச்செடிக்கு செவ்வாய்க்கிழமை மஞ்சள்நூல் காப்புகட்டிபொங் கலிட்டு பலிகொடுத்து பூசைசெய்து காளிகாதேவியைத் தியானித்து வேரைப் பிடுங்கிவந்து ஐங்கோலக்கருவை வேரின்மேல்தடவி பூசையில்வைத்து காளிமந் திரத்தை லட்சஞ்செபிக்க வசியமாவாள் வேரைக்குளிசமாடி கட்டிக்கொள்ள வும் சித்தியாம்.

## 617. துர்க்கை வசியம்.

கரு ஊமத்தன்செடிக்கு ஆதிவாரம் மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட் டுப்பலிகொடுத்து தூபதீபங்காட்டி துர்க்கையைத் தியானித்து வேரைப்பிடுங்கி வந்து அதன்மேல் உச்சாடனமையும் ஐங்கோலக்கருவும் தடவி பூசையில்வைத் துத் துர்க்கை மந்திரத்தை லட்சஞ்செபித்து வேரைக் குளிசமாடிக் கட்டிக்கொ ள்ள வசியமாவாள்.

## 618. மயான ருத்திரி வசியம்.

தைவேளைச்செடிக்கு கிராணத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி பலிகொடுத்து தூபதீபங்காட்டி மயானருத்திரியை மனதிலெண்ணி வேரைப்பிடிங்கிவந்து அதின்மேல் தம்பனக்கருவையும் ஐங்கோலக்கருவையுந்தடவி பூசையில்வைத்து மயானருத்திரி மந்திரத்தை லட்சமோதி வேரைக்குளிசயாடி கட்டிக்கொள்ள வசியமாவாள்.

## 619. சாமுண்டி வசியம்.

வேலிப்பருத்திக்கு பருவத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட்டுபலி கொடுத்து தூபதீபங்காட்டி சாமுண்டீஸ்வரியை மனதிலெண்ணி வேரைப்பிடிங்கிவந்து உச்சாடனமையும் ஐங்கோலக்கருவும் வேரில்தடவி பூசையில்வைத்து சாமுண்டீஸ்பரிமந்திரத்தை லட்சமோதி வேரைக்குளிசமாடிக் கட்டிக்கொள்ள வசியமாவாள்.

## 620. சரஸ்வதி வசியம்.

செண்பகச்செடிக்கு வெள்ளிக்கிழமையில் காப்புகட்டி பூசைமுதலானதும் போட்டு சரஸ்வதியை மனதில் நினைத்து வேரைப்பிடுங்கிவந்து ஐங்கோலக்கருவைப்பூசி பூசையில்வைத்து சரஸ்வதி மந்திரத்தை லட்சமோதி வேரைக்குளிசமாடி கட்டிக்கொள்ள சரஸ்வதி வசியமாவாள்.

## 621. சாமளாதேவி வசியம.

முல்லைச்செடிக்கு ஆதிவாரத்தில் காப்புகட்டி பூசைபோட்டு பலிகொடுத்து சாமளாதேவியை நினைத்து வேரைப்பிடுங்கிவந்து அதன்மேல் உச்சாடனமையுமைங்கோலக் கருவுந்தடவி பூசையில்வைத்து சாமளாதேவி மந்திரத்தை லட்சமோதி வேரைக்குளிசமாறு கட்ட வசியமாவாள்.

## 622. ஜாலக்காள் வசியம்.

தும்பைச்செடிக்கு வியாழக்கிழமை மஞ்சள்நூல் காப்புகட்டிபொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங்காட்டி ஜாலக்காளை மனதில் நினைத்து அம்மணியென்று வேரைப்பிடிங்கிவந்து அதற்கு பேதனமையும் ஜங்கோலக்கருவுந்தடவி மலையாளபகவதி மந்திரத்தை லட்சமோதி குளிசமாடி கட்டிக்கொள்ள வசியமாம்

## 623. மலையாள பகவதி வசியம்.

பிரமதண்டிசெடிக்கு மங்களவாரத்தில் காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து பூசைமுதலானதும் போட்டு மலையாளபகவதியை நினைத்து வேரைப்பிடிங்கிவந்து உச்சாடனமையும் ஐங்கோலக்கருவுந் தடவி பூசையில்வைத்து மலையாளபகவதி அட்சரத்தை லட்சஞ்சொல்லி வேரைக்குளிசமாடிகட்டிக்கொள்ள வசியமாவாள்,

### 624. சக்கலாதேவி வசியம்.

நிண்ணுல்வாடிச் செடிக்கு செவ்வாய்க்கிழமையில் மஞ்சள்நூல்காப்புகட்டி பொங்கலிட்டு மலிகொடுத்து பூசைமுதலானதும்போட்டு சக்கலாதேவியை மன தில் நினைத்து வேரைப்பிடிங்கிவந்து அதற்கு ஐங்கோலக்கருவும் அஷ்டமாசித் தமையுந்தடவி பூசையில்வைத்து சக்கலாதேவி மந்திரத்தை சட்சஞ்சொல்லி வேரைக்குளிசமாடி கட்டிக்கொள்ள வசியமாவாள்.

### 625. பத்திரகாளி வசியம்.

எட்டிமரத்திற்கு நாயிற்றுக்கிழமை காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத் துப் பூசைமுதலானதுஞ்செய்து பத்திரகாளியை மனதிலெண்ணி வேரைப்பிடி ங்கிவந்து அதற்கு உச்சாடனமையும் ஐங்கோலக்கருவுந்தடவி பத்திரகாளிமந்தி ரத்தை லட்சஞ்சொல்லி வேரையெடுத்துக் குளிசமாடி கட்டிக்கொள்ள வசிய மாகுவாள்.

### 626. வாலை வசியம்.

அழிஞ்சிசெடிக்கு மங்களவாரம் மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட்டுப் பலிகொடுத்து தூபதீபங்காட்டி வாலையைமனதிலெண்ணி வேரைப்பிடுங்கி வந்து அதற்கு உச்சாடனமையும் ஐங்கோலக்கருவுந்தடவி மாலைமந்திரத்தை நூற்றி யெட்டுருசெபித்து வேரைக்குளிசமாடி கட்டிக்கொள்ள வசியமாவாள்.

### 627. வராகி வசியம்.

வேளைச்செடிக்கு வெள்ளிக்கிழமையில் மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்க விட்டுப்பலிகொடுத்து வராகிபெயரைச்சொல்லி வேரைப்பிடுங்கிவந்து அதற்கு உச்சாடனமையும் ஐங்கோலக்கருவுந்தடவி வராகிமந்திரத்தை லட்சமோதி வே ரைக்குளிசமாடி கட்டிக்கொள்ள வராகி வசியமாவாள்,

### 628. பைரவர் வசியம்.

வில்வமரத்திற்கு வெள்ளிக்கிழமையும் பருவமுங்கூடிய நாளில் மஞ்சள் நூல் காப்புகட்டி பைரவர்பெயரைச்சொல்லி செபித்து வேரைப்பிடிங்கிவந்து அதற்கு உச்சாடனமையும் ஐங்கோலக்கருவுந் தடவி பைரவர்மந்திரத்தை லட்ச மோதி குளிசமாடி கட்டிக்கொள்ள வசியமாவார்.

### 629. அஞ்சனுதேவி வசியம்.

மயில்கொண்ணைச்செடிக்கு மங்களவாரத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங்காட்டி அஞ்சனுதேவியை நினைத்து வே ரைப்பிடிங்கிவந்து அதற்கு ஸ்தம்பனமையும் ஐங்கோலக்கருவையுந்தடவி செபி த்து அஞ்சனுதேவி மந்திரத்தை லட்சமோதி வேரைக்குளிசமாடி கட்டிக்கொள் ளவும் வசியவாவாள்.

## 630. ஆஞ்சநேயர் வசியம்.

இருவாட்சி செடிக்கு ஆதிவாரத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி செபித்து ஆஞ்சநேயரை மனதில்நினைத்து வேரைப்பிடிங்கிவந்து அதற்கு வித்துவேஷணை மையும் ஐங்கோலக்கருவையுந்தடவி செபித்து ஆஞ்சநேயர் மந்திரத்தை லட்ச மோதி வேரைக்குளிசமாடி கட்டிக்கொள்ள வசியமாவார்.

## 631. வீரபத்திரர் வசியம்.

வில்வமரத்திற்கு வெள்ளிக்கிழமையில் மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலி ட்டு பலிகொடுத்து வீரபத்திரர் பெயரைச்சொல்லி செபித்து வேரைப்பிடுங்கி வந்து அதற்கு அவ்ஷடமாசித்துமையும் ஐங்கோலக்கருவையுந் தடவி செபித்து வீரமாங்காளி மந்திரம் லட்சமோதி வேரைக்குளிசமாடி கட்டிக்கொள்ள வீரப த்திரர் வசியமாவார்.

## 632. வீரமாங்காளி வசியம்

அடாசனி என்னுஞ்செடிக்கு திங்கட்கிழமையில் மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து வீரமாங்காளி பெயரைச்சொல்லி செபித்து வே ரைப்பிடிங்கிவந்து அதற்கு உச்சாடனக்கருவும் ஐங்கோலக்கருவுந்தடவிசெபித்து குளிசமாடிக் கட்டிக்கொள்ள வசியமாம்.

## 633. குறளி வசியம்.

ஊமத்தஞ்செடிக்கு அமாவாசையும் ஆதிவாரமுங்கூடிய தினத்தில் காப்பு கட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து பூசைமுதலானதும் போட்டு மறுவாரஞ்சொ ன்று குறளியைதியானித்து வேரைப்பிடிங்கிவந்து அதற்கு ஆக்ருஷ்ணமையும் ஐங்கோலக்கருவையுந்தடவி பூசையில்வைத்து குறளிமந்திரத்தை லட்சஞ்செபி த்து வேரைக்குளிசமாடி கட்டிக்கொள்ள வசியமாவாள்.

## 634. கொள்ளி வசியம்

ஆடு தின்னாப்பாளை செடிக்கு ஆதிவாரமுங் கேட்டை நக்ஷத்திரமுங்கூடிய தினத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி பலி முதலானதுங் கொடுத்து கொள்ளியின் பெயரைச்சொல்லி வேரைப்பிடிங்கிவந்து அதற்கு பேதனக்கருவும் ஐங்கோலக் கருவுந்தடவி கொள்ளிமந்திரத்தை ஆயிரத்தெட்டுருசெபித்து வேரையெடுத்து குளிசமாடி கட்டிக்கொள்ள வசியமாகி சொன்ன ஏவல் செய்வாள்.

## 635. குட்டிச்சாத்தான் வசியம்

கோகில மென்னுஞ்செடிக்கு கிரகணத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி பலி முதலானதுங்கொடுத்து குட்டிச்சாத்தான் பெயரைச்சொல்லி வேரைப்பிடுங்கி அதற்கு ஜெகஜாலக்கருவையும் ஐங்கோலக்கருவையுந்தடவி குட்டிச்சாத்தான் மந்திரத்தை ஆயிரத்தெட்டுரு செபித்து வேரைக்குளிசமாடி கட்டிக்கொள்ள குட்டிவசியமாவான் கோகிலமென்பது சிறுகாஞ்சொரி.

## 636. வேதாள வசியம்

மோகனமென்னுஞ்செடிக்கு மங்களவாரமும் அமாவாசையுங்கூடியதினத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட்டு பலி முதலியதுஞ்செய்து வேதாளத்தை தியானித்து வேரைப்பிடுங்கிவந்து அதற்கு உச்சாடனக்கருவும் ஐங்கோலக்கருவுந்தடவி வேதாளமந்திரத்தை லட்சமோதி வேரைக்குளிசமாடி கட்டிக்கொள்ள வேதாளம் வசியமாகி சொன்னயேவல் செய்யும்.

## 637. பூத வசியம்

குடிக்கினி என்னுஞ்செடிக்கு கிராணத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட்டுப் பலிகொடுத்து பைரவரைத்தியானித்து வேரைப்பிடிங்கிவந்து அதின்மேல் உச்சாடனமையும் ஐங்கோலக்கருவும் அஷ்டமாசித்துமையுந்தடவி செபித்து வேரைக்குளிசமாடிக் கட்டிக்கொள்ள வசியமாகி உன்மனம்போல் சொன்னபடி ஏவல்களைச்செய்து நினைக்கும்போது எதிரில் தோற்றமாகும.

## 638. புருஷ வசியம்

குஞ்சமென்னுஞ் செடிக்கு பருவமும் ஆதிவாரமுங்கூடிய தினத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி பலிபூசைமுதலானதும்போட்டு பைரவரை தியானஞ்செய்துவேரைப் பிடுங்கிவந்து பூசையில்வைத்து பைரவர் மந்திரத்தை 108 செபித்து வேரின்மேல் அஷ்டமரசித்து மையைத்தடவி செப்புக்குழாவிலடைத்து குளிசமாடிக்கொள்ள வசியமாம் குஞ்சம் என்பது குன்றிக்கொடி.

## 639. ஸ்திரீ வசியம்

தொட்டாசிணுங்கி செடிக்கு வெள்ளிக்கிழமைதினம் மஞ்சள்நூல் காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து பூசைபோட்டு மறு வெள்ளிக்கிழமையில் வேரைப்பிடுங்கி அதற்கு ஐங்கோலக்கருவைத்தடவி வாலைமந்திரத்தை 1008செபித்து வேரைக்குளிசமாடி கட்டிக்கொள்ள ஸ்திரீகள் வசியமாவார்கள்.

## 640. புலிவசிய ஜாலம்

குணகண்டி யென்னுஞ்செடிக்கு கிராணத்தில் காப்புகட்டி காளிமந்திரத்தை 108 ஓதி வேரைப்பிடுங்கி அதற்கு ஜெகஜாலக்கருவும் ஐங்கோலக்கருவுந்தடவி காளிமந்திரத்தை 1008 செபித்து வேருக்கு வெள்ளிக்கம்பிசுற்றி மோதிரம்போல் செய்து விரலில் போட்டுக்கொள்ள புலி வசியமாகும் குணகண்டி என்பது சிவதை.

## 641. யானைவசிய ஜாலம்

குப்பைமேனிக்கு ஆதிவாரம் தனுசுலக்கினத்தில் காப்புகட்டி கணமதியை தியானஞ்செய்து மறுவாரம் மீனலக்னத்தில் வேரறுமல் பிடிங்கிவந்து அதற்கு ஐங்கோலக் கருவைத்தடவி வாலைமந்திரத்தை 1008செபித்து வேர்மேல் பொன்கம்பிசுத்தி மோதிரம்போல் விரலில்போட்டுக்கொள்ள யானை வசியமாகும்.

## 642. கரடிவசிய ஜாலம்

குண்டலிச்செடிக்கு கிராணத்தில் மஞ்சள்நூல் காப்புகட்டி மயானருத்திரி மந்தாத்தை 108 செயித்து பூசைபோட்டு வேரைப்பிடுங்கி அதற்கு அஷ்டமா சித்துமையைத்தடவி ருத்திராதேவி மந்திரத்தை 1008 ஜெபித்து வேருக்கு வெள்ளிகம்பியுந் தாம்பிரக்கம்பியுஞ்சுத்தி மோதிரஞ்செய்து விரலில் போட்டுக்கொண்டு கரடிமுன் சென்றால் கரடிபயந்து நடுங்கி எதிரில்வந்து நிற்கும் குண்டலி என்பது சிந்தில்.

## 643 மந்திவசிய ஜாலம்.

குற்றாலம் என்னுஞ்செடிக்கு ஆதிவாரமும் அமாவாசையுங் கன்னியாலக்னமுங்கூடிய தினத்தில் காப்புகட்டி அஞ்சனதேவியையும் ஆஞ்சநேயரையுந் தியானித்து வேரைப்பிடுங்கி அதற்கு ஐங்கோலக்கருவைத்தடவி பொன்மோதிரத்தினுள் வேரைசொருகி கையிலணிந்துக்கொள்ள மந்திவசியமாகும்.

## 644. செந்நாய்வசிய ஜாலம்

தேதி என்னுஞ்செடிக்கு மங்களவாரத்தில் காப்புகட்டி மயானருத்திரியை நினைத்து வேரைக்கொண்டுவந்து ஐங்கோலக்கருவைத்ததடவி அம்மனுடைய பாதத்தில்வைத்து தியானித்து 1008 உருசெபித்து குளிசமாடிக் கட்டிக்கொ செந்நாய்வசியமாகும்.

## 645. நாய்வசியம்

செங்கருங்காலி செடிக்கு சந்திரகிராணத்தில் காப்புகட்டி வேரைப்பிடிங்கி வந்து ஐங்கோலக்கருவைத்தடவி பைரவர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து வேரை மோதிரம்போலசுத்தி விரலில்போட்டுக்கொள்ள எப்பேர்ப்பட்ட அஷ்ட நாய்களும் வணங்கி வசியமாகும்.

## 646. பூனைவசியம்

எாழிஞ்சி செடிக்கு திங்கட்கிழமையில் காப்புகட்டி மயானருத்திரியை நினைத்து பூசைபோட்டு வேரைப்பிடுங்கி அதற்கு ஐங்கோலக் கருவைத்தடவி மயானருத்திரியின் பாதத்தில்வைத்து 1008 உருசெபித்து வேரைகுளிசமாடி கட்டிக்கொள்ள சகலமானபூனைகளும் கைதட்டி அழைக்க வரும்.

## 647. மான்வசியம்

சிறுபுள்ளடி என்னும் செடிக்கு குருவாரங்காப்புகட்டி வாலைவிரதமிருந்து நைவேத்தியமுதலானதுஞ் செய்து வேரைப்பிடுங்கிவந்து அஷ்டமாசித்துமையுமைங்கோலக் கருவுந்தடவி வராகிமந்திரத்தை 1008 உருசெபித்து வேரைக்குளிசமாடி வலதுகையில் கட்டிக்கொண்டு மான்கூட்டத் தெதிரில்நின்று கையைத் தட்டியழைக்க மான்களெல்லாம் கூட்டமாகவரும்.

### 648. நரி வசியம்

அலரிச்செடிக்கு ஆதிவாரமும் அமாவாசையுங்கூடியதினத்தில் காப்புகட்டி வீரபத்திரரை தியானித்து நைவேத்திய முதலானதைச்செய்து வேரைப்பிடுங்கி அதற்கு ஜெகஜாலக்கருவைத்தடவி வீரபத்திர மந்திரத்தை 1008 செபித்து வேருக்கு வெள்ளைக்கம்பிசுற்றி மோதிரம்போலுருட்டி கைவிரலில் போட்டுக்கொண்டு நரிகள் விசேஷமா யிருக்குங் காட்டிற்சென்று கையைத்தட்ட நரிகளெல்லாமோடிவந்து சொன்னபடி கேட்கும்.

### 649. நுழைநரி வசியம்

சிறியாநங்கைசெடிக்கு கிராணத்தில் காப்புகட்டி மாடனைத்தியானித்து வேரைப்பிடுங்கிவந்து அதற்கு அஷ்டமாசித்து மையைத்தடவி அம்மன்மந்திரம் 1008 செபித்து பாதத்தருகில்வைத்து அதன்பேரில் வெள்ளிகம்பி பொன்கம்பி சுத்தி விரலில் போட்டுக்கொண்டு நுழைநரிகளிருக்கும் காட்டிற்சென்று கையைத்தட்ட ரரிகளெல்லாம் கூட்டமாக ஓடிவரும்.

### 650. முள்ளம்பன்றி வசியம்

பூனைக்காஞ்சான்செடிக்கு ஞாயிற்றுக்கிழமை காப்புகட்டி மாடனைத் தியானித்து பலிகொடுத்து நைவேத்திய முதலானதுஞ்செய்து வேரைப்பிடுங்கிவந்து அதற்கு ஐங்கோலகருவைத்தடவி மாடன்மந்திரத்தை நாளொன்றுக்கு 108செபித்து குளிசமாடி கட்டிக்கொள்ள முள்ளம்பன்றி வசியமாகும்.

### 651. மரநாய் வசியம்

பெரியாநங்கை செடிக்கு திங்கட்கிழமை மீனலக்கினத்தில் காப்புகட்டிக் குறளியைத்தியானித்து பூசைசெய்து வேரைப்பிடுங்கிவந்து அதற்கு ஜெகஜால கருவும் ஐங்கோலக்கருவுந்தடவி குறளிமந்திரத்தை 1008 செபித்து வேரைகுளிசமாடிகட்டிக்கொள்ள மரநாய் வசியமாகும்.

### 652. மாடுகள் வசியம்

ஆடுதின்னாப்பாளைசெடிக்கு கிராணத்தில் காப்புகட்டி வாலையைத்தியானித்து நைவேத்தியஞ்செய்து வேரைப்பிடுங்கி அதற்கு ஐங்கோலக்கருவைத்தடவி வாலைமந்திரத்தை லட்சமோதி மோதிரஞ்செய்து அதன்மேல் பொன்கம்பியை சுத்தி விரலில்போட்டுக்கொள்ள முறட்டு மாடுகளாயிருந்தாலும் வசியமாகும்.

### 653. அஸ்வங்கள் வசியம்

அருகியரத்தம் என்னுஞ்செடிக்கு ஆதிவாரமும் அமாவாசையுங் கூடிய தினத்தில் காப்புகட்டி வேரைப்பிடுங்கி அதற்கு ஐங்கோலந்தடவி பூசைசெய்து பைரவரைத்தியானித்து வேரைக்குளிசமாடி கட்டிக்கொள்ள அங்குள்ள அஸ்வங்களெல்லாம் வசியமாகும் ஓடாத அஸ்வங்களெல்லாம் ஓடும் அருகியரத்தம் என்பது பூனைக்காலி.

## 654. பாம்புகள் வசியம்

நாகமல்லிசெடிக்கு ஆதிவாரமும் மீனலக்கினத்தில் காப்புகட்டி பொங்க லிட்டு பலிகொடுத்து தீபதூபாராதனை செய்து வடக்கேபோகும் வேரைப்பிடுங்கி வந்து அதற்கு ஐங்கோலக்கருவைத்தடவி கெருடபகவானைத்தியானித்து குளிச மாடிகட்டிக்கொள்ள சர்வபாம்புகளும் வசியமாகும் உன்னைக்கண்டவுடன் பாம்பு கடித்து இறந்தவர்களும் எழுந்திருப்பார்கள்.

## 655 தேள் வசியம்

ஆகாடம் என்னுஞ்செடிக்கு மங்களவாரத்தில் காப்புகட்டி பொங்கலிட்டுப் பலிகொடுத்து தூபதீபங்காட்டி வேரைப்பிடிங்கிவந்து அதன்மேல் ஐங்கோலக் கருவும் அஷ்டமாசித்து மையுந்தடவி பைரவர் மந்திரத்தை 1008 செபித்து வேரை மோதரம்போல்சுற்று அதன்மேல் பொன் வெள்ளிகம்பிசுற்றி கைவிர லில்போட்டுக்கொள்ள தேள்கள் வசியமாகும்.

## 656 பகைவர் வசியம்

சிறுமுட்டி என்னுஞ்செடிக்கு திங்கட்கிழமை கன்னியாலக்கினத்தில் மஞ்சள் நூல் காப்புகட்டி வேரைப்பிடுங்கிவந்து அதன்மேல் ஐங்கோலக்கருவை தடவி பூசையில் வைத்து காளிமந்திரம் ஆயிரத்தெட்டு உருஜெபித்து வேரையெ டுத்து மோதிரம்போல் சுத்தி பொன்வெள்ளிக் கடயத்தில் வைத்து வலது இட துகைகளில் அணிந்துகொள்ளவும் பகைவரைக் கண்டவுடன் கடயத்தை கீழுக்கி ரக்க பகைவர் வலிவந்து உன்னைவணங்கி வார்தையாடுவார்கள். உன் மொழி யைத்தள்ளி நடக்கமாட்டார்கள்.

## 657. கள்ளர்கள் வசியம்

பேருமுட்டி செடிச்கு ஆதிவாரத்தில் மஞ்சள் சரடு காப்புகட்டி பொங்க லிட்டு பலிகொடுத்து பூசைமுதலானதுப்போட்டு பைரவர் மந்திரத்தை உச்சரித் து வேரைப்பிடுங்கிவந்து அந்த வேரின்மேல் அஷ்டமாசித்துமையும் ஐங்கோலக் கருவுந்தடவி பூசையில்வைத்து பைரவருடைய மூலமந்திரத்தை ஆயிரத்தெட்டு உருசெபித்து வேரையெடுத்து குளிசமாடி உனது கையில் கட்டிக்கொண்டு தனி யாக காட்டு வழியேனும் இந்த வழியேனும் இன்னு மெந்தவழியேனும் செல்ல கள்ளாகள் எதிர்பட்டாலும் உன்னைகண்டு அஞ்சி பயந்து ஓடுவார்கள்.

## 658 உலக்கைதாண்டும் ஜாலம்.

ஜாலமாடும் சபையில் வந்துநின்று உலக்கை ஒன்றையெடுத்து சபையோர் களைப்பார்த்து இந்த உலக்கையை பூமியில் படுக்கப்போடுகிறேன் இதை குறுக் கேதாண்டி யாராகிலும் போவாராகில் அவர்களுக்கு பத்து வராகன் கொடுக்கி றேன் என்று நீ பந்தயங்கூற அப்போது அங்குள்ளவர்களின் யாரேனுமொரு வர் தாண்டுகிறேனென்று வருவாராகில் அப்போது நீ அஷ்டமாசித்துமையும் ஐங்கோலக்கருவையும் விரலில்தொட்டு ஒருவருக்குந் தெரியாமல் உலக்கையின்

மேல் தடவிவிட்டு உச்சாடன மந்திரத்தை செபித்துக்கொண்டிருக்க எதிரி உலக்கை தாண்டவொட்டாமல் மாறிமாறி அடிககும் அப்போது அவன் பயந்து உன்னைவணங்குவானுல் தந்திரமாக உலக்கைமேலிக்கும் மையைத் துடைத்துவிட உலக்கை எப்போதும்போல் பூமியில் விழுந்துக் கிடைக்கும் அனைவருமாச்சரியப்படுவார்கள்.

## 659. கோட்டை தாண்டும் ஜாலம்.

ஜாலமாடுமிடததில் அனைவருக்குமுன்பாக ஒரு கோடுகிழித்து இந்தக் கோட்டை யாராகிலும் தாண்டிப்போவாராகில் பத்துவராகன் கொடுக்கிறேனென்று முன்போல் பந்தயங்கட்டி யாரேனும் தாண்டவருவாராகில் நீ உடனே ஒருவருக்குந் தெரியாமல் சிறிய யானை ஓட்டில் ஐங்கோலக்கருவுஞ் ஜெகசாலக்கருவுந் தடவி அந்த கோட்டின மத்தியில் வைத்துவிட்டு குரளியின் மந்திரத்தை செபித்துக்கொண்டிருக்க தாண்டும்படியாகவந்த எதிரிகோட்டிற்கு அந்தப்புறமாக ஒரு காலும் வைத்து தாண்டடியதுபோலவே அசையாமல் நின்றுவிடுவான் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள். எதிரி உன்னைவணங்கி இந்த கோட்டைவிட்டு கிளம்பும்படிச் செய்வாய் என்று கேட்பானுகில் நீ உடனே தந்திரமாக தடவிப் போட்ட ஓட்டை எடுத்து விடுவாயாகில் கட்டியிருந்தவனை அவிழ்த்துவிட்டதுபோல் ஓடுவான் சபையோர்கள் பிர்மிப்பார்கள்.

## 660. செருப்பை மந்திரித்துவிடும்.ஜாலம்.

ஜாலமாடுமிடத்திலாவது இன்னமெந்த விடங்களிலாவது இடத்தைமெழுகி பிள்ளையார்வைத்து அதன் சிரசில் அருகம்புல்சூடி வெல்லம் பழம் வெத்திலைப் வெத்திலைப்பாக்குவைத்து தேங்காயை புடைத்துச் சூடங்கொளுத்தி பிறகு ஒரு செருப்பையெடுத்து கழுவி மஞ்சள்நீரை தெளித்து அங்குள்ளவர்களைப்பார்த்து இதோ இந்த செருப்பை மந்திரித்து விடுகிறேன் இந்தவாசலெல்லாம் காகரவென்று சுழலும் விநோதத்தைப் பாருங்களென்று ஜெகசாலக்கருவை விரலில்தொட்டுக்கொண்டு சக்கலாசிதவி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து அம்மணி இந்தசெருப்பை சுழலும்படி சீக்கிரம் செய்வாயென்று மனதில்நினைத்து கருவைதந்திரமாக செருப்பின்மேல் தடவி பின்பு உச்சாடன மந்திரத்தை செபிக்க உடனே செருப்பானது கிளம்பி அந்தவாசல் முழுதும் கரகரவென்று சுழன்றுகொண்டே இருக்கும். மந்திரததை நிறுத்தினுல் நின்றுவிடு மாச்சரியப்படுவார்கள்.

## 661. துடப்பத்தை மந்திரித்துவிடும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் துடப்பக்கட்டை ஒன்று கையிலெடுத்து இதை மந்திரித்து விடுறேேன் இந்தவாசலில் கிருகிரென்று சுத்தும் விநோதத்தைப் பாருங்களென்று ஜெகசாலக்கருவும் ஐங்கோலக்கருவும் விரலில்தொட்டு சக்கலாதேவி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து கருவை துடப்பக்கட்டையின் மேல் தடவி தரையில்போட்டு மந்திரத்தை செபித்துக் கொண்டே யிருக்க கிருகிரென்று வாசலெல்லாம் சுழலும் பார்ப்பவர்கள் ஆச்சரியப்படுவார்கள். ஆனுல் மந்திரம் ஜெபி நிறுத்திவிட சுழலாது.

## 662. முறத்தை மந்திரித்துவிடும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தைப் பசுஞ்சாணத்தால் மெழுகி மஞ்சள் பிள்ளையார் பிடித்துவைத்து சிரசில் அருகம் புல்சூடி பழம் வெல்லம் வெற்றிலைப்பாக்கு வைத்து தேங்காயுடைத்து சூடங்கொளுத்தி முறத்துக்கு மஞ்சள் தடவி குங்குமமிட்டு பிள்ளையார் அருகுல்வைத்து ஜெகசாலக்கருவும் ஐங்கோலக்கருவும் விரலில்தொட்டு சக்கலாதேவி மந்திரத்தை விடாமல் செபித்து அம்மணி இந்த முறத்தை சக்கரம்போல் சுத்தும்படி செய்வாயென்று செபித்துக்கொண்டே யிருக்க முறம் திருகிறென்று வாசலெல்லாம் சுத்திவரும் பார்ப்பவர்கள் பிர்மித்து ஆச்சரியப்படுவார்கள். நீமந்திரஞ் ஜெபிப்பதை நிறுத்திவிட்டால் முறம் சுழலாது.

## 663. கோழிமுட்டையை மந்திரித்துவிடும் ஜாலம்.

முன்போல் பிள்ளையார் பிடித்து பழமுதலானதும் வைத்து தேங்காயுடைத்து சூடங்கொளுத்தி பின்பு கோழிமுட்டை ஒன்று யெடுத்து அங்குள்ள அனைவருக்குங்காட்டி இந்த முட்டையை மந்திர உச்சாடனஞ்செய்து அந்தரமாகக்கிளம்பும்படி செய்கிறேன் பாருளங்களென்று முட்டைக்கு மஞ்சள்தடவி குங்குமமிட்டு பிள்ளையார்க்கு முன்புவைத்து ஐங்கோலக்கருவும் அஷ்டமாசித்துமையும் விரலில்தொட்டு வாலைமந்திரம் 1008-ஒதி கருவை முட்டைமேல் தடவி உசசாடனமையும் விரலில்தொட்டு மந்திரஞ்ஜெபித்துக் கொண்டே யிருக்க முட்டை மேழெநிற்காமல் அந்தரமாகக்கிளம்பி காகரவென்று சுழலும் ஜெபிப்பதை நிறுத்திவிட சுழல்வதுநின்றுவிடும். அனைவரும் ஆச்சரியப் படுவார்கள்.

## 664. எலுமிச்சம்பழத்தை மந்திரித்துவிடும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு எலுமிச்சம்பழத்தை யெடுத்து சபையோர்களுக்குக்காட்டி இதை வாசலெல்லாம் புரளும்படி செய்கிறேன் பாருங்களென்று சொல்லி ஜெகஜாலக்கருவையும் ஐங்கோலக்கருவையும் விரலில் தொட்டு சக்காதேவி மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து அம்மணி இந்தப்பழத்தை வாசல் முழுதும் புறளும்படி செய்வாயென்று கருவை பழத்தைதின்மேல் தடவி தரையில்வைத்து மந்திரத்தை மறவாமல் ஜெபித்துக் கொண்டேநிற்க பழம் வாசல் முழுதும் கடகடவென்று புறளும் ஆச்சரியப்படுவார்கள்.

## 665. சூரியபகவான் தியானபூசை.

மத்தியஸ்தானத் திலிருக்கும் சூரியபகவானுக்கு ஆபரணம் மாணிக்கம் சமித்து எருக்கு கடுகுசோந்த சாதமும் காரம்சேர்ந்த பலகாரமும் படைத்து செந்தாமரை புஷ்பம்வைத்து ஞாயிற்றுக்கிழமையில் தீபதூபங்கொடுத்து சூரிய தரிசனஞ்செய்ய சித்தியாகும் மேற்சொனனபடி படைத்தவை களைச்சாப்பிட சூரியபகவான் தனது கொரோத்தைக் கட்டாமல் காப்பாற்றுவார்.

## 666. சந்திரபகவான் தியானபூசை.

தென்கிழக்கு அக்கினிமூலையிலிருக்கும் சந்திரபகவானுக்கு ஆபரணம் முத்து புஷ்பம் வெள்ளல்லி சமித்து முருங்கை தித்திப்பு சேர்ந்த சாதம் இவை

களைப் படைத்து தீபதூபங் கொடுத்து சந்திராகவானை தியானித்துவர சகலமும் சித்தியாகும்.

### 667. செவ்வாய் தியானபூசை.

தெற்குஎமன் திசையிலிருக்கும் செவ்வாய் பகவானுக்கு ஆபரணம் பவளம் புஷ்பம் செண்பகம் சமித்து கருங்காய்தாகவிலை வெண்ணெய் சேர்ந்த சாதம் துவர்ப்புள்ள பதார்த்தம் துவரைசேர்ந்தபலகாரம் இவைகளை செவ்வாய்க்கிழமையில் படைத்து செவ்வாயைத்தியானித்து வாசித்தியாகும் கொடுமைசெய்யாமல் காத்துவாருவார்,

### 668. பூதபகவான் தியானபூசை·

வடகிழக்கு ஈசான்ய மூலையிலிருக்கும் புதபகவானுக்கு ஆபரணம் பச்சை பச்சைபுஷ்பம் வெண்காந்தம் சமித்து நாயுருவி வெப்பிலிலை சர்க்கரைசேர்ந்த சாதமும் உப்புமாவும் பச்சைப்பயறு பலகாரத்துடன் புதன்கிழமை படைத்து தீபதூபங்கொடுத்து புதபகவானை தியானித்து சாப்பிட பிரசன்னமாகி நன்மைமைத்தருவார்.

### 669. குருபகவான் தியானபூசை.

வடக்கு குபேரதிசை யிலிருக்கும் குருபகவானுக்கு ஆபரணம் புஷ்பராகம் முல்லை சமித்து அரசு அரசனிலை வெள்ளைசாதம் தித்திப்பு பதார்த்தம் கடலை சேர்ந்தபலகாரம் இவைகளை வியாழக்கிழமையில் படைத்து வியாழபகவானை தியானித்து தீபதூபங்காட்டி சாப்பிட சித்தியாகி நன்மையைத்தருவார்-

### 670. சுக்கிரபகவான் தியானபூசை.

கிழக்கு இந்திரதிசையிலிருக்கும் சுக்ரந் பகவானுக்கு ஆபரணம் வைரம் புஷ்பம் வெண்டாமரை சமித்து அத்தி குங்குலை வெண்ணெய் சேர்ந்த சாதம் இனிப்பாகிய பாதர்த்தம் மொச்சக்கொட்டைக் சேர்ந்த பலகாரம் இவைமுதலானதும் வெள்ளிக்கிழமையில் படைத்து சுக்கிரபகவானைத் தியானித்து தூபதீபங் கொடுத்து சாப்பிட சித்தியாகி வேதனைத்தராமல் காப்பாற்றுவார்.

### 671. சனிபகவான் தியானபூஜை

தெற்குவருண திசையிலிருக்கும் சனிபகவானுக்கு ஆபாணம் நீலம் புஷ்பம் கருங்குவளை சமித்து வன்னி ஆலம் இலை மாம்பழத்துடன் சாதம் கசப்பு சேர்ந்த பதார்த்தம் எள்ளுசேர்ந்த பலகாரம் இவைகளை சனிக்கிழமையில் படைத்து சனிபகவானை தியானித்து சாப்பிட சித்தியாகி இம்சைதராமல் காப்பாற்றுவார்கள்.

### 772. இராகுவின் தியானபூஜை.

தென்மேற்கு நிருதிமூலையில் இருக்கும் இராகுவிற்கு கோமேதகம் ஆபரணம் புஷ்பம் மந்தாரை சமித்து அருகு வாழயிலை சுத்தமாடிய சாதம் புளிப்பு சேர்ந்த பதார்த்தம் உளுந்துசேர்த்த பலகாரம் காலை எழரைநாழி கைக்குமேல்

படைத்து இராகுவை தியானித்து தூபதீபங் கொடுத்து சாப்பிட சித்தியாகி தொந்திரவு செய்யாமல் இரட்சிப்பார்.

### 673. கேதுவின் தியானபூஜை

வடமேற்கு வாயுமூலையில் இருக்கும் கேதுவிற்கு ஆபரணம் வைடூரியம் புஷ்பம் செவ்வல்லி சமித்து தர்ப்பைதாழயிலை சுத்சாதம் புளிப்பு சேர்ந்தபதார்த்தம் கொள்ளுசேர்ந்த பலகாரம் இவைகளை காலை ஏழரை நாழிகைக்கு மேல் படைத்து தூபதீபங்கொடுத்து கேதுவை தியானித்து சாப்பிடசித்தியாகி தடுத்து நன்மையைதருவார்.

### 674. சண்டை ஜாலம்.

காக்கை மூலிகை குரங்கு மூலிகை இவைகள் இரண்டும் மலைகள் தோறும் விசேஷமாயிருக்கும் இவைகளைப் பிடுங்கிவந்து காக்கைமூலிகை ஒரு கடையிலும் குரங்கு மூலிகை மற்றொரு கடையிலும் கடைக்காரர் கண்ணுக்குத் தோற்றாமல் சொருகிவைத்தால் அவர்களிருவரும் உடனே சண்டைப்போட்டு மண்டையோடு மண்டையுடைத்துக் கொள்வார்கள். யார்போர் சமாதானஞ் செய்தாலும் கேளார்கள் அந்த மூலிகைகளை எடுத்து விட்டால் சமாதான மாவார்கள்.

### 675. நீலகண்டர் வசியமந்திரம்.

ஓம் நீலகண்ட மித்திரா மங்சிங் சர்வமனோகண்டா படுசுவாகா என்று லட்சம் உருஜெத்பித்து பூசைபோட்டு நூறு பிராமணருக்கு அன்னதானம்செய்து மேற்சொன்னபடி வந்திரத்தை மறவாமல் பத்துநாள் ஜெபித்து வா நீலகண்டர் சித்தியாவார்.

### 676. போன்னிற தியானம்.

நீலகண்டரைப் பொன்னிரமாகவைத்து ஸ்தம்பனஞ்செய்து மனதில் தியானித்து எண்கோண சக்கரங்கூறி அதில் வெம்புரொபு என்று நாட்டி உரு 36 ஜெபிக்க சகலமும் தம்பிக்கும்.

### 677. தங்கநிற தியானம்

நீலகண்டரை தங்கநிறமாகவைத்து மேற்சொன்னபடி எண்கோண மிட்டு மனதில் வறவாமல் தியானித்து முன்போல் உரு 36 ஜெபித்து தூபதீபங்கொடுக்க மனதில் கொண்ட எண்ணம் நிறைவேறும்.

### 678 வெள்ளிநிற தியானம்.

நீலகண்டரை வெள்ளிநிறமாக வைத்து திருநீற்றால் வட்டங்கீறி யபமாரோ வென்று நாட்டி 1008 உருஜெபித்து விபூதியைக்கொடுக்க நினைத்தபடி யாவும் வசியமாகும்.

### 679. சேன்னிற தியானம்.

நீலகண்டரை செந்நிறமாகவைத்து தியாணித்து முக்கோணங்கீறி அதில் கிலியும் ரோவென்று காட்டி 1008 உருஜெபித்து பின்பு தூளிதத்தை எடுத்து

அணிந்துக்கொண்டு வெளியேபோக சகலமும் வசியமாகும் பிறருக்கு கொடுக்கினும் அவர்களும் உன்னை வணங்குவார்கள்.

### 680. ஸ்ப்டிகநிற தியானம்.

நீலகண்டரை ஸ்படிகநிறமாக வைத்து தியானஞ்செய்து பிறைபோல் கீறி அதில் யம்மரோவென்று நாட்டி ஆயிரத்தெட்டு உருஜெபித்து தூளிதத்தையெடுத்து தடவிக்கொண்டு வெளியேபோக சகலமும் வசியமாகும்.

### 681. மேகநிற தியானம்.

நீலகண்டரை மேக நிறமாகவைத்து தியானித்து நாற்கோணக்கீறி அதில் ஓம் ரம்ரோவென்று தென்னம் ஓலையில் நாட்டி இருவருடைய பேரையும் கூட்டி ஆயிரத்தெட்டு உருஜெபித்து எதிரியினுடைய வீட்டின் இறப்பில் கொண்டுபோய் வைக்க அவர்கள் இருவரும் இணைபிரிவார்கள்.

### 682. புகைநிற தியானம்.

நீலகண்டரை புகைநிறமாகவைத்து தியானித்து ஐங்கோண சக்கரங் கீறி அதில் யம்ரோவென்று நாட்டி ஆயிரத்தெட்டு உருஜெபித்து தூளிதத்தை வாரிப் போட சகல பிணிகளும் கசல தோஷங்களும் சகல பகைகளும் வீரிட்டு ஓடிப் போகும்.

### 683. பிரளயகால ருத்திர தியானம்.

நீலகண்டரை பிரளயகால ருத்திரைப்போல வைத்து தியானித்து முக்கோண சக்கரங்கிறி அதில் ஓம் ரோகம் என்று காட்டி பகைவான் பெயரைச் சொல்லி ஆயிரத்தெட்டு உரு ஜெபித்து அனலில் காட்டக் கருகி மாண் மாகப் போகும்.

### 684. கறுப்புநிற தியானம்.

நீலகண்டரை கரு நிறமாகவைத்து தியானித்து முக்கோண சக்கரங் கீறி அதில் பம் என்று நாட்டி ஆயிரத்தெட்டு உரு ஜெபித்து தூளிதத்தை யெடுத்து அணிந்துக்கொள்ள சகலசித்தும் விளையாடலாம்

### 685. சத்திபூசை தியானம்.

ஐயும் நமோ பகவதே ஓம் மகாரூபி மகம்மாயி மாதவசக்கிதி சர்வதாரணி சுவாகாவென்று லட்சம் உருஜெபித்து தம்பனத்தோடு பூசை முதலானதும் போட்டு தியானிக்க மகம்மாயி சித்தியாவாள் அப்படி சித்தியான பெருமை என்னவெனில் தத்திபூசை செய்வாதை கேலிசெய்து சோதனைபார்க்க யாராவது வருவாராகில் அப்லோது நீ மந்திரத்தை தியானஞ்செய்து வஸ்துசுத்தி பால் பூவாக இருக்கும் சோதனைகாட்ட சகலரும் மிரண்டு பணிவார்கள்.

### 686. தேங்காயை பனங்காயாக்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு தேங்காயை யெடுத்து சபையோர்களுக்கு காட்டி இதை பனங்காயாக்குகிறேன் பாருங்களென்று ஜெகஜாலக்கருவைகலந்து வி

வில்தொட்டு சத்தியின மந்திரத்தை ஆயிரத்தெட்டு உருஜெபித்து கருவை தேங்காயின்மேல்தடவி மேஜெயின்மேல்வைத்து தட்டைப்போட்டு மூடி பிலகு திறந்துக்காட்ட பனங்காயாகத் தோற்றும் பார்ப்பவர்கள் ஆச்சரியப்படுவார்கள். மறுபடியும் மூடித்திறக்க தேங்காயாகும்.

### 687. பனங்காய் தேங்காயாகும் ஜாலம்.

ஒரு பனங்காயையெடுத்து முன் தேங்காயை பனங்காயாகக் காட்டினேன் இப்போது இப்பனங்காயை தேங்காயாகக் காட்டுகிறேன் பாருங்களென்று அஷ்டமாசித்தி மையை விரலில்தொட்டு சத்தியை நினைத்து கருவை பனங்காயின் மேல் தடவி தட்டைப்போட்டு மூடி திறந்துகாட்ட தேங்காயாகத்தோற்றும், பிறகு கூடையால் மூடி திறக்க பனங்காயாகும் பார்ப்போர் பலேபேஷ் என்பார்கள்.

### 688. ரோஜபுஷ்பம் சாமந்திபுஷ்பமாகும் ஜாலம்.

ஒரு ரோஜாபுஷ்பத்தை யெடுத்துக்காட்டி இந்த புஷ்பத்தை சாமந்தி புஷ்பமாகும்படி செய்கிறேன் கவனியுங்களென்று ஐங்கோலக்கருவை விரலில் தொட்டு உருஜெபித்து கருவை புஷ்பத்தின்மேல் தடவி மேஜையின்மேல வைத்து தட்டைப்போட்டிமூடித்திறக் ரோஜா புஷ்பமாகும் சகலரும் ஆச்சரியப்படுவார்கள்

### 689. சாமந்திபுஷ்பம் ரோஜா புஷ்பமாகும் ஜாலம்

ஒரு சாமந்தி புஷ்பத்தையெடுத்து சபையோர் களுக்குக்காட்டி முன் ரோஜாபுஷ்பம் சாமந்தி புஷ்பமானதைப் பார்த்தீர்கள் இதோ சாமந்தி புஷ்பத்தை ரோஜா புஷ்பமாக காட்டுகிறேன் பாருங்களென்று விரலில் ஐங்கோலக்கருவை தொட்டு நீலகண்டரைத் தியானித்து கருவை புஷ்பத்திற்றடவி மேசையின்மேல்வைத்து கூடையால் மூடித்திறக்க ரோஜாபுஷ்பமாகத்தோற்றும் மறுபடியும் மூடித்திறக்க சாமந்தியாய்விடும்.

### 690. மல்லிகை முல்லையாகும் ஜாலம்.

ஆழாக்கு மல்லிகை மொக்கையெடுத்து சபையோர்களுக்குக் காட்டி, ஒரு தாம்பாளத்தில்வைத்து ஜெகசாலக் கருவை விரலில்தொட்டு சத்தி மந்திரத்தை 1008-ஜெபித்து மல்லிகைமேல் கருவைத்தடவி கூடைப்போட்டு மூடித்திறக்க முல்லையாகவேயிருக்கும் பார்ப்பவர்கள் மாயாஜால மென்பார்கள்.

### 691. முல்லை மல்லியாகும் ஜாலம்.

முன்போல் ஆழாக்கு முல்லையெடுத்து சபையோருக்குக்காட்டி இம்முல்லையை மல்லியாக்குகிறேன் பாருங்களென்று ஜெகசாலக்கருவைத் தொட்டு சத்தி மந்திரத்தை 1008-உருசெபித்து கருவை புஷ்பத்தின்மேல் தெளித்து கூடைபோட்டி மூடித்திறக்க முல்லை மல்லியாகத்தோற்றும் மறுபடியும் மூடித்திறக்க முல்லையாய்விடும்.

## 692. வாழைப்பழம் பலாப்பழமாகும் ஜாலம்.

ஜாலச்பையில் ஒரு வாழைப்பழத்தை யெடுத்துக்காட்டி இதைப் பலாப்பழமாக மாற்றுகிறேன் பாருங்களென்று ஜெகசாலக்கருவும் ஐங்கோலக்கருவும் மந்திரத்தை 1008-உருசெபித்து கருவை பழத்தின்மேல் தடவி முன்போல் மூடித்திறந்துகாட்ட வாழைப்பழம் பிலாப்பழமாகத்தோற்றும் மறுபடியும் மூடித்திறக்க வாழைப்பழமாகவே யிருக்கும்.

## 693. பலாப்பழம் வாழைப்பழமாகும் ஜாலம்.

ஒரு பிலாப்பழச் சுளையையெடுத்து அனைவர்க்குங்காட்டி இதை வாழைப்பழமாகச் செய்கிறேன் பாருங்களென்று இந்திர சாலக்கருவும் ஐங்கோலக்கருவுங்கலந்து விரலில்தொட்டு சத்தியை தியானித்து நீலகண்டர்மந்திரத்தை 1008 செபித்து பிலாச்சுயை வாழைப்பழமாகத் தோற்றும்படி செய்வாயென்று கருவை பழத்தின்மேல்தடவி முன்போல் மூடித்திறக்க பலாப்பழம் வாழைப்பழமாகத் தோற்றும் எல்லோரும் இது மகா புதுமையான வித்தையென்பார்கள்,

## 694. மாம்பழம் கிச்சிலிப்பழமாகும் ஜாலம்.

ஜாலசபையில் மாம்பழமொன்றை யெடுத்துக்காட்டி இதை கிச்சிலிப்பழமாகச் செய்கிறேன் பாரெங்களென்று அஷ்டமாசித்துமையும் ஐங்கோலக்கருவுங்கலந்து விரலில் தொட்டுக்கொண்டு நீலகண்டரை தியானித்து சத்திமந்திரத்தை 1008-தரம் செயித்து கருவை ப்ழத்தின்மேல் தடவி கூடையைக் கவிழ்த்து திறக்க மாம்பழம் கிச்சிலிப்பழமாகத் தோற்றும் பிறகு கூடையால்மூடி திறந்துகாட்ட பழயபடி மாம்பழமாகும் சபையோர்கள் சந்தோஷப் படுவார்கள்.

## 695. கிச்சிலிப்பழம் மாம்பழமாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு கிச்சிலிப்பழத்தை எடுத்து அனைவருக்குங் காட்டி. இதை மாம்பழமாக மாற்றுகிறேன் பாருங்களென்று இந்திர சாலக்கருவும் ஐங்கோலக்கருவுங் கலந்து விரலால் தீண்டி சத்தி மந்திரத்தை 1008-செபித்து கருவைப் பழத்தின்மேல் தடவி கூடையால்மூடி சற்றுநேரம் பொருத்து திறந்து காட்ட சிச்சிலுப்சழம் மாம்பழமாக மாறி யிருக்கும் மறுபடியும் மூடித்திறக்க கிச்சிலிப்பழமாகவே யிருக்கும் எல்லோரும் ஆச்சரியப்படுவார்கள்.

## 696. அன்ஞசிப்பழம் ஆரஞ்சிப்பழமாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு அன்ஞசிப்பழத்தை யெடுத்துக்காட்டி இந்த அன்ஞசிப்பழத்தை ஆரஞ்சிப்பழமாகச் செய்கிறேன் பாருங்களென்று ஜெகசாலக்கருவும் ஐங்கோலக் கருவுங்கலந்து விரலில்தொட்டு நீலகண்டரை தியானித்து கருவைப் பழத்தின்மேல் தடவி கூடையைப்போட்டு பிறகு முன்போல் கூடைப்போட்டுமூடித்திறக்க ஆரஞ்சிப்பழமாக மாறியிருக்கும் எல்லோரும் பார்த்தபிறகு முன்போல் கூடையால் மூடித்திறக்க பழையபடி அன்ஞசிப்பழமாகவே யிருக்கும் சபாஷென்பார்கள்.

## 697. ஆரஞ்சிப்பழம் அன்னாசிப்பழமாகும் ஜாலம்.

சபையில் ஒரு ஆரஞ்சிப்பழத்தை யெடுத்து இதை அன்னாசிப் பழமாக்குகின்றேன் சந்தோஷப்படுங்களென்று ஜெகசாலக்கருவும் ஐங்கோலக்கருவுங் கலந்து விரலில்தொட்டு நீலகண்டமந்திரம் 1008-செபித்து கருவை பழத்தின்மேல் தடவி கூடையால்மூடித்திறக்க அன்னாசிப்பழமாக மாறும். மறுபடியும் மூடித்திறக்க ஆரஞ்சிப் பழமாய்விடும்.

## 698. கொய்யாப்பழம் முந்திரிப்பழமாகும் ஜாலம்.

ஒரு கொய்யாப்பழத்தை யெடுத்து சபையோர்களுக்குக்காட்டி இந்தகொய்யாப்பழத்தை முந்திரிப்பழமாக்குகிறேன் பாருங்களென்று அஷ்டமாசித்துமையும் ஐங்கோலக்கருவுங்கலந்து விரலில் தீண்டி நீலகண்ட மந்திரம் 1008-செபித்து கருவை பழத்தின்மேல் தடவி கூடைபோட்டு மூடித்திறக்க கொய்யாப்பழ மாறிவிடும் முன்போல்மாத்றியுங் கொள்ளலாம்.

## 699. முந்திரிப்பழப் கோய்யாம்பழமாகும் ஜாலம்.

முன்போல் சபையில் ஒரு முந்திரிப்பழத்தை யெடுத்து அனைவருக்குங்காட்டி இது கொய்யாப்பழமாகும் விநோதத்தைப் பாருங்களென்று ஜெகசாலக்கருவும் ஐங்கோலக்கருவுங் கலந்து விரலில் தொட்டுக்கொண்டு சத்தி மந்திரத்தை 1008-செபித்து நீலகண்ட மந்தரத்தையுத் தியானித்து கருவை பழத்தின்மேல் தடவி கூடையால் மூடித்திறக்க முந்திரிப்பழங் கொம்யாப்பழ மாகிவிடும் மறுபடியும் மூடித்திறகக பழயபடி முந்திரிப்பழமாகவே யிருக்கும்.

## 700. அத்திப்பழம் ஆலம்பழமாகும் ஜாலம்.

சாலமாடுமிடத்தில் நாலு ஐந்து அத்திப்பழத்தை யெடுத்து அனைவருக்குங் காட்டி இதை ஆலம்பழமாகச் செய்யும் விநோதங்நப் பாருங்களென்று ஐங்கோலக்கருவும் அஷ்டமாசித்து மையுங்கலந்து விரலில்தொட்டு சத்தி மந்திரத்தை 1000-செபித்து கருவை பழத்தின்மேல் தெளித்து முன்போல் மூடித்திறக்க ஆலம்பழமாகத் தோற்றும்.

## 701. ஆலம்பழ மத்திப்பழமாகுஞ் ஜாலம்.

சபையில் ஆலம்பழம் நாலைந்து எடுத்துக்காட்டி இதை அத்திப்பழமாக்குகிறேன் சந்தோஷப்படுங்களென்று அஷ்டமாசித்துமையும் ஐங்கோலமுங்கலந்து சத்திமந்திரம் 1008 ஓதி கருவைப்பழத்தின்மேல்தடவ அந்த ஆலம்பழம் அத்திப்பழமாய்விடும்.

## 702. சிகப்பு குண்டுமணி வெள்ளை குண்டுமண்யாகுஞ் ஜாலம்

ஜாலமாடுஞ்சபையில் ஆழாக்கு சிகப்புகுண்டுமணியை யெடுத்து அனைவருக்குங்காட்டி இதை வெள்ளைகுண்டுமணி யாக்குகிறேன் வேடிக்கைப்பாருங்களென்று இந்திரசாலக்கருவும் ஐங்கோல்முங்கலந்து விரலில்தொட்டு சத்திமந்திரம்

1008 ஓதி கருவை குண்டுமணிமேல் ஒருதாம்பாளத்தில்போட்டு மேலேமூடிதிற ந்துகாட்ட சிகப்புமாறி வெள்ளைகுண்டுமணியாக யிருக்கும்.

### 703. வெள்ளைகுண்டுமணி சிகப்பு குண்டுமேணியாகுஞ் ஜாலம

முன்போலவே குண்டுமணியை யெடுத்து இதை சிகப்பு குண்டுமணியாக்கு கின்றேன் தமாஷ் பாருங்களென்று கருவைத்தடவி சத்திமந்திரத்தை 1008ஓதி நீலகண்டரை தியானித்து மூடித்திறக்க வெள்ளைகுண்டுமணி சிகப்பாயிருக்கும்.

### 704. ஆடு மாடாகும் ஜாலம்.

ஒரு ஆட்டைக்கொண்டுவந்து சபையோர்களுக்குக் காட்டி இதை மாடாக் குகிறேன் பாருங்களென்று சுடலைக்கருவும் ஜங்கோலக்கருவுங் கலந்துக்கொண்டு மயானருத்திரி மந்திரத்தை 1008 செபித்து ஒருவருக்குந்தெரியாது தந்திரமாக கருவை ஆட்டுக்கொம்பு அல்லது வாலிற்குத்தடவி ஆட்டைச்சுற்றிலும் கருப்புத் துணி மறைவுகட்டி சற்றுபொருத்து திறந்துகாட்ட ஆடுமாடாகத் தோணும் பார் ப்பவர்கள் உன்னை பிரமனென்பார்கள்.

### 705. மாடு ஆடாகும் ஜாலம்.

முன்போல் சபையில்நின்று ஒரு மாட்டைக்கொண்டுவந்து நிறுத்தி சபை யோர்களைப்பார்த்து முன்னே ஆடு மாடான விநோதத்தைப் பார்த்தீர்கள் இப் போது மாடு ஆடாகும் அற்புதத்தைப்பாருங்களென்று ஷெ கருவுகளைப்பூசி முன் போல் திரையிட்டுக்காட்ட மாடு ஆடாகத்தோணும் ஆச்சரியப்படுவார்கள்.

### 706. நாய் நரியாகும் ஜாலம்.

ஒரு நாயைப்பிடித்துவந்து சபையோர்களுக்குக்காட்டி இதை நரியாக்குகி றேன் பாருங்களென்று ஷெ 3 கருவையுங்கலந்து விரலில்தொட்டு குறளிமந்திர த்தை 1008 செபித்து பைரவரையும் சம்புமகாரிஷியையுந் தியானித்து நாய் நரி யாகவேணுமென்று மனதிலெண்ணி கருவைத் தந்தரமாக நாயின்நெற்றியில்பூசி மறப்புகட்டி சற்றுநேரம் பொருத்து திரையை வாங்கிப்பார்க்க நாய் நரியாக மா றியிருக்கும் பார்ப்பவர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

### 707. நரி நாயாகும் ஜாலம்.

முன்போல் நரியைப்பிடித்துக்காட்டி இதை நாயாக்குகிறேன் பாருங்களெ ன்று சுடலைக்பருவும் ஐங்கோலக்கருவுங்கலந்து விரலில்தொட்டு குறளிமந்திரத் தை 1008 செபித்து முன்போல் மூடிக்காட்ட நரி நாயாகத்தோற்றும்.

### 708. பூனை முசலாகும் ஜாலம்

ஒரு பூனையைப்பிடித்துவந்து சபையோர்களுக்குக் காட்டி இது முசலாகும் புதுமையைப் பாருங்களென்று ஐங்கோலக்கருவுடன் சுடலைக்கருவைக் கலந்து விரலில்தொட்டு மயானருத்திரி மந்திரத்தை செபித்து கருவை பூனைவாலில்பூசி திரைக்குள் சற்றுநேரம் வைத்திருந்து திறந்துகாட்ட முசலாகத்தோற்றும்.

## 709 முதல் பூனையாகும் ஜாலம்

ஒரு முசலை சபையோர்களுக்குக்காட்டி முன்போல் கருவைத்தடவி மயானருத்திரி மந்திரம் 1008 செபித்து கருவை முசலின்மேல் தடவிக்காட்ட பூனை முசலாகத்தோற்றும்.

## 710. எலி பெருச்சாளியாகும் ஜாலம்

ஒரு எலியைப்பிடித்து வந்து அனைவருக்குங்காட்டி இது பெருச்சாளியாகும் விநோதத்தைப் பாருங்களென்று அஷ்டமாசித்து மையும் ஐங்கோலமுங் கலந்து விரலில்தொட்டு சக்கலாதேவி மந்திரத்தை 1008 செபித்து விநாயகரை தியானித்து கருவை எலியின்மேல்தடவி கூடைபோட்டுமூடி சற்றுநேரம்பொறுத்து திறந்துகாட்ட பெருச்சாளி யுருவாகத் தோற்றும்.

## 711. பெருச்சாளி எலியாகும் ஜாலம்

ஒரு பெருச்சாளியைக் கொண்டுவந்து முன்போல் சபையோர்களுக்காட்டி இந்த விநோதத்தைப் பாருங்களென்று சுடலைக்கருவையும் ஐங்கோலத்தையுங் கலந்து தொட்டு மயானருத்திரியையும் விநாயகரையுந்தியானித்து கருவைபெருச்சாளிமீதுதடவி மூடி திறந்துகாட்ட எலியாகத்தோற்றும் ஆச்சரியப்படுவார்.

## 712. குதிரை கழுதையாகும் ஜாலம்

ஒரு அஸ்வத்தைப் பிடித்துவந்து நிறுத்தி அனைவருக்குங்காட்டி இது கழுதையாகும் விநோதத்தைப் பாருங்களென்று சுடலைக்கருவையும் ஜெகஜாலக்கருவையும் ஐங்கோலக்கருவையும் நன்றாய்க்கலந்து விரலில்தொட்டு வாலைமந்திரத்தை 1000 செபித்து சத்தியைதியானித்து குதிரையைப் பார்ப்போர்கண்களுக்கு கழுதையாகத் தோற்றும்படி செய்வாயென்று மனதில் நினைத்து கருவைக் குதிரைமுகத்தில் தெளித்து முகத்தை துணியால் மறைத்து சற்றுநேரம்பொறுத்து துணியை யெடுத்துவிட குதிரை கழுதையாகத்தோற்றும்-

## 713. கழுதை குதிரையாகும் ஜாலம்

ஒரு கழுதையைப் பிடித்துவந்து சபையில்நிறுத்தி இந்தக் கழுதையைரூபம் மாறுதலடையச்செய்கிறேன் பாருங்களென்று ஜெகசாலக்கருவையு :மைங்கோலக்கருவுங்கலந்து விரலில்தொட்டு குறளி குட்டிச்சாத்தானையும் வணங்கி சத்திமந்திரம் 108 செபித்து கருவை முன்போல்தடவி திறந்துகாட்ட குதிரையாகத் தோற்றும்.

## 714. கோழிவாத்தாகும் ஜாலம்

ஜாலமாடுமிடத்தில் ஒரு கோழிகொண்டுவந்து அனைவருக்குங்காட்டி இது வாத்தாகும் வேடிக்கைப்பாருங்களென்று ஐங்கோலக்கருவைக்கலந்து விரலில் தொட்டு முருகக்கடவுளையும் பிரமதேவனையும் நினைத்து கருவைக் கோழிக்கொண்டையில்வடவி கூடையால்மூடி திறந்துக்காட்ட வாத்தாகத்தோன்றும் இது வசியமந்திரமோ என்னமோவென்று மயங்குவார்கள்,

### 715. வாத்துகோழியாகும் ஜாலம்

முன்போல் வாத்தெடுத்து அனைவருக்குங்காட்டி இது கோழியாகும் ஆச்சரியம் பாருங்களென்று ஐங்கோலமும் அஷ்டமாசித்து மையுமொன்றாய்க்கலந்து விரலில் தொட்டுக்கொண்டு சத்திமந்திரத்தை 1008 செபித்து நீலகண்டர்மந்திரம் 108 செபித்து வாத்து கோழியாக வேணுமென்று மனதிலெண்ணி கருவை வாத்தின்மேல் தெளித்து முன்போல் மூடித்திறக்க வாத்து கோழியாகத்தோற்றும் கண்டவர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

### 716. கரடி புலியாகும் ஜாலம்

ஜாலமாடுமிடத்திலேனும் இன்னமெந்தவிடத்திலேனும் கரடியைப்போனிலடைத்து கொண்டுவந்து நிறுத்தி இந்த கரடி புலியாகும் விநோதத்தைப்பாருமென்று சுடலைக்கரு ஐங்கோலக்கரு ஜெகஜாலக்கரு இதுகளைக்கலந்து விரலில் தொட்டுக்கொண்டு சக்கலாதேவி மந்திரத்தை 1008 செபித்து சத்தியைதியானித்து கரடி புலியாகவேணுமென்று மனதிலெண்ணி கருவை கரடிமேல்தெளித்துபோனைசுற்றிலும் கருப்புத்துணியால் திறைகட்டி சற்றுநேரம் பொருத்து திரைவாங்க கரடி புலியாகத்தோற்றும் பார்த்தவர்கள் இது விந்தையென்று ஆச்சரியப்படுவார்கள்.

### 717. புலி கரடியாகும் ஜாலம்

முன்போல் புலியை போனிலடைத்துக் கொண்டுவந்து நிறுத்தி கரடி புலியான விநோதத்தைப் பார்த்தீர்கள் இப்போது புலி கரடியாகும் ஆச்சரியத்தைப் பாருங்களென்று முன்போல் கருவைத்தடவி வராகி மந்திரத்தை 1008 செபித்துச் சத்தியை தியானித்து புலி கரடியாகத்தோற்றவேணுமென்று திறந்துகாட்டபுலி கரடியாகத்தோற்றும்.

### 718. மான் கடம்பையாகும் ஜாலம்

மானைப்பிடித்துவந்து சபையில் நிறுத்தி இந்தமான் கடம்பையாகும் விநோதத்தைப் பாருங்களென்று ஜெகஜாலக்கரு ஐங்கோலக்கரு அஷ்டமாசித்திமை இவைகளை ஒன்றாய்க்கலந்து விரலில் தொட்டுக்கொண்டு சத்திமந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து நீலகண்டரை தியானித்து மான் கடம்பையாகவேணுமென்று நினைத்து கருவை தந்திரமாக மானின்மேல் தெளித்து மானைச்சுற்றிலுந் திரைபோட்டு மூடி சற்றுநேரம்பொருத்து திறந்துகாட்ட மான் கடம்பையாகத் தோற்றும் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள்.

### 719. கடம்பை மானாகும் ஜாலம்

கடம்பையைக்கொண்டுவந்து முன்போல்செய்து கடம்பை மானாகும்வேடிக்கையைப் பாருங்களென்று கருவுகளைத்தடவி சத்தியை தியானித்து சக்கலாதேவி மந்திரத்தை 1008 செபித்து சத்தியை தியானித்து கடம்பை மானாகவேணுமென்று மனதிலெண்ணி கருவைக் கடம்பையின்மேல் தெளித்து முன்போல்

திரைமூடி சற்றுநேரம்பொருத்து திரையைத் திறந்துமாட்ட கடம்பை மானுகத் தோற்றம் ஆச்சரியப்படுவார்கள்.

### 720. அணிப்பிள்ளை கீரிப்பிள்ளையாகும் ஜாலம்

ஜாலமாடுமிடத்தில் அணிப்பிள்ளை யொன்றை யெடுத்து அனைவருக்குங்காட்டி இந்த அணிப்பிள்ளை கீரிப்பிள்ளையாகும் விநோதத்தைப் பாருங்களென்று ஐங்கோலக்கருவையும் அட்டமாசித்து மையையும் ஒன்ருய்க் கலந்து விரலில் தொட்டுக்கொண்டு சத்தியை தியானித்து மந்தரம் ஆயிரத்தெட்டு உருசெபித்து வாலையைப்பூசித்து அணிப்பிள்ளை கீரிப்பிள்ளையாகத் தோற்றவேணுமென்று மனதிலெண்ணி கருவை அணிப்பிள்ளையின்மேல் தடவி பூமியின்மேல் வைத்து கூடையைப்போட்டு மூடி சற்றுநேரம் பொருத்து திரந்துகாட்ட கீரிப்பிள்ளையாகத்தோற்றும்.

### 721. கீரிப்பிள்ளை அணிப்பிள்ளையாகும் ஜாலம்

முன்போல் சபையில்நின்று கீரிப்பிள்ளையைப் பிடித்துவந்து அனைவருக்குங்காட்டி இந்த அணிப்பிள்ளை கீரிப்பிள்ளையான வேடிக்கைப் பார்த்தீர்கள்கீரிப்பிள்ளை அணிப்பிள்ளையாகும் விநோதத்தைப் பாருங்களென்று சடலைக்கருவை ஐங்கோலக்கருவை கலந்து விரலில்தொட்டு சக்கலாதேவி மந்திரந்தை ஆயிரத்தெட்டு உருஜெபித்து சத்தியை தியானித்து கீரிப்பிள்ளை அணிப்பிள்ளை யாகவேணுமென்று மனதில் தியானித்து கருவை கீரிப்பிள்ளையின்மேல் தடவி முன்போல் தட்டைப்போட்டு மூடி சற்றுநேரம் பொருத்து திறந்துகாட்ட கீரிப்பிள்ளை அணிப்பிள்ளையாகத் தோற்றும் ஆச்சரியப்படுவாகள்.

### 722. மயில் வான்கோழியாகு ஜாலம்.

மயிலைபிடித்து வந்து சபையில் நிறுத்தி இந்த மயில் வான்கேழியாகும் விநோதத்தைப் பாருங்களென்று ஜெகஜாலக்கருவை ஐங்கோலக்கருவை கலந்து விரலில் தொட்டுக்கொண்டு சத்தியின் மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து வாலை தியானித்து மயில் வான்கோழியாக வேணுமென்று மனதில் எண்ணி கருவைத்தந்திரமாக மயிலின்மேல் தெளித்து சுற்றிலும் திரைகட்டிமூடி சற்றுநேரம் பொருத்து திறந்துகாட்ட மயில் வான்கோழியாகத்தோற்றும் பிர்மிப்பார்கள்.

### 723. வான்கோழி மயிலாகும் ஜாலம்.

முன்போல் வான்கோழியைப் கொண்டுவந்து சபையில் நிறுத்தி சனங்களைப்பார்த்து மயில் வான்கோழியான விநோதத்தைப் பார்த்தீர்கள் இப்போது வான்கோழி மயிலாகும் அற்புதத்தை பாருங்களென்று இந்திரஜாலக்கருவையும் ஐங்கோலக்கருவையும் கலந்து விரலில் தொட்டுக் கொண்டு சக்கலாதேவி மந்திரத்தை 1008 உருஜெபித்து காளபைரவர் தியானித்து வான்கோழி மயிலாகத் தோற்றவேணுமென்று மனதில் எண்ணி கருவு வான்கோழியின்மேல் தடவி முன்போல் படுதகட்டி மூடி சற்றுநேரம்பொருத்து திறந்துகாட்ட வான்கோழி மயிலாகத்தோற்றும் ஆச்சரியப்படுவாகள்.

### 724. மைனா கிளியாகும் ஜாலம்.

மைனா கூண்டில் அடக்கஞ்செய்து சபையில் கொண்டுவந்து அனைவருக்குங்காட்டி இந்தமைனா கிளியாகும் விநோதத்தைப் பாருங்களென்று ஜெகஜாலக்கருவை ஐங்கோலக்கருவை கலந்து விரலில் தொட்டு சத்தியின் மந்திரத்தை 1008 ஜெபித்து ஜாலக்காளி தியானித்து மைனா கிளியாகத்தோற்றவேணுமென்று மனதிலெண்ணி கருவு மைனாமேல் தடவி கூண்டின்மேல் துணியைப் போட்டு மூடி சற்றுநேரம் பொருத்து திறந்துகாட்ட மைனா கிளியாகத் தோற்றும்.

### 725. கிளி மைனாவாகும் ஜாலம்.

முன்போல் கிளியை கூண்டிலடைத்து சனங்களுக்குக் காட்டி சடாலக்கருவையும் ஐங்கோலக்கருவை கலந்து விரலில்தொட்டு சக்கலாதேவி மந்திரத்தை 1008 ஜேபித்து சத்தியை தியானித்து கிளி மைனாவாகவேணுமென்று மனதிலெண்ணி கருவை கிளியின்மேல் தடவி முன்போல் மூடித்திறந்துகாட்ட கிளி மைனாவாகத்தோற்றும் சபையோர் ஆச்சரியப்படுவார்கள்.

### 726. காடை கவுதரியாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் காடையொன்று கூண்டிலடைத்து சனங்களுக்குக் காட்டி இதைக் கவுதாரியாகசெய்கிறேன் பாருங்களென்று சொல்லி ஐங்கோலக் கருவையும் அஷ்டமாசித்துக்கருவையும் கலந்து விரலில்தொட்டு சாமளாதேவி மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து ஜாலக்காளைப் பூசித்து காடை கவுதாரியாகத் தோற்றவேணுமென்று மனதிலெண்ணி கருவை காடையின் மேல்தடவி கூண்டின்மேல் துணியைப்போட்டு மூடி சற்றுநேரம் பொருத்து முடிய துணியைத்திறத்துகாட்ட கவுதாரியாகத்தோற்றும் ஆச்சரியப்படுவார்கள்.

### 727. கவுதாரி காடையாகும் ஜாலம்.

முன்போல் கவுதாரியை கூண்டிலடைத்து சபையில் கொண்டுவந்து அனைவருக்குங்காட்டி இதை காடையாக்குகின்றேதனன்று ஜெகஜாக்கருவையும் ஐங்கோலக்கருவை யுங்கலந்து விரலில் தொட்டு சத்தியை தியானித்து காலகண்டர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து கருவு கவுதாரியின்மேல் தடவிமுன்போல் மூடித்திறந்துக்காட்ட கவுதாரி காடையாகத் தோற்றும் ஆச்சரியப்படுவார்கள்.

### 728. புரு பஞ்சவர்ன கிளியாகும் ஜாலம்.

ஒரு புருவையெடுத்து அனைவர்க்குங்காட்டி இதை பஞ்சவர்ன கிளியாகச் செய்கிறேன் பாருங்களென்று இந்திர ஜாலக்கருவையும் ஐங்கோலக்கருவையும் கலந்து விரலில்தொட்டு சத்தியை தியானித்து காலகண்டர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து புருவை பஞ்வர்ன கிளியாகத் தோற்றும்படி செய்வாயென்று கருவை புருவின்மேல் புடவி முன்போல் முடித்திறக்க புரு பஞ்வர்ன கிளியாகத்தோற்றும் எல்லோரும் மகாபுதுமை என்பார்கள்.

### 729. பஞ்சவர்னக்கிளி புறுவாகும் ஜாலம்

முன்போல் சபையில் நின்று பஞ்சவர்ன கிளியைப்பிடித்துக் காட்டி இதை புறுவாகச் செய்கிறேன் பாருங்களென்று அஷ்டமாசித்து மைய்யும் ஐங்கோலக் கருவையும் கலந்து விரலில் தொட்டு சத்திமந்திரத்தை ஆயிரத்தெட்டு தரும் ஜெபித்து கருமை கிளியின்மேல்தடவி தட்டைக் கவிழ்த்து திறக்க புறுவாகத் தோற்றும். சந்தோஷப்படுவார்கள்.

### 730. நல்லபாம்ப சாரப்பாம்பாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் பழகிவைத்திருக்கும் நல்லபாம்பை கையிலெடுத்துசபையோர்க்குக் காட்டி இந்த நல்லபாம்பு சாரப்பாம்பாகும் விநோதத்தைப் பாருங்களென்று இந்திரஜாலக் கருவையும் ஜெகஜாலக் கருவையும் ஐங்கோலக்கருவை கலந்து விரலில்தொட்டு சக்திமந்திரத்தை ஆயிரத்தெட்டு தரம் ஜெபித்து நல்ல பாம்பு சாரப்பாம்பாக தோற்றவேணுமென்று மனதிலெண்ணி கருவை நல்லபாம்பின்மேல்தடவி பாம்பை பெட்டியில்போட்டு சற்றுநேரம்பொருத்து திரந்துக் காட்ட சாரப்பாம்பாகத் தோற்றும் அனைவரும் மாயாஜாலமென்பார்கள்.

### 731. சாரப்பாம்பு நல்லபாம்பாகும் ஜாலம்.

முன்போல் ஒரு சாரப்பாம்பை யெடுத்து அனைவருக்குங்காட்டி நல்லபாம்பு சாரப்பாம்பான வேடிக்கையைப் பார்த்தீர்கள் இப்போது பாம்பு நல்லபாம்பாகும் விநோதங்களைப்பாருங்களென்று இந்திர சாலக்கருவை விரலில் தொட்டுக்கொண்டு சாண்டியின் மந்தாம் 1008-செபித்து சக்கலாதேவியை தியானித்து சாத்ப்பாம்பு நல்லபாம்பாகவேணுமென்று தியானித்து கருவை சாரப்பாம்பின்மேல் தடவி முன்போல் சற்றுநேரம் பொருத்து திறந்துகாட்ட சாரப்பாம்பு நல்லபாம்பாயத் தோற்றும். பார்ப்போர் பிர்மிப்பார்கள்.

மேற்சொல்லிய சாலங்கள் ஒவ்வொன்றையுங் கூட்டி அனைவரும் பார்த்து மகிட்சியடைந்தவுடன் அப்போதுக்கப்போது பறைத்துவிடவேண்டும். ஏனென்றால் மூனேமுக்கால் நாழிகைவரைக்கும் தோக்றும் அதற்குள் தந்திரமாக வித்தைகளை காட்டி ஆடவேண்டும்.

### 732. பந்தாடும் ஜாலம்.

சாலமாடுமிடத்தில் வந்துநின்று ஒரு பந்வுதயெடுத்து சபையோருக்குக்காட்டி இந்தபந்தை ஆகாயமார்க்கமாக எரிகிறேன் ஒருபந்து அனேக பந்துகளாக விளையாடும் விநோதங்களைப் பாருங்களென்று ஜெகசாலக்கருவும் சுடலைக்கருவும் ஐங்கோலக்கருவும் ஒன்றாய்க்கலந்து விரலில்தொட்டு சத்திமந்திரத்தை ஆயிரத்தெட்டு உருசெபித்து இந்த பந்து பார்ப்போர்கண்களுக்கு ஆகாயவீதியில் அநேகம் பந்துகளாக தோற்றமாகி ஆடவேணுமென்று மனதில் எண்ணி பந்தை அனைவருக்குமுன்பாக ஆகாயமார்க்கமாக விட்டெரிய ஒருபந்து அநேக பந்துகளாக ஏழுமேலும் கிருகிரென்று விளையாடும் அனைவரும் மகா அற்புதமான வித்தை

யென்று ஆச்சரியப்படுவார்கள். அப்போது நீ மகாமாயமையைக்கையில் தடவிக் கொண்டு பந்தை கையில் பிடித்துக்கொள்ள ஒரு பந்தாகத் தேகற்றும்.

## 733. எலுமிச்சம்பழ ஜாலம்.

முன்போல் சாலமாடும் சபையில் எலுமிச்சம்பழத்தை யெடுத்து அனைவருக்குங்காட்டி பந்து எவ்விதம் விளையாடினதோ அவ்விதமாக இந்த எலுமிச்சம் விளையாடும் விநோதங்களைப் பாருங்களென்று முன்போல் கருவை விரலில்தொட்டு சக்கலாதேவி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து ஜாலக்காளை திரானித்து பந்தைப்போல் எலுமிச்சமபழம் விளையாள்வேணுமென்று மனதில் எண்ணி பழத்தின்மேல் கருவைபூசி விட்டெரிய அனேகமாக ஆடும் நீ முன்போல் மையைபூசி பழத்தைப்பிடிக்க ஒரு பழமாகத் தோற்றும் அனைவரும் அற்புதமான வித்தையென்று ஆச்சரியப்படுவார்கள்.

## 734. கூடை ஜாலம்.

சாலமாடுமிடத்தில் ஒரு கூடையெடுத்து அனைவர்க்குங்காட்டி இந்த கூடையை உங்கள் அனைவர்க்கு முன்பாக வைத்து துணியைப்போட்டு மூடி திறக்கிறேன் அந்த கூடைநிறைய பலவிதமான புஷ்பங்களும் நிறைந்திருக்கும் விநோதங்களைப் பாருங்களென்று ஜெகசாலக்கருவை விரலில்தொட்டு மந்திரம் 1008-செபித்து குட்டிச்சாத்தானை தியானித்து சற்றுநேரம் பொருத்து கூடைமேல் மூடிய துணியைத்திறந்து காட்ட பார்ப்பேர் கண்களுக்கு கூடைநியை பலவிதமான புஷ்பங்களும் தோற்றப்படும் அப்போதுயாவரும் சந்தோஷப்படிவார்கள்.

## 735. கேச்சைக்காய் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் பத்து கச்சைக்காயையெடுத்து அனைவருக்குங்காட்டி இந்த பத்துகாயையும் காதின் வழிராக உள்ளுக்குச்செலுத்தி வாயின் வழியாக வரும்படி செய்கிறேன் பாருங்களென்று கண்கட்டுமையை திலர்தமிட்டுக்கொண்டு மறைவுமையை காயின்மேல் தடவி ஜாலக்காளை தியானித்து ஒவ்வொரு காயாக வயிதுகாதின் வழியாக செலுத்துவதுபோல் தெரியும் உடனே ஒவ்வொருகாயாக எடுத்து மையைத்துடைத்து வாயில் கையை வைத்துமூடி சல் வாவா வென்று சொல்லி காயைக்கீழேபோட பார்ப்பவர்களுக்கு வாயிலிருந்து வருவது போல் தெரியும் ஆச்சரியப்படுவார்கள். ஆனால் ஒவ்வொரு காயையும் மேற்கூறியதுபோல் செய்யவேண்டும்.

## 736. இரசகுண்டு ஜாலம்.

ஜாலமாடும் சபையில் ஒரு ரசகுண்டை எடுத்து அனைவர்க்குங் க்காட்டி இந்த ரசகுண்டை காதினவழியாகச்செலுத்தி வாயின் வழியால் வரும்படிச்செய்கிறேன் பாருங்களென்று முன்போல் மை முதலானதும் பூசி செய்துக்காட்ட சந்தோஷப்படுவார்கள்.

## 737. இரும்புகுண்டு ஜாலம்.

இரும்புகுண்டு ஒன்றெடுத்து அனைவர்க்குங்காட்டி இந்தகுண்டை காதுவழியாக வரும்படி செய்கிறேன் பாருங்களென்று மேற்கூறியபடி மைமுதலானதும் தடவி சத்தியை தியானித்து செய்துகாட்ட பிர்மிப்பார்கள்.

## 738. பலகரை ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் பத்து பதினைந்து பலகரையை கையில் எடுத்து அனைவர்க்குங்காட்டி இந்த பலகரை யாவையும் காதுவழியாக செலுத்தி வாயின் வழியாக வரும்படி செய்யும் விநோதத்தைப் பாருங்களென்று முன்போல் கருவும் மையும் பலகரைகளுக்குத் தடவி மேற்கூறியபடியே செய்துகாட்ட மதிமயங்கி நிற்பார்கள்.

## 739. குண்டுமேண ஜாலம்.

மேற்கூறியவண்ணம் குண்டுமெணியையெடுத்து சபையோர்களுக்குக் காட்டி இதை காதுவழியாக வரும்படி செய்கிறேன் பாருங்களென்று முன்போல் கருவு மை முதலானதும் குண்டுமெணியின்மேல் பூசி மேற்சொன்னபடி செய்துகாட்ட இது மகா விநோதமென்று மகிழ்வார்கள்.

## 740. குழாங்கல் ஜாலம்.

முன்போல் சபையில் நின்று குழாங்கல்லு ஒன்றெடுத்து அனைவருக்கும் காட்டி இந்தக்கல்லை முனபோல் காதுவழியாக வரும்படிச் செய்கிறேன் பாருங்களென்று மேற்கூறியபடி கருவு மைமுதலானதும் தடவி தவராமல் செய்துகாட்ட சந்தோஷப்படுவார்கள்.

## 741. நீர்குட ஜாலம்

ஜாலமாடுமிடத்தில் ஓர்குடம் நீரைக்கொண்டு வந்துவைத்து அனைவரையும் பார்த்து இவ்வளவுநீரையும் காதுவழியாகச்செலுத்த வாய்வழியாக வரும்படி செய்கிறேன பாருங்களென்று முன்போல் குடத்தின்மேல் மைய்தடவி காதை குடத்தின் வாயில்வைத்து சற்றுநேரம் பொருத்து காதை குடத்தைவந்து பார்க்கச்சொல்ல நீரில்லா மலிருக்கும் மறைவுமைய்த் துடைத்துவிட்டு வாயை சற்று நேரம் வைத்திருந்துவாயை குடத்தைவிட்டு எடுத்துக்காட்ட நீர் வாய்வழியாக வந்தாற்போலும் தோற்றமாகி குடம்நிறை நீர் இருக்கும் அதைப்பார்த்த யாவரும் பிர்மித்து இது குட்டிச்சாத்தான் ஏவல் என்பார்கள்.

## 742. தீபவிநோத வித்தை

இரவில் ஒரு மைதானத்திற்சென்று ஒரு பெரிய அகண்டமொன்றெடுத்து அதுநிறைய முத்தெண்ணையை ஊற்றி அகண்டம் சுற்றிலும் பத்து பதினைந்து வத்திகள் கொளுத்தி பூமியில்வைத்து பிறகு தன்னுடன் வந்த வர்களைப்பார்த்து இந்த அகண்டவிளக்கை ஆகாயமார்க்கமாக கிளம்புபடி செய்கிறேன் பாருங்களென்று ஒருவருக்குந் தெரியாமல் ஜெகஜாலக்கருவையும் ஐங்கோலக்கருவை அஷ்டமாசித்து மையும் ஒன்றாய்க்கலந்து விரலில் தொட்டுக்கொண்டு சக்கலா

தேவி அட்சரத்தை பலமுறைசொல்லி கருவு ஒருவருமறியாமல் அகண்டத்தின் கீழேதடவி கையிலெடுத்து சாமுண்டியை கினைத்துக்கொண்டிருக்க அகண்ட தீபமானது ஆகாய்மார்க்கமாக கிளம்பி கிருகிருவென்று சுழன்று விநோதமாகத் தோற்றும் அனைவரும் பிரமித்து சந்தோஷப்படுவார்கள் ஆனுல் சாமுண்டியை ஸ்மரிப்பதை நிறுத்திவிட அகண்டம் கீழிரங்கிவரும் சாக்கிரதையாப்பிடித்துக் கொள்ளவும்.

### 743. தடாகத்துள்ளே சேபஞ்சேய்யும் வித்தை.

தண்ணீர் நிறைந்துள்ள தடாகக்கரையிற்சென்று தன்னுடன் வந்தவர் களைப்பார்த்து இந்த தடாகத்தில் மூழ்கி இரண்டுமணி நேரம்வரையிலும் உள்ளே யிருந்து ஜெபங்களை முடித்துக்கொண்டு வெளியே வருகிறேன் பாருங்களென்று கண்கட்டு மைப் பொட்டிட்டுக்கொண்டு நீலகண்டர் மந்திரத்தை ஜெபிததுக் கொண்டே தடாகஜலத்தில் கழுத்தளவாக இரங்கி நிற்கா பார்ப்போர் கண்களு க்கு குளத்தில் மூழ்கிவிட்டாற்போல் தோற்றும் மேற்சொன்ன மணிவரையிலு மிருந்து குளத்தில் மூழ்கி மைய் கலைத்துவிட்டிவர அனைவரும் ஜலபந்தனஞ் செய்தானென்று பேசிக்கொள்வார்கள்.

### 744. வேறு சர்வ வசிய ஜாலம்

வெள்ளி-ஞாயறு-திங்கள்-வியாழம் இந்த வாரங்களில் பசுநெய்யிலும் செவ் வாய் புதன்-சனி இந்த வாரங்களில் பசும்பாலிலும் புல்லுருவி மூலத்தைக்கு ழைத் திலர்தமிட்டுச்கொண்டுவர தேவர்முதல் மாளிடர்யாவரும் வசியமாவார்.

### 745. வேறு இராஜவசிய ஜாலம்

தேள்கொடுக்கு நிலபபனைவேர் அருகு வெள்ளெருக்கு காஞ்சொரி குப்ப மேனி இலவம்பிசின் ஆவாரை முசுட்டை பொன்னுங்கண்ணி பொற்றலையான் சிவனார்மூலி இவைகளை அரைத்து திலர்தமிட்டுக்கொண்டுபோக இராஜாக்கள் வசியமவார்கள்.

### 746. வேறு புருஷவசிய ஜாலம்

செங்நாயுருவி செம்முள்ளி கெஞ்சா செங்குதலை பொன்னுங்கண்ணி மயக்கி வழிமறித்தான் பினுருமஞ்சள் இவைகளை யெல்லாம் சேர்த்தரைத்து திலர்தமிட்டுக் கொள்ள புருஷர் வசியமாவார்கள்.

### 747. வேறு ஸ்திரீவசிய ஜாலம்

அரிதாரம் மயில்துத்தம் செஞ்சாந்து சவ்வாது கர்ப்பூரம் தூரமான சில மதிமயக்கி இவைகள் யாவையும் அறைத்து திலர்த மிட்டுக்கொள்ள ஸ்திரீகள் வசியமாவர்கள் ஒவ்வொர் மறந்தையும் தனித்தனியாகவு மிட்டுக்கொள்ளலாம்,

### 748. வேறு மிருகவசிய ஜாலம்

விஷ்ணு கிரந்திவேர் விஷஞ்சொல்லிவேர் காசிகட்டிவேர் காஞ்சொரிவேடு நாயுருவிவெர் மின்னிவேர் சங்கம்விதை அழிஞ்சிவிதை இவைகளைகொண்ர் வந்து அதில் தயிலமிரக்கி திலர்தமிட்டுகொள்ள சர்வ மிருகங்களும் வசியமாகும்

### 749. வேறு சாப்பவசிய ஜாலம்

பொற்றலைக் கையாந்தகரைவேர் நிலம்புரண்டிவேர் நீலிவேர் சிறுக் கீரை வேர் பொன்னாங்கண்ணி நாயுர்விவேர் தொட்டாச் சினிங்கிவேர் ஆடையொட் டிம்மருந்துகள் யாவையுங்கொண்டு வந்து தயிலமிரக்கி திலர்தமிட்டுக்கொள்ள சர்வ சர்ப்பங்களும் வசியமாகும்.

### 750. வேறு சத்துருவசிய ஜாலம்

பொற்றலைக்கையாந்த கரைவேர் வெள்ளெருக்கன்வேர் விஷ்ணுகாந்தி வேர் இவைகள் மூன்றையும் ஒன்றாய்ச்சேர்த்து ஆவின் நெய்விட்டுமைபோல றைத்து வழித்து வைத்துக்கொண்டு திலர்தமிட்டுக் கொண்டுபோக சத்துருக் கள் வந்துவணங்கு வார்கள்.

### 751. வேறு லோகவசிய ஜாலம்

நின்றால் சிணுங்கி செவ்வகத்தி நீரில்சுழலும் வண்டும் ஆவாரைவேர் கொழுந்தொட்டி குதம்பை இம்மருந்துகளை சமனிடையாக நீறத்தெடுத்து கல் வத்திலிட்டு பன்னீர்விட்டு மைபோல் அறைத்து திலந்தமிட்டுக்கொள்ள உலோ கமாகும் ஒன்றுக்கொன்று உதவிசெய்துவைக்கும்.

### 752. வசியம் 7-க்கும் தியான மூலமந்திரம்

வசியம் எட்டிற்கும் தியானம் செய்யும் மார்க்கம் எவ்விதமெனில் ஓம் ஆம் ஜெய ஜெய சீக்கிரம் வாவா அவ்வும் உவ்வும் வசிய வசிய கணபுதிசித்திக்க சுவா காயென்று 108 உரு தியானித்து திலர்தமிட அஷ்டவசியமும் சித்தியாகும்.

### 753 சர்வமோகன ஜாலம்

அல்லி அதிமதுரம் கோஷ்டம் புல்லுருவி வெண்குன்றிவிதை இவைகளை ஓரிடையாக நிருத்தெடுத்து கல்வத்திலிட்டு முலைப்பால் விட்டு வைபோல் அறை த்து திலர்தமிட்டுக்கொள்ள சர்மமும் மோகனமாகும்.

### 754. இகஜேமோகன ஜாலம்.

ஆவின்நெய் தேன் புல்லுருவிவேர் குங்குமப்பூ ஆலவிருட்சத்தின் பால் இ வைகளை ஒருமிடையாக எடுத்து கல்வத்தில் மைபோலறைத்து திலர்த மிட்டுக் கொள்ள இராஜமோகன மாகும்.

### 755. புருஷமோகன ஜாலம்.

செவ்வாமணக்கு செவ்வகத்தி சென்னயுரிவி செம்முள்ளி கஸ்தூரி ஸ்திரீ கள் வீட்டுக்குத் தூரமானசீலை இவைகள் வகைக்கு விராகனிடையாக நிருத்தெடு த்து மைபோல் அறைத்து திலர்தமிட புருஷமோகன மாகும்.

### 756. ஸ்திரீமோகன ஜாலம்.

குங்குமம் மரலிவேர் நீர்க்கொல்லி மோகச்சாலை நீலிவேர் மண்டுகம் சோட கச்சாலை செங்குன்றி இவைகளை எல்லாம் ஓரிடையாக நிறுத்தெடுத்து கல்வத் திலிட்டு பசும்நெய் விட்டரைத்து மைபோலானபின்பு வழித்துவைத்து திலர்த மிட்டுக்கொண்டு வெளியேவர ஸ்ரீமோகனமாகும்.

## 757. மிருகமோகன ஜாலம்.

வெள்ளை குண்டுமணி முத்தக்காசு கெச்சக்காய் நரியின் தலைமண்டை ஓடு இவைகள் ஓரிடையாக நிருத்தெடுத்து கல்வத்திலிட்டு முலைப்பால் விட்டு மை போல் அறைத்து வைத்துக்கொள்ளவும் திலர்த மிட்டுக்கொண்டு வெளியேவர மிருகங்கள் யாவும் மோகனமாகும்.

## 758. சொர்ன மோகன ஜாலம்.

மருதன்வேர் வெண் ஊமத்தன் வேர் நன்னாறி வேர் மருளூமத்தன் வேர் இவைகளை சரியிடையாக யெடுத்து கல்வத்திலிட்டு வெள்ளூமத்தன் சாரவிட்டு மைபோல் அறைத்து உருட்டி வைத்துக்கொள்ள சொர்ன மோகனமாகும்.

## 759. சத்துருமோகன ஜாலம்.

சென்னாயுரிவிவேர் வெள்ளை குண்டுமணி பொன்னாங்கண்ணி செங்கழனீர் சிறுபுன்னை இந்த ஐந்து தினுசையும் ஓரிடையாக நிறுத்தெடுத்து அறைத்துக் கொண்டு திலர்தமிட்டுக்கொள்ள சத்துருக்கள்யாவரும் மோகனமாவார்களு.

## 760. உலோகமோரன ஜாலம்

முல்லைவேர் வெண்கொழிஞ்சி காயம் நொச்சி கையான் தகரை விரலிவேர் சோம்பு நன்னாரி இவைகளை ஓரிடையாக நிறுத்தெடுத்து கல்வத்திலிட்டு மை போல் அறைத்து வழித்து வைத்துக்கொண்டு திலர்தமிட்டுக்கொள்ள லோகமோகனமாகும் உலகத்தாரெல்லாம் வணங்கி வசியமாவார்கள்.

## 761. மோகனமெட்டுக்கும் மூலமந்திரம்.

மோகனமெட்டுக்கும் மூலமந்திரம் ஜெபிந்திரம் விதம் எவவிதமெனில் ஹரா ஹரா ஹரி ஹரி மோகாய மோகாய பாமமோகினி இருசிப் பிரிமாங் உங் ல ல ல என்று 108-செபித்து திலர்தமிட மோகனம் எட்டும் சித்தியாகும் ஒவ்வொன்றுக்கும் மேற்கூறிய மந்திரத்தை செபிக்கவும்.

## 762. வேறுமுறை தம்பன ஜாலம்.

கருப்புமுண்டுமணிச் சதுரக்கள்ளி ஆவிளா கருத்தசெஞ்சா புரங்கொல்லி நாவடக்கி வழிமரித்தான் ஆடையொட்டி இவைகளை ஓரிடையாக நிறுத்தெடுத்து கல்வத்திலிட்டு ஆவின்நெய்விடு மைபோல் அறைத்து வழித்து வைத்துக்கொண்டு திலர்தமிட்டுக்கொள்ள தம்பனமாவார்கள்.

## 763 சுக்கில தம்பன ஜாலம்.

விஷ்ணுகிரந்திவேர் விளாம்பிசினி சிகப்புசெஞ்சா மருளூமத்தன் விதை இவைகளை ஓரிடையாக எடுத்து கல்வத்திலிட்டு மத்தனகஞ்சாவும் அவ்விடையே சேர்த்து மைபோலறைத்து திலர்தமிட்டுக்கொள்ள சுக்கிலதம்பனமாகும்.

## 764. ஆயுத தம்பன ஜாலம்.

சூரிவேர் ஸ்ரீகள் தாரமானசிலை பொன்முசுட்டைவேர் ஆவிரை பச்சைவாழைமரத்தின்வேர் பேயன்தண்டு பச்சைப்பாம்பு ருத்திரன்மூலி என்றுவழங்கும் இரண்டும் இவைகளை யெல்லாம் ஓரிடையாக நிறுத்தெடுத்து மைபோலரைத்து திலர்தமிட்டுக்கொள்ள உலகவாயுதங்கள் யாவும் தம்பனஞ் செய்யலாகும்.

## 765. மிருக தப்பன ஜாலம்.

பச்சையோணான் ர் அழிஞ்சிவிதை இருள்வலிமூலி நன்னாரி பேய்பீர்க்கன் வேர் இவைகளையெல்லாம் ஓரிடையாக நிறுத்தெடுத்து பசுநெய்யுந்தேனும் விட்டரைத்து மைபோலானபின்பு வழித்து வைத்துக்கொண்டு திலர்தமிட மிருகங்கள் யாவும் தம்பனமாகும்.

## 766. ஜல தம்பன ஜாலம்.

கல்லுருவிவேர் வன்னிக்கட்டுக்கொடி நின்றல் சிணுங்கி நிலம்புரண்டி சுடலையெலும்பு முடக்கத்தான் இவைகளையெல்லாம் ஒரு இடையாக நிறுத்தெடுத்துமைபோலறைத்து வழித்துவைத்துக்கொண்டு திலர்தமிட ஜலஸ்தம்பனமாகும்.

## 767. அக்கினி தம்பன ஜாலம்.

சங்கன்வேர் குமரிவேர் தாமரைக்கிழங்கு குப்பைமேனிவேர் வெள்ளைக்காளாம்வேர் சுண்டைவேர் செவ்வகத்திவேர் செருங்கடி வட்டத்துத்தி ஓரிலைத்தாமரை வேலிப்பருத்தி சதுரக்கள்ளி மர்தர் மாதவிடாயான சீலை இவைகளை ஓரிடையாக நிறுத்தெடுத்து நெய் தேன்விட்டு மைபோலறைத்து வழித்துவைத்துக்கொண்டு திலர்தமிட அக்கினி தம்பனமாகும்.

## 768. தேவ தம்பன ஜாலம்.

கொத்தான்வேர் கொழிஞ்சிவேர் நிலவாகைவேர் ஆவின்வேர் இவைகளை ஓரிடையாக நிறுத்தெடுத்து கல்வத்திலிட்டு மைபோலறைத்து வழித்தெடுத்து வைத்துக்கொண்டு திலர்தமிட தேவ தம்பனமாகும்.

## 769. சர்ப்ப தம்பன ஜாலம்.

சிறியாநங்கை ஆவிலா முசுமுனுக்கி இரண்டும் நாகவல்லி ஆத்திவேர் செவ்த்வாமணக்கு செவரொட்டி கருங்குண்டுமணி இவைகளை ஓரிடையாக நிறுத்தெடுத்து மைபோலறைத்து வைத்துக்கொண்டு திலர்தமிட சர்ப்பஸ்தம்பனமாகும்.

## 770. தம்பன மேட்டிற்கும் மூலமந்திரம்.

தம்பனமெட்டுக்கும் மூலமந்திரம் செபிக்கும் விதம் எவ்விதமெனில் ரிங் வங் சிங் லங் மங் என்றும் மறுபடியும் மங் லங் வங் லங் யங் என்றும் லங் தம்பயா தம்பயா அரே அரே மிர்சிய நீலகண்டரூபி ரசம்ரூபி ஆதியானர்தி தம்பன பாராயணி ஐயும் கிலியும் சுவாகாஎன்று லட்சம் உருசெபிக்க சித்தியாகும்.

## 771. சர்வவுச்சாடன ஜாலம்.

தடையத்தான் பாம்புகண்ணி சாத்திரபேதி கோட்டம் சதுரக்கள்ளி இருவரை ஓட்டிவைத்தான் புழுதியிலிருக்கும் நவ்வி நாய்மயிர் கழுதைப்புட்டை இவைகளைச்சேர்த்து அறைத்து மைபாலானபின்பு வழித்தெடுத்து வைத்துக்கொண்டு திலர்தமிட சர்வமும் உச்சாடனமாகும்.

## 772. மிருகவுச்சாடன ஜாலம்.

நரிமிரட்டிவேர் இருவரைமிரட்டிவேர் கழுதையின்புட்டை புலைச்சியைச் சுட்ட சாம்பல் பொன்னுங்கண்ணி செங்கழநீர் இவைகளை ஓரிடையாக நிறுத்தெடுத்து கல்வத்திலிட்டு மைபோலறைத்து வழித்து திலர்தமிட்டுக்கொள்ள சர்வமிருகங்களும் உச்சாடன்மாகி ஓடும்.

## 773. சத்துரு உச்சாடன ஜாலம்.

செவியின்வேர் கள்ளியின்வேர் மதிமயக்கிவேர் யாமுத்தான் காக்கையின் கூண்டு வேம்பின்வேர் சுடலைக்கருவு தூரமான ஸ்திரீயின் சீலை இவை ஓரிடையாககூட்டி மைபோலறைத்து உபயோகப்படுத்த சத்துரு வுச்சாடனமாகி ஓட்டிவிடும்.

## 774. தேவ உச்சாடன ஜாலம்.

குமரன்புட்டை கழுதையின்மலம் ஸ்திரீதூரமானசீலை அரிசு இவைகளைச் சேர்த்து சாம்பலாக்கி விபூதியில் கலந்து நெற்றியில் இட்டுக்கொள்ள தேவவுச்சாடனமாகி பதியைக்குலைத்து ஓட்டிவைக்கும் கணங்கள் பூதங்கள் தேவதைகள் உச்சாடனமாகும்.

## 775. விஷ உச்சாடன ஜாலம்

நீலிவேர் அனலிவேர் மாவிலிங்கம்வேர் ஒன்பது நிமுள்ள பாம்புகளின் ஊனும் நேர்வாளம் இவைகளைக்கூட்டி மைபோல் அறைத்து வழித்தெடுத்து சிமிளில் வைத்து பூசைசெய்யும் மந்திரமாவது லங் மங் என்று 108 செபித்து மையையுபயோகப்படுத்த விஷ உச்சாடனமாகும்.

## 776. ஸ்திரீ உச்சாடன ஜாலம்

குப்பைகேனிவேர் கௌதும்பைவேர் மந்தியின் முதுகெலும்பு தாயைக் கொன்றான் தேள்கொடுக்குச் செடியின்வேர் மாதர்கள் வீட்டுத்தூரமான சீலை மதிமயக்கி இவைகளை ஓரிடையாக நிறுத்தெடுத்து கல்வத்திலறைத்து திலர்தமிட ஒட்டியமாதர்களை கலைக்கும் உச்சாடனமாகும்.

## 777. சர்வவியாதி உச்சாடன ஜாலம்

நாய்காந்தை திரிகடுகு சித்திரமூலம் மதிமூலி மிளகு குளவித்தம் மிளகாய் இவைகளொட்டுவியாதிகளை உச்சாடனம்செய்யுங் கருவை உபயோகபடுத்தவும்.

## 778. உச்சாடனமேட்டிற்கும் மூலமந்திரம்

உச்சாடன மெட்டுக்கும் மூலமந்திரம் செபிக்கும்வித மெவ்விதமெனில் ஆம் ஓம் குரோங் குச்சாடு அரங் அரங் ரா ரா சிக்கிரம் உச்சாடாயா ஆதிவயிரவி முருங் தூளி தூளி தூக்கு தூக்கு அருணி அருணி ஆங்காராடப் அகோரரூபி சுவாகா என்று ஆயிரத்தெட்டு உருசெபித்துவர உச்சாடனமெட்டும் சித்தியாகுகும்.

## 779. பில்லி வஞ்சனை சூனியங்கள் முதலானதிற்கும் மந்திரம்

கொன்றை செங்கழனீர் கோஷ்டம் வெண்குண்டுமணி மாடப்புருவின் எச்சம் விந்தும் பொன்னுங்கண்ணி இவைகளை எலுமிச்சம் பழச்சார்விட்டு மைபோலறைத்து வைத்துக்கொண்டு ஓம் பரிகினை சாபனை தேகுதேகு கிங் ரங் சித்திரரூபி சிஷ்டபரிபாலினி வங் ரங் வாங்கு வாங்கு வாங்கு உருளு உருளு கோரோதகனி தித்திரதகனி ரரிட்டா ஓடுவோடு உங் உங் எங் எங்கும் ஐயும் சுவாகா என்று ஆயிரத்தெட்டு உருசெபிக்க சித்தியாகும்.

## 780. சர்வபூத ஆக்ருஷ்ண ஜாலம்

பாதரிவேர் முல்லைவேர் காக்காணம்வேர் கோழிப்பிச்சு காக்காணங்குருவி சிகப்பு செப்பைத்தை உப்பு சுண்டைவேர் நிலநாகம் இவைகளை ஒன்ருய்ச்சேர்த்தரைத்து மைபோலர்னபின்பு உபயோகப்படுத்த சர்வ ஆக்ருஞ்ஷம் சித்தியாம்.

## 781. இராஜ ஆக்ருஷ்ண ஜாலம்

தலைச்சுருள் நீர்முள்ளி சத்திச்சாரணைவேர் ஆந்தைக்கண் கல்லுருவி செம்பூலா இவைகளை ஓரிடையாகசேர்த்து அரைத்துமைசெய்து வைத்துக்கொண்டு உபயோகப்படுத்த ராஜராஜாக்களும் ஆக்ருஞ்ண மாவார்கள்.

## 782. புருஷ ஆக்ருஷ்ண ஜாலம்

சிறுபுன்ன விஷ்ணுகாந்தி சிறுவேர் கொத்தான் குருச்தொட்டி வசம்பு குளவிந்தம் காக்கைநீர் பல்லுருவி இவைகளையெல்லாம் ஒன்ருகச்சேர்த்து மைசெய்து உபயோகப்படுத்த புருஷ ஆக்ருஷணமாகும்.

## 783. ஸ்திரீ ஆக்ருஷ்ண ஜாலம்

ஆடையொத்தி புன்னை கொன்றை உப்பு அரணையினுடையவால் புருவின் எச்சம் நாகப்பாம்பின் சட்டை இவைகளை ஒன்ருய்க்கூட்டி மைசெய்து உபயோகிக்க மிருகஜாதிகளெல்லாம் ஸ்திரீ ஆக்ருஷணமாகும்.

## 784. மிருக ஆக்ருஷ்ண ஜாலம்

நன்னரிவேர் அடரி குப்பைமேனி சிறுகீரைவேர் கொன்றை பொன்னுவரை அண்டம் கஸ்தூரி மஞ்சள் புருவினெச்சம் இவைகளையறைத்து மைசெய்து உபயோகப்படுத்த மிருக ஜாதிகளெல்லாந் தொடரும் ஆக்குருஷண மாகும்.

### 785. தேய்வ ஆக்ருஷ்ண ஜாலம்

குப்பைமேனிவேர் சிறுபுன்னைவேர் மூலைப்பால் கொன்றை சிவனார்வேம்பு நாயுருவிவேர் மருளூமத்தன் இவைகளைச் சேர்த்து மைசெய்து உபயோகப்படுத்த தெய்வ ஆக்குருஷணமாகும்.

### 786. லோக ஆக்ருஷ்ண ஜாலம்

தொட்டால்வடடி வெள்ளெருக்கு கலப்பைக்கிழங்கு பால்குரண்டி சிறு புன்னை ஐங்கோலக்கருவும் புருவினெச்சம் இவைகளைச்சேர்த்து மைசெய்து உபயோகப்படுத்த உலோக ஆக்குருஷணமாகும்.

### 787. ஆக்ருஷ்ண மேட்டிற்கும் மூலமந்திரம்

ஆக்ருஷண மெட்டுக்கும் மூலமந்திரம் ஜெபிக்கும்விதம் எவ்விதமெனில் மாகாளி வைரவி முக்கண்ணி ஆக்குருஷண நூளி ஆனந்தவல்லி நீலி நீலி யகவதி ஜெயஜெய மாட்டடா வெசயா வெசயா ஆகருஷணு யாரங் குங் கிலுங் விங் கிமடி கிருடி யீம் யீம் லா லா லங் லங் நங் நங் பரா பரா ரா ரா சுசி சுசி சுவாகா என்று ஆயிரத்தெட்டு செபிக்க ஆக்ருஷணம் எட்டும் சித்தியாகும்.

### 788. சர்வபேதன ஜாலம்

கோட்டான்முட்டை யழிபண்ணிகூடும் இருவர்களுடைய மடி குருவி செம்பருத்தி வெள்ளைக்கொழுஞ்சி செவ்வலரி தட்டான்கன்னி நெடு ஆலன் தலை யிலாடி இவைகளைச்சேர்த்து மைசெய்து உபயோகப்படுத்த சர்வமும் வேதனமாகும்.

### 789. இராஜபேதன ஜாலம்

கோழியவரை காக்கைகூடு தேள்முதுகின் முள்ளெலும்பு சிந்தில் தும்பை வலியன் முட்டை காஞ்சுரை பச்சோந்தி இவைகளைமைசெய்து உபயோகப்படுத்த இராஜ இராஜக்களும் பேதனமாவார்கள்.

### 790. புருஷபேதன ஜாலம்

சோதும்பைச்செடியை இரவில்கண்டு பிடுங்கிவந்து பச்சைமுளைத்தான் கருவழித்தானிவையும் பகைவர்களுண்ணும் வாய்ப்பருக்கையும் நச்சுபல்லு பெருந்தும்பை இவைகளை கருசெய்து உபயோகப்படுத்த புருஷர்கள் பேதனமாவார்கள்.

### 791. ஸ்ரீதிரீபேதன ஜாலம்

பொன்னுங்கண்ணி செங்கழனீர் தாயைச்கொன்றுன்மூலி மடையன் குடியணைத்தான்காந்தல் பெருந்தும்பை கலையலைத்தான் காக்கைகூடு கருந்தண்டு இவைகளைச்சேர்த்து மைசெய்து உபயோகப்படுத்த மாதர்கள்மனத்தை முறித் தோட்டும் பேதனமாகும்.

### 792. மிருகபேதன ஜாலம்

ஜீவன்கருங்குன்றி எட்டி முசுட்டை கழுகொம்பு கூகை கருங்காக்கைமண்டையோடு மூசுருமுட்டை விஷங்கள் வளத்தி பதியலைத்தான் சாற்றைவிட்டு மைபோல் அறைத்து வைத்துக்கொண்டு உபயோகப்படுத்த மிருகங்களையெல்லாம் கலக்கியோடும்படியாகச்செய்யும் மிருகபேதனமாகும்.

### 793. தேவபேதன ஜாலம்

கழுதையின்குளம்பும் அதின்கூடையும் கழுதைவிட்டையும் பாதரிவேர் மாவிலிங்கம்வேர் பூகந்தனை அடைத்தான் கக்சாக்குருவி சிவனி வித்து இவைகளைச்சேர்த்துமைசெய்து உபயோகப்படுத்த தெய்வ பேதனமாகும்.

### 794. அக்கினிபேதன ஜாலம்

மத்தாளி செவ்வகத்தி ஆலங்கொழுந்து சுண்டைவேர் மரைக்கிழங்கு துத்திவேர் பச்சையோணன் கொத்தான்வித்து குப்பமேனிவேர் செங்குவளை ஓரிலைத்தாமரை இதுகளை ஒன்றாய்ச்சேர்த்து மைசெய்து உபயோகப்படுத்த அக்குனிபேதனமாகும்.

### 795. உலோகபேதன ஜாலம்

நாசசெலி நச்சுப்பல்லி வேப்பமரத்தில்கட்டிய காக்கையின்கூடு பச்சை ஓணன் இந்திரகோபம் சுண்டைவேர் தும்பைவேர் வரைபூச்சி மாதர்கள் மாதவிடாயான தீட்டுசீலை இவைகளை கொண்டுவந்து ஒன்றாய்ச்சேர்த்து மைசெய்து உபயோகப்படுத்த லோகபேதனமாகும்.

### 796. பேதனமேட்டிற்கு மூலமந்திரம்

பேதனம் எட்டுக்கும் மூலமந்திரம் செபிக்கும்விதம் எவ்விதமெனில் அரகர சிவநமாதிரிபுரதகணி தேவி நாரணி செந்தாமரையுயாத்தாள் பேதனமாம் ஜரிட்டபார்வையாளே பேதகி நீலி முக்கண்ணி பரங்டாங் டுங் டுங் சாரூபி ஆயிபிரத்தியங்கிரே ஜெய ஜெய பேசையா சிங் சிங் யங் லங் மங் மங் யா யா சுவாஹா என்று ஆயிரத்தெட்டு உருஜெபித்து மைய் உபயோகப்படுத்த பேதனம் எட்டும் சித்தியாகும்.

### 797. சர்வமாரண ஜாலம்

செந்தம்பை சிவந்தபூச்சி எழுமுள்ளு மூக்கன் காக்காமுட்டை குத்தான் மத்தான்வேர் இதுகளை உபயோகப்படுத்த சர்வமாரணமுமாகும்.

### 798. அரசமாரண ஜாலம்

அரசன்வேர் புரசன்வேர் அருணி இவைகள் வகைக்குக்கழஞ்சி ஒன்றும் கொங்கன் மூலை காத்தியன் குலமந்து மரமஞ்சும் ஓரிதழ் தாரையும் மாண்டமனிதனுடைய பல்லும் மண்டையும் இவைகளைச்சேர்த்து கருவிரக்கி உபயோகப்படுத்த அரசர் மரணமாகும்.

### 799. சத்துருமாரண ஜாலம்

நஞ்சு புங்கு ஐங்காயம் காகத்தின்தலை வஞ்சகமுடைய குலமும் வலிவும நிந்து அதிகாரியாக யிருப்போர்களுக்கும் கொழிஞ்சிவிஷம் கொங்கன்மூலை இவைகளைச்சேர்த்து மைய்செய்து உபயோகப்படுத்த வஞ்சகரை அருக்கும் சத்திருக்கன் மாரணமாவார்.

### 800. சர்வபூதபசாசுமாரண ஜாலம்

நச்சுப்புல்லு கழுதைக்குளம்புகழுதைக்கண் கடுகு முருங்கைவித்து கழுதை சடைபன்றியின் விட்டை கருநாபி கன்னு ஐங்காயம் இவைகளைகொண்டுவந்து ஒன்ருய்ச்சேர்த்து மைசெய்து உபயோகப்படுத்த சர்வபூதமும் சர்வபசாசுகளும் மாரணமாகும்

### 801. சர்வஜீவஜெந்துங்களின் மாரணஜாலம்

தும்மட்டிவேர் குழந்தையின் பித்து நகதந்தம் கல்லொட்டிமதிமயக்கிகருநாபி சொல்மயக்கி பிணமயக்கி இவைகளை கொண்டுவந்து ஒன்ருகச்சேர்த்து மைசெய்து உபயோகப்படுத்த சர்வ ஜீவஜெந்துக்களும் மாரணமாகும்.

### 802. சர்வவிஷமாரண ஜாலம்

குப்பமேனிவேர் நிலிவேர் கள்ளிவேர் வாளம் புலாவ்நாரி மாவிலிங்குவேர் அழுஞ்சி காஞ்சொரி கருநொச்சி கார்த்திகைவேர் சித்திரமூலம் இவைகளை கொண்டுவந்து ஒன்ருய்ச்சேர்த்து மைசெய்துபயோகப்படுத்த சர்வவிஷமும் நீங்கும்.

### 803. சர்வதேவ மாரண ஜாலம்

எள்ளெண்ணெய் மனிதன் தலைமண்டை ஓடு காக்கையின் எச்சம் புருவின் எச்சம் மயிக்கல்லா மாணிக்கம் லபைமிரட்டி தேவாங்கு பச்சைவோணன் அரிதாரம் இவைகளை எல்லாம் ஓரிடையாக நிருத்து மைசெய்து உபயோகப்படுத்த சர்வதேவ மரணமாகும்.

### 804 சர்வரிஷிமாரண ஜாலம்

கொத்தான் வித்து ஐங்கோட்கரு புருவின் பித்தும் எச்சமும் எட்டிவித்து களிங்குருவி வெள்ளிமருட்டி கல்மருட்டி காக்கை ரத்தம் இவைகளை கொண்டுவந்து ஒன்ருகச்சேர்த்து மைபோலரைத்து வழித்துதலர்தமிட்டுக்கொள்ள சர்வரிஷிகளும் மாரணமாவார்.

### 805. மாரணமெட்டிற்கும் மூலமந்திரம்

மாரணமெட்டுகுகும் மூலமந்திரம் ஜெபிக்கும் வித மெவ்விதமெனில் மாரி பகவதி அம்பாள் திருசூலி டாகினிபே சாடு சாடு அய்யா அய்யா அரசர் மாணி ஆயி சீபோ தேவி என்று ஆயிரத்தெட்டு செபிக்க மாரணமெட்டும் சித்தியாகும்.

### 806. பாதாளந்தோற்றும் ஜாலம்

மஞ்சன் ஜாதிக்காய் வனவித்து தண்ணீர் விட்டான் கிழங்கு தும்பையான் தகரை பசுவின் கண் இவைகளை கொண்டுவந்து ஓரிடையாக நிருத்தெடுத்து கல்

வத்திலிட்டு சித்தாமணக்கு எண்ணெய்விட்டு மைபோல் அறைத்து இந்தமையை பத்திரப்படுத்தி வைத்துக்கொண்டு அஞ்சனம் போட்டுபார்க்க பாதாளம் முழு மையுந்தோற்றும்.

## 807. பூதகணங்கள்தோற்றும் ஜாலம்

தண்ணீர்தேற்றி கௌதும்பை குப்பைகுரைவிரை பச்சைகுளவிந்தம் காக் கைகண் இவைகள் கொண்டுவந்து ஒரிடையாக நிருத்து ஒன்றாகச்சேர்த்து கல் வத்திலிட்டு வெண்ணீர்விட்டு மைபோல் அறைத்து வழித்து சிமிளில் வைத்துக் கொண்டு அஞ்சனம்போட்டுபார்க்க கண்ணில் பூதகணங்கள் தோற்றும்.

## 808. துலதாரத்திலுள்ள தேவாகள்தோற்றும் ஜாலம்

ஈசலின் இறகு சிறுகீரைவேர் ஆடுதிண்ணாப்பாளை காக்காயின் நஞ்சுபித் தம் குரங்கின் மண்டை இவைகளை கொண்டுவந்து ஆவின் நெய் விட்டு அறை த்து மைபோல் செய்து வைத்துக்கொண்டு அஞ்சனம்போட்டுப் பார்க்க துலதா ரமுள்ள தேசங்களெல்லாந்தோற்றும்.

## 809. சலத்திலுள்ளவைகள் தோற்றும் ஜாலம்

கோசம் பச்சையோந்தின்பித்தும் கண்ணும் சீழ்க்காய் நெல்லி நரியோட்டு கையான்தகரை இவைகளை கல்வத்திலிட்டு தேன்விட்டுமைபோல் அறைத்துவை த்துக்கொண்டு அஞ்சனம்போட்டுபார்க்க சலத்திலிவைகளெல்லாந்தோற்றும்

## 810. உலகத்திலுள்ள குறிமை தோற்றும் ஜாலம்

கூகையினுடைய கண்ணிம் பித்து இரச்சியும் தக்காளி புன்னைவாகைஇவை களின்வேர் கையான்தகரைவேர் காட்டின்வேர் நாகனை அழைக்கும்வேர் தும் பைவேரும் இவைகளைக் கொண்டுவந்து மைபோல் அஞ்சனம் போட்டு பார்க்க உலகிலுள்ள குறிமைகள்யாவும் தெளிவாகத்தோற்றும்.

## 811. நினைத்தவைதோற்றும் ஜாலம்

பூனைவணங்கிவேர் கிலுகிலுப்பை வேர் ஒரிலைத்தாமரைகீழ்காய் நெல்லி வேர் ஆடுதிண்ணாப்பாளைவேர் தும்பைவேர் செங்கழுநீர் கௌதும்பை இவை களை ஒரிடையாக நிருத்து கல்வத்திலிட்டு மைபோல் அறைத்து வைத்துக்கொ ண்டு அஞ்சனம் போட்டு பார்க்க ஒதேது நினைக்கின்றமோ அவைகளெல்லாந் தோற்றும்.

## 812. பரவை அஞ்சனம்

நன்றாய்பழுத்த பழாப்பழத்தின் கொட்டை பூமியமிர்தம் புத்துதேனும் சேர்த்து மைபோல் அறைத்து வைத்துக்கொண்டு நெற்றியில் திலர்தமிட்டுக் கொள்ள பரவைகள் யாவுந்தோற்றும்.

## 813. எடனை ஜாலம்

கொற்றான் கொழிஞ்சி வன்னை புன்னை வெள்ளாமணக்கு எத்தார்மூலிகரு ங்கண்ணி செம்பூத்தின் எச்சம் புறாவின் இறகு நற்றாமரை நூல்ஜாதிலிங்கம்

இவைகளை ஓரிடையாகச்சேர்த்து மைசெய்து உபயோகப்படுத்த மாதரும் அரசரும் எடனையாகும்.

## 814 இராஜ எடனை ஜாலம்

குருஞ்சா கருங்குன்றி புனத்தின்கம்பு லிங்கம் அரிதாரம கோஷ்டம் இவைகளை மயானத்தில் கொண்டுபோய் ஜெபஞ்செய்து மையை உபயோகப்படுத்த இராஜ எடனையாகும் மையை முதலிலேயே செய்துக்கொள்ளவேண்டும்.

## 815. புருஷ எடனை ஜாலம்

திருகுகள்ளி வெள்ளை காக்கணன் செமமுள்ளி செங்கொழிஞ்சி தகரை ஆறை கோஷ்டம் சுக்குறம் இவைகளை ஓரிடையாக நிறுத்தெடுத்து மைபோலரைத்து வழித்துவைத்துக்கொண்டு உபயோகித்து வரபுருஷ எடனையாகும்

## 816. ஸ்திரீ எடனை ஜாலம்

சிகப்பு சித்திரமூலம் ஆமணக்கு கோஷ்டம சிறுநீர் ஞாயினைக்கொன்றுன் மன்தின்னும்பாமபு இவைகளை ஓரிடையாக ஒக்கச்சேர்த்து மை செய்து உபயோகப்படுத்த தலஞ்செய்யும் மாதராகினும் எடனையாகும்.

## 817. மிருக எடனை ஜாலம்

பூனைக்காலிவேர் செங்கத்தாரி அருகின்வேர் முத்தக்காசு சல்வி இருவகை ஒட்டி தொட்டி நாயின் ஊன் இவைகளை ஒன்றுகச் சேர்த்து மைசெய்து உபயோகப்படுத்த மிருக எடனையாகும்.

## 818. தேவ எடனை ஜாலம்

கருங்காக்கையின் கண் திறகுகள்ளி செங்கத்தாரி வெண்காக்கணம்வேர் குப்பைமேனிவேர் வழிமரித்தான் தொட்டாசிணுங்கி பன்றிரத்தம் நாரைரத்தம் இவைகளை ஓரிடையாகச்சேர்த்து மைசெய்து உபயோகப்படுத்த பிசாசுமுதல் தேவர்களும் எடனையாவார்.

## 819. உலோக எடனை ஜாலம்

சிவமடக்கும்வேர் கள்ளிகொத்தான் அம்மைகோவின் மறைவுமை பன்றி நெய் இவைகளை மைபோலரைத்து வழிந்துக்கொண்டு உபயோகப் படுத்த உலோக எடனையாகுமென மேலோர் கூறுகின்றனர்.

## 820. சர்வபூத எடனை ஜாலம்

காட்டு கிலுகிலுப்பைவேர் ஆடுதிண்ணுப்பாளைவேர் கீழ்காய்நெல்லிவேர் சிறுகீரைவேர் தையாந்தகரைவேர் சிவட்டையாடி மாண்டவனுடைச மண்டையோடும்பல்லும் ஒன்றுய்கூட்டி மைசெய்துபயோகப்படுத்தசர்வபூத எடனையாம்

## 821. சர்வபூத எடனை மூலமந்திரம்

சர்வபூத எடனை மூலமந்திரம் செபிக்கும்வித மெவ்விதமெனில் ஓம் காட்டேரி சாமுண்டி ஆத்தாள் காமரூபி அங் அங் நாரி நாரி எந்து எந்து எகையா

எசையா அவடே அவடே அர ரார அம்மை சிங் சிங் சிங் வங் வங் சர்வ எடனே
சுவாகா என்று ஒருலட்சமுருசெபிக்க சர்வபூத எடனேயும் நொடியில்சித்தியாம்

## 822. அஷ்டகாயம் எட்டிற்கும் சக்கரத்தின் உயிரெழுத்து

உலோகவசிய சக்கரத்திற்கு உயிரெழுத்து அகாரமாகும் உச்சாடன சக்க
ரத்திற்கு உயிரெழுத்து தகாரமாகும் தம்பனசக்கரத்திற்கு உயிரெழுத்து பகார
மாகும் எடனே சக்கரத்திற்கு உயிரெழுத்து உகாரமாகும் இவ்விதமாக அஷ்டகர்
மங்களையும் அறிந்து வகாரத்தில் அறிந்துப்பார்க்கில் சக்கரத்தில் அடைத்தது
மூலமாகத் தோற்றம்.

## 823. வசியங்களாகுந் திசைகள்

ஞாயர் வசியம் திங்கள் மோகனம் செவ்வாய் எடனே பேதனம் புதன் தம்
பனம் வியாழம் உச்சாடனம் சனிக்கு மாரணம் வெள்ளிக்கு ஆக்குருஷ்ணம்
இவ்விதமாக அஷ்ட கர்மங்களுக்கும் அறிந்துக்கொள்ளவும்.

## 824. வசியமாகுந் திசைகள்

கிழக்கிற்கு மோகனம தெற்கிற்கு மாரணம் மேற்கிற்கு உச்சாடனமாகும்
வடக்கிற்கு பேதனமாகும் எடனேக்கும் கன்னியாராசிதிக்கு தென் கிழக்கிற்கு
தம்பனம் வாய்வுமூலைக்கு ஆக்ருஷ்ணமாகும் ஈசானியுத்திற்கு சகலமர்மமுமாம்
இவ்வாறறிந்துசெய்ய சித்தியாகும்.

## 825. கல்லெறிகுட்டி வித்தை

நஞ்சுண்டு இறந்துபோனவனை சடலையில் தகனஞ்அசய்வதைப் பார்த்துக்
கொண்டிருந்து அந்தக்கருவை கொண்டுவந்து அதைவிரலில் தொட்டுக்கொண்டு
மந்திரங்களனைத்தையும் மறவாமல் 1008 செபித்து எதிரியினுடைய வாசல்
நினையாத விடத்தில் யருவை தடவிவிட்டுவர மனிதர்கள் கையினால் வாரியெறி
வதுபோல் கல்லுகள் அநேகங்கோடிவந்து விழும் அப்போது அந்தமனையில் வா
சஞ்செய்வோரெல்லாம் பிரமித்து நாவரண்டு இதுபாரோ ஏவல்செய்தார்களெ
ன்று ஏங்குவார்கள். அந்தக்கருவை கழுவிவிட்டால் கல்விழுவது நின்றுவிடும்.

## 826. கெருடவசிய வித்தை

தெருடன் வசியமாக சொல்லும் மந்திர மென்னவெனில் எவோநவவே
என்றுசொல்ல கெருடப் பட்சியானது எதிர் நோக்கிவரும் சிவோ கிலீயுமென்
றுசொல்ல கருடனானது அரவத்தை தூக்கிக்கொண்டு ஆகாயமார்க்கமாகச் செல்
லும் ஆவோ நாவோ என்றுசொல்ல அரவம் அவ்விடத்திற்குப்போகும் வாவோ
நவ்வி என்றுசொல்ல கருடப்பட்சியானது மயங்கிநிற்கும்.

## 827. மிருகவசிய வித்தை

மிருகங்கள் வசியமாகச் சொல்லும் மந்திரங்க ளென்னவெனில் சி ஓ என்
றுசொல்ல நேரிட்ட மிருகங்கள்யாவும் சினைத்திடும் அங் ஐ என்றுசொல்ல மிரு
கங்கள் ஓ தங்கி விலகிப்போகும் அய்யா என்றுசொல்ல மிருகங்கள் யாவுமாடும்.

## 828. அரவ உச்சாடன வித்தை

உம்-எ-ஒ-என்று ஓத அரவமானது நிற்கும் அம்-எ-ஒ-என்று ஓதிட அரவங்கள் ஆடும் நம்-கிலியும் என்று ஓதிட அரவங்களின் வாயைக்கட்டி டும்-வம்-யா-யா-ஒன்றோதிட வந்து எதிரில் நின்ற அரவங்களெல்லாம் ஓடிப்போகும் சியாம் ஊ என்று ஓதிட அரவங்கள் பயந்து ஒதுங்கிப்போகுங் கிலியுமென்று ஓதி-அரவங்கள் வாயில்ரத்தங்கக்கும் நாடி-வா என்று ஓத அரவங்களெல்லாம்நகரும்.

## 829. சர்வ விஷங்கள் நீங்கும் வித்தை

சர்வ விஷங்களும் விட்டுநீங்க நங்-சிங்-எதறு செபிக்கவேண்டும் சேர்வாள பருப்பில் விஞ்த்தைக்கலந்து அங்-ஊங்-என்று செபிக்க விஷமேரி மாண்டவன் பிழைத்துக் கொள்வான் பட்டவன் பிழைக்க வேண்டுமோகில் கிலியு மென்று செபிக்கவேண்டும்

## 830. கார்த்திகை வீரியார்ச்சுன மந்திரம்

கார்த்திகை வீரியார்ச்சுன மந்திரம் செபிக்கும்வித மெவ்விதமெனில் ஓம்-ஆம்-ஸ்ரீயும்-கிலியும் கார்த்தவீரியார்ச்சுன சுவாகா என்று லட்சமுருசெபித்து பூசைசெய்து பத்து பிராமணுளுக்கு அன்னம் படைக்க சித்தியாகும் நினைத்த படிக்கெல்லாம் செய்யும்.

## 831. நரசிங்க மந்திரம்

நரசிங்கமந்திரம் செபிக்கும்விதம் எவ்விதமெனில் ஒங் சிங் வகமுகா ஓம்ஓம் கடித்து தொடுத்து சுற்றி கண்டுபிடித்து அறைவாரைப்போல் பிசாசுபேய்கள் பொடிப்பட்டோட நரசிங்காராஜ வானே ஸ்ரீம் கிலீம சுவாகா என்று லட்சம்உரு செபித்து தர்ப்பணஞ்செய்து வோமம் வளர்த்தி அன்னம் •படைத்து பூசைசெய்ய சித்தியாகும்.

## 832. ஆனைவசிய ஜாலம்.

மேற் கூறிய நரசிங்கமந்திரத்தை செப்புதகட்டிலெழுதி பூசையில்வைத்து லட்சம் உருசெபித்து தகட்டையெடுத்து குலிசமாடி கட்டிக்கொண்டு ஆனை முன்செல்ல யானை வணங்கி வருவதுடன் இஷ்டம்போல் நடக்கும்.

## 833. மிருகங்களை வசியமாக்கும் ஜாலம்.

மேற்சொல்லிய நரசிங்கமந்திரத்தை சரீயத்தகட்டிலெழுதி பூசையில்வைத்து லட்சம் உருசெபித்து தகட்டை குலிசமாடிக் கட்டிக்கொள்ள மிருகங்கள் கண்டவுடன் வீரிட்டோடும் அழைத்தால் அருகில் வரும் சொன்னபடிக்கெல்லாம் செய்யும்.

## 834. பாழடைந்தமனை விருத்தியாகும் ஜாலம்.

மேற்கூறியபடி நரசிம்ம மந்திரத்தை எட்டிப்பலகையில் எழுதி பூசையில் வைத்து லட்சம் உருசெபித்து அந்த பலகையை பாழடைந்தவீட்டில் தெருவாசாலின் உள்புரமாக சுவற்றில் பதியவைக்க வேண்டும் அப்படிசெய்துவைக்க நா

ளுக்குநாள் அவ்வீட்டிலுள்ள அஷ்ட நிரகங்களும்போய் பிசாசுபூதம் முதலான வைகளுந் தொலைந்து வீடு செழிப்படையும்.

## 835. செந்நெல் விருத்தியாகும் ஜாலம்.

மேற்கூறியபடி நரசிம்ம மந்திரத்தை பொன்தகட்டில் எழுதி அதின்மேல் ஐங்கோலக்கருவை பூசி பூசையில் வைத்து லட்சம்உருசெபித்து செந்நெல்விளை யும் பூமியில்கொண்டு போய் ஈசான்னிய மூலையில் புதைக்க ஒவ்வொரு கதிர் முழம் நிகளமாகும் ஒங்சி வளர்ந்துவரும் எழையான குடும்பம குபேரசம்பத்தாக வோங்கிவளரும்.

## 836. பேயோட்டும் வித்தை

ஒருதாம்பாளத்தில் விபூதியைப்போட்டு அதைப்பரப்பி அதின்கமற்கூறிய நரசிம்ம மந்திரத்தை எழுதி குடங்கொளுத்தி வைத்து லட்சம் உருசெபித்து அந்த விபூதியை பேய்முதலானது பிடித்திருப்பவர்களின வாயில்கொஞ்சம்போ ட்டு சிரசில் கொஞ்சம்போட்டு மந்திரத்தை ஜெபித்துக்கொண்டேயிருக்க ஆடாத பேய்களெல்லாமாடும் ஓடாதபேய்களெல்லாமோடும்.

## 837. பயம்நீங்கும் ஜாலம்

மேற்கூறிய நரசிங்க மந்திரத்தை காரீயத்தகட்டிலெழுதி தன்னுடைய பெ யரையும் அதில் எழுதி பூசையில்வைத்து லட்சம் உருஜெபித்து குலிசமாடி கட் டிக்கொண்டு எந்த தீவாந்திரங்களிலேனும் நாடுநகரங்களிலு மச்சமில்லாமல் போகலாம் ஒருதுன்பமுமணுகாது.

## 838. விபூதிபிடிக்கும் ஜாலம்.

ஒரு அறையை பசுஞ்சாணமிட்டுமெழுகி தீபங்கொளுத்தி வைத்து ஊது வத்தியை கொளுத்தி இடது உள்ளங்கையில் விபூதியைப்போட்டுக்கொண்டு அந்த விபூதியைப் பிசைந்துக்கொண்டே நரசிம்ம மந்திரத்தை 1008 ஜெபித்து பிறகு அந்த விபூதியை இரவில் பயந்தவர் அந்தி சந்திவேளையில் பயந்தவர் இன் னும் பலவிதத்திலும் பயந்தபேர்களுக்கு இந்த விபூதியைக்கொடுக்க உடனே பய ந்தெளிந்து உடம்புதெளிவு கொடுக்கும் ஆனால் எந்தெந்த காரியத்தை குறித்து மந்திரமெழுதும்போது அதில் அந்த பெயரையு மெழுதிவைக்கவேண்டும்.

## 839. பூதமோட்டும் ஜாலம்.

பூதமோட்டு மந்திரம் செபிக்கும் விதமெவ்விதமெனில் ஓம் பவாழ்குருநா தா ஓம் படு சுவாகா என்று லட்சம் உருஜெபித்து தர்ப்பணஞ்செய்து வோமம்வள ர்த்தி அன்னம் படைத்து பூசைபோட்டு ஒரு ஜாமம் நின்றுதியானிக்க சித்தியா கும் நினைத்தபடி எல்லாம் செய்யும் பிசாசுமுதல் பூதங்களெல்லாம் பறந்தோடும்.

## 840. மண்ணை கடலையாக்கும் ஜாலம்

ஜாலமாடும் சபையில் வந்து நின்று தந்திரமாக மகாயமையும் ஐங்கோலக் கருவையும் ஒன்றாய் கலந்து கையில் பூசிக்கொண்டு குட்டிச்சாத்தான் உச்சாடன

மந்திரத்தை ஜெபித்துக்கொண்டே அங்குள்ள மண்ணை ஒருபிடி அள்ளி பொரிஞ்ச கடலையாகவேணுமென்று சபையோர்கள் முன்போட அப்போது வருத்த கடலைபோல் உண்டாகும் அது குட்டிச் சாத்தானுடைய வேலையாகும் அந்தகடலையையு தின்னலாம் சபையோர் ஆச்சரியப்படுவார்கள் இவ்வாராகவே எவகை தானியங்களையும் சபையோர்கள் பிரமிக்கும்படியாகச் செய்துகாட்டலாம்.

## 841. கெண்டபேரண்ட ஜாலம்.

கெண்டபேத்ண்ட மந்திரம் செபிக்குங் விதமெவ்விதமெனில் ஆம்ஓம்அகோரபிரபல காண்ட சிங்காவா வியாக்கிரக வாகா சாகாயகாகாக்ருடு பல்லர் அஷ்டவச்சரா சங்குசக்ரா தாதுப்பிரானு மாவிதாகமா கெஜபட்சே எர்தநசிம்மா கற்பரந்தா அக்னிவிலா ஊதாப்புயந்திரத்திற் சில வச்சிரமான குண்டாதரவஷ்டிக உக்கிர மூர்த்தி பட்சமாருத மாருதமச்சாந்த உத்தண்டவ வஸ்திரசர்ப்பா கெண்டபேரண்டா சித்தியாவா என்று மாலை ஓதி பின்பு மூலமந்திரம் ஓம் இரிம ஸ்ரீயும் கிலியும கெண்டபேரண்ட நரசிங்கா மகா சர்வ சத்துரு நாச என்று அந்திவேளையில் தவராமல் லட்சம் உருசெபித்து பூசை முதலானதும்போட்டு நூறுபேர் பிராமணாளுக்கு அன்னம்படைத்து கெண்டபேரண்ட சித்தியாகும் பின்பு சகல சித்துமாடலாம்.

## 842. பிர்மதரிசனை ஜாலம்.

ஜாலமாடு மிடத்தில் வந்து நின்று சபை யோர்களைப் பார்த்து இதோ அந்தி ரத்தில் பிர்ம தெரிசனை காட்டு கிறேன் பாருங்க ளென்று மகாமாய மையை விரலில் தொட்டு கெண்ட பேரண்ட மந்தி ரத்தை லட்சம் உரு ஜெபித்து அடே கெண்ட பேரண்டா பிரம லோகம் போய் பிரம தேவனை அழைத்து வாடாவென்று மூன்றுதரம்சொல்ல ஆகாயாமார்க்கத்தில் பிரமதேவன் அன்ன வாகனாருடராய் பிராகாசமுடன் தோற்றுவார்பார்ப் போர்கள்யாவரும் அகமகிழ்ந்து ஆச்சரிபப் படுவார்கள்.

## 843. மகாவிஷ்ணுதரிசனை ஜாலம்

முன்போலவே சபையோர் களைப்பார்த்து பிரமதெரிசனங்கண்டு களித்தீர்கள் இப்போது மகாவிஷ்ணுவின் தரிசனம் காட்டும் விநோதத்தைப் பாருங்களெனறு ஐங்கோலக்கருவு விரலில்தொட்டுக்கொண்டு கெண்டபேரண்ட மந்திரத்தை ஆயிரத்தெட்டு உருஜெபித்து அடே கெண்ட போண்டா வைகுந்தத்திற்குச்சென்று மகாவிஷ்ணுவை அழைத்தோடிவாடா என்று மூன்றுதாஞ்சொல்ல ஆகாயவீதியில் கெருடவாகனாருடராய் லட்சுமிசமேதாராய் தோற்றப்படும் பார்ப்போர்களும் மதிமயங்கி திகைத்து சுவாமியைப்பார்த்து ஆனந்திப்பார்கள்.

## 844. ருத்திரதரிசனை ஜாலம்.

முன்போலவே சபையோர்களைப்பார்த்து பிரமதேவன் மகாவிஷ்ணு இருவர் தரிசனமும் கண்டுகளித்தீர்கள் இதோ ருத்திரமூர்த்தி தரிசனம் பாருங்களென்று ஜெகஜாலக்கருவை விரலில் தொட்டுக்கொண்டு கெண்டபேரண்ட மந்

திரத்தை லட்சம் உரு ஜெபித்து அடே கண்டபேரண்டே கொடுமுடிகைலாசத்
திற்குப்போய் ருத்திரமூர்த்தியை அழைத்தோடி வாடாவென்று மூன்றுதாஞ்
சொல்ல ஆகாயவீதியில் பரமசிவன் பார்வதிதேவியுடன் இடபவாகனருடராய்
எழுந்தருளிமறைவார் அவரை பலரும் தரிசித்து பரமானந்த மடைவார்கள்.

## 845. தேவர்கள்தரிசனை ஜாலம்.

முன்போலவே சனங்களைப் பார்த்து மும்மூர்த்தி களின்தரிசனம் கண்டு
களித்தீர் இப்போது இந்திராதி தேவர்களின் தெரிசனம் காண்பிக்கிறேன்
பாருங்களென்று இந்திரஜாலக்கருவு விரலில்தொட்டுக்கொண்டு மந்திரத்தைலட்
சம் உரு ஜெபித்து அடே கெண்டபேரண்டா இந்திரலோகஞ்சென்று இந்திரா
திதேவர்களை அழைத்தோடி வாடாவென்று மூன்றுதாஞ்சொல்ல ஆகாய வீதி
யில் தேவர்கள் தோற்றப்படுவார்கள் கண்ட சனங்களை கண்பூத்துக் களிப்படை
வார்கள். ஆனால் இந்த ஜாலங்களை இரவில்செய்து காட்டவேண்டும்.

## 846. சித்தர்கள்தரிசனை ஜாலம்

ஜாலமாடுமிடத்தில் சபையோர் களைப்பார்த்து இப்போது சித்தர்களின்
தரிசனம் காட்டும் விநோதங்களைப் பாருங்களென்று ஐங்கோலக்கருவு விரலில்
தொட்டுக்கொண்டு கெண்டபேரண்ட மந்திரத்தை லட்சம் உரு ஜெபித்து
அடே கெண்டபேரண்டா கானகத்தில் தபசுபுரியும் சித்தர்கூட்டங்களை அழைத்
தோடி வாடாவென்று மூன்றுதாஞ்சொல்ல சபைநிறைய சித்தராகத்தோற்று
வார் பார்ப்பவர்கள் பிரமிப்பார்கள்.

## 847. பூதபேதங்களை அடக்கும் ஜாலம்

ஐங்கோலக்கருவு கையில் தொட்டுக்கொண்டு கெண்டபேரண்ட மந்திரத்
தை ஆயிரத்தெட்டு உரு ஜெபித்து அடேகெண்டபேரண்டா பூதபேதங்களைப் பிடித்
துக் கட்டிக்கொண்டு வாடாவென்று மூன்றுதாஞ் சொல்ல அப்படியே கட்டிக்
கொண்டு வருவான்.

## 848. பிரமராட்சதனை அடக்கும் ஜாலம்

ஜெகஜாலக்கருவும் அஷ்டமாசித்துமையும் கலந்து விரலில் தொட்டு
கெண்டபேரண்ட மந்திரத்தை ஆயிரத்தெட்டு உரு ஜெபித்து அடே கெண்ட
பேரண்டா பிரமராட்சதனைப் பிடித்துக்கொண்டுவாவென்றால் உடனே கொண்
டுவந்து காட்டுவான்.

## 849 சூனியம் வைப்பு நிவர்த்தி ஜாலம்

சூனியவைப்பில் மெலிந்து துன்பப்படுவோர்களை குந்தவைத்து ஐங்கோலக்
கருவை விரலில்தொட்டுக்கொண்டு ஒருதாம்பளத்தில் விபூதியைப்போட்டு சாம்
பிராணி வத்தியை கொளுத்திவைத்து கெண்டபேரண்ட மந்திரத்தை 1008
ஜெபித்து அந்த விபூதியை நோயாளர் தேகமாதியந்தமும் பூசி உச்சியிலும் வாயி
லும்போட பிணிநீங்கி சுகப்படுவார்கள் உன்னை பெரிய மந்திரக்காரனென்றும்
புகழ்வார்கள்.

### 850. சத்துருக்களால் நேர்ந்த் துன்பங்களை நிவர்த்திசெய்யும் ஜாலம்

சத்துருக்களால் நேர்ந்த துன்பங்களை விலக்கவேண்டில் ஐங்கோலக்கருவ விரலில் தொட்டுக்கொண்டு கெண்டபேரண்ட மந்திரத்தை லட்சம் உரு ஜெபித்து அடே கெண்டபேரண்டா என்பேரில் எதிர்த்த சத்துருக்களை தும்சப்படுத்து எனறதும் சுகமுண்டாகச்செய்யும்.

### 851. மிருகங்களை கட்டிவரும் வித்தை.

ஜெகஜாலக்கருவை விரலில் தொட்டுக்கொண்டு கெண்டபேரண்ட மந்திரத்தை 1008 ஜெபித்து கருவு பானையோட்டில் தடவி ஈசானிய மூலைபக்கம் விட்டெறிந்து அடே கெண்டபேரண்டா கானகத்திற்கேகி மிருகக்கூட்டங்களைப்பிடித்துக் கட்டிக்கொண்டு வாடாவென்று மூன்றுதரஞ்சொல்ல அதன்படியே செய்வான்.

### 852. விஷஜெந்துக்கள் விலகும் ஜாலம்.

சர்வ விஷஜெந்துக்களும் விலகியோடவேண்டில் கெண்டபேரண்ட மந்திரத்தை ஜெபித்துக்கொண்டு இரவிலேனும் பகலிலேனும் வனங்கள வஞந்திரங்களிலேனும் மலைகுகைகளிலேனும் இன்னும் எந்தவிடங்களிலேனும் மேற்சொன்ன மந்திரத்தை செபித்துகொண்டே போகக்கண்ட சர்வவிஷஜெந்துக்களும் எதிர்நில்லமல்மிரண்டு பயந்து ஒளிக்கும்.

### 853. நினைத்தவையெல்லாம் சித்தியாகும் ஜாலம்.

கெண்டபேரண்ட மந்திரத்தை ஜெபித்து சித்தியானவுடன் மேற்கூறய ஜாலங்களும் பலிதமாகும் இந்த மந்திரத்தை ஜெபித்து எதைகொண்டுவரும்படி நினைக்கின்றையோ அதைக்கொண்டுவந்து எதிரில் வைக்கும் ஜாலமாடுஞ்சபையிலும் வெகுவீரமொடு செய்துகாட்டதாம் சனங்கள் முதலானவர்களும் உன்னைப்புகழ்ந்து கொண்டாடுவார்கள்.

### 854. யானை சபையில்தோன்றி உடனே மாயமாய் மறையும் ஜாலம்.

ஜாலமாடுஞ் சபையில் வந்து நின்று சபையோர்களைப்பார்த்து இதோ ஒரு ம்நயானை தோற்றமாகி உடனே மறைந்து போகும்படி செய்கிறேன் பாருங்களென்று ஐங்கோலக்கருவை விரலில்தொட்டு பலகரையில் தடவி கெண்டபேரண்டை மந்திரத்தை லட்சம் உறு செபித்து அந்த பலகரையை குபேரமூலை பக்கம் சரேலென விட்டெறிந்த அடே கெண்டபேரண்டா யானையைப் பிடித்துக்கொண்டுவந்து சபையில்நின்று பார்ப்போர்களுக்குக்காட்டி மறைத்துவிடவேண்டும் என்று மூன்றுதரஞ்சொல்லி மந்திரத்தை செபிக்க அப்படியே கொண்டுவந்துகாட்டி மறைத்துவிடும் அப்போது உன்னை மகா மந்திரவாதியென்று மதித்துப் புகழ்வார்கள்.

## 855. சபையில் நின்றோர்கள் மிரண்டோட புலியைக்காட்டி மறைக்கும் ஜாலம

சபையோர்களைப் பார்த்து இதோ புலிவரும் புதுமைகளைப் பாருங்களென்று ஐங்கோலக்கருவை விரலில்தொட்டு கெச்சக்காய்மீதில் தடவி கெண்டபேரண்ட மந்திரத்தை லட்சமுருசெபித்து காவை வாயுமூலை பக்கம் விட்டெறிந்து அடே கெண்டபேரண்டா புலியைக்கொண்டுவந்து காட்டி மறைத்துவிடென்று மூன்றுதரஞ்சொல்லி மந்திரத்தை செபித்துக்கொண்டே யிருக்க புலியானது சபையில் வீரிட்டி ஓடிவந்தவுடனே மறைந்துபோம் அப்போது சபையோர்கள் மிரண்டு மூலைக்குமூலை ஒடுவார்கள்.

## 856. கரடியை காட்டிமறைக்கும் ஜாலம்

ஜாலமாடுஞ்சபையில் நின்று சபையோர்களைப்பார்த்து காடிவரும் விநோதத்தைப் பாருங்களென்று ஜெகஜாலக்கருவை விரலில்தொட்டுக்கொண்டு பேரண்டமந்திரத்தை லட்சமுருசெபித்து அட கண்டபேரண்டா காட்டில்வாழுங் காடியைப் பிடித்துவந்து இந்த சபையோர்களுக்குக்காட்டி உடனே காட்டில் கொண்டுபோய் விட்டுவிடடாயென்று மூன்றுதரஞ்சொல்லி மந்திரத்தை செபித்துக்கொண்டேயிருக்க குபீலென்று கரடியானது சபையில்தோன்றி மறையும்

## 857. சிட்டுக்குருவி விநோத ஜாலம்

சபையோர்முன் ஒரு கூடையை யெடுத்துக்காட்டி மேஜைமேல்வைத்து இதோ இந்த கூடையை இந்தமேஜைமேல் கவிழ்த்துதிறக்கிறேன் இதற்குள்ளிருந்து சிட்டுக்குருவிகள் பறந்தோடும் விநோதங்களைப்பாருமென்று அவ்ஷடமாசித்து மையும் ஐங்கோலக்கருவுங் கலந்து விரலில்தொட்டுக்கொண்டு கெண்டபேரண்ட மந்திரத்தை லட்சமுருசெபித்து கருவை கூடையில்தெளித்துகூடைமேல் துணியைப்போட்டு மறைத்து அடே கெண்டபேரண்டா இந்தக்கூடை நிறைய சிட்டுக்குருவிகளைக் கொண்டுவந்து ரொப்பி மறுபடியும் கொண்டுபோடாவென மூன்றுதாஞ்சொல்லி கூடைமேல்மூடிய துணியைதிறக்க சிட்டுக்குருவிகள் குபீலென்று பறந்து ஆகாயத்தில் மறைந்துபோய்விடும்.

## 858. ஒட்டை விநோத ஜாலம்.

ஜாலமாடுஞ் சபையில்வந்து அங்குள்ளவர்களைப்பார்த்து ஒட்டையை யிந்த சபைமுன் வரும்படிச்செய்யும் விநோதத்தைப் பாருங்களென்று ஐங்கோலக் கருவும் அவ்ஷடமாசித்துமையுங் கலந்து விரலில் தொட்டுக்கொண்டு கெண்டபேரண்ட மந்திரத்தை லட்சஞ் செபித்து கருவை ஒரு சிறிய கல்லில் தடவி அடா கெட்டபேரண்டா ஒட்டையைக்கொண்டுவந்து சபையிலுள்ளோர் பார்க்கும்படி காட்டி மறையடாவென்று மூன்றுமுறைசொல்லி கல்லை மேற்குத்திக்காக விட்டெறிய உடனே ஒட்டையானது அனைவரும் பிரமிக்கும்படியாக சபையில் தோன்றி மறைந்துவிடும்.

### 859. பனமரத்தை அழைப்பிக்கும் ஜாலம்

கெண்டபேரண்ட மந்திரத்தை லட்சமுருசெபித்து பனமரத்தைப் பிடுங்கிக்கொண்டு வரவேண்டுமென்று மனதில் தியானிக்க உடனே பனமரந்தோன்றும் சபையோர் ஆச்சரியப்படுவார்கள்.

### 860. சுரக்காய் வேடிக்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் ஒரு சுரக்காயை எடுத்து அனைவருக்குங் காட்டி இந்த சுரக்காய் தானய் வெடிக்கும் விநோதத்தைப் பாருங்களென்று ஜெகசாலக்கருவை விரலில்தொட்டு குறளிமந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து சுரக்காய்மேல் கருவை தந்திரமாகத் தெளிக்க உடனே படாலென்று வெடிக்கும் ஆச்சரியப்படுவார்கள்.

### 861. பூசினிக்காய் வேடிக்கும் ஜாலம்.

சபைமுன் ஒரு பூசனிக்காயை எடுத்துக்காட்டி சுரக்காய் வெடித்த விநோதத்தைப் பார்த்தீர்கள் பூசனிக்காய் வெடிக்கும் வேடிக்கையைப் பாருங்களென்று முன்போல்கருவை விரலில் தொட்டுக்கொண்டு குறளிமந்திரத்தை ஆயிரத்தெட்டுசெபித்து கருவை விரலின்மேல் தெளிக்க உடனே படாலென்றுவெடிக்கும்.

### 862. பாராங்கல் சபையில்வந்து விழுந்து மாயமாய் மறையும்ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் கெண்டபேரண்டனைத் தியானித்து லட்சமந்ரஞ்செபித்து அடா கெண்டபேரண்ட மலையிலுள்ள ஒரு பெரியபாறையை தூக்கிக்கொண்டுவந்து இந்த சபையில்போட்டு உடனே மாயமாக மறைந்துவிடுவாயென்று மூன்றுதரஞ்சொல்லி மந்திரத்தை செபித்துக்கொண்டேயிருக்க உடனே கல்லானது தபாலென்று வந்து சபையில்விழுந்து உடனே மறைந்துபோகும்.

### 863. முள்ளின்மேல் படுக்கும் ஜாலம்.

எந்த இடத்திலாவது வைக்கோலைப்பரப்பி அதின்மேல் ஐங்கோலக்கருவைத்தெளித்து கண்கட்டுமையைத் திலர்தமிட்டுக்கொண்டு சக்கலாதேவிமந்திரத்தை 1008 செபித்து ஜாலக்காளை தியானித்து இந்த வைக்கோலின்மேல் படுத்துக்கொள்ளுகிறேன் முள்ளின்மேல் படுத்திருப்பதுபோல் தோற்றச்செய்வாயென மந்திரத்தைச் செபித்துக்கொண்டே வைக்கோலின்மேல் படுத்துக்கொள்ளவும் பார்ப்பவர்களெல்லாம் முள்ளின்மேல் படுத்துக்கொண்டிருக்கிறானென்று உன்னைப் பலவாருகப் புகழ்வார்கள்.

### 864. கிரியை நகரச்செய்யும் ஜாலம்.

கிரியினருகிற்சென்று தன்னுடன் வந்தவர்களைப் பார்த்து இந்த கிரியை நகர்ந்து வரும்படியாகச் செய்கிறேன் பாருங்களென்று ஜெகஜாலக்கருவையும் ஐங்கோலக்கருவையும் கலந்து ஒரு சிறிய கல்லில்தடவி கையில் பிடித்துக்கொண்டு கெண்டபேரண்ட மந்திரத்தை லட்சம் உருஜெபித்து கல்மலையின்மேல் விட்டெறிந்து அடே கெண்டபேரண்டா இந்த மலைபார்ப்பவர்கள் கண்களுக்கு

நகர்ந்து வருவதுபோல் தோற்றமாகி உடனே எதாஸ்தானத்தில் இருப்பது
போல் காட்டவேணுமென்று மூன்றுதரம் சொல்லி மந்திரத்தை ஜெபித்துக்
கொண்டேயிருக்க கிரியானது நகர்ந்துக்கொண்டு வருவதுபோல் பார்ப்போர்
கண்களுக்குத்தோற்றும் அப்போதவர்கள் இது என்னபுதுமை என்று பேசிக்கொ
ண்டிருக்கும்போதே எதாஸ்தானத்தில் நிற்கவேண்டுமென்று கெண்டபேரண்
டபேரண்டனை நினைக்க கிரி தன்னிலையில் போய் நின்றுவிடும்.

## 865. மாயாவிநோத ஜாலம்.

ஜாலமாடும் சபையில் ஒரு கோழிமுட்டையை எடுத்து அனைவருக்குங்கா
ட்டி இந்த முட்டையை மேசையின்மேல்வைத்து மூடிவிடவேண்டும் சற்றுநே
ரம் பொருத்து மூடிய கூடையைத் திறந்து காட்ட முட்டை மாயமாகப்போய்
விட்டதுபோல் தோற்றும் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள் இப்போது மாய
மாக மறைந்தபோன முட்டையை வரும்படியாகச் செய்யு வேடிக்கையைப்
பாருங்களென்று ஒருவருக்குந் தெரியாமல் மேற்படி முட்டையின்மேலிருக்கும்
மறைவுமையை நன்றாய்த் துடைத்துவிட்டு முன்போல்மூடி சற்றுநேரம்பொரு
த்து திரந்துகாட்ட முட்டையானது இருக்கும் சந்தோஷப்பட்டு புகழ்வார்கள்.

## 866. எதிரியை வணங்கச்செய்யும் ஜாலம்

உனக்கு எதிரியினுடைய பெயரை செப்புத்தகட்டில் மாறி எழுதி உச்சா
டன மையை அதின்மேல்பூசி கெண்டபேரண்ட மந்திரத்தை ஆயிரத்தெட்டு
உருசெபித்து எதிரியின் வீட்டின் இரப்பில் சொருகிவிட்டுவா உடனே எதிரி
யானவன் பயந்து நடுநடுங்கி உன்காலில்வந்து விழுவான்.

## 867. ஒஞ்ஞனையனுப்பி நல்லபாம்பை அழைப்புக்கும் ஜாலம்

தாளி ஓலைத்துண்டில் ஓம் ஸ்ரீம் இரிம் சவ்வும் என்று எழுதி பின்பு ஓநல்ல
பாம்பெ இந்த சீட்டைகண்டவுடன் ஓடிவருவாயென்று கீழே எழுதி ஜெகஜால
கருவையும் சுடலைக்கருவையும் ஐங்கோலக்கருவையும் கலந்து சீட்டின்மேலெ
ழுதி சக்கலாதேவி மந்திரத்தை 1008 செபித்து அம்மணி இந்த சீட்டை கீழே
போடுகிறேன் ஒஞ்ஞன் வந்து அதை யெடுத்துக்கொண்டு போய் நல்லபாம்பு இந்த
சபைக்குவரும்படியாக செய்யவேண்டும என்று மனதில் நினைத்து மந்திரத்தை
செபித்துக்கொண்டே சீட்டை கீழேபோட உடனே ஒஞ்ஞனது வந்து அந்த
சீட்டை வாயில் கவ்வியெடுத்து புத்தின்மேல் வைத்தவுடன் புத்திலிருக்கும் நல்ல
பாம்பானது பயந்து சரேலென்று சபைக்குவரும் சொன்படியெல்லா செய்யும்
எல்லோரும் ஆச்சரியப்படுவார்கள் பின்பு பாம்பை தன்னிருப்பிடம் போவெ
ன்று சொல்ல உடனே சரேலென்று போய்விடும் உன்னை மந்திரவாதி என்று
புகழ்வார்கள்.

## 868. வர்த்தகம் விர்த்தியாகச்செய்யும் வித்தை

சிறியாநங்கை என்னும் செடியைக் கண்டுபிடித்து ஆதிவாரமும் கூடிய தின
த்தில் மஞ்சள் நூல் காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து பூசைபோட்டு வே

ரைப்பிடுங்கிவந்து அந்த வேரின்மேல் அஷ்டமாசித்து மையைதடவி பூசையில் வைத்து காளபைரவர் மந்திரத்தை 1008 செபித்து வேரையெடுத்து குலிசமாடி கட்டிக்கொள்ள எந்த வர்த்தகம் செய்தாலும் விருத்தியடையும் லாபம்பெருகும்.

## 869. உத்தியோக விர்த்தி வித்தை

குப்பமேனிச்செடிக்கு திங்கட்கிழமைதினம் கன்னியா லக்கினத்தில் மஞ்சள் நூல் காப்புகட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து பூசைபோட்டு மறுவாரம் சென்று வேரைப்பிடுங்கிவந்து அந்த வேரின்மேல் ஐங்கோலக்கருவைபூசி பூசையில்வைத்து நீலகண்டர்மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து வேரை எடுத்துக் குளிசமர்டிகட்டிக்கொண்டு எந்த இடத்திற்குபோனாலும் நன்மையானவார்த்தை பேசுவார்கள் உத்தியோகமு நாளுக்குநாள் விருத்தியாகும்.

## 870. ரசமணி வித்தை

பாதரசத்தை சுத்திசெய்து நாகபபாம்பின் வாயில்வார்த்து அதனோடு முப்பூவும் கழஞ்சிபோட்டு பாம்பின் வாயைக்கட்டி மேலே தூக்கிக்கட்டி அதின்கீழ் பானையை வைக்கவும் பாம்பானது அழுகிவரும் ரசமானது கட்டிமணியாக்விழுக அதை எடுத்து உபயோகப்படுத்த சகல தேவதை முதலானதும் வசியமாகும் நினைத்தவை எல்லாங்கூடும்.

## 871. வேதாள வித்தை

ஜாலமாடும் சபையில் நின்று சபையோர்களைப்பார்த்து இதோ இரண்டு மாயா ஸ்திரீகளை அழைப்பிக்கின்றேன் பாருங்களென்று ஐங்கோலக் கருவை விரலில் தொட்டுக்கொண்டு வேதாளமந்திரத்தை 1008 ஜெபித்து கருவை ஒரு சிறிய கல்லில்தடவி குபேரமூலைபக்கம் விட்டெறிந்து மந்திரத்தை தியானித்து கொண்டேயிருக்க உடனே ஆடையாபரண அலங்கிர்தமுடன் எவவர்ணமுடைய இரண்டு ஸ்திரீள் தோற்றப்படுவார்கள் அதை கண்ட சபையோர் முதலானவர்களும் பிர்மித்துப் பார்த்துக்கொண்டே யிருக்கும்போது மாயமாய் மறைந்துவிடுவார்கள் பார்ப்போர்கள் மெய்மறந்து இதுமகா புதுமை என்று மகிழ்வார்கள்.

## 872. கானகவித்தை

கானகத்தினிடமாகச்சென்று தன்னுடன் வந்தவர்களைப்பார்த்து இந்தவனத்திலுள்ள மிருகசாதிகளை அழைப்பிக்கின்றேன் பாருங்களென்று செகசாலக் கழுவையும் உச்சாடன கருவையும் ஐங்கோலக்கருவையும் ஒன்றாய்கலந்து மாத்திரைக்கோலிஓ பூசி கெண்டபேரண்ட மந்திரத்தை முந்த 1008 செபித்துஅடே கெண்டபேரண்டா இந்த வனல்வாழும் மிருகக் கூட்டங்களை அழைத்துவாடா வென்று மந்திரத்தை செபித்துக்கொண்ரோ மாத்திரைக்கோலைகாட்டி அழைக்க ஒத்வொரு கூட்டங்களும் அணியணியாக கூடிக்கொண்டு வீரிட்டோடிவரும்சொன்ன படிக்கெல்லாம் செய்யும் போவென்றால் தங்கள் தங்களிருப்பிடம் போக் சேர்ந்துவிடும் அதைகண்ட அனைவரும் அலண்டு மிரண்டு மதியங்கி தியங்கி உன்னைகண்டால் நடிங்கி உன் அடியில் விழுவார்கள்.

## 1086. மரணவேளையில் வேர்பிடுங்கும் வித்தை.

பக்ஷி மரணமாகவிருக்கில் வேர்பிடிங்கிடில் அதன் பலன் யாதெனில் தன்னை பகைவனுவன் வெல்லமாட்டான் சத்துருவானவரும் ஒருவருமில்லை சண்டாளவேலையானதால் ஜெயிக்காது பொருள்போகும் உயிர் பசதம் வரும் கொடுமையானது செய்யும் ஆதலால் அந்தவேளையில் வேர்பிடிங்கிடில் தோஷம்அணுகுமென மேலோர் கூறுகின்றனர்.

## 1087. பட்சிகளின் வலிவறியும் வித்தை.

பஞ்சபட்சிகளின் வலுவை பகர்வதற்கு என்னால் முடியாது ஆயினும் சொல்வேன் கேட்பாயாக சத்துருபக்ஷியின் நாளாகில் வலுவானது இல்லை அந்த கொடுமையாகிய நாட்கள் பக்ஷி பகையாகில் சத்துருபக்ஷியை அழித்துவிடும்பக்ஷிகள் யாவும் ஒன்றாய் கூடிக்கொண்டு மித்துருவாயிருந்தாலும் பக்ஷியின் வலுவு இல்லையென மேலோர் கூறுவர்.

## 1088. படுபேட்சியின் வலிவறியும் ஜாலம்.

படுபக்ஷியின் நாளில் தன்னுடைய வலுவானது நீங்கிவிடும் மித்துருவானவருமில்லை எத்தொழிலைச்செய்தாலும் தவிர்க்கலாகும் வெற்றிபெறமாட்டாது பாம்பின் வாய் சிக்கிய தேரைப்போல் மனம்பதரி புண்ணாகும் ஆணவங்களெல்லாமடங்கி எதுவுமல்லாமல் நடுநடுங்குவார்கள் இந்த கொடுமையாகிய சத்துரு நாளில் யாதொருதொழிலும் வித்தையும் செய்யலாகாது.

## 1089. எதிரியையடக்கும் வித்தை.

பகையாளியை அடக்கும்விதம் எவ்விதமெனில் ஒருவருக்கும் கன்னிநூலென்பதை சொல்லாதே கருவை வெளிவிடாதே சச்கரத்தைக்தைக் காட்டாதே அட்சாங்கனை நினைவில் நினையாதே மூலிகையின் வகைகளைக்காட்டாதே சத்துரு மித்துருவைச்சொல்லாதே பழியாகிய நோத்தைக் காட்டப்படாது அப்படி காட்டுவாயானால் பகையாளி பிழைபட்டுழல்வான் ஆதலால் மூலிகையின் சாபத்தை நீக்கி கன்னிநூல் காப்பு கட்டி சக்காத்தை அதிலேவைத்து அட்சாத்தை மாறி கருவைத்தொட்டு அட்சரத்தின் மேல் தடவிவைக்க பகைவனுடைய ஆண்மையை யடக்கிவைக்கும்.

## 1090. தேவிபூசை செய்யும் வித்தை.

சத்துரு பட்சியின் நாலையறிந்து தேவியினுடைய பூசைசெய்து சுடலைசாம்பலை தேகமாதியந்தமும் பூசிக்கொண்டு நிர்வாணரூபமாகநின்று கருவை திலர்தமிட்டு எவனை குறித்தாயோ அவனுடலில் அட்சரத்தைவரைந்து கோடிவஸ்திரமணிந்துக்கொண்டு உன்மனதை திடப்படுத்தி பூசைசெய்ய தெளிவுண்டாகும்.

## 1091. எதிரியை வாங்கும் மூலிபிடுங்கும் ஜாலம்.

எதிரியைவாங்கவேண்டில் மூலிகையின் முன்னின்று எதிரியினுடைய பெயரைச்சொல்லி வஸ்துவுடன் சத்தியும் மர்க்கவகைகளும் வைத்து தூபதீபங்கா

ட்டி நீ ஓர் மனதாக இருந்துக்கொண்டு ருத்திரனை தியானித்து வேரைப்பிடுங்கி டில் எதிரியினுடைய பேரானது போகும் எதிரிமேல் ருத்ரகோபஞ்செலுத்துவார் ஆதலால் இப்படிசெய்வது பாபமென்றும் அறிந்த பெரியோர் கூறுகின்றனர்.

## 1092. மரணமூல கஷனிநூலறியும் வித்தை.

மூலிகையின் முன்போய்நின்று சாபத்தை நிவர்த்திசெய்து தலசனுடைய ஆல்வாங்கி மித்துருவின் முகத்தைநோக்கி சத்துருபக்ஷியின் உறவைக்கொள்ள லாம் காப்புகட்டி வஸ்துசுத்திவைத்து தூபதீபங்காட்டி உருவெழுதிய சக்கரத் தை அதின் முன்புவைத்து ஐந்தெழுத்தை செபித்து குறித்த யிடத்தையும் பார்த் துக்கொண்டுபட்சி அறிந்து கருவைத்தொட்டு வாலையினுடைய பூசைசெய்து சூட்டி குறித்தயிடத்தில் முன்கொண்டு குத்திவிட எதிரிகட்கு வாதனை மெத்த வுண்டாகும் ஆதலால் இது செய்யப்போகாதென மேலோர் கூறுகின்றனர்.

## 1093. வேறு மரணமூல கஷனிநூலறியும் வித்தை.

முன்போல் மூலிகையில் முன்னிருந்துக்கொண்டு தூபதீபங்காட்டி கன்னி நூல் காப்புகட்டி பட்சியினுடைய சக்கரத்தைவைத்து அந்த அட்சரத்தையே மேல் நோக்கி செறத்து கருவைத்தொட்டு நேரத்தையும் பார்த்து மித்துருபட்சி யை சேர்த்துக்கொண்டு நீ நிர்வாணமாக நின்றுகொண்டு வேரைப்பிடுங்கவேண் டும் எதிரியானவன் நடந்தால் நன்று அல்லாவிட்டால் அவனது காலடிமண்ணை யும் வேரின்மண்ணையும் சேர்த்து மயானத்தில் கொண்டுபோய்வைத்துக்கொ ண்டு தேவிக்கு பூசைசெய்து பச்சையிலையை சுடுவாயகில் ஒரு ஜாமத்துக்குள் ளாக பகைவனுடைய உடலானது நசிந்துபோகும்.

## 1094. பிருதிவியின் தொழிலறியும் வித்தை.

பிருதிவின் தொழில்செய்வது எவ்விதமெனில் அப்புவை மண்ணானது உண்ணும் மற்ற எழுத்துகளை சேர்க்கப்போகாது ஆகாச எழுத்தைக் கூட்டி மா றும்படியான வகையைச் சொல்லவேண்டாம் சிவன்மேல் ஆணையென்று மே லோர் கூறுகின்றனர்.

## 1095. அப்புவின் தொழிலறியும் வித்தை.

அப்புவின் தொழில் செய்யவேண்டில் வாயுவின் எழுத்தைப்பிடித்து மாற வேண்டும் அத்துடன் அக்கினியைச் சேர்த்தால் தண்ணீர் நிமிஷத்தில் அற்றுப் போகும் அதலால் மற்ற எழுத்துகளை சேர்க்கவொண்ணாது அப்படி சேர்க்கில் சூடானது அழிந்துபோகுமென மேலோர் கூறுகின்றனர்.

## 1096. தேயுவின் தொழிலறியும் வித்தை.

தேயுவின் தொழிலைச்செய்யவேண்டில் அப்பெழுத்து ஓதி அத்துடன் ஆகாச எழுத்தையும் சேர்த்து இரண்டையும் ஒன்றாய்ச்சேர்த்து மாறுவர்யாகில் அக்கியானது அமர்ந்துபோகும் அப்புவும் உண்டுபோகும் ஆதலால் தேவியின் மேல் ஆணையாக இத்தொழில் செய்யப்போகாதென மேலோர் கூறுகின்றனர்.

## 1097. வாயுவின் தொழிலறியும் வித்தை.

வாயுவின் தொழில் செய்யவேண்டில் விருதியின் எழுத்தைப்பிடித்து மாற வேண்டும் அப்பெழுத்தைசேர்த்து அநுசரிபபாயாகில் வாயுவானது அடங்கிப் போகும் இத்துடன் மற்ற எழுத்துக்களை சேர்க்கப்போகாது இந்த வித்தை ஒரு வழிக்கும் சொல்லப்படாதெென மேலோர் கூறுகின்றனர்.

## 1098. ஆகாசத்தின் தொழிலறியும் வித்தை

ஆகாசத்தின் தொழில் செய்யவேண்டில் அப்பேழுததையும் யிருதி வெழுத் தையுங்கூட்டி அக்கினி வாயு இவையுண்டையுஞ்சேர்த்து நாலு எழுத்தையுஞ் செபித்து ஆகாசவெளியில்தாக்க நினைத்ததொழில் செய்யப்போகாதென்றனர்.

## 1099. வசிய வித்தை

வசியவித்தை செய்யவேண்டில் ஆகாசவெழுத்தையும் வாயுமின் எழுத்தை யும் அக்கினி யெழுத்தையும் சோத்துக்கொண்டு நீ நினைத்து செய்யும் தொழில் ஓதிட சகலமும் வசியமாகும் மன்னர் நேசமாவார்கள் தேவதைகள் சித்தியாக அருள்புரிவார் இத்தொழிலை என்னமாய்க் கோட்டபோதிலும் வெளியிடப்போ காது அனறியும் அவ்வெழுத்தை வசியம்பண்ண அக்கினியை கூடசேர்க்கவும் அககினி வசியம்பண்ண வாய்வு எழுத்தை கூடசேர்க்கவும் அப்பேழுத்தை வசி யம்பண்ண பிருதிவின் எழுத்தைப் பிடித்து மாறவேண்டும் பிருதிவியை வசியம் பண்ண அக்கினி எழுத்தைப் பிடித்து மாறவேண்டும் அப்படி மாறுவது பெரி தல்ல மனம் ஒன்ருகவேண்டும் உண்மையானதுகொண்டு ஐம்புலனை நிறுத்த வேண்டும் நிருத்திடில் தொழிளெல்லாம் உண்மையாக விளங்கும் சித்தர்கள் புக ழும்படியான திடமுள்ள பட்சிவித்தையின் வழியிதாகும் ஆகினும் உலகிலுள்ள மாாநதர்களுக்கு குணம் குறி சத்துரு மித்துரு காணுவிடில் எருவராலேயும்அடக் கவொண்ணுது என மேலோர் கூறுகின்றனர்.

## 1100. சத்துருவை வேல்லும் வித்தை

எதிரிகளை வெல்லவேண்டில் அந்த எதிரி பட்சியுடன் சத்துருபட்சியைக் கூட்டி எதிரிமேல் செய்கின்றவன் மித்துருபட்சியைச் சேர்த்து சத்துருவின் முகத்தைநோக்கி செய்யும்படியான தொழிலை முன்னேவைத்து நிர்வாணமாக நின்று மந்திரத்தை ஓத இது எதிரியை துன்பப்படுத்திவிடுமென மேலோர் கூறுகினறனர்.

## 1101 பேதவியல் புரியும் வித்தை

போபேதங்கள் காணவேண்டில் ஊண்பட்சியாகில் குள்ளன் அரசு பட்சி யாகில் கொடியோன் கடைபட்சியாகில் சமானமானவன் நித்திரைபட்சி யாகில் ரொம்பவும் குள்ளன மரணபட்சியாகில் கூனன் இவ்விதமாக அறிவினல் பட்சி களின் தொழிலைக்கண்டு எந்தசமயத்திலுமபேர்களை எளிதாக காணும் பொருட்டு மேலோர் கூறுகின்றனர்.

## 1102. வியாதி யறியும் வித்தை.

கட்சிகளைக்கொண்டு வியாதி அறியும்விதம் எவ்விதமெனில் ஊண்பட்சியாகில் சிரசுநோய் நித்திரை பட்சியாகில் தலைநோய் கழுத்துநோய் அரசு பட்சியாகில் நெஞ்கில்நோய் மரணபட்சியாகில் அரையில் நோய் இவ்வித மாக கண்டறியவேண்டும்.

## 1103. மச்சமறியும் வித்தை

பட்சிகளைக்கொண்டு மச்சமறியவேண்டில் வல்லூருக்கு முதுகில் ஆந்தைக்குஉச்சி அல்லது கையின்கீழ் காகத்திற்கு புயம் மார்பு இகைளில் கோழிக்கு முகம் கண்டம் மயிலுக்கு தொடைமுழங்கால் இவ்விதமாக மச்சங்களைக்கண்டு அறியவேண்டும்.

## 1104. பூர்வபட்சத்தில் அட்சரபட்சி அறியும் வித்தை

அம் என்ற எழுத்துமுதல் வல்லூரு பட்சியாகும் அதில் முதல் ரண்டும் ஆந்தைபட்சியாகும் உம் என்ற எழுத்துமுதல் 2ம் காகமென்றபட்சியாகும் என் என்ற எழுத்துமுதல் 2ம் கோழியாகும் ஓம் என்ற எழுத்துமுதல் 2ம் மயிலாகும் இதில் குறில் ஆண் நெடில்பெண்ட் யென்றும் இவ்விதங் கண்டறியவேண்டும்.

## 1105 அமரபட்சத்தின் அட்சரபட்சி அறியும் வித்தை

இம் என்ற எழுத்து இரண்டு வல்லூரு முதல் 2ம் ஆந்தை ஓம் என்ற எழுத்து 2ம் காகம் அம் என்ற எழுத்து 2ம் கோழி எம் என்ற எழுத்து 2ம் மயிலாகும்இவ்விதமாமாக அமரபட்சத்தின் பட்சிகளின் அட்சாமறிந்து எத்தொழிலும் செய்யவேண்டும்மென மேலோர் கூறுகின்றனர்

## 1106. பூர்வபட்சம் பகல்வாரம் 7 க்கும் ஊண்பட்சி அறியும் வித்தை

செவ்வாய் ஞாயிறு வாரங்களின் வல்லூருபட்சி உண்ணும் வியாழக்கிழமைகளின் காகம் உண்ணும் வெள்ளிக்கிழமையில் கோழியானது உண்ணும் சனிவாரம் மயில் உண்ணும் ஆதலால் பூர்வபட்சம் பகலிற்கு இவ்வாறு அறிந்து யாதொருதொழிலும் செய்ய விருத்தியாகும்.

## 1107. அமரபட்சம் மகல்வாரம் 7க்கும் ஊண்பட்சி அறியும் வித்தை

திங்கள் சனிவாரங்களில் மயில் உண்ணும் செவ்வாய் ஞாயிறு வாரங்களில் கோழி உண்ணும் புதன்கிழமை காகம் உண்ணும் வியாழக்கிழமையில் ஆந்தை உண்ணும் வெள்ளிக்கிழமையில் வல்லூரு உண்ணும் ஆதலால் அமரபட்சம் பகலிற்கு இவ்வாறு அறிந்து யாதொரு தொழிலும் செய்ய விருத்தியும் ஜெயமுமுண்டாம்.

## 1108 பூர்வபட்சம் இரவு வாரம் 7கக்கும் படுபட்சி அறியும் வித்தை.

ஞாயிறு செவ்வாய் வாரத்திற்கு படுபட்சி காகம் புதன் திங்கள் வாரத்திற்கு படுபட்சி கோழியாகும் வியாழக்கிழமைக்கு படுபட்சி மயிலாகும சனிவாரத்திற

கு படுபட்சி ஆந்தையாகும் இவ்வாறு பூர்வபட்சம் இரவிற்கு படுபட்சி அறிந்து தொழில் நடத்தவேண்டும்.

## 1109. அமரபட்சம் இரவுவாரம் 7 க்கும் ஆண்பட்சி அறியும் வித்தை

சனி திங்கள் வாரங்களில் கோழி உண்ணும் வெள்ளிக்கிழமையில் மயில் உண்ணும் புதன் கிழமையில் ஆந்தை உண்ணும் வியாழக்கிழமையில் காகம் உண்ணும் செவ்வாய்க்கிழமையில் வல்லூரு உண்ணும் இவ்வாறு அமரபட்சம் இரவின் வாரம் 7-க்கும் கண்டு யாதொரு தொழிலுஞ் செய்ய ஜெயமாகும்.

## 1110 பூர்வபட்சம் வாரம் 7-க்கும் படுபட்சி அறியும் வித்தை.

ஞாயறு வெள்ளியில் ஆந்தை மரணமாகும் வியாழம் சனிவாரங்களில் வல்லூர் மரணமாகும் திங்கள் கிழமையில் காகம் மரணமாகும் செவ்வாய்க்கிழமையில் மயில் மரணமாகும் இவவாறு பூர்வபட்சம் வாரம் 7க்கும் படுபட்சிகளறிந்து யாதொரு தொழிலும் நடத்தவேண்டும்.

## 1111. அமரபட்சம் வாரம் 7-க்கும் படுபட்சி அறியும் வித்தை.

திங்கட்கிழமை ஆந்தை மரணமாகும் செவ்வாய்கிழமை வல்லூருமரணமாகும் ஞாயறு காகம் மரணமகும் புதன்கிழமையில் மயில் மரணமாகும் சனிவியாழமிவைகளில் கோழி மரணமாகும் அமரபட்டம் வாரம் 7க்கும் இவ்வாறு படுபட்சிகள் அறிந்து யாதொரு தொழிலும் நடத்தவேண்டும்.

## 1112. பூர்வபட்சம் பகல் இரவு இரண்டிற்கும் பட்சிகள் ஒவ்வொன்றின் தொழில்முறை அறியும் வித்தை.

பூர்வபட்சம் பகலில் பட்சிகள் உண்டுகடந்து அரசாகி நித்திரைபோய் ஆபகலில் மரணமாகும் அன்றிரவில் அரசனுகி மரணமாகி நடையாகி உண்டு நித்திரைபோய்விடும் இதை யறிந்து யாதொருதொழிலும் செய்யவேண்டும்.

## 1113 அமரபட்சம் பகல் இரவு இரண்டிற்கும் பட்சிகள் ஒவ்வொன்றின் தொழில் அறியும் வித்தை

அமரபட்சம் பகலில் உண்டு மரணமாகி நித்திரைபோய் அரசாகி நடை நடைக்கும் அன்று இரவில் உண்டு நித்திரைபோய் நடையாகிமரண மடைந்து அரசாகும் இதை அறிந்து யாதொருதொழிலும் சைய்யவேண்டும்.

## 1114 பக்ஷம் இரண்டிற்கும் கடைநிலை பட்சிகள் அறியும் வித்தை

பூர்வபட்சத்தில் மரணமாகியபட்சி உண்ணும் அன்று இரவில் நித்திரையாகிய பட்சி உண்ணும் அமரபட்சத்தில் நடையாகிய பட்சி உண்ணும் அன்று இரவில் அரசாகியபக்ஷி உண்ணும் இவ்விதங்கொண்டு யாதொருதொழிலும் நடத்த வேண்டுமென மேலோர் கூறுகின்றனர்

## 1115 பூர்வபட்சம் பகல் ஜாமம் 7ச்கும் பக்ஷிகள் ஐந்தின் தொழில்முறை அறியும் வித்தை.

பூர்வபட்சம் பகலில் முதல் ஜாமம் வல்லூரு உண்ணும் ஆந்தைநடக்கும் காகம் அரசாளும் கோழி நித்திரைபோகும் மயில் மரணமாகும் இவ்வாறு பக்ஷிகளின் தொழில் அறிந்து யாதொருதொழிலும் செய்ய வேண்டும்.

பூர்வபட்சம் பகல் இண்டாம் ஜாமத்தில் மயில் உண்ணும் வல்லூரு நடையாகும் அரசாகும் ஆந்தை மரணமாகும் கோழி நித்திரையாகும இவ்வாறு அறிந்து யாதொருதொழிலும் செய்யவேண்டும்.

பூர்வபட்சம் மூன்றும் ஜாமத்தில் கோழி உண்ணும் மயில் நடக்கும் வல்லூறு அரசாகும் ஆந்தை நித்திரைபோகும் காகம் மரணமாகும் இவ்வாறு அறிந்து யாதொருதொழிலும் செய்யவேண்டும்.

பூர்வபட்சம் நாஅகாம் ஜாமத்தில் காகம் உண்ணும் கோழி நடக்கும் மயில் அரசாகும் வல்லூரு 'நித்திரைபோகும் ஆந்தை மரணமாகும் இவ்வாறு அறிந்து யாதொரு தொழிலும் செய்யவேண்டும்.

பூர்வபட்சம் பகல் ஐச்தாம் ஜாமத்தில் ஆந்தை உண்ணும் காகம் நடக்கும கோழி அரசாகும் மயில் நித்திரைபோகும வல்லூரு மரணமாகும் இவ்வாறு அறிந்து யாதொரு தொழிலும் செய்யவேணும.

## 1116. பூர்வபட்சம் இரவுஜாமம் 5-ற்கும் பட்சிகள் ஐந்தின் தொழில்முறை அறியும் வித்தை.

பூர்வபட்சம் இரவில் முதல்ஜாமம் காகம் உண்ணும் ஆந்தை வழிநடக்கும் வல்லூரு அரசாகும மயில் நித்திரைபோகும் கோழி மரணமாகும் இவ்வாறு அறிந்து யாதொரு காரியமும் செல்யவேண்டும்.

பூர்வபட்சம் இரண்டாம் ஜாமத்தில் மயில் உண்ணும கோழி நடக்கும் காகம் அரசாகும் ஆந்தெ நித்திரைபோகும வல்லூரு மரணமாகும் இஎவாறு அறிந்து யாதொரு தொழிலும் செய்யவேண்டும்.

பூர்வபட்சம் இரவில் மூன்றும் ஜாமத்தில் ஆந்தை உண்ணும் வல்லூருநடக்கும் மயில் அரசாகும் கோழி நித்திரைபோகும் காகம் மரணமாகும் இவ்வாறு அறிந்து யாதொழிலும்ம் செய்யவேண்டும்.

பூர்வபட்சம் இரவி ஜாமம் நான்கில் கோழி உண்ணும் காகம் நடக்கும் ஆந்தை அரசாகும் வல்லூரு நித்திரைபோகும் மயில் மரணமாகும் இவ்வாறு அறிந்து யாதொருதொழிலும் செய்யவேண்டும்.

பூர்வபட்சம் இரவு ஐந்தாம் ஜாமத்தில் வல்லூரு உண்ணும் மயில் நடக்கும் கோழி அரசாகும் காகம் நித்திரைபோகும் ஆந்தை மரணமாகும் இவ்வாறு அறிந்து யாதொரு தொழிலும் செய்யவேண்டும்.

## 1117. அமரபட்சம் பகல் ஜாமம் 5-ற்கும் பட்சிகள் ஐந்தின் தோழில் முறை அறியும வித்தை.

அமரபட்சம் பகல் முதல் ஜாமம் மயில் உண்ணும் கோழி அரசாகும் காகம் நடையாகும் ஆந்தை நித்திரையாகும் வல்லூரு மரணமாகும் இவ்வாறிந்து யாதொரு காரியமும் செய்யவேண்டும்.

அமரபட்சம் பகல் இரண்டாம் ஜாமத்தில் ஆந்தை உண்ணும் வல்லூரு அரசாகும் மயில் மரணமாகும் கோழி நடையாகும் காகம் நித்திரையாகும் இவ்வாறு அறிந்து யாதொரு காரியமும் செய்யவேண்டுமென மேதோர் கூறுகின்றனர்.

அமரபட்சம் பகல் மூன்றும் ஜாமத்தில் கோழி உண்ணும் காகம் அரசாகும் ஆந்தை மரணமாகும் வல்லூர் நடக்கும் மயில் நித்திரையாகும் இவ்வாறு அறிந்து யாதொரு காரியமும் செய்யவேண்டும்.

அமரபட்சம் நான்காம் ஜாமத்தில் வல்லூர் உண்ணும் மயில்மரணமாகும் கோழி அரசாகும் காகம் நடையாகும் ஆந்தை நித்திரையாகும் இவ்வாறு அறிந்து யாதொரு காரியமும் செய்யவேண்டும்

அமரபட்சம் பகல் ஐந்தாம் ஜாமத்தில் காகம் உண்ணும் ஆந்தை அரசாகும் வல்லூரு மரணமாகும் மயில் நடையாகும் கோழி நித்திரையாகும் இவ்வாறிந்து யாதொருகாரியமும் செய்யவேண்டும்.

## 1118 அமரபட்சம் இரவு ஜாமம் 5க்கும் பட்சிகள் ஐந்தின் தோழில்முறை அறியும் வித்தை

அமரபட்சம் இரவுமுதல் ஜாமத்தில் மயில் உண்ணும் வல்லூர் அரசாகும் ஆந்தை மரணமாகும் காகம்நடையாகும் கோழி நித்திரையாகும் இவ்வாறிந்து யாதொரு காரியமும் செய்யவேண்டும்.

அவரபட்சம் இரவு இரண்டாம் ஜாமத்தில் வல்லூர் உண்ணிம் ஆந்தை அரசாகும் காகம் நடக்கும் மயில் நித்திரைபோம் அவ்வாறிந்து யாதொரு காரியமும் செய்யவேண்டும்.

அமரபட்சம் மூன்றும் ஜாமத்தில் ஆந்தை உண்ணும் காகம் அரசாளும் கோழி மரணம் மயில் நடக்கும் வல்லூர் நித்திரைபோகும் இவ்வாறிந்து யாதொரு காரியமும் செய்யவேண்டும்.

அமரபட்சம் இரவு நான்காம் ஜாமத்தில் காகம் உண்ணும் கோழி அரசாளும் மயில் மரணமாகும் வல்லூர் நடக்கும் ஆந்தை நித்திரைபோம் இவ்வாறிந்துயாதொரு காரியமும் செய்யவேண்டும்.

அமரபட்சம் இரவு ஐந்தாம் ஜாமத்தில் கோழி உண்ணும் மயில் அரசாகும் வல்லூரு மரணமாகும் ஆந்தை நடக்கும் காகம் நித்திரைபோகும் அவ்வாறு அறிந்து யாதொரு காரியமும் செய்யவேண்டும்.

### 1119. பூர்வபட்சம் பகல் தொழில்முறை 5-க்கும் நாழிகை அறியும் வித்தை.

பூர்வபட்சம் பகலிற்கு ஊண்பட்சிக்கு நாழிகை ஒண்ணரை நடை பட்சிக்கு ஒணணேகால் அரசு பட்சிக்கு இரண்டு நித்திரை பட்சிக்கு முக்கால் மரணபட்சிக்கு ஒண்ணரை இவ்விதமாகபட்சிகளின் தொழில்முறை நாழிகள் அறிந்து யாதொரு காரியமும் செய்யலாம்.

### 1120. பூர்வபட்சம் இரவு தொழில்முறை 5-க்கும் நாழிகை அறியும் வித்தை.

பூர்வபட்சம் இரவிற் ஊண்பட்சிக்கும் நாழிகை ஒண்ணேகால் நடை பட்சிக்கு ஒண்ணேகால் அரசுபட்சிக்கு நித்திரைபட்சிக்கு ஒண்ணறை மரணபட்சி எண்ணு இவ்விதமாக பட்சிகளின் றொழில் முறை நழிகள் அறிந்து யாதொரு காரியமும் செய்யவேண்டும்.

### 1121. அமரபட்சம் பகல் தொழில்முறை 5-க்கும் நாழிகை அறியும் வித்தை.

அமரபட்சம் பகலிற்கு ஊண்பட்சிக்கு நாழிகை இரண்டு நடைபட் ஒண்ணறை அரசுக்கு முக்கால் நித்திரை அரை மணத்திற்கு ஒண்ணேகால் இவ்வாறு பட்சிகனின் தொழில்முறை நாழிகள் அறிந்து யாதொருகாரியம் செய்யலாம்

### 1122 அமரபட்சம் இரவு தொழில்முறை 5-க்கும் நாழிகை அறியும் வித்தை.

அமரபட்சம் இரவிற்கு ஊண்பட்சிக்கு நாழிகை ஒண்ணேமுக்கால் நடைக்கு ஒண்ணேகால் அரசுக்கு முக்கால் நித்திரை முக்கால் மரணம் ஒண்ணு இவ்வாறுபட்சிகளின் தொழில்முரை நாழிகளறிந்து யாதொருகாரியமும் செய்யலாம்.

### 1123 பூர்வபட்சததின பட்சிநிறமறியும் வித்தை

பூர்வபட்சத்திற்கு வல்லூரு பொன்னிரமாகும் ஆந்தை வெள்ளி நிறமாம் காகம் சிகப்பு நிறமாம் கோழி பச்சைநிறமாம் மயில் கருப்பு நிறமாம் இவ்விதம் பட்சிகள் நிறங்காணவேண்டும்.

### 1124 அமரபட்சத்தின் பட்சிநிறம் அறியும் வித்தை

அமரபட்சத்திற்கு ஆந்தை சிகப்புநிறமாகும் காகம் பொன்னிறமாகும் மயில் பச்சைநிறமாகு கோழி வெள்ளைநிறமாகும் வல்லூரு கருப்புநிறமாகும் இவ்விதம் பட்சிகள் நிறங்காணவேண்டும.

### 1125 பூர்வபட்சத்தின் பட்சி குணமறியும் வித்தை.

பூர்வபட்சத்திற்கு வல்லூரு பிராமணனுகும் ஆந்தை வணிகனுகும் காகமசாஞகும் கோழி வேளாளன் மயில் சண்டாளன் இவ்விதம் பட்சிகளின் குணமறியவேணும.

## 1126. அமரபட்சத்தின் பட்சி குணம் அறியும் வித்தை.

அமரபட்சத்திற்கு மயில் பிராமணன் வல்லூரு வேளாளன் ஆந்தை அரசன் காகம் வணிகன் கோழி இழிகுலததான் இவ்வாறு பட்சிகளின் குணமறியவேணும்

## 1127. பட்சம் இரண்டிற்கும் பட்சி முக்காலம் அறியும் வித்தை.

பூர்வபக்சம் அமரபட்சம் இவை யிரண்டிற்கும் ஆந்தையும் மயிலும் முக்காலமாகும் கோழி நிகழ்காலமாகும் வல்லூரும் காகமும் வருங்காலம் இவ்விதம் பட்சிகளின் காலமறிந்து யாதொரு தொழிலும் செய்யவேணும.

## 1128. பட்சம் இரண்டிற்கும் பட்சி தாதுமூலஜீவன் அறியும் வித்தை.

பூர்வபட்சம் அமரபட்சம்இவை யிரண்டிற்கும் வல்லூரு மூலம ஆந்தை சீவன் காகம் தாது கோழி மூலத்தாது மயில் ஜிவதாது இவ்வாறு பட்சிகளின் தாது மூலசீவன் அறிந்து யாதொரு தொழிலும் செய்ய வேண்டும்.

## 1129. பட்சம் இரண்டிற்கும் பட்சிவடிவமறியும் வித்தை

பூர்வபட்சம் அமரபட்சம இவை யிரண்டிற்கும் வல்லூரு நீண்டபட்டம் ஆந்தைக்கு ஐங்கோணம் காகம் அறுகோணம் கோழி நாற்கோணம் மயில் முக்கோணம் இழ்விதமாக பட்சிகள் வடிவககள் அறியவேண்டும்.

## 1130. பட்சம் இரண்டிற்கும் பட்சிகாலறியும் வித்தை.

பூர்வபட்சப் அமரபட்சம் இவை இரண்டிற்கும் வல்லூரு கால் ஆகும் காகம் நீர்க்காலாகும் ஆந்தை நாற்காலாகும் கோழி கோம்பாலமயில் பெருங்காலாதும் இவ்விதப் பட்சி காலறியவேணும்.

## 1131. பட்சம் இரண்டிற்கும் பட்சி நிலமறியும் வித்தை.

பூர்வபட்சம அமரபட்சம் இவை இரண்டிற்கும நிலவாவது வல்லூறுக்கு பாலைநிலம் ஆந்தைக்கு குறிஞ்சி நிலம் காகத்திற்கு மருதநிலம் கோழிக்கு முல்லை நிலம் மயிலுக்கு நெய்தல் நிலம இஎவிதம் பட்சிகளின் நிலமறியவேண்டும்.

## 1132. பட்சம் இரண்டிற்கும் சட்சிலோகமறியும் வித்தை.

பூர்வபட்சம் அமரபட்சம இவை இரண்டிற்கும் வல்லூறு பொன்னுகும் ஆந்தை வெள்ளியாகும் காகம் செம்பாகும் கோழி வெண்கலமாகும் மயில் இரும்பாகும.

## 1133. பட்சம் இரண்டிற்கும் பட்சி ஆண்பெண் அறியும் வித்தை.

பூர்வபட்சம் அமரபட்சம் இவை இரண்டிற்கும் வல்லூறு காகம் மயில் இவை மூன்றுபட்சியும் ஆணுகும் ஆந்தையும் கோழியும பெண்ணுகும் இவ்விதம் பட்சிகள் ஆண் பெண் என்று அறிந்துக் கொள்ளவும்.

1134. பட்சம் இரண்டிற்கும் பட்சிகளின் சுவை அறியும் வித்தை.

பூர்வபட்சம் அமரபட்சம் இவை இரண்டிற்கும் சுவையானது ஆந்தைக்கு தித்திப்பு கோழிக்கு புளிப்பு காகத்திற்கு துவர்ப்பு வல்லூருக்கு காரல் பயிலுக்கு கசப்பாகும் இவ்விதம் பட்சிகளின் சுவை அறியவேண்டும்.

1135. பட்சம் இரண்டிற்கும் பட்சிகளால் ஆள்வரத்தெரியும் வித்தை.

பூர்வபட்சம் அமரபட்சம் இவை இரண்டிற்கும் பட்சிகளைக்கொண்டு ஆள் ஆள்வரத்தறிவது எவ்விதமெனில் வல்லூரு நிற்கின்றான் என்றும் ஆந்தை மீண்டான் என்றும் காகம் வருகின்றான் கோழி ஊருக்குள் வந்தானென்றும் மயிலாகில் அரைநாழிகையில் வருவானென்றும் இவ்விதம் கண்டு சொல்லவும்.

1136. பட்சம் 2-க்கும் பட்சிகள் வரவுகால அளவறியும் வித்தை

பூர்வபட்சம் அமரபட்சம் இவை இரண்டிற்கும் பட்சிகால அளவு அறிவது எவ்விதமெனில் கோழிக்கு நான்குநாள் வல்லூருக்கு ஐந்துநாள் என்று இவ்விதமறியவேண்டும்.

1137. பட்சம் 2-க்கும் பட்சிகளின் பருவம் அறியும் வித்தை.

பூர்வபட்சம் அமரபட்சம் அவைஇரண்டிற்கும் மட்சிகளைக்கொண்டு ஆள் வரத்தரிவதே எவ்விதமெனில் வல்லூறுபட்சியாகில் நிற்கின்றான் என்றும் ஆந்தையாகில் மீண்டானென்றும் காகமாகில் வருகின்றான் என்றும் கோழியாகில் ஊருக்குள் வந்தானென்றும் மயிலுக்கு அரைநாழிகையில் வருவானென்றும் இவ்விதங்கண்டு சொல்லவேண்டும்.

1138. ஒரு மனிதன் தலையை வெட்டும் வித்தை.

ஜாலமாடும் சபையில் வந்துநின்று தங்களில் ஒருமனிதனை பிடித்து அங்குள்ள ஓர் மேஜையின்மேல் குப்புறப் படுக்க வைத்து அவன் தலையை ஓர் துணியினால் மூடி கையில் கத்தியைப் பிடித்துக் கொண்டு சபையோர்களை நோக்கி இதோ மேஜையின்மேல் குப்புறப் படுத்துக் கொண்டிருக்கும் மனிதனுடைய தலையை வெட்டுகிறேன் பாருங்களென்று தன் கையில் தாங்கி கத்தியினால் அருத்து அதை கையில் தூக்கிக் கொண்டவுடனே தலையை அருத்த முண்டத்தின் கையுங்காலும் உதைத்துக் கொள்ளும் சற்றுநேரம்வரையில் அத்தலையை தன்கையிலேயே வைத்துச்கொண்டு பரிகாசமான சில்வார்த்தைகளை பேசியபின்பு அதனை அந்த முண்டத்தின் பக்கத்திலே வைத்து துவாலையைப்போட்டு மூடிவிடவேண்டும் உடனே தலையை மூடியிருக்கும் துவாலை எடுத்துவிட்டு வெறுமனே வைக்கின்றான் அதன்பின் இரண்டு நிமிஷங்கள் கழிந்து அந்த தலையில் வாயில் ஒரு சுருட்டைவைத்து பற்றவைக்கச் செய்து அவ்வாறு சற்றுநேரம் வரையில் வைத்துக்கொண்டிருந்த பிறகு அத்தலை சுருட்டின் புகை குடிக்கத் துடங்கிகிறது அப்போது மூக்கிலிருந்து புகையும் வருகிறதன்றி அன்றியும் முன் சிமிட்டாகத் கண்களையும் சிமிட்டி முழிகளையும புரட்டும் அப்போது வெட்டுப்பட்டவன் நான் மந்திரத்தினாலே இத்தலையை இப்

போது உயிர்ப் பித்தேன் என்று சொல்வார் மறுபடியும் அந்தத் தலையின்மேல் துவாலையைப்போட்டு மூடி தலைக்குமட்டும உயிர் கொடுக்கின்றேனென்று எந்தத் தலையை முன்போலக் கையிற்றூக்கி ஜனங்களுக்குக்காட்டி முண்டத்துடன்சேர்த்து துவாலையால்மூடி ஜெபம்செய்து தண்ணீர்தெளிக்க உடனே வெட்டுப்பட்ட மனிதர் எழுந்து வந்தனஞ்செய்து மறைந்துவிட யாவரும ஆச்சரியப்படுவார்கள்

## 1139. மேற்கூறிய ஜாலமாடும் சூட்சுமம் அறியும் வகை.

இதனுடைய இரகசியமாவது மேஜைப் பெட்டிக்குள்ளே ஓர் மனிதன் இருக்கிறதாக செய்யவேண்டும் மேஜைக்குள்ளிருக்கும் மனிதனையும வெட்டுப் படுவோனையும் தூரத்திலிருந்து பார்த்தால் இருவர் முகங்களும் ஒரேமாதிரியாய் தோற்றும்படியாக இருவருக்கும் வேஷந்தரித் திருக்கவேண்டியது அதுவுமன்றி இவர்களுடைய தலையைப்போலவே மண்ணிஸ்லும் ஒரு தலைசெய்து அந்த தலையின் கழுத்தடியில் சிவப்பு மஜிண்டாப் பவுடரைக் கரைத்து நிரப்பிய தோற்பையைப் பொத்திருக்கவேண்டியது வெட்டுண்டவன் மேஜையில் படுத்தவுடனே வெட்டப்போகிறவன் அப்போது அந்த மேஜையில் மேற்பக்கத்திலுள்ள துவாரத்தின் வழியாய் தன் தலையை உள்ளே நுழைத்துவிடவேண்டும அந்த க்ஷணமே மேஜைக்குள்ளே அருக்கிற மனிதர் பண்ணினுற் செய்த தலையை அந்தத் துவாரத்தின் வழியாகவே மேஜைமேலே வெட்டப்போகிறவர் கையில் கொடுக்க வேண்டும பிறகு மேஜைமேல் படுத்திருப்பவன் தலையை அறுப்பதுபோல் அம் மண் தலையினுற் பொருந்தியிருக்கும் தோற்பை அறுக்க அப்பையிலுள்ள பவுடர் தண்ணீர் இரத்தம்போல் பிரவாகித்தோடும் பிறகு அந்த மண்தலையைத்தூக்கி எல்லாருக்குங்காட்டி முண்டத்தின் பக்கத்தில் வைற்து துவாலையால் மூடிட அந்த யிடத்தில் ஒரு துவாரமிருக்கிறது அந்த துவாரத்தின் வழியாய் மண்தலை உள்ளே எடுத்துக்கொண்டு, உள்ளே யிருக்கிற மனிதர் தலையை வெளியே காட்டவேண்டும இந்தவேலை நடந்துக்கொண்டிருக்கும்போது தலையை வெட்டினவர் பலவகை பகடி வார்த்தைகளால் ஜனங்களின கவனத்தை தன்வசத்திற் கிழுக்கின்முன சுருட்டுப் பிடித்துக்கொண்டிருக்கும் தலையை துவாலையால்மூடும் போது முனபு தலைநீட்டிய மனிதர் தன தலையை உள்ளே இழுத்துக்கொண்டு மணதலையை மேஜையின்மேல் வைத்துவிட வேணடும் பிறகுதலையை வெட்டினவன முண்டத்தோடு தலையை பொருந்தவைத்து துவாலை மூடினவுடனே உள்ளேயிருப்பவன் மண்தலையை உள்ளே எடுத்துக்கொண்டு வெட்டுண்டவர் முன்பு உள்ளே சொருகியிருக்கும் தன்தலையை வெளியே யிழுததுக்கொண்டு எழுப்ப வேண்டும் இக்காட்சி ஜனங்களுக்கு மிகவும் ஆச்சரியமாகவே யிருக்கும்.

வெட்டப்போகிறவன் கையில் இருக்கும் துவாலை குட்டையின் பிரயோஜனம் இப்போது இன்னதென்று நன்கு விளங்கும் மேஜைக்குள் நுழைந்த உடனே உள்ளிருந்துவரும் மண் தலையை ஜனங்கள் கண்டு கொள்ளாதபடிக்கு வெட்டுண்ட தலையை யெடுத்து மேஜையின் ஓர் பக்கத்தில் வைக்குந் தருணத்தில் இத்தலையை உள்ளுக்கு வாங்கிக்கொண்டு மேஜைக்குள்ளிருக்கும் பொய் தலையைக்கொண்டு வருவதையும் பின்பு சுருட்டு பிடித்துக்கொண்டிருக்கும் தலை

யை திடீரென்றும் எடுத்து முண்டத்தோடுவைக்க எத்தனிக்கும்போது உள்ளிருக்கும் மனிதன் தன்தலையை உள்ளிழுக்கிக்கொண்டு உள்ளே பதிலுக்கு மண்தலை கொடுப்பதையும் கடைசியாக வெட்டுண்டதலையை முண்டத்தோடு சேர்க்கிற போது அந்த க்ஷணமே மேஜைக்குள்ளிருக்கும் மனிதன் அந்த மண்தலையை உள் ளுக்கு வாங்கிக்கொள்வதையும் அதேநேரத்தில் வெட்டுண்ட மனிதன் தன் தலையை மேஜைக்கு வெளிப்புரத்தில் கொண்டுவருவதையும் வேடிக்கைபார்ப்பவர்கள் அறிந்து கொள்ளாமல் மறைக்கும்பொருட்டே தான் ஆகினும் மேற்கூறிய வணம் சூத்திரமாய் மேஜைகள்செய்து முன்பாக அறைக்குள் ஆடிப்பழகி பின்பு எவ்விடங்களிலும் பயமின்றிப் பயிரங்கமாய் ஆடலாம் ஆனால் மேஜையின்மேல் வலபுறமூலையில் வெண்மையான குட்டையை வைத்திருக்கவேண்டும்.

## 1140. பிரளய கப்பல் காட்டும் ஜாலம்.

ஒரு அறைக்குள் சுவற்றை சுத்தப்படுத்தி பின்பு தில்லைப்பாலையும் திமிரிபாஷாணத்தையுங்கலந்து முச்சிவேலைக்காரரைக் கொண்டாவது அல்லது தானாவது எழுத்திரமைபுண்டாகில் ஒரு விசித்திரமான கப்பலொன்று ஓழுதி முன்னதாகவைத்திருக்கவேண்டும் இராத்திரி காலமானவுடன ஜாலவித்தையாடுவோன் ஜனங்களைநோக்கி சகோதரர்களே இந்த அறைக்குள்ளிருக்கும் கப்பலைப்பாருங்கள் இது பூர்வம் பிரளயகாலத்தில் செய்யப்பட்டகப்பல் இதன் விநோதத்தை சற்று கவனியுங்களென்று அறையைத்திரந்து அனைவரையும் உள்ளே அழைத்துக்கொணடுபோய் பாருங்களென்று காட்டஜனங்கள் யாவரும் கப்பலிலிருக்கும காட்சியைப்பார்த்து கணபூர்த்து பிரமைகொணடு விழித்தவிழி மூடாமல் பார்த்துக்கொணடிருப்பார்கள் அப்போது நீ அவர்களைப்பார்த்து இந்தகப்பலை பாதாளலோகத்திற்கு அனுப்பவேணுமென்று கொஞ்சம் கற்பூரத்தை கொளுத்திவைக்க கப்பலானது மறைந்துபோகும் கற்பூரம் அமைவதற்கு முன்னமே அனைவரையும் வெளியே அனுப்பிவிட்டு அறையைச்சாற்றி தாள்போடவேண்டும்.

## 1141. பத்துத்தலை ராவணனை காட்டும் ஜாலம்.

முன்போல் ஒரு அறைக்குள் சுவற்றை சுத்தப்படுத்தி தில்லைப்பாலையும திமிரிபாஷாணத்தையும் கலந்து பத்துத்தலை ரகவணனைப்போல் சுவற்றில் எழுதி முன்னதாக வைத்திருந்து இருந்து ஜாலமாடுவோன் ஜனங்களைநோக்கி சகோதரர்களே இதோ மூடியிருக்கும் இந்த அறைக்குள் இலங்கையிலிருந்து பத்துத்தலைராவணன் வந்திருக்கும் விநோதத்தைப் பாருங்களென்று உடனே அறையைத்திறந்துகாட்ட தகதகாயமாய்த் தங்கமயம்போல் பத்துத்தலையும் இருபது கண்ணும் இருபதுகையுமாகத் தெரியும் அனைவரும்பார்த்து இது மகா புதுமையான வித்தையென்று புகழ்ந்து பேசுவார்கள் அப்போது நீ அவர்களைப்பார்த்து இந்த ராவணன்வந்து வெகுநாழிகைபாச்சு இதோ லங்கைக்கு அனுப்பிவிடுகிறேன் பாருங்களென்று முன்போல் கற்பூரத்தைக் கொளுத்திவைக்க உடனே ராவணன் மறைந்துவிடுவான் நீ கற்பூரம் அவிந்துவிடுவதற்கு முன்னமே அனைவரையும் அறையைவிட்டு வெளியேதுரத்தி கதவைச்சாற்றி தாள்போடவும்.

## 1142. இலங்காபுரி பட்டணம் காட்டும் ஜாலம்.

இரவில் ஒரு வெட்டவெளியான பெரிய மைதானத்திற்கு ஜாலவித்தைக்காரன் அனைவரையும அழைத்துக்கொண்டுபோய் அச்சனங்களைநோக்கி இதோ இந்த மைதானத்தில் இலங்காபட்டணம் வந்து அமரும்படிச்செய்யும் அற்புதத்தைப்பாருங்களென்று நாலு எலுமிச்சம்பழத்தை எடுத்து அதின்மேல் மாயாசத்திக்கருவைப்பூசி மாயாசத்தி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து இந்த மைதானத்தில் இலங்கைப்பட்டணத்தைப்போல் தோற்றுமபடி செய்யவேணுமென்று பழத்தை நாலுதிக்கும விட்டெரிந்து வேதாளமந்திரத்தை உச்சாடனஞ்செய்துக்கொண்டேயிருக்க ஜனங்கள் பார்த்துக்கொண்டிருக்கும்போதே அந்தமைதானத்தில் ஆச்சரியமாக இலங்கபட்டணம அலங்கும இராட்சதாள் கூடகோபம் மாடமாளிகை கடைவீதி சாலைசோலைகளும் வெகு ஆடமபரமாகத்தோற்றும் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள் அப்போது நீ இந்தப்பட்டணத்தை மறைந்துபோகும படி செய்கிறேன் பாருங்களென்று வேதாள உச்சாடன மந்திரத்தை நிருத்தி நாலுகல்லை எடுத்து நாலுதிக்கிலும்போட்டு மறைந்துபோவென்று மூன்றுதரம சொல்ல மறைந்துவிடும அனைவரும் பிரமிப்பார்கள்.

## 1143. காட்டேரியை காட்டும் ஜாலம்.

ஜாலவித்தைக்காரன் ஜனங்களை ஒரு மைதானத்திற்கு இட்டுக்கொண்டு போய் இதோ காட்டேரியை காட்டுகிறேன் பாருங்களென்று இந்திர ஜலாலக் கருவைத்தடவி குளிகையைத்தியானித்து உச்சாடனம செய்ய உடனே பார்க்கும் படியான ஜனங்களின் கண்களுச்கு அந்த மைதானமெல்லாம் காட்டேரி கூட்டமாகத்தோற்றும.

## 1144. தலைகள் உருளும் விநோத ஜாலம்

முன்போலவே இரவில் ஜனங்களைக் கூட்டிக்கொண்டு ஒரு மைதானத்திற் சென்று மைதானமெல்லாம் மனிதர்தலைகள் உருளும் விநோதத்தைம் பாருங்களென்று ஐங்கோலக்கருவை விரலில்தொட்டு சக்காதேவி மந்திரத்தை செபித்துக்கொண்டே இந்தமைதானமெல்லாம் மனிதன்தலைபோல் தோற்றவேணுமென்று உச்சாடனஞ்செய்ய பார்ப்போர்களுக்கு மைதானமெல்லாம தலைகளாகத் தோற்றும் அனைவரும பிரமைகொள்வார்கள்.

## 1145. வனமிருகங்களை காட்டும் வித்தை.

ஜாலக்காரன் முன்போலவே இரவில் ஜனங்களை கூட்டிக்கொண்டு ஒருமைதானத்திற்குச்சென்று ஜனங்களைப்பார்த்து இதோ காட்டில்வாழும்படியான பலபலவித மிருகங்களையும் அழைப்பிக்கும அற்புதத்தைப் பாருங்களென்று மாயாசத்திக்கருவை விரலில்தொட்டு மாயாசத்தி மாயாசத்தி மந்திரந்தை 1008 செபித்து இந்த மைதானம் முழுதும மிருகக் கூட்டங்களாகத் தோற்றவேணுமென்று உச்சாடன மந்திரத்தைச்செபிக்க உடனே பலவகையான மிருகக் கூட்டங்கள் எங்கும் நிரைநிரையாக நிற்கும அதைக்கண்ட யாவரும அடடா இது என்ன ஆச்சரியமாக யிருக்குதென்று அனைவரும் உன்னைப் புகழ்வார்கள்.

## 1146. மூன்றுதலையுள்ள ஸ்திரீ புருஷாளிருவரை காட்டும் ஜாலம்.

ஒரு அறையை சுத்தப்படுத்தி அந்த சுவற்றில் மூன்று சிரசுள்ள ஸ்திரீ ஒன்றும் புருஷன் ஒன்றும தில்லைப்பாலைரிம் திமிரிபாஷாணத்தையுங் கலந்து எழுதி வைத்து அந்த அறையைமூடி தாள்போட்டு வைததிருக்கவேண்டும் இரவானவுடன் ஜனங்களை அழைத்துக்கொண்டு அந்த அரை யிடமாகச்சென்று அவர்களை நோக்கி இதோஇந்த அறைக்குள் மூன்றுசிரசுள்ள ஆண் பெண் இரண்டுபேர்களை காண்பிக்கிறேனென்று அந்த வீட்டைத்திறந்து அனைவரையும் பார்க்கச்சொல்ல கோடிசூரியப் பிரகாசம்போல் மூன்றுதலையுள்ள ஸ்திரீ புருஷாள் தோன்றுவார்கள் அப்போது நீ அவர்களைப்பார்த்து இதோ இந்த ஸ்திரீ புருஷாளை மாயமாகப் போய்விடச்செய்கிறேனென்று கொஞ்சம் கர்ப்பூரத்தை கொளுத்திவைக்க மறைந்துபோகும் உடனே அனைவரையும் அரையைவிட்டு வெளியே தாத்திகதவைச் சாற்றி த்ாள்போடவேண்டியது.

## 1147. எழு சமுத்திரத்தைக் காட்டும் ஜாலம்.

ஜாலக்காரன் முன்போலவே இரவில் ஜனங்களை ஒரு மைதானத்திற் கழைத்துக்கொண்டுபோய் அவர்களைப்பார்த்து இதோ இந்த மைதானத்தில் எழு சமுத்திரமுந் தோற்றும்படி செய்கிறேன் பாருங்களென்று மாயாசத்திக்கருவை விரலில்தொட்டு எழுகல்லின்மேல் தடவி மாயாசத்தி மந்திரத்தை 1008 செபித்து இந்தமைதானத்தை பார்ப்போர்களுக்கு சப்தசமுத்திரம்தோல் தோற்றச்செய்வாயென்று உச்சாடனஞ்செய்து எழுகல்லையும் எழுதாம் விட்டெறிய உடனேபார்ப்போர்களுக்கு எழுசமுத்திரமாகத்தோற்றும் ஆச்சரியப்படுவார்கள்.

## 1148. சத்தகன்னிகளை காட்டுஞ் ஜாலம்.

ஜாலக்காரன் முன்போலவே இரவில் ஜனங்களை ஒரு மைதானத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் அவர்களைப்பார்த்து இதுதா அந்தமார்க்கமாகயிருந்து எழு கன்னிகஇ வரும் விநோதத்தைப் பாருங்களென்று ஜெகஜாலக்கருவையும் கலந்து விரலில் தொட்டு மாயாசத்தி மந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து கருவை எழு எலுமிச்சம்பழமெடுத்து அதின்மேல்தடவி எழுமூலையிலும் போட உடனே சந்திர பிரகாசம்போல் எழுகன்னிகள் அந்தமார்க்கத்தில் தோற்றமாவார்கள் அப்போது பார்க்கும் ஜனங்களெல்லாம் பேசிக்கொள்ளுவார்கள் என்னவெனில் இப்பேர்கொத்த ஸ்திரீயை நாம் எந்த பிரப்பிலும் காண்பதரிது இப்போது ஜாலற்காரனல் பார்த்து மகிழ்ந்தோமென்று புகழ்வார்கள்.

## 1149. நூறு சிரசுள்ள மனிதனைக் காட்டுஞ் ஜாலம்.

ஒருபொருய அறைவீட்டை சுவர்முதலானதும் சுத்தபபடுத்தி தில்லைப்பாலும திமிர்பாஷாணமும் கலந்து சுவற்றில் சித்திரக்காரனை கொண்டு விநோதமாக நூறுதலையும் இருநூறுகண்ணும் இருநூறு கையும் இரண்டு காலுமாக எழுதிமுன்னதாகவே வைத்து அந்த அறைக்குள் ஒருவரும் போகாமற்படிக்குசாத்திப்போட்டு வைக்கவேண்டும் இரவானவுடன் ஜாலக்காரன் ஜனங்களை அழைத்துக்கொண்டு அரை வீட்டைத் திறக்கின்றேன் அதில் நூறுசிரசும் இருநூறு

கண்ணும் இரநூறு கையும் இரண்டு காலுமாக சூரியப்பரகாசம்போல் தோற்றும் விநோதத்தை பாருங்களென்று உடனே அறைவீட்டின் கதவைத்திறந்து காட்ட மேற்கூறியதுபோல் தோற்றும் கண்டோர்களெல்லாம் கண்பூர்த்து இது அர்ப்புதமான வித்தையென்று ஆச்சரியப்படுவார்கள் அப்போது நீ இதோ மாயமாகச் செய்கிறேனென்று கொஞ்சம் கற்பூரத்தை கொளுத்திவைக்க உடனே மறைந்துவிடும் அப்போது அனைவரையும அரையைவிட்டு வெளியேபோகச்செய்து கதவைச்சாத்திக் கொள்ளவேண்டும்.

## 1150. அந்தரத்தில் ஆட்டுத்தலை காட்டும் ஜாலம்.

ஒரு கொம்புள்ள ஆட்டுத்தலையைக் கொண்டுவந்து ஜலம்விட்டுக்கழுவிசுத்தபடுத்தி அத்த தலைக்கு மஞ்பள் பூசி குங்குமமிட்டு அதின் வாயில் ஒரு ஒலுறுச்சம் பழத்தை வைத்து பின்பு ஜனங்களைப்பார்த்து இதோ இந்த ஆட்டுத்தலையை மேஜைமேல் வைத்து மூடிவிடுகிறேன் இது அந்தரமார்க்க மாகப்போய் நிற்கும் விநோதத்தைப் பாருங்களென்று உடனே ஜெகஜாலக்கருவையும் இந்திரஜாலமையும் ஐங்கோலக்கருவும் ஒன்றாய்க்கலந்து விரலில்தொட்டு ஜெபித்து இந்த ஆட்டுத்தலை அந்தரமாகநிற்பயிபோல் தோற்றச்செய்வரயென்று கருவை ஆட்டுதலையில் தடவி மேசைமேல்வைத்து ஒரு கூடையைப்போட்டு மூடிவிடவேண்டும் சற்றுநேரம்பொருத்து பார்க்க கூடைக்குள்ளிருந்த தலை அந்தரமாக போய் நிற்கும அனைவரும் அதிசயப்படுவார்கள் ஆனல் நீ வேதாளத்தை உச்சாடனம் செய்துக்கொண்டே யிருக்கவேண்டும்.

## 1151. சிம்பத்தின்மேலேறி காளியிருப்பதாக காட்டும் ஜாலம்

முன்போலவே ஒரு அறையை சுத்தப்படுத்தி அந்த விடுதி அறையின் சுவிற்றில் சித்திரமெழுது வோரைக்கொண்டு சிம்பவாகனமாம் அவ்வாகனத்தின்மீது பத்ம்ரகாளி குந்தியிருப்பதுபோல் எழுதி அந்த விடுதி அறை கதவைச்சாற்றி தாள்போட்டு வைத்திருக்கவேண்டும் இதுவானவுடனே ஜனங்களை அழைத்துக்கொண்டுபோல் இதோ இந்த அறைக்குள் சிம்பவாகனத்தின்மேல் பத்திரகாளியம்மன் குந்திக்கொண்டிருக்கும் விநோதத்தை பாருங்களென்று உடனே அந்த வீட்டின் கதவைத்திறந்து காட்ட அறையிலுள் பாரப்போர்கண்களுக்கு சூரியப்பிரகாசம்போல் சிம்மவாகனத்தின் மீது பத்திரகாளியம்மன் தோற்றுவாள் அதைக்கண்ட யாவரும் ஆச்சரியப்படுவார்கள் இது ஜாலவித்தையல்ல மகாமந்திர வித்தைப்போலிருக்கிறதென்று அந்தகாளிகாதேவியைத் தொழுவார்கள் ஜாலக்காரன் அப்போது அவர்களைப்பார்த்து இதோ அம்மனுக்கு கர்ப்பூரங்கொளுத்தி வைக்க சிம்பவாகனமும் காளியும் மறைந்துபோய்விடும் அப்போது நீ சற்பூரம் அவிதற்கு முன்னமே அனைவரையும் அறையைவிட்டு வெளியேபோகும்படிசெய்து கதவைச்சாற்றி தாள்போட்டு கொஇளவேண்டும்.

## 1152. நெருப்பு மீதில் நடக்கும் ஜாலம்.

ஒரு சிறிய மைதானத்திற்சென்று இரண்டு அக்கினிகுண்டம்வெட்டி அந்த குண்டம் ஒன்றில் கட்டிடகளைப்போட்டுகொளுத்தி தியானது தணிந்தபின்பு

அந்தநெருப்பை பறப்பி அக்குள்ள அனைவரையும் பார்த்து இதோ இந்த நெருப்பின்மேல் நடக்கும் விநோதத்தைப் பாருங்களென்று மாயாசத்திவந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து மறைவுமையைத் திலர்தமிட்டுக்கொண்டு நெருப்பை பரப்பிவைத்திருக்கும் குண்டத்திலிறங்கி உலாத்திக்கொண்டிருக்க பார்ப்போர்கண்களுக்கு நெருப்பின்மேல் உலாத்துவதுபோலிருக்கும் அனைவரும் பிரமித்து ஆச்சரியப்பட்டு அக்கினிதேவன் வசியம் செய்துகொண்டானென்றும அல்லது வாலை வசியமோவென்று பற்பலரும் பலவிதமகாப்பேசி உன்னைப்புகழ்ந்து கொண்டாடுவார்கள்.

## 1153. கோணிப்பையில்போட்டு கட்டியமனிதன் மாயமாய்போகும் ஜாலம்

ஜாலமாடும் சபையில் வேடிக்கைப் பார்ப்பதற்கா கூடியிருக்கும் திரளான ஜனங்களுக்கு முன்பாக வேடிக்கைகாட்டுவேன் சிவப்புத்துணியினல் தைக்கப்பட்ட ஒரு பையை யாவருக்கும் செமமையாய்த்திறந்து காட்டியபிறகு அதனுள் ஒரு மனுஷனைப் போட்டு அந்தப் பையின் வாயைசேர்த்துப்பிடித்துப் பிடித்துப் பலமாகக்கட்டி முத்திரைப் போட்டபின் பையின் வாய் சரியாகக் கட்டப்பட்க் அதற்கு சரியாய் முத்திரை விழுந்திருக்கும் தாவென்று பரீட்சைப் பார்த்துடு கொள்ளலாம் பிறபு திரைவிடப்படுகிறது இரண்டு நிமிஷத்திற்கு பிறகு திரை உயர்த்தப்படுகிறது அப்போது மனிதன் நின்றூர் கட்டுடைமுத்திரையுடன் சபையானது பக்கத்தில் வைக்கப்பட்டடிருக்கும் அந்த பையின்கட்டை அவிழ்க்காமலும் மனிதர் எவ்விதமாய்த்தப்பித்து வெளியே வந்தானென்று ஆச்சரியப் படுவார்கள்.

## 1154. மேற்கூறிய வித்தையாட சூட்சுமம்.

ஜகலவித்தை செய்பவர்கள் சமயத்திற்கு தககபடி பலவிதமான பதடிவார்த்தைகள்கூடி ஜனங்களுடைய கவனத்தை தம்வசப்படுத்திக் கொள்ளவேண்டியது மிகவும் முக்கியம் ஏதெனில் கவனிக்காதபடி எளிதில் நிரைவேற்றிக்சொள்ளலாம் என்க.

இந்த ஜாலத்தில் வேடிக்கைகாட்டுவோர் ஒரு மனிதனைக்கொணடு வந்து சபையோர்களுக்கு முனனிருத்தி இவர் மகா பெரியதிருடன பல தடவைகளில் பிடித்து கட்டிவைத்திருந்தும் ஓடிப்போய்விட்டான இப்போது இவனை அதிஜாக்கிரதையாய் பையிற்போட்டு கட்டி முத்திரைவைத்து விடுகிறேன இனியவன தப்பித்துக்கொள்வதற்கு எதுகாமிராதென கூறி சிவப்பு பச்சைதுணியினற் தைக்கப்பட்ட ஒரு பையாவருக்கும் காணபித்து அவர்கள் செம்மையாம் புரட்டிப்புரட்டி பார்த்தபிறகு அதைவாங்கி அதர்குள் மனிதனைப்போட்டு பையின் வாயை சேர்த்துப்பிடிங்கிருன் அந்த மனிதர் பைக்குள்ளே நுழைவதற்கு இஷ்டமில்லாதவனபோல் பலவித ப்ரசாங்குசள்செய்து கடைசியாய் பலவந்தத்தின் மேல் அவப்னைபிடித்து உள்ளேபோகிருன அந்த மனிதனே தான அடைப்பட்டிருக் கின்றப் பைப்போல் வேறொருபை தான் இடுப்பில் ஒருவருக்குந்தெறியாமல் மறைத்துவைத்திருக்கிறனே உள்ளேபோனவுடன் தான் தப்பித்துக்

கொணடு ஓடிப்போகிறேனென்று திமிரி பலவிவபாசாங்குசெய்து பைக்கு அசைவு கொடுக்கும்போது மெதுவாய் தன இடுப்பிலிருக்கிற பை எடுத்து அதன் வாயை ஒனருகச்சேர்த்து வேடிக்கைக்காட்டுபவன கையில் நுழைத்து விடுகி றேன அவன அதை உபாயமாய் தன்கையில் வாங்கிக்கொணடு அப்பையின் வாயை வெளியிலெடுத்துக்கொணடு மேல்பையின் வாயை தன்கையில் அடக்கிக் கொணடு கெட்டியாய் சுமந்து கொள்ளுகிறுன் இந்த சூட்சம் நடக்கும்போது இவன்வாய் பிதிர்யிருக்கவில்லை ஜனங்களுடைய கவனத்தை தன்னுடைய நட வடிக்கைகளினுல் சிரக்கும்படி பலவிதபகடி வார்த்தைகள் கூறு கை விட்டுவிட் டால் திருடன் ஓடிப்போய் விடுவானென்றுசொல் இரணடுபையின வாயையும் வெகு ஜாக்கிறதையாய் பிடித்துக்கொணடு யிருக்கிறுன மேலே கூறியவாறு வெளிப் |பையின்வாய் அவன கைக்குள் மறைந்தும் உள்பையினவாய் கைவெளி யில் யாவருக்கும் தெரியும்படியாகவு மிருக்கிறது இப்போது ஜனங்கள்பார்வைக் குத்தோற்றப்படும் பையின் வாய்தான திருடன அடைப்பட்டிருக்கின்ற பையின் வாய்என்று யாவரும் நினைத்திருக்கிறுர்கள் பிறகு வித்தைக்காரன் ஜனக் கூட் டத்தில் ஒருவனை அழைத்து ஒருவருடைய மோதிரத்தை வாங்கி அதற்வள் போட்டு பலமான கயிற்றினுல் கட்டும்படி ஏவுகிறுன் அவ்விதமாகவே கட்டி முத்திரை போடப்படுகின்றது கட்டும் முத்திரையும் உட்பையின் வாயில் விழுந் திருக்கிறதேயன்றி மனுஷன் அடைபட்டிருக்கும் வெளிப்பையின்வாய் கட்டு முத்திரை விடப்படுகிறது அப்போது மேற்படி திருடன் ஒழுங்குவெளிப்பையை உடுத்து ஓரிடத்தில் ஒளித்து வச்சிவிட்டு கட்டுடனும் முத்திரை யுடனுமிருக்கிற உள்பைய் எடுத்து மேஜைமேல் வைத்துவிட்டு பக்கத்தில் நின்றுக்கொண்டிருக் இந்த வேலை வெகு சீக்கிரத்திலாகவேண்டும் மீண்டும் திரை திறக்கப்படவேமுத் திரைபோட்டபைய் ஜனங்கள் பரிசோதனைசெய்து பார்க்கிறுர்கள் கட்டு கட்டி னபடியும் முத்திரைபோட்டபடியுமிருக்கக் கட்டையவிழ்க்காமலும் முத்திரை உடைக்காமலு மெவ்விதமாய் மனிதன் வெளியே வந்தானென்று சனங்கள் பிர மிப்பார்கள் என்க.

## 1155. பை வித்தை.

கருப்புதுணியினுல் ஆள்பூரும்படியானபைய் இரண்டுசெய்து அதில் ஒருபை மறைத்துக்கொண்டு மற்றொருபை யாவருக்கும் செம்மையாகத்திறந்து காட்டிய பிறகு தங்களுள் ஒரு மனிதன் அழைத்து சபையோர்களுககுக்காட்டி இந்த மனி தனை இந்த பையில்போட்டு கட்டி பந்தோபஸ்து செய்துவைக்கிறேன் அந்தபந் தோபஸ்துகள் அப்படியேயிருக்க இவன பையிலிருந்து வெளியே ஓடிப்போகும் வேடிக்கைப்பாருங்களென்று மேற்படி மனிதனை அந்தப்பையில்போட்டு வாயை பிடித்து நன்ருய்க்கட்டி முடிபோட்டு சபைநடுவில் வைத்துவிடவேண்டும் மற் றொருபைய் வேறும்பையாக வாயைப்பிடித்துக்கட்டி முடிபோட்டு வைத்திருக்க வும் அந்த ஆளை கட்டிவைத்து பைசுற்றி திரைபோட்டு தந்திரமாக மறப்புமைப் பையின்மேல் தெளித்து சற்றுநேரம்கொருத் திரைவாங்கிவிட மூட்டைகட்டி வைக்க பை ஒருவர் கண்ணுக்குந்தோ்ற்ருது பைக்குள்கட்டிய மனிதனை அவிழ் வெளியேவிட்டுவிட்டு அந்தபைய் மறைத்து வேறே கட்டிவைத்திரும் பைய்

அங்கேவச்சிருக்க யாவரும்பார்த்து இந்த பையிலிருந்தவன் பைய்யும் அவிழ்க்கல் முத்திரையுங்கலைபாமல் எப்படிபாமமாய் போய்விட்டானென்று பிரமைகொள்ளவார்கள்.

## 1156. ஒருவரை ஒருவர்பார்க்க தலையில்லா முண்டமாக தோற்றும் ஜாலம்

ஜாலமாடுமிடத்தில் வேடிக்கைப்பார்க்க வந்திருக்கும் ஜனங்களைநோக்கி இதோபாருங்கள் ஒருவர்பார்க்க முண்டமாகத்தோற்றும் விநோதத்தைப்பாருங்களென்று தலைமண்டையோட்டில் எருஞ்சியிரங்கழிஞ்சியின் தயிலமும் பசுநெய் முத்தெண்ணெய் எள்ளெண்ணெய் இலுப்பெண்ணெய் வேப்பெண்ணெய் புங்கெண்ணெய் புன்னையெண்ணெய் பன்றிநெய் கழுதைநெய் இவைமுதலானதும் ஒன்ருய்க்கலந்து மேற்படி தலைமண்டை ஓட்டில்விட்டு அத்துடன் ஐங்கோலக் கருவையும் விட்டு மெல்லியதுணியை வத்தியாகக் திரித்துப்போட்டுதீபமேற்றி மாயாசத்தி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபிக்கஅந்த தீபத்தைப்பார்த்து மனிதரைப் பார்த்தால் தலையில்லாமுண்டம் போல தோற்றும் அப்போது சபையிலுள்ளவர்கள் அவரவர் தலைகளை தடவிப் பார்த்துக் கொள்வார்கள் சிலர் மிரளுவார்கள் தீபத்தை நிருத்திவிட எப்போதும்போல் சிரசு யிருப்பதாகத் தோன்றும் ஆனல் இந்தவித்தை இரவிலாடவேண்டு.

## 1157. கண்ணேய் மருந்து வித்தை.

ரசம் விராகனெடை இரண்டுதுத்தி நாகம விராகனெடை ஒன்று காரியம் விராகனெடை நாலுசங்குவிராகனெடை எட்டுதாம்பிரம் அரப்பொடி விராகனெடைபதினறு எலுமிச்சம்பழச்சாற்றில் இந்த திணுசுகளைச் சேர்த்து கல்வத்தில்விட்டு மூன்றுநாள் அறைத்து மாத்திரைசெய்து சகல நேத்திர ரோகங்களுக்கும் உபயோகப்படுத்தலாம.

## 1158. பிரதி எடுக்கும் இங்கி வித்தை

அவுன்சு சாராயகச்செக்கை கியாழத்தில் கொஞ்சம் படிகாரத்தைக்கலந்து சக்கரையும் சோத்துப்பும் சேர்த்துக்கொள்ள இங்கியாகும்.

## 1159. மல்வலி தீர்க்கும் வித்தை.

இரண்டுதிரான் கற்பூரத்தை ஒரு அவுன்சு தேவதாரி தயிலத்தில் போட்டுக் கரைத்து பல்லீரலில் உபயோகிக்க பல்வலி உடனே தீரும்.

## 1160. மூக்குல் உதிரம் விழுதலை நிருத்தும் வித்தை.

வாயில் கொஞ்சம் காகிதத்தையாகிலும் மிட்டாயாகிலும கொஞ்சம் செவ்வையாய்த் தாள்கள் அசையும்படி மெல்ல உதிரம் விழுதல்நிற்கும்.

## 1161. சிறுத்திரிமப்பன் செய்யும் வித்தை

சிறுத்திரிமப்பன் செய்யவேண்டில் பின்வரும்வஸ்துக்கள்தேவை அதாவது சுத்திசெய்த தாம்பரம் 50-விராகனெடை பகீஷி 3-விராகனெடை நவாசாரம்

ஒண்ணேமுக்கால் விராகனெடை முக்காலரிக்கால்வீசைகாய்ந்தாரின சுண்ணும்பு டார்ட்டா ஒன்றுமசாராயப்பீப்பாவில் ஒட்டிக்கொண்டிருக்கும் வெண்பிகின் நா ன்ரைவீசை தாம்பிரம்பூசியில் உருக்கப்படுகிறது.

### 1162. மேல்காத்துகவியா மெழுகுவத்தி செய்யும் வித்தை

ஓர் சணல்துணியில்பொடித்த உப்பை பாப்பி மெழுகுவத்திக்கு சுற்றிவிட்டு தீபமேற்ற மேல்காற்று கவியாதிருக்கும்.

### 1163. பொன்னிங்கி செய்யும் வித்தை.

இது அச்சாபீஸ்காரருக்டி மிகவுபயோகம் இதைசெய்து மிகலாபமடைய லாம் வெள்ளைகோந்தை மைபோல்பொடிசெய்து ஓர்பீங்கான் உரலில்வைத்துக் கொண்டுஅத்துடன் காரமான பிராந்தியைக்கலந்து மிகநீராய் இருக்கும்படிவை த்து கொஞ்சம் தங்கசன்னத்தைஇந்தப்பிசின் ஜலத்தில்போட்டு விரலால் செவ் வையாய் கரையும்படிஇயவு முழுதும்வைக்க கலப்பு குழம்பாய்விடும் பட்சத்தில் மஞ்சள் கலந்தகோந்து ஜலத்தைக்கொஞ்சம் சேர்க்கவும்.

### 1164. எஃகுமேல் கிலிட்டு கொடுக்கும் வித்தை

எஃகு சாமானை செவ்வையாய் துடைத்து மெருகு கொடுக்கவும் நைட்ரே முரியடித் திராவகத்தில் பொன்னைப்போட்டு தண்ணியாக்கிக் கொள்ளவும் எஃகு சாமானை இந்தக்கலப்புல் தோய்த்து உடனே பச்சைஜலத்தில் தோய்க்க பௌ ரன்மயமாகிவிடும்.

### 1165. மெழுகுவத்தி செய்யும் வித்தை.

ஆடுமாடுகளின் கொழுப்பை ஒரு பாத்திரத்தில் போட்டுஅடுப்பிலேற்றி காச் சிவைத்துக்கொண்டுமமல்லியதாய்பின்னப்பட்ட நூல்வத்தியைத்தோய்த்து உல ரவைத்து உலர்ந்தபின் மறுபடியும் தோய்த்து வேண்டிய பரியலமான மாக்கிக் கொள்ளவேண்டியது.

### 1166. கில்டு கொடுக்கும் வித்தை.

பொத்தான் முதலிய சிறியவஸ்துக்களுக்கு கிலிட்டு போடவேண்டுமாயின் பொன்னை பாதரசத்துடன்கலக்கவேண்டும் கிலிட்டு கொடுக்கவேண்டியதை அக் கினிதிராவநெத்தில் சுத்திசெய்து ஒரு பிரஷினல் பொன் பாதரசக் கலப்பை பூசவேண்டியது.

### 1167. கண்ணாடி செய்யும் வித்தை.

கடல்மணலை செவ்வையாய்ச்சுத்திசெய்து உலர்த்திக்கொள்ளவேண்டியது கார்பேனேட்ஆப்டோஷ் மணல் இவ்விரண்டையும் இரும்புச்சட்டிகளில்போட்டு எறித்து செவ்வையாய் காய்கிற சமயத்தில் நாகமேனுவை ஆச்சைட் ஆப்டெல் கூடம்போல் சீக்கிரம் உருகும் கண்ணாடி அல்லிதமாய்பிருக்க மாங்கனீஸ் என்ப தையும் பாஷர்ணத்தையும்சேர்க்கவேண்டியது தினுசுகள் பொன்னிறமாய் உரு கியபின்னர் வேலையாட்கள் ஊதுகோல் துணியில் சிறிதுசிறிது கண்ணாடி குழம் பையெடுத்து இஷ்டமான பாத்திரங்களை செய்கிறார்கள்.

### 1168. சப்பு செய்யும் வித்தை.

அறை அவுன்சு தேங்காய் எண்ணெயை ஒரு பீங்கான் கிண்ணத்தில் விட்டு கொஞ்சம் சாவ்ஷடிக்கோடா என்னும் உப்பையும சுடுஜலமும் விட்டு கொதிப்பிக்கவும் இப்படிசெய்ய எண்ணெய் மறைந்துபோய்விடும் கொஞ்சம் காய்ச்சியபின்னர் கொஞ்சம் உப்பைப்போட சோப்பு வெளிபடும் பிறகு அச்சுகளில் நீவார்த்திக்கொள்ள வேண்டியது அச்சுகளுக்கு வாசனைத் தைலத்தைத் தடவி இஷ்டமான வாசனைவரச்செய்யலாம்.

### 1169. அதிசாரபேதியை நிருத்தும் வித்தை.

ஒருபலம் சுக்கை சன்னமாய் பொடிசெய்து எழுதரம் வஸ்திரகாயஞ்செய்து அறைபலம் வெள்ளைச்சக்கரையுடன் கலந்துசாப்பிட அதிசாரபேதிநிற்கும்.

### 1170. வேறுமுறை பல்வலி தீர்க்கும் வித்தை.

கருவேலன்காயையும் நார்வி சமூலமும் சுட்டு கரியாக்கி எருக்கன்பாலில் உப்புடன்கலந்து புடம்போட்டுபஸ்பம் செய்துகொண்டுபலலீறலில் தேய்க்கவலி கிருமிமுதலியவை நிவாரணமாய்விடும்.

### 1171. வாந்திபேதி நிவாரணமாத்திரை செய்யும் வித்தை.

மிளகு பெருங்காயம் அபின் இவை வகையொன்றுககு காலேவீசம்பலமெடுத்து செவ்வையாய் கல்வத்தில் அறைத்து 12-மாத்திரைசெய்து வைத்திருந்து அந்தசமயத்தில் அறைமணிக்கொருதரம் கொடுக்கிற்கும்எழுமுதல் பதினாலு வயதுள்ளவர்க்கு அரைமாத்திரை கொடுக்கவேண்டும்.

### 1172. நன்னாரி சர்பத்து செய்யும் வித்தை.

பனிரெண்டரைபலம் நன்னாரிவேரை யிடித்து ஒண்ணரைபடி வெந்நீரில் 6-மணிநேரம் ஊரவைத்து வடிக்கட்டி முக்கால்படியாய் வற்றவைத்துஅதில் ஒண்ணரைபலம் சீனிசர்க்கரைக்கலந்து பிசின்பக்கத்தில்பாகுசெய்துக்கொண்டு ரூபாயெடை சர்ப்பத்தில் நாலுரூபாயெடை தண்ணீரைக்கலந்து சாப்பிட சகல மேககாரகங்களும் ஊஷ்ணமும் நிவர்த்தியாகும்.

### 1173. ஓமத்திராவகம் செய்யும் வித்தை.

முருங்கைப்பூ பத்துபலமும் பசும்பால் அறைபடியும் இரண்டையும் கலந்து அடுப்பிலேற்றி எறித்து முருங்கைப் பூருகுழைய வெந்தபிறகு பிசைந்து பிழிந்துச் சக்கையைநீக்கி சாதிக்காய் சாபத்திரி லவங்கம் லவங்கப்பட்டை குராசாணி ஓமம் தினுசுக்கு பலம் ஒன்றுக இவைகளை சூரணித்து வடிகட்டிச் சீனுகற்கண்டு பலம் 15-மேர்படி பாலில் சேர்த்துப் பாகுபதத்தில் சூரணத்தைப் கொட்டிப் பசுநெல் பலம் 5-விட்டு லேகியபதமாய்கிளறி அரவிட்டு தேன் பலம் ஒண்ணே கால்விட்டு பிசைந்து அந்தி சந்தி இரண்டுவேளையம் கொட்டைப்பாக்கவ்வளவு சாப்பிடவும் இச்சாபத்தியம்.

## 1174 ஸ்திரீகள் தேகபுஷ்டிக்கு செய்யும் வித்தை.

உளுந்துமாவுபடிகால் வெள்ளைவெங்காயம் பலம்பத்து பசுநெய் பலம் 7 அரை பனவெட்டு பலம்ரெண்டரை சீரகம் பலம் ஒன்று பரங்கிச்சக்கை பலம்1 சாதிக்காய் பலம்கால் இவைகளில் வெந்தயத்தைபொடியாய்த்திருத்தி உளுந்துமாவுடன்சேர்த்து ஏடுகெட்டி பாலும் தண்ணீரும் கலந்து அடிபானையில் வைத்து புட்டவித்து உதிர்த்து கைசரக்குகளைவருத்து வடிகட்டி பாலில் சுத்தித்து நிழலிலுணர்த்தி தூவி நெய்விட்டு பனவெட்டுசேர்த்து பிசைந்து இரண்டுவேளையும் எலுமிச்சங்காயவ்வளவு பிரவிடையான பெண்களுக்கு புட்டிற்குபதிலாய் 8-7 நாள் கொடுத்துவந்தால் உதிரவோட்டம் நீங்கி இடுப்புக்குபலமுண்டாகி தேகவலிவேறும் ஸ்ரீகளுக்குட்ள ரத்தவோட்டம் யாவும் நிவர்த்தியாகும் சுரோணிதம் சுத்தியாதும் யோகப்பியாசிகள் இதை உபயோகித்து வந்தால் வாசி சரியாக நிற்கும் இச்சாபத்தியமாக யிருக்கவேண்டும்.

## 1175 மூலக்கிராணி நிவாரணி வித்தை

பசும்பால் படி கால் கால்பாகம் சலம்விட்டுக் காய்ச்சுமபோது அசுவகெந்தி பறங்கிச்சக்கை அழிஞ்சிவித்து நீர்முள்ழ வித்து கசகசா வகைக்குப்பலம்பால் இவைகளைப்பால் விட்டு அறைத்து மேற்படி பாலில் குழம்புகுண்டக்காய்ச்சி சக்கரைபலம் இரண்டரைபோட்டு இரக்கி ஆறவைத்து கொண்டு காலை மாலை ஆறுவேளை சாப்பிட மூலக்கிராணி அஸ்திசுரம் தேககாந்தல் அஷ்டமா பித்தி க்ஷயந் தீரும்.

## 1176 சுகபேதிக்குழம்பு செய்யும் வித்தை

பேரீச்சம்பலம் அரை கொடிமுந்திரிபபழம் பலம் அரை சுத்திசெய்தவாளம பலம் அரை பூரம் விராகனெடை கால் தேன்விட்டரைத்து மாட்டிசிமிளில் வைத்துக்கொண்டு குன்றிமனிப் பிரமாணம் சிசுமுதல் விருத்தர்களுக்கு ஆளபலமறிந்து கொடுக்கவும் இச்சாபத்தியம்.

## 1177 விநோத கண்தயிலம் செய்யும் வித்தை

செந்தாழைம்பு பலம்-1 ரெட்டை நந்தியாவட்டைப்பூ பலம்-4 புளிப்பு மாதளம்பூ பலம்-4 செந்தாமரை பலம்-6 இவைகளை இடித்து ரசம பிழிந்துகொண்டு அந்த ரசத்துடன் கூறல் எண்ணெண்ணெல் பலம் இரண்டரைவிட்டு இளம்பதமாய்க்காய்ச்சி வடித்த தைலத்தில் பூத்தேன் பலம் லவுங்கப்பூநக்கியதுவிராகனெடை 1 வெள்ளைமிளகு விராகனெடை அதை் சிறு கற்கண்டு விறாகனெடை 1 இவைகளை மேற்படி தைலத்தால் மைபோல் அறைத்து சேர்த்து குப்பியிலடைக்கவும் உருத்திரகாயத்ரி ஆயிரத்தெட்டு உருஜெபித்து தங்களாலியன்ற அன்னதானஞ்செய்து சாபங்கள்நீக்கி கண்ணில் காலை மாலை திட்ட கண்ரோகம் தோண்ணூற்ரும் போம்.

## 117ə ஸ்நானத்திற்கு தயிலம் செய்யும் வித்தை

நல்லெண்ணெய் படி 2பசும்பால் 2படி இரண்டும் ஒருபாண்டத்திலிட்டு மிளகுபடி 1 நன்ருக்பாலிலரைத்து மேற்படி பாலில் கலக்கி மஞ்சள் பலம 1

அதிமதுரம் பலம் அரை கருஞ்சீரகம் பலம் கிராம்பு பலம் 'கால் அரிசி திப்பிலி பலம் கால் இலுப்பைப்பட்டை பலம் அரை இவைகளைப் பசும்பாலால் நெகிழ வரைத்து ஷெ எண்ணெயில் கலக்கி அடுப்பிற் கிறுதீயாகாய்ச்சி பக்குவமணம் உண்டாகும்போது வடிந்து அதில் புனுகுசட்டம் பலம் 1 தைலம் இறக்கியதை யுஞ்சேர்த்து வைத்துக்கொண்டு ஸ்நானஞ் செய்ய ஙண்டத்திற்கு மேற்பட்ட சகலவியாதிகளும் தீரும் தலைநோய் கண்கசிபபு முதலியவைகள் தேய்க்கமாகும் இச்சாபத்தியம்.

## 1179 க்ஷயகமல சுரசம் செய்யும் வித்தை

உத்தாமணியிலை குப்பைமேனியிலை சங்கிலை தூதுளை ஆற்றுமுஅளியிலை செம்முள்ளியிலை துளசி இவை வகைக்குப் ஒருபிடிஇடித்துப் பிட்டுவைத்துப் பிழிந்துக்கொண்டு காசிடை தேன்விட்டு மூக்கு பவழபற்பம் சேர்த்துக்கொடுக்க வும் இச்சாபத்தியம்.

## 1180 அறைப்புகட்டியை போக்கும் வித்தை

சவுக்காரம் கித்தண்டவெள்ளை நீ விட்டு அரைத்துப் பூசக்கரையும் கரையா விட்டால் அதன்மேல் புளியும் சேராங்கொட்டையும் சேர்த்து அடைதட்டி வை த்துக்கட்டி மூன்றும் நாள் முவிழ்க்கவும் இதுபோலல்புளியும கால்பலம்வெள்ளை பாஷாண முஞ்சேர்த்த பில்லையுங்கொட்டலாம் கட்டி உடையும் பாதைதீரும்.

## 1181 தோஷசுரக்கியாழ வித்தை

சிறுதேக்கு பாற்படகம் முதக்காசு சீந்திற்கொடி நன்னாரி சிறுகாஞ்சொரி தேவதாரம் கோஷ்டம் பேய்ப்புடல் சுக்கு இவைகள் சரியிடைக்கு தண்ணீரில் எட்டொன்றாய்க் காய்ச்சி இரண்டு மூன்றுபோது தினம் கட்டு மாத்திரையில் சாப்பிடத்தீரும் வியாளி பித்த அஸ்திசுரம் இவைகள் தீரும்.

## 1182 திராவகம் செய்யும் வித்தை

பொட்டுப்பும படிகாரமும் சரியிடைசேர்த்து ஒரு குடுவையிலிட்டு மேலே வாலைவைத்துக் திராவகமிறக்கி அந்த திராவகத்தை தலைநோய் கழுத்துநோய் நரம்பிசிவு முதலியவைகளுக்கு ஒரு அளிதடவகுணமாம் வாலைரசத்தை இத்த திராவகம் விட்டு இரண்டுசாமம் அரைத்து சீலைமண் செய்து மணற்குள் வைத்து நாலுசாமம் எரிக்க செந்தூரமாம்.

## 1183 வெள்ளியை பஸ்பம் செய்யும் வித்தை

சரிகைவெள்ளி பலம்கால் உருக்கி ஆவட்டு பாதரசம் விராகனெடை 5வி ட்டுக் கலக்கியபின் எடுத்து அருக விராகனெடை 2க்குசிறுநீர் விட்டறைத்து மேற்படி களங்குக்கு கவசமிட்டு காமந்த பிரு மகிழம்பூ கவசஞ்செய்து காய வைத்து மூன்று சீலை மண்செய்து 15 எருவில் புடமிடபஸ்பமாகும் பண்விடை நெய்யில் லேகியத்தில் அனுபானம் மேகம் வெட்டைகள் நீங்கும் தாதுபுஷ்டி தேகம் அழகிடும் மேனிகொடுக்கும் இச்சாபத்தியம்.

### 1184. வேறுமுறை பேள்ளி பஸ்பிக்கும் வித்தை.

காலுரூபாய் வொன்றையெடுத்து ஈறைத வாழைமாத்தடியில் மூன்றுநாள் சொருகிவைத்திருந்து எடுத்துக்கொள்ள வேண்டும் ஜாலமாடும் சபையில் வேறொரு காலுரூபாயை யெடுத்து அனைவருக்குங்காட்டி இந்த காலுரூபாயை கல்வத்திற்போட்டு அறைத்து பஸ்பமாக்குக் காட்டும் விநோதத்தை பாருங்களென அந்த காலுரூபாயை கைபிரட்டினால் தந்திரமாக மறைத்து மேற்படி ரூபாயைப் போட்டு அறைக்க பஸ்பமாகிவிடும் ஆச்சரியப்படுவரர்கள்.

### 1185. ஆக்கிராணித்தூள் செய்யும் வித்தை.

சன்னராஷ்டம் மிளகு கடற்பாலை சுக்கு வசம்பு அதிமதூரம் இவைகளை இடித்து வஸ்திரகாயஞ்செய்து அந்தத்தூளை ஆக்ராணிக்க ஜன்னிநீங்கும்.

### 1186 பால்கசேகு செய்யும் வித்தை.

பால்படி 8 அதை அயைதிட்டம் சுண்டக் காய்ச்சி அதில் முருங்கைப்பூ பலம் 4 நன்னாரிவேர் பலம் 2 ஆதாளம்பழம் மஞ்சாநெருஞ்சிவேர் மிலைப்பனங்கிழங்கு தண்ணீர் விட்டான் கிழங்கு அதிமதூரம் இவைகள் வகைக்குப் பலம் 4 ஏலரிசி பலம் 2 இவைகளை பாலரல் அறைத்து மேற்படி பாலில் கலக்கி முக்கால் பாகம சுண்டின பக்குவத்தில் சர்க்கரை வீசை ஒன்றுகொட்டி பாகுவரும சமயத்தில் அமிர்தசர்க்கரை பலம் 20 கொட்டி நன்றாக ஈரம் வற்றினவுடன் நெய் பலம் 30 விட்டுக்கிண்டி ஆறினவுடன் தேனுஞ்சேர்த்து கடுகுபதத்திலிறக்கவும் இதைபுன்னைக்காயளவு காலைமாலை இருவேளையும் சாப்பிட்டுவர மேகரோகங்கள் நீங்கு வீரியவிருத்தி அதிகமாகும் இச்சாபத்தியம்.

### 1187. பீப்பாய் வேடிக்கும் ஜாலம்.

ஒரு பீப்பாயில் நிறைய தண்ணீர்விட்டு நன்றாக அடைத்து சற்றுநீளமான சிறியகுழலை அதில் முறிக்கினபின் அந்தக்குழவில் ஒரு படி ஜலம விட்டால் உடனே அந்தப்பீப்பாய் வெடித்துப்போகும் அனைவரும் பிரமிப்பார்கள்.

### 1188. மனிதனை தூக்கும் ஜாலம்.

சுமார் 4-அடி குறுக்களவுள்ள இரண்டு வட்டமான மரப்பலகைகளை எடுத்து ஒன்றுக்கொன்று சுமார் இரண்டடி தூரமாய் இருக்கத்தக்கதாமக தோலால்சுற்றி கச்சைபோல்மாட்டி துருத்திபோல தண்ணீரைச் சிந்தாமல் காக்கும்படி பக்குவம் செய்து துருத்தியின்மேற் பலகையில் ஒருவனை நிற்கச்செய்து குழலை நிமிரவைத்து அதற்குள்ளாகத் தண்ணீரைவிட்டால் தண்ணீர் நிரம்பநிரம்பமனிதனையும் மேற்பலகையோடு தூக்கு பார்பபோர் கண்களுக்கும் ஆச்சரியமாயிருக்கும்.

### 1189 புட்டியின் விநோத ஜாலம்.

ஒருவெரும் புட்டியை எடுத்து கார்க்கினால் அடைத்து வாயில்கயறு கட்டி கிணற்றிலாவது குளத்திலாவது ஆழத்தில் போகும்படி விட்டு சற்றும்நேரத்திற்குப்பின் எடுத்துப்பார்த்தால் கார்க்கு புட்டிக்குள் தள்ளப்பட்டு புட்டியில் தண்ணீர் நிறையவிருக்கும் ஆச்சரியப்படுவார்கள்.

## 1190. ஈயத்தகடு ஜலத்தில் மிதக்கும் ஜாலம்.

ஒரு அண்டு ஈயத்தைச் சப்பையாகவும் வட்டமாகவும் தட்டி ஒரு குழையின் வாய்ப்புறத்தில் ஜலம் உள்ளே நுழைய ஏவில்லாதபடி பிடித்துத் நீருக்குள் கொஞ்சம் ஆழத்திற் சேர்ந்தவுடனே ஈயத்தை பிடித்திருந்த கையை நீக்கினல் ஈயத்தகடு கீழே விழுந்துபோகாமல் மேலோடு ஒட்டினது போலிருக்கும் ஆனல் வெறும் ஈயத்தகட்டை மாத்திரம் ஜலத்தில் விட்டால் உடனே அமிழ்ந்து போகும்.

## 1191. ப எழுத்தின் விநோத ஜாலம்.

ப என்னும் எழுத்தைப்போல் ஒரு குழையைவளைத்து நிமிர்த்துப் பிடித்து ஒரு பக்கம் வாயில் ஜலம்விட்டால் இருபக்கத்திலும் ஜலம் ஒரே மட்டமாய் நிற்கும் ஆனல் ஒரு பக்கத்தில் ஜலமும் மற்றொரு பக்கத்தில் எண்ணெய்யும் விட்டால் எண்ணெய் உயரமாயும் தண்ணீர் அதனிலும தாவ்வாயுமிருக்கும். கண்டோர் ஆச்சரியப்படுவார்கள்.

## 1192. ஐங்கூட்டுத்தயிலம் செய்யும் வித்தை.

வேப்பெண்ணெய் புங்கெண்ணெய் எள்ளெண்ணெய் முத்தெண்ணெய் பின்னையெண்ணெய் இவைகளை சமமமாய்க் கூட்டி காய்ச்சி ஸ்தானம் செய்துவர வாதம் தனுவாதம் மகாவாதம் சன்னிசுரம் தோஷம் நிவர்த்தியாகும்.

## 1193. வீரியவிருத்தி செய்துக்கோள்ளும் வித்தை.

சந்தணத்தூள் பலம் 2 சுக்கு பலம் 2 காசினி விரை பலம் 1 சிரகம் பலம் 1 இவைகளை கல்வத்திலிட்டு அவைத்து பில்லை பில்லையாகச் செய்துலர்த்தி வேளைக்கு ஒரு துலாம்வீதம் கொடுத்து உடனே பன்னீராகிலும் நல்ல ஜலமாகிலும் ஒரு ரூபாயெடை சாப்பிடவேண்டும்.

## 1194. இந்திரியத்தை கட்டிக்கோள்ளும் வித்தை.

நருவிலிபிஞ்சு கருவேலன்பிஞ்சு காட்டுப்பிறண்டையிலை இவைகளை தனித்தனிபாய் நிலவிலுலர்த்தி இடித்துச் சூரணமாகச்செய்து அவற்குச் சரியிடையாய் சக்கரைக்கூட்டி இரவில் போசனஞ்செய்தபிறகு திரிகடி பிரமாணம் புசித்து ஆழாக்கு பசும்பால் சாப்பிடவும் இப்படி பதினைந்துநாள் புசிக்க நீத்திருந்த இந்திரியக்கட்டும் தேகம் காந்திபாகும்.

## 1195. பொன்னுங்கண்ணியின் விநோதம்.

காலையில் எழுந்து பொன்னுங்கண்ணி இலைகலைப்பிடிங்கி வாய்கொண்டமட்டும் மென்று தின்னவும் இப்படி நாற்பது நாளைக்குத் தின்றுவர வீரிய விருத்தி யுண்டாகும்.

## 1196. விந்து கலிதமாகாதிருக்கச் செய்யும் வித்தை.

தாழம்பூவின் உள்ளிருக்கும் விபூதியைபெடுத்து கோழிமுட்டை வெள்ளைக்கருவாலே இழைத்து தண்டில் பூசிப்புணர விந்து சீக்கிரத்தில் கலிதமாகாது.

### 1197. ஜம் கெட்டிபட செய்யும் வித்தை.

எட்டிக்கொட்டை அமுக்கிறைங்கிழங்கு வசம்பு சமனெடையாக எடுத்து பசும்பால் விட்டரைத்து லிங்காரம்புமீது ஒருவாரம் தேய்த்துவர மிகுந்த வலிவு உண்டாகும்.

### 1198. வீரியவிர்த்தி செய்துக்கொள்ளும் வித்தை.

ஜாதிக்காய் அபினி காமப்பூ லவங்கப்பூ இவைகள் வகைக்கு கால்விராக னெடை எடுத்து அரைத்து ஒரு ஊக்குருவியின் வயற்றைக்கீரி குடல் முதலான அசுத்தங்களை நீக்கி அதினுள்வைத்து நூலினுல் தைத்து அதற்குப் போதுமான நெய்யைப் போட்டு பொறித்தெடுத்து எலும்பு போக்கி மெழுதுபோல்அறைத்து வைத்துக்கொண்டு கெச்சக்காய்பிரமாணம் சாப்பிட்டு உடனே ஆழாக்கு பசும் பால் சாப்பிடவும் இப்படி நாற்பதுதாள் சாப்பிட வீரியவிருத்தியும் தேகவலிவும் உண்டாகும்.

### 1199. வீரியவிர்த்திக்கு லேகியம் செய்யும் வித்தை.

ஜாதிக்காய் சாரப்பருப்பு பாதிமிபருப்பு காமப்பூ மாவுசுக்கு தேத்தாங்கொட்டை முருங்கைப்பிசின் முருங்கைப்பூ வவகக்கு இரண்டரை விராகனிடையாக எடுத்து ஒரு கோழிமுட்டை வெள்ளைக்கருவினல் மெழுகுபோல்லறைத்து ஒரு பலம் நெய்யில்போட்டு அறைபலம்சக்கரைகூட்டி அடுப்பேற்றி லேகியம்போல் கிளறிவைத்துக்கொண்டு கெச்சச்காயளவு சாப்பட்டுவர வீரியவிர்த்தியாகும்.

### 1200. இருதய வலிவுண்டாகும் வித்தை.

சிறுலங்கப்பட்டை சிகப்புசிறமான காவி சந்தணத்தூள் வகைக்கு விராக னிடையில் கூட்டி சாப்பிட இருதய வவுலிதரும்.

### 1201. வேறுமுறை இருதயவலிவுணடாகும் வித்தை.

இலவன்கோந்து சுக்கு எலரிசி சோம்பு அதிமதூரம் சந்தணம் வில்வசதை ரோஜாப்பூ வகைக்கு துலா-1 தனியா பலம்-3 சீனகற்கண்டு பலம்-2 இவைகளை சூரணஞ்செய்து முன்பாக கற்கண்டை அடுப்பிலேற்றி ஜலம் கொஞ்சம்விட்டு பாகுசெய்து அதிற் சூரணங்களை கெட்டி பாகமாய்க்கிளறி வேளைக்கு தோலா வீதம் சாப்பிட இருதய வலிவுதரும்.

### 1202. சரீரம் நன்றாகச் செய்யும் வித்தை.

சுக்கு கடுக்கா திப்பிலி வாலுளுவையரிசி சமனுகச்சேர்த்து தேனில் அறைத்து தூதுளங்காய் பிரமாணம் சாப்பிட்டு உடனே ஆழாக்குப்பால் சாப்பிட சரீரம் நன்றாகும்.

### 1203. வதன்சஞ்சீவினி.

திரிகடுகு கிராம்பு வால்மிளகு தக்கோலம் கோக்கர்மூலி சிறுநாகப்பூ பத்திரி சீரகம் அபினி இவைகளை வகைக்கு களஞ்சி நிறுத்தெடுத்து கல்வத்திலிட்டு ஆவின்பால்விட்டு அறைத்து முக்காற்படி பசுநெய்யில் வேகவைத்து நெய்யை

வடிகட்டிக்கொண்டு ஒருகரண்டி நெய்விட்டு பாலும் சாதமும் பொசித்து சுகித்தால் இன்பத்தைக்கொடுக்கும் சந்தோஷத்தை உண்டாக்கும் ஆனல் புளிப்பு தள்ளிவிடவேண்டும்.

## 1204. திசைமுகக்குளிகை செய்யும் வித்தை.

பச்சைகற்பூரம் லவங்கப்பட்டை சாதிக்காய் வகைக்கு விராகனெடையை 2 இதற்குச்சரியிடை வாளம்சேர்த்து குமரிச்சார் விட்டரைத்து உளுந்துப் பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி சீசாவிலடைத்து வைத்துக்கொள்ளவும் அனுபானம் சக்கரையில் ஒருமாத்திரைகொடுக்க பேதியாகும் சுரம் நிற்கும்.

## 1205. பத்திரகாளி வித்தை.

ஜாலமாடுமிடத்தில் கீழே கூடியபடி மேஜையில் ஒரு மரத்தலைத் செய்து வைத்து அதற்குச் சமீபமாய் படத்தில் மெத்தைப்படியைப் போட்டு உயரமாய் வைத்து மேஜையின் அறையில் சுவரைப்போல் காட்டியிருக்கவேண்டும் மேலேயிருந்துக்கொண்டு வரப்பட்ட தகரக்குழையானது அந்தத் தலைக்குள் நுழைந்து அத்தலையின் உட்புரத்திலிருந்து இரண்டுபிரிவாய் பிரித்து ஒருபிரிவு காதின்வழியாகவும் சொல்லும்படி அவைக்கவேண்டும் இவ்வகையான சூட்சுமங்கள் அமைத்துவைத்தபின் அந்தத்தலையின் சாதில் பேசுகிறசப்தம் மேலே நோக்கிச்செல்லும் குழலின் மருதுளையில் காதைவைத்து உற்றுக் கேட்பவர்களுக்கு செம்மைசாய்கேட்பவர்களுக்கு செம்மையாய்கேட்கும் அப்போது மேலேயிருக்கப்பட்ட மனுஷன் அந்தச்சங்கதியைக் கிரகித்துக்கொண்டு அக்குழையிலேயை அதற்குப் பதில் சொல்லவேண்டும் அது அந்தபொம்மை பேசுகிறதுபோல்கேட்கும் அதாவது அந்தத் தலைவாயினுல் பதிலளிப்பதுபோல் தோற்றும் தலைக்குள்ளாகக் குழாய் இரண்டுபிரிவாகப் போகின்றதல்லவா அதில் காதின்பக்கமாக செல்லுங் குழலின் துவாரம் பெரிதாகவும் இருக்கவேண்டும் பூராதனகாலங்களில் இம்மாதிரியான தலையினுல் நடத்த வைபவங்களைப்பற்றி ஆச்சரியப்படுவார்கள்.

## 1206. வேறுமுறை தேள் வித்தை.

இந்திர ஜாலக்கருவை விரலில்தொட்டு வாலைமந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து வேப்பிலையை உருவிக் கீழேபோட தேள் உண்டாகும்

## 1207. வேறுமுறை குளவியாகும் ஜாலம்.

இந்திர ஜாலக்கருவை விரலில்தொட்டு வாலைமந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து புளியன் யிலையை உருவிப்போட குளவி உண்டாகும்.

## 1208. நண்டுதுரக்காயாகும் ஜாலம்.

ஷெ கருவைத்தொட்டு குறளிமந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து கருநொச்சியிலையை உருவிப்போட உருவீப்போட நண்டுதுரக்காயாகும்.

## 1209. வேறுமுறை பூரானுகும் ஜாலம்.

ஷெ கருவைத்தொட்டு சக்காதேவி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து கருவேலனிலையை உருவிப்போட பூரானுகும்.

### 1210. வேறுமுறை செய்யானுதும் ஜாலம்.

மேஷி கருவைத்தொட்டு கொள்ளிமந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து அகத்தியினிலையை உருவிப்போட செய்யானுகும்.

### 1211. கட்டெறும்பாகுஞ் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை கையில்தொட்டு பைரவர் மந்திரத்தை ஆயிரத்தெட்டு உருஜெபித்து மண்ணை அள்ளிப்பாட சித்தெரும்பாகும்.

### 1212. சிற்றெறும்பாகும் ஜாலம்.

இந்தித்ஜாலக்கருவை கையில்தொட்டு வாகி மந்திரத்தை ஆயிரத்தெட்டு உருஜெபித்து மண்ணை அள்ளிபோட சித்தெரிம்பாகும்.

### 1213. வண்டாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை கையில்தொட்டு மாடன்மந்திரத்தை ஆயிரத்தெட்டு உருஜெபித்து முருங்கயிலையை உருவப்போடவண்டாகும்.

### 1214. கிளியாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவு விரலில் தொட்டுக்கொண்டு உருத்திராதேவி மந்திரத்தைஉருஜெபித்து வெத்திலையை உருவிம்ப்போட கிளிகளாகும்.

### 1215. மைனுவாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவு விரலில்தொட்டு சாமளாதேவி மந்திரத்தை உருஜெபித்யி வெத்திலையை உருவிப்போட மைனுவாகும்.

### 1216. புருவாகும் ஜாலம்.

இந்திர ஜாவுக்கருவை விரலில்தொட்டு பத்திரகாளி மந்திரத்தை ஜெபித்து நுணுயிலையை உருவிப்போட புருவாகும்.

### 1217. சிட்டுக்குருவியாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை விரலில்தொட்டு ஜாலக்காளை தியானித்து சீமை அகத்தியிலையை உருவிப்போட சிட்டுக்குருவியாகும்.

### 1218. காடையாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை விரலில்தொட்டு குறளிமந்திரத்தை ஜெபித்து காட்டாமணக்கிலையை உருவிப்போட கரடையாகும்.

### 1219. கௌதாரியுாகும் ஜாலம்.

இந்திரசாலக்கருவைதொட்டு வலதுகையில் பூசிக்கொண்டு இலுப்பையிலையை உருவிப்போட சௌதாரியாகும்.

### 1220. வல்லூரு பட்சியாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவைதொட்டு கொண்டி சாமுண்டீஸ்வரி மந்திரத்தைஜெபித்து பிலாயிலையை உருவிப்போட வல்லூராகும்.

### 1221. ஆந்தைபட்சியாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை விரலில்தொட்டு காளபைரவர் மந்திரத்தை ஜெபித்து ருேவியால்னிலையை உருவிப்போட ஆந்தப்பட்சியாகும்.

## 1222. கோழியாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை விரலில்தொட்டு சக்கலாதேவி மந்திரத்தை செபித்து அத்தியிலையை உருவிப்போட கோழியாகும்.

## 1223. மயிலாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை விரலில்தொட்டு மயானருத்ராதேவி மந்திரத்தை செபித்து புங்கயிலையை உருவிப்போட புள்ளிமயிலாகும்.

## 1224. வான்கோழியாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை விரலில்தொட்டு வராகிமந்திரத்தை ஜெபித்து அரசணிலையை உருவிப்போட வான்கோழியாகும்.

## 1225. காகமாகும் ஜாலம்.

இந்திரஜாலக் கருவை விரலில்தொட்டுக்கொண்டு நீலகண்ட மந்திரத்தை ஜெபிதது ஊமத்தனிலையை உருவிப்போட காகமாகும்.

## 1226. தேனீயாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை விரலில்தொட்டுக்கொண்டு காளிமந்திரத்தை செபித்து வாடியிலையை உருவிப்போட தேனீயாகும்.

## 1227. ஈயாகும் ஜாலம்.

இந்லரஜாலக்கருவை விரலில்தொட்டுக்கொண்டு ஜாலக்காளி தியானித்து அவுரிஇலையை உருவிப்போட ஈயாகும்.

## 1228. தும்பியாகும் ஜாலம்.

இப்திரஜாலக்கருவைதொட்டு வலது கையிற்பூசிக்கொண்டு பைரவர் மந்திரத்தை ஜெபிதது நிண்ணுவாடிசெடி இலையை உருவிப்போட தும்பியாகும்.

## 1229. பிள்ளைப்பூச்சி யாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை விரலில்தொட்டுக்கொண்டு மலையாளபகவதி மந்திரத்தை ஜெபித்து வேளையிலை உருவிப்போட பிள்ளைப்பூச்சியாகும்.

## 1230. பட்டுப்பூச்சியாகும் ஜாலம்

இந்திரஜாலக் கருவை விரலில்தொட்டு மாயாசத்தி மந்திரத்தை செபித்து குண்டுமணியிலையை உருவிப்போட பட்டுப்பூச்சியாகும்.

## 1231. கம்பளிபூச்சியாகும் ஜாலம்

இந்திரசாலக்கருவை விரலில்தொட்டு காளிமந்திரத்தை செபித்து மலைவேப்பிலையை உருவிப்போட கம்பளிப்பூச்சியாகும்.

## 1232. கரப்பாம்பூச்சியாகும் ஜாலம்.

இந்திரசாலக் கருவை விரலில்தொட்டு மாடன் மந்திரத்தை செபித்து தேள்கொடுக்கிலையை உருவிப்போட கரப்பாம்பூச்சியாகும்.

## 1233. பல்லிகளாகும் ஜாலம்.

இந்திரசாலக்கருவை விரலில்தொட்டுக்கொண்டு சக்கலாதேவி மந்திரத்தை செபித்து வெண்ணொச்சியிலையை உருவிப்போட பல்லிகளாகும்.

### 1234. புழுகாகும் ஜாலம்.

இந்திரசாலக்கருவை தொட்டு குறளிமந்திரத்தை செபித்துநாவேளை இலையை உருவிப்போட புழுகாகும்.

### 1235. மஞ்சாகுருவியாகும் ஜாலம்.

இந்திரசாலக்கருவை விரலில்தொட்டு வாலைமந்திரத்தை ஆயிரத்தெட்டுசெபித்து எலுமிச்சமிலையை உருவிப்போட மஞ்சசாகுருவியாகும்.

### 1236. தூக்கணாங் குருவியாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை விரலில்தொட்டு மயானருத்திரி மந்திரத்தை செபித்து நொணாயிலையை கிள்ளிப்போட தூக்கணாங்குருவியாகும்.

### 1237. புல்புல்குருவியாகுஞ் ஜாலம்.

இந்திர சாலக்கருவை தொட்டு வீரபத்திரா மந்திரத்தை செபித்து கொய்யா யிலையை வுருவிப்போட புல்புல் குருவியாகும்.

### 1238 நாமக்குருவியாகும் ஜாலம்

இந்திராசாலக்கரிவை விரலில் தொட்டு நீலகண்ட மந்திரத்தை தியானித்து மாவிலையைக் கிள்ளிபுபோட நாமக்குருவியாகும்.

### 1239. மீன்குத்திகுருவியாகுஞ் ஜாலம்.

இத்திரசாலக்கருவை வித்லில்தொட்டு பைரவர் மந்திரத்தை செபித்துநொணாயிலையை கிள்ளிப்போட மீன்குத்திபட்சியாகும்

### 1240. நாராயணபட்சியாகும்ஜாலம்.

இந்திரச்சாலக்கருவை விரலில்தொட்டு ஆஞ்சனாதேவி ஆச்சேனர் மந்திரத்தை செபித்து அசோகயிலையை கிள்ளிப்போட நாராயணபட்சியாகும்.

### 1241. வக்காவாகுஞ் ஜாலம்.

இந்திரசாலக்கருவை விரலில்தொட்டு சாமளாதேவி மந்திரத்தை செபித்து குப்பமேனியிலையை உருவிப்போட வாக்காவாகும்.

### 1242. கோக்காகுங் ஜாலம்.

இந்திரசாலக்கருவை விரலில்தொட்டு மாயாசத்தி மந்திரத்தை கல்லியாணமுருக்கனிலையைக் கிள்ளிப்போட கொக்காகும்.

### 1243. கூளியாகுஞ் ஜாலம்.

இந்திரசாலக் கழிவை விரலில்தொட்டு சக்காதேவி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்துத் பேய்ப்பீர்க்கன் இலையைக் கிள்ளிப்போட கூளியாகும்.

### 1244. நாரையாகும் ஜாலம்.

இந்திரஜாலச்கருவை விரலில்தொட்டு கொள்ளிமந்திரத்தை செபித்து பூசினியிலையைக் கிள்ளிப்போட நாரையாகும்.

### 1245. கேருடபட்சியாகும் ஜாலம்.

இந்திரஜாலச்சருவை விரலில்தொட்டு நாராயணமந்திரத்தை செபித்து செந்தாமரையிலையைக் சிள்ளிப்போட செருடபட்சியாகும்.

### 1246. பறந்தாகும் ஜாலம்.

இந்திரஜாலங்கருவை விரலில்தொட்டு குறளிமந்திரத்தை செபித்து கருவூமத்தன் யிலையைக்கிள்ளிப்போடப் பறந்தாகும்.

### 1247. கடல்காக்கையாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை விரலில்தொட்டு காளபைரவர் மந்திரத்தைச்செபித்து பேய்துமட்டிச்செடியிலையைக் கிள்ளிப்போட கடல்காக்கையாகும்.

### 1248. கள்ளிக்காக்கையாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை விரலில்தொட்டு உருத்திராதேவி மந்திரத்தை செபித்து பச்சைப்புகையிலையைக் கிள்ளிப்போட கள்ளிக்காக்கையாகும்.

### 1249. நீர்கோழியாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை விரலில்தொட்டு பத்திக்காளி மந்திரத்தை செபித்து வெள்ளெருக்கனிலைக் கிள்ளிப்போட நீர் கோழியாகும்.

### 1250 காட்டுகோழியாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை விரலில்தொட்டு சக்காதேவி மந்திரத்தை செபித்து காட்டாமணக்கிலையைக்கிள்ளி அதில் அந்தக்கருவைத் தடவிம்போட பார்ப்போர்கள் கண்களுக்கு காட்டுக்கோழிபோல் தோற்றும் ஆச்சரியப்படுவார்கள்.

### 1251. கானுங்கோழியாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை விரலில்தொட்டு காளிமந்திரத்தை ஜெபித்துநாகயிலையிற்தடவிப்போட மனுங்கோழியாகும்.

### 1252. திளுவையுண்டாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை விரலில்தொட்டு வராகிமந்திரத்தை செபித்து கருவை ஆடுதிண்ணும்பாலையிற் றடவிப்போட திளுமையாகும்.

### 1253 மாடப்புருவாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவை விரலில்தொட்டு சக்காதேவி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபிந்து பூவாசன் இலையிற் கருவைத்தடவிப்போட மாடப்புருவாகும்

### 1254 மணிப்புருவாகும் ஜாலம்.

இந்திரசாலக்கருவை விரலில்தொட்டு பத்திரகாளிமந்திரத்தை செபித்து அரசன் யிலையிற் கருவைத்தடவிப்போட மணிப்புருவாகும்.

### 1255. தவிட்டுபுருவாகும் ஜாலம்.

இந்திரசாலக்கருவை விரலில்தொட்டு கொள்ளிமந்திரத்தை செபித்து ஆலனிலையைக் கிள்ளிப்போட தவிட்டுப்புருவாகும்.

### 1256. கோண்டலாத்தி குருவியாகும் ஜாலம்.

இந்திரசாலக்கருவை விரலில்தொட்டு பைரவமந்திரத்தை செபித்து மல்விகையில் கருவைத்தடவிப்போட கொண்டலாத்தி குருவியாகும்.

## 1257. அடைக்காலங்குருவியாகும் ஜாலம்.

இந்திரசாலக் கருவை விரலிற்தொட்டு மாயானருத்திரி மந்திரத்தை செபித்து முல்லேயிலேயில் கருவைத்தடவிப்போட அடைக்கலாங்குருவியைப் போல் தோற்றம்.

## 1258. ஆள்காட்டி குருவியாகும் ஜாலம்.

இந்திரஜாளக் கருவை விரலில் தொட்டு மாயாசத்தி மந்திரத்தை செபித்து பூசினிக்காயிலேயில் தடவிப்போட ஆள்ளாட்டி குருவியைப்போல் தோற்றம்.

## 1259. பஞ்சவர்ன கிளியாகும் ஜாலம்.

இந்திரஜாலக் கருவு விரலில் தொட்டு சக்காதேவி மந்திரத்தை செபித்து கடுக்காயிலேயில் தடவிப்போட பஞ்சவர்னக்கிளியாகத் தோற்றம்.

## 1260. கதண்டுகளாகும் ஜாலம்.

இந்திரஜாலக் கருவை விரலில் தொட்டு குறளிமந்திரத்தை செபித்து மலே வேப்பிலேயை உருவிப்போடக் கதண்டுகளாகும்.

## 1291. செங்குளவி கருங்குளவி யாகும் ஜாலம்.

இந்திரஜாலக் கருவு விரலில் தொட்டு காளிமந்திரத்தை செபித்து ஆவாரயிலேயிற்றடவிப்போட செங்குளவி கருங்குளவியாகும்.

## 1262. பலவிதமான விஷப்பூச்சிகள் உண்டாகும் ஜாலம்.

இந்திரசாலக் கருவையும் செகஜாலக் கருபு ஐங்கோலக்கருவு ஒன்றுய்க் கலந்து கையிற் பூசிக்கொண்டு மாயானருத்திரி மந்திரத்தைசெபித்து அவுரியிலே இரண்டுகையால் உருவிப்போட தேள் நண்டு தூரக்காய் செய்யான் சிலந்திப்பூச்சிசெங்குளவி கருங்குளவி செந்தேள் கருந்தேள் ஓணன் பல்வி அரனே இன்னம் புதவிமான விஷப்பூச்சிகளும் உருனுடைய வலிவாற்றேன்றும் கண்டவர்கள் யாவரும் களிப்படைவார்கள்.

## 1263. வாத்தாகும் ஜாலம்.

இந்திரஜாலக்கருவு கையில்தெட்டு வாாகிமந்திரத்தை செபித்து சருவு பெலாயிலேலைற் பூசிபோட வாத்தாகும்.

## 1264. பேய்க்கூட்டமாகும் ஜாலம்.

ஜாலக்காரன் இரத்திரில் இந்திரஜாலக்கருவையும் செகசாலக்கருவும் ஐங்கோலக்கருவம் ஒன்றுய்கலந்து கையில்தெட்டுக்கொண்டு மயான ருத்திரி மந்திரத்தை செபித்து கருவுமத்தனிலேயில் கருவைத்தடவிப்போடபோய் ரூபமாகப் பார்ப்போர் கண்களுக்குத்தோற்றும் அனேவரும் மிரளுவார்கள் ஆனல் எத்தனே யிலேயில் தடவிப்போடுகிறேன் அத்தனே பேய் ரூபம் தோற்றும்.

## 1265. பூதகூட்டம் தோற்றும் ஜாலம்.

முன்போலவேஜாலக்காரன் இரவில் இந்திரசாலக்கருவை கையில்தொட்டு சக்காதேவி மந்திரத்தைசெபித்து மதுரைவீரனே தியானித்து வேப்பிலேயில் தடவி உருவிப்போட பூதரூபமாகப் பார்ப்போர்கண்களுக்கு தோற்றும் ஆச்சரியப்படுவார்கள் ஆனல் எத்தனேயிலேயிற் றடவிப்போடுகின்றேமோ அத்தனே பூதங்கள் தோற்று.

## 1266. பிரவாக ஜாலம்.

முன்போலவே ஜாலக்காரன் இரவில் ஓர் மைதானத்திற்கு சென்று அங்கு தன்னுடன் வேடிக்கைப்பார்க்க திரளாகத்திரண்டு தந்தவர்களைப்பார் பார்த்து இதோ இந்த மைதானத்தில் ஜலப்பிரவாகம் வரும் விநோதத்தை பாருங்களென்று இந்திரஜாலகக்கரு ஜெகசாலக்கரு ஐங்கோலக்கரு இவைமூன்றும் ஒன்றாய்க்கலந்து விரலில்தொட்டு ஒரு எலுமிச்சம்பழமீது தடவி கண்ட பேரண்ட மந்திரத்தை செபித்து எலுமிச்சம்பழத்தை ஈசான்னிய மூலைபக்கம் விட்டெறிய உடனே ஜலப்பிரவாகமானது இறைச்சலோடு பிரண்டு வருவதுபோல் தோற்றும் அனைவரும் ஆச்சரியப்படுவர் இது கங்காபவானி வசியமென்பார்கள்.

## 1267. அக்கினி ஜாலம்.

முன்போலவே இரவில் ஒரு மைதானத்தில் சென்று அங்கு தன்னுடன் வேடிக்கைப்பார்க்க திரளாகத்திரண்டு வந்திருப்போர்களைப்பார்த்து இதோ இம் மைதானத்தில் புதுமையாக யாவருங்காணும்படி எருஜெ.திபுண்டாகும் விநோதத்தை பாருங்களென்று முன்போல் கருவைத்தொட்டு கண்ட மேரண்ட மந்திரத்தை ஜெபித்து அக்கினிபகவானை உச்சாடனஞ்செய்து கருவை ஒரு சிறிய குழாங்கல்லில் தடவி தன்னுடைய பலங்கொண்டதூரம விட்டெறிய உடனே கருபலத்தினால் பரோப்போர் யாவருடைய கண்களும் ஆகாயத்திற்கும் பூமிக்கும் ஒன்றாக ஸ்கம்பம்போல் பிரகாசிக்கும் அதனை கண்டவர் யாவரும் ஆச்சரியப்படுவார்கள்.

## 1268. சித்துகளாடும் சிட்கா மை.

வெட்டுண்டு செத்தவனுடைய மண்டை எலும்பு மார்எலும்பு தொடை எலும்பு இவைகளில் கொஞ்சம் கொண்டுவந்து அத்துடன் அழிஞ்சிவித்து டுகச்சக்காய்பருப்பு எட்டிகொட்டை அமுக்கிறாஞ்சழங்கு தண்ணீர் விட்டான் கிழங்கு நீர்முள்ளிவிரை நாய்கடுகு வேளைவேர் குப்பைமேனிவேர் கொல்லேக்குவேர் பல்லிவேர் புல்லுருவிவேர் ஆடையொட்டி நின்றுல்வாடிவேர் தொட்டால்வாடிவேர் இவைகளையெல்லாம் வகைக்கு கால்பலமாக திருத்தெடுத்து உலர்த்தி இடித்து வஸ்திரகாயஞ் செய்து கல்வத்தில்போட்டு கோட்டான் கள்ளிக்காக்கை கூளி கழுகு கரும்பூனை நழைநரி செம்போது கட்டுக்காடை பச்சோந்தி இவைகளின் ரத்தம் சமமாகவிட்டு மைபோல் அறைத்து அதை ஒரு நல்லிதமான சிலையில் டைவி நிழலிலுலரவைத்துக்கொள்ளவும் பிறகு ஒடி மண்டையோட்டில் நெய் எண்ணெய் வேப்பெண்ணெம் முத்தெண்ணெய் இலுப்பெண்ணெய் தேங்கபெண்ணெய் புங்கெண்ணெய் புன்னையெண்ணெய் கழுதைநெய் பன்றிநெய் இவைகள் வகைக்கு அயைபலமாக எடுத்துக்கலந்து ஒடி மண்டையோட்டில் ஊத்தி ஒடி திரிக்குமேல் ஐங்கோலத்கருவைப்பூசி அதில்போட்டு பத்திரமாகம்பிடித்து செப்புச்சிமிளில் அடக்கஞ்செய்து பூசையில்வைத்து பத்மகாளி மந்திரத்தை தவறாமல் நாற்பதுநாளும் காலே மாலே வேளை ஒன்றுக்கு ஆயிரத்தெட்டு உருஜெபித்தவர் சித்தியானவுடன் பொங்கலிட்டு பலிகொடுத்து பிறகு

மையையெடுத்து விளையாட சகலமும் சித்திறாகும் ஆனல் ஒவ்வொரு வித்தை யும் கால்மணி நேரந்தாண்டும் பிறகு மறைந்துபோய்விடும் இதை அறிந்து ஜாக் கிரதையாய் நடத்தவேண்டும்.

## 1269. வேறுமுறை புலித்தோல் புலியாகும் வித்தை.

ஜாலக்காள் முன்னதாகவே புலித்தோல் ஒன்று பழுதில்லாமல் உரித்ததாக எடுத்து அதின் கழுத்தில் இரும்பு சங்கிலி ஒன்றைகட்டி ஜாலமாடுமிடத்தில் கட்டி பிறகு வேடிக்கைப்பார்க்க வந்திருக்கும் ஜெனங்களெம் பார்த்து இதோ இந்த யிடததில் கட்டிய புலித்தோலுக்கு மந்திரத்தால் உயிர்கொடுத்தனுப்பும் விநோதத்தைப்பாருங்களென்று சித்துவிளையாடும் சிட்காமையையும் ஜங்கோலக் கருவையும் கலந்து விரலில் தொட்டு பத்திரக்காளி மத்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து கழுவை புலித்தோலின்மேல் தெளித்து அந்தத்தோலே சுற்றிலும் சிகப் புத்துணியால் நாலுபக்கமும் தெரியாமல் திரைதைத்து மூடி கற்றுநேரம் பொரு த்து திரையை வாங்கிக்காட்ட புலிதோற்றும் முன்போல் திரையைமூடி திரந்து காட்ட முன்னிருந்த தோலாகவே யிருக்கும்.

## 1270. வேறு யானைத்தோல் யானையாகும் ஜாலம்.

முன்போலவே சாலக்காரன் பழுதில்லாமற்படிக்கு உரித்த யானையின் தேகலே எடுத்து வேடிக்கைப்பார்க்க வந்திருக்கும் வெகு ஜனங்களுக்கு காட்டி இந்த யானையின் தோலின் காலில் இரும்பு சங்கிலியை கட்டிவைத்து மந்திர உச் சாடனத்தினல் உயிர்ொடுத்து எழுப்புகிறேன் பாருங்களென்று சித்துவிளையா டும் சிட்காமையையும் ஐங்கோலக்கருவையங் கலந்து விரலில் தொட்டு பத்திர காளி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து கருவை தந்திரமாக யானரதோலின் மேல் தெளித்து முன்போல திரைகட்டி மூடி திறந்துக்காட்ட யானைவுயிருடன் தோற்றும் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள் பிறகுமுன்போல் மறைத்து விடவும்

## 1271. கரடிதோல் கரடியாகுஞ் ஜாலம்.

காடிதோன் எடுத்து வந்திருக்கும் ஜனங்களுக்குக்காட்டி இந்த தோலுக்கு உயிர்கொடுக்கிறேன் பாருங்களென்று அத்தோலின் கழுத்தில் சங்கிலிமாட்டி முன்போல் தூணில்கட்டி பிறகு சிட்காமையும் ஜங்கோலக்கருவையும் கலந்து காளிமந்திர்த்தை ஆயிரத்தெட்டு செபித்து கருவை தோலின்மேல் தந்திரமாக தெளித்து முன்பேர்ல் திரைமூடி திரந்துக்காட்ட காடிதோல் உயிருள்ள கரடி யாகத்தோற்றும் நீ முன்போல் திரையிட்டு திரக்க தோலாகவே யிருக்கும்.

## 1272. வேறு சிம்பத்தோல் சிம்பமாகும் ஜாலம்.

சிம்பத்தோல் ஒன்றையெடுத்து சனங்களுக்குக்காட்டி இதோ இந்த தோலு க்கு உயிர்கொடுக்கிறேன் பாருங்களென்று முன்போல் கருவைந் தொட்டுக்கொ ண்டு காளிமந்திரந்தை ஆயிரத்தெட்டு செபித்து தந்திரமாகக் கருவை சிம்பத் தோலின்மேல் தெளித்து முன்போல் சுற்றிலும் திரை போட்டு சற்றநேரம் கழி த்து திரந்துகாட்ட பார்ப்போர் கண்களுக்கு சிம்பத்தைப்போல் தோற்றும் பார் ப்போர் கண்களுக்கு சிம்பத்தைப்போல் தோற்றும் பார்ப்போர்களெல்லாம் மதி மயங்கி பிரமை கொள்வார்கள்,

### 1273. வேறு மான்தோல் மானுகும் ஜாலம.

சபையில்நின்று மான்தோல் ஒன்றெடுத்து அனைவருக்குங் காட்டி இதோ இந்த மான்தோலை மந்திர உச்சாடனத்தினுல் உயிருண்டாகும்படி செய்யும் வேடிக்கையைப்பாருங்களென்று முன்போல் கருவை மான்தோலின் மேல் பூசி பெட்டியில்வைத்து மூடி திறந்துகாட்ட மான்தோல் உயிருண்டாகி ஓடியோடி விளையாடுவதுபோல் தோற்றும் ஜனங்கள் மயங்கி நிற்பார்கள் நீ மறுபடியும் மூடி திறந்து காட்ட முன்னிருந்தாப்போல் மான்தோலாகவே யிருக்கும்.

### 1274. வேறு கடம்பைத்தோல் கடம்பையாகும் ஜாலம்.

கடம்பையின்தோல் ஒன்றைக் கையிலெடுத்துக்காட்டி முன்னே மான்தோலுக்குச் செய்தபிரகாரமே செய்ய கடம்பைத்தோல் உயிருண்டாகி மறையும் சபையோர் பிரமானந்தம் கொள்வார்கள்.

### 1275. நரித்தோல் நரியாகும் ஜாலம்.

ஜாலக்காரன் முன்னதாகவே நரித்தோல் ஒன்றும் பழுதில்லாமல் உரித்ததாக எடுத்து அதின கழுத்தில் சிறியசங்கிலி ஒன்றைகட்டி ஜாலமாடுமிடத்தில் கட்டி பிறகு வேடிக்கைப்பார்க்க வந்திருக்கும் சனங்களைப்பார்த்து இதோ இந்த இடத்தில் கட்டிய நரித்தோலுக்கு மந்திரத்தை உயிர்கொடுத்தெழுப்பும் விநோதத்தைப் பாருங்களென்று சித்தவிளையாடும் சிட்டுகாமையையும் ஐங்கோலக் கருவையும் கலந்து விரலில்தொட்டு பத்திரகாளி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து கருவு நரித்தோலின்மேல் தெளித்து அந்ததோலை சுற்றிலும் கருப்பு துணியால் நாலுபக்கமும் தெரியாமல் திரைதைத்துமூடி சற்றுநேரம் பொருத்து திரைவாங்கிக்காட்ட நரி தோற்றும் முன்போல் திரைமூடிதிந்துகாட்ட முன்னிருந்த தோலாகவேயிருக்கும்.

### 1276. வேறு நாய்த்தோல் நாயாகும் ஜாலம்.

நாய்த்தோல் ஒன்றெடுத்து சசையோருக்குக்காட்டி இது நாயாகும் விநோதத்தைப் பாருங்களென்று மேலே நரிக்குச்செய்தபடி செய்ய நாய்த்தோல் உயிர்பெற்று குலைத்து மறையும் இது மகா வேடிக்கையென்று சந்தோஷப்படுவார்கள் என்க.

### 1277. பசுத்தோல் பசுவாகும் ஜாலம்.

ஜாலமாடும் சசையிஉ பசுத்தோல் ஒனறை யெடுத்து இதற்கு உயிர்கொடுத்துஎழுந்திருக்கும்படி பசுத்தோல் ஒன்றையெடுத்து இதற்கு உயிர்கொடுத்து எழுந்திருக்கும்படி செய்யும் விநோதத்தைப் பாருக்களென்று முன்குபால் கருவைக்மலந்து வுரலில் தொட்டுபத்திரகாளி மந்திரத்தை 1008-செபித்து தோலின் மேல் தடவி முன்போல் திரை அமைத்து சற்றுநேரம் பொழித்து திறந்துகாட்ட பசுத்தோல் உயிருள்ள பசுவைப்போல் தோற்றும் அனைவரும் பிர்மிப்பார்கள்.

### 1278. எருதுதோல் எருதாகும் ஜாலம்.

பசுவைப்போலவே எழிதுதோலையுங்கபட்டி கருமுதலானதும் தெளித்து திறந்து காட்ட ஒருதாகத்தோற்றும்.

## 1279. எருமைத்தோல் எருமையாகும் ஜாலம்.

சபையில் வந்துநின்று எருமைத்தோலை கையிலெடுத்து அனேவருக்குங்காட்டி இதோ இந்த எருமைத்தோலுக்கு உயிருண்டாகும் பாருங்களென்று முன போல் கருவைக்சலந்து விரலில் தொட்டுக்கொண்டு பத்திரகாளி மந்திரத்தை 1008- ஜெபித்கு கருவைத் தந்தரமாக எருமைத்தோலின்மேல் தடவி முன் போல் திரை அமைத்து சற்றுநேரம் கழித்து திரையை எடுத்துக்காட்ட தோல் உயிருண்டாகி யிருக்கும் நீ மறுபடியும் திரையை அமைத்து திரந்துகாட்ட தோலாயிருக்கும்.

## 1280. ஆட்டுத்தோல் ஆடாகும் ஜாலம்.

ஆட்டுத்தோல் ஒன்று எடுத்து சனங்களுக்குக்கர்ட்டி இதோ இந்த தோலுக்கு உயிர் கொடுக்கிறேன் பாரென்று முன்போல் கருவை தொட்டுக் கொண்டு காளிமந்திரத்தை 1008 செபித்து தந்திரமாகக் கருவை ஆட்டுத்தோலுன்மேல் தெளித்து முன்போல் சுற்றிலும் மறைவு கட்டி சற்றுநேரம் கழித்து காட்ட பார்ப்போர்கள் கண்களுக்கு ஆட்டைப்போல் தோற்றுப் பார்ப்போர்களெல்லாம் பிரமைக் கொள்வார்கள்-

## 1281. குதிரைத்தோல் குதிரையாகும் ஜாலம்.

குதிரைத்தோலை வந்திருக்கும் ஜனங்களுக்குக் காட்டி இத்தோலுக்கு உயிர் கொடுக்கிரேன் பாருங்களென்று அத்தோலின் கழுத்தில் கயற்றைக் கட்டி முன போல் துணிகட்டி பிறகு சிட்காமையும் ஐங்கோலக்கருவயும் கலந்து காளிமந்திரத்தை 1008-செபித்து கருவை தோலின்மேல் தந்திரமாகத் தெளித்து முன போல் திரையிட்டு மூடி திறந்துகாட்ட தோல் உயிருள்ள குதிரையாகத் தோற்றம் மறுபடியுப் திரையிட்டு திறக்கத் தோலாகவேயிருக்கிம்.

## 1282. ஒட்டைத்தோல் ஒட்டையாகும் ஜாலம்.

முன்போல் ஜாலக்காள் பழுதில்லாமற்படிக்கு உரித்த ஒட்டைத்தோலை எடுத்து வேடிக்கைப் பார்க்க வந்திருக்கும் சனங்களுக்குற்காட்டி இந்த ஒட்டையின்தோலின் கழுத்தில் கயற்றைக் கட்டிவைத்து காளிமந்திர உச்சாடனத்தினுல் உயிர்கொடுத் தெழுப்புகிறேன் பாருங்களென்று சித்து விளையாடும் சிட்காமையையும் ஐங்கோலக்கருவையும் கலந்து விரலில் தொட்டு தோலின்மேல் தெளித்து முன்போல் மறைவுகட்டி மூடி திறந்துகாட்ட உயிருடன் தோற்றும் பிறகு முன்போல் திரையை மூடி காட்ட ஒட்டைத்தோலாக இருக்கும்,

## 1283. கழுதைத்தோல் கழுதை யாகும் ஜாலம்.

கழுதைத்தோலை கையிலெடுத்துகாட்டி இதை உயிராகச்செய்கிறேன்பாருங்களென்று கருவை விரலில்தொட்டு பத்திரகாளி மந்திரத்தை 1008 ஜெபித்து கருவை தந்திரமாக கழுதைத்தோலின்மேல் தடவி முன்போல் காட்ட உயிருண்டாயிருக்கும.

## 1284. பூனைத்தோல் பூனையாகும் ஜாலம்

பூனைத்தோல் ஒன்றையெடுத்து அனைவர்க்குங்காட்டி இதோ இந்தபூனைத் தோலை உயர்கொடுத்து எழுப்புகிறேன பாருங்களென்று முனசெய்தபடிசெய்ய பூனையாகும் மறுபடிரிம் முன போல் செய்ய மறையும்.

### 1285. நல்லபாம்புதோல் நல்லம்பாய்பாகும் ஜாலம்.

நல்லபாம்பு தோனுயெடுத்து அனைவர்க்குங்காட்டி இந்த தோலை மந்திர உச்சாடனத்தினுல் உயிருண்டாகும்படி செய்யும் வேடிக்கையைபபாருங்களெ ன்று கருவைவிரலில் தொட்டு மந்திரம் செபித்து கருவைப் பாம்பினமேல் தடவி பெட்டியில்வைத்துமூடி திறந் காட்ட வெறுந் தோலயிருக்கும்.

### 1286 சாரப்பாம்புதோல் சாரப்பாம்பாகும் ஜாலம்

முன் நல்லபாம்பின் தோலுககு செய்தபடிசெய்து மைதடவி மந்திம் முத லானதும் செபித்து சாரப்பாம்பினதோலை பெட்டியில்போட்டு மூடிசற்றுநேரம் சொருத்து திறந்துகாட்ட சாரப்பாம்பு உயிருடன் இறப்பது பொல் தோற்றும் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள் நீ பழயபடியே திறந்துகாட்ட தோலாகவே ரிறக்கும் இது மாயவித்தை யென்பார்கள்.

### 1287. முசல்தோல் முசலாகும் ஜாலம்.

முன்போல் முசல்தோலை யெடுத்து அனைவருக்குங்காட்டி இந்த தோலை உயிர்வரும்படி செய்கிறேன் பாருங்களென்று ஐங்கோலக் கருவையுங் கலந்து விரலில் தொட்டுக்கொண்டு பத்திரகாளி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து கருவை முசல் தோலின்மேல் தடவி கூடைப்போட்டு முடி திரந்துகாட்ட உயி ருள்ள முசலாகத்தோற்றும் பார்ப்போர் மயங்கி நிற்பார்க்கள் அப்போது நீமுன் போல் மூடித்திறந்துகாட்ட தோலாகிவிடும்.

### 1287. மலைப்பாம்புதோல் மலைப்பாம்பாகும் ஜாலம்.

மலைப்பாம்புதோல் ஒன்றுயெடுத்து சனங்களுக்குக்காட்டி இதோ இந்த தோலுக்கு உயிர்கொடுக்கிறேன் பாரென்று முன்போல் கருவைத்தொட்டுக்கொ ண்டு காளிமந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து தந்திரமாககருவை தோலின் மேல் தெளித்து முன்போல் சுற்றிலும் திரையோட்டு சற்று நேரம்பொருத்து திரந்துகாட்ட பார்ப்போர்கண்களுக்கு பாம்பைபோல் தோற்றும் பார்ப்போர்க ளெல்லாம் மதிமயங்கி பிரமை கொள்ளுவார்கள்.

### 1288. பச்சைப்பாம்புத்தோல் பச்சைப்பாம்பாகும் ஜாலம்.

பச்சைப்பாம்பு தோலையெடுத்து ஜனங்களுக்குக்காட்டி இத்த தோலுக்கு உயிர்கொடுக்கிறேன் பாருங்களென்று முன்போல் ஐங்கோலக்கருவை தொட்டு கொண்டு காளிமத்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து கருவைகோலின்மேல் தந் திரமாகத்தெளித்து முன்போல்திரைமூடி திரந்துகாட்ட பாம்புதோல் உயிருள்ள பாம்பைப்போதி தோற்றும் நீ முன்போல் திரையிட்டுதிரக்க தோலாக் யிருக்கும்

### 1279. பெருச்சாளிதோற் பெருச்சாளியாகும் ஜாலம்.

பெருச்சாளிதோலை எடுக்து சனங்களுக்குக்காட்டி இந்த தோலுக்கு உயிர் கொடுத்து எழுப்புகிறேன் பாருங்களென்று கருவையுங்கலந்து காளிமந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து கருவை கோலினமேல் தந்திரமாகதெளித்துமுன்போல் திரைமூடி திறந்துகாட்ட உயிருள்ள பெருச்சாளி யாகத்தோற்றும் பிறகு முன் போல் மறைத்துவிடவும்.

## 1290. ஒட்டைத்தோல் ஒட்டையாகுஞ் ஜாலம்.

முன்போல் ஜாலக்காரன் பழுதில்லாமல் உரித்த ஒட்டைத்தோலை எடுத்து வேடிக்கைப்பார்க்க வந்திருக்கும் ஜனங்களுகளுக்காட்டி இதை காளிமந்திர உச்சாடனத்தினால் உயிர்கொடுத்தே எழுப்புகிறேன் பாருங்களென்று கித்துவிளையாடும் சிட்காமையும் ஐங்கோலக்கருவையும் கலந்து விரலில்தொட்டு தோலின்மேல் தெளித்து முன்போல் மூடித்திறந்து காட்டவுயிருடன் தோற்றும்.

## 1291 கீரிப்பிள்ளைதோல் கீரிப்பிள்ளையாகும் ஜாலம்.

சபையில்நின்று கீரிப்பிள்ளைத்தோல் எடுத்து அனைவருக்குங்காட்டி இதோ இந்த தோலை மந்திர உக்சாடனத்தினால் உயிருண்டாகும்படி செய்யும் விநோதத்தைப் பாருங்களென்று முன்போல் கருவைக்கழத்து விரலில்தொட்டு மந்திரத்தைச் செபித்து கருவை தோலினமேல் தடவி மூடி திறந்துகாட்ட கீரிப்பிள்ளை தோல் உயிர்பெற்று உலாவிமறையும்.

## 1292. அணிப்பிள்ளைத்தோல் அணிப்பிள்ளையாகுஞ் ஜாலம்.

ஜாலமாடும் சபையில் நின்று அணிப்பிள்ளைதோல் யெடுத்து இதற்கு உயிர் கொடுத்து எழுந்திருக்கும்படி செய்யும் விநோதத்தைப் பாருங்களென்று முன் போல் கருவைக்கலந்து விரலில்தொட்டு பத்திரகாளி மந்திரத்தை 1007-செபித்து தோலினமேல்தடவி முனபோல் திரை அமைத்து சற்றுநேயம் பொருத்து திறந்துகாட்ட அணிப்பிள்ளைதோல் உயிருண்டாகியிருக்கும் ஆச்சரியப்படுவார்கள் முன்போல் மறுபடியும் மூடித்திறந்து காட்ட தோலாகிவிடும்.

## 1293. உடும்புதோல் உடும்பாகும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் உடும்புதோல் ஒன்றையெடுத்து அனைவருக்குங்காட்டி இதோ இந்த உடும்புத்தோல் உயிர்வரும்படி செய்யும் விநோதத்தைபாருங்களென்று முனபோல் கருவைக்கலந்து விரலில்தொட்டு எந்திரத்தை ஆயிரத்தெட்டு ஜெபித்து கருவை தந்திரமாக தோலின்மேல் தெளித்து மூடி திறந்துகாட்ட உயிர்வந்து உடும்பு தோற்றும் கண்டு பிரமை கொள்வார்கள்சீ உடனே முன்போல் முடிமறைத்து விடவேண்டும்.

## 1294. பச்சோந்திதோல் பச்சோந்தியாகும் ஜாலம்.

சபையில் பச்சோந்தியின் தோலையெடுத்து அனைவருக்குங்காட்டி இதோ இந்த தோலை உயிர்வரும்படி செய்கிறேன் பாருங்களென்று முன்போல் கருவைக்கலந்து விரலில்தொட்டு கொண்டு பத்திரகாளி மந்திரத்தை 1008-ஜெபித்து கருவை தந்திரமாக தோலின்மேல்தடவி மூடித்திறந்துகாட்ட உயிருண்டாகியிருக்கும் சீ மறுபடியும் திரையை அமைத்து திறந்துகாட்ட தோலாயிருக்கும்.

## 1295. தேவாங்குதோல் தேவாங்காகும் ஜாலம்.

ஜாலமாடும் சபையில் ஒருதேவாங்கின் தோலையெடுத்து அனைவருக்குக் காட்டி இத்த தோலை உயிர்கொடுத்தெழுப்புய் விநோதத்தைப் பாருங்களென்று கருவை கலந்து விரலில்தொட்டு பத்திரக்காளி மந்திரத்தை செபித்து கருவை தோலினமேல்தடவி மூடிதிறந்து காட்ட உயிருடனதோற்றும் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள் முன்போல் மூடித்திறந்துகாட்டவும்.

### 1296. மந்தித்துதோல் மந்தியாகும் ஜாலம்.

முன்போல் சபையில வந்துநின்று மந்தியின்தோலுக்கு உயிர்வரும் படிசெய்யும் விநோதத்தைப் பாருங்களென்று முன்போல் கருமுதலானதும் தெளித்து திரைசுற்றிலும் அமைத்து சற்றுநேரம்பொருத்து திறந்துகாட்ட உயருள்ள மந்தியைப்போல் தோற்றும் ஜனங்கள்பார்த்து பிரமிப்பார்கள் நீ முன்போல் திரையை அமைத்து மறைத்து விடவும்.

### 1298. புனுகுபூனைத்தோல் புனுகுபூனையாகுஞ் ஜாலம்.

ஷை சபையில் நின்று புனுகுபூனையின்தோல் ஒன்றையெடுத்து அனைவர்க்குங்காட்டி இந்ததோல் உயிர்பெற்று எழுந்திருக்கும்படி செய்கிறேன் பாருங்களென்று கருவை விரலில் தொட்டுக்கொண்டு பத்திரகாளி மந்திரத்தை செபித்திகருவை தந்திரமாக அந்த தோலின்மேல் தடவி முன்போல் மூடித்திறந்துகாட்ட உயிருள்ள புனுகுபூனையைப்போல் தோற்றும் பார்ப்போரெல்லாம் ஆச்சரியப்படுவார்கள் நீ முன்போல் மறைத்துவிடவும்.

### 1299. கரும்பூனைதோல் கரும்பூனையாகுஞ் ஜாலம்.

ஷை சபையில் நின்று கரும்பூனைத்தோலை யெடுத்து அனைவர்க்குங்காட்டி இந்த தோலுக்கு உயிர்கொடுக்கும் விநோதத்தைப் பாருங்களென்று முன்போல் கருவைத்தடவி மூடித்திறந்து காட்ட உயிருள்ள கரும்பூனைபோல் தோற்றும் அனைவரும் பிரமிப்பார்கள் நீ முன்போல் மூடிமறைத்துவிடவேண்டும்.

### 1300. காட்டுபூனைத்தோல் காட்டுபூனையாகுஞ் ஜாலம்.

முன்போல் காட்டுபூனையின் தோலை எடுத்து அனைவர்க்குங்காட்டி இதோ இந்ததோலை உயிர்வரும்படி செய்யும் வேடிக்கைப் பாருங்களென்று முன்போலவே கருவைக்கலந்து விரலில் தொட்டுக்கொண்டு பத்திரகாளி மந்திரத்தை செபித்து கருவை தந்திரமாத் தோலில்தடவி ஒரு கூடையைப்போட்டு மூடி சற்றுநேரம் பொருத்து திறந்துகாட்ட உயிருள்ள காட்டுப் பூனைபோல் தோற்றும் அனைவரும் பிரமிப்பார்கள் நீமுன்போல் மறைத்து விடவேண்டும்.

### 1301காய்ந்தபச்சைத்தவளை உயிராகுஞ் ஜாலம்.

ஜாலமாடும் சபையில்வந்து காய்ந்து உலர்ந்த ஒரு பச்சைத்தவளைக்கு உயிர் கொடுக்கும் விநோதத்தைப் பாருங்களென்று முன்போல் கருமுதலானதுந்தடவி மூடிவைத்து சற்றுநேரம்பொருத்து திறந்துகாட்ட பச்சைத்தவளை உயிராயிருப்பதாகத்தோன்றும் ஆச்சரியப்படுவார்கள் நீ முன்போல்மூடி மறைத்துவிடவும்.

### 1302. இறந்துபோன கிளியை எழுப்பிக்காட்டுஞ் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் இறந்துபோன கிளிப்பிள்ளை ஒன்றைக் கையிலெடுத்து அனைவருக்குங்காட்டி இதோ இறந்துபோன கிளிப்பிள்ளையை உயிர்பெற்றெழுந்திருக்கும்படி செய்கிறேன் பாருங்களென்று கிடாமையும் ஜெகசாலக்கருவும் சித்திமையும் சடலைக்கருவும் ஐங்கோலக்கரு இவை ஐந்தும் ஒன்றாய்க் கலந்து விரலில்தொட்டுக்கொண்டு மயானருத்திரி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து கருவை த்தந்திரமாக இறந்திருக்கும் கிளியின்மேல் தெளித்து ஒரு கூடைப் போட்டுமூடி கொஞ்சநேரம்பொருத்து திறந்துகாட்ட உயிர்பெற்ற கிளியைப் போல் பார்ப்பவர் கண்களுக்கு தோற்றும் ஆனால் உடனே முனபோல் மூடித்திறந்துகாட்ட இறந்தகிளியாகவே இருக்கும்.

### 1303. உயிரிழந்த மைனாவிற்கு உயிற்கோடுக்குஞ் ஜாலம்.

உயிரிழந்த ஒருமைனாவை கையிலெடுத்து அனைவருக்குங் காட்டி இதோ செத்துக்கிடக்கும் மைனாவுக்கு உயிருண்டாக்கும் விநோதத்தைப் பாருங்களென்று முன்போல் கருவை விரலில்தொட்டு உயிரிழந்த மைனாவின்மீது தெளித்து மூடிதிறந்துகாட்ட மைனா உயிர்பிழைத்து உலாவுவதைப்போல் தோற்றும் அதை மறுபடியும் மூடித்திறந்துகாட்ட இறந்த மைனாவாகவேயிருக்கும் காண்பவர்கள் களிப்படைவார்கள்.

### 1304. உயிரிழந்த கௌதாருக்கு உயிர்கோடுக்குஞ் ஜாலம்.

முன்போல் உயிரிழந்த கௌதாரி ஒன்றை கையிலெடுத்து அனைவர்க்குங் காட்டி இதற்குயிர் கொடுத்தெழுப்பும் விநோதத்தைப் பாருங்களென்று முன் போல் மலந்தகருவை விரலில்தொட்டு மந்திரத்தை செபித்து கருவை தந்திர மாக உயிரிழந்து கிடக்கும் கௌதாரியின்மேல் தடவி மூடி கொஞ்சநேரம்பொருத்து திறந்துகாட்ட கௌதாரி உயிருள்ளதைப்போல் தோற்றும் ஆச்சரியப்படுவார்கள் உடனே நீ முன்போல்மூடி மறைத்துவிடவேண்டும்.

### 1305. உயிரிழந்த காடைக்கு உயிர்கோடுக்கும் ஜாலம்.

முன்போலயவ ஜாலமாடுமிடத்தில் உயிரிழந்த காடையொன்றை எடுத்து இந்த வேடிக்கையை பாருங்களென்று பழயபடி கருமுதலானதுந் தடவி ஒருசிறிய கூடைப்போட்டு மூடித்திறந்துகாட்ட உயிருள்ள காடையைப்போல் தோற்றும் அனைவரும் ஆச்சரியப் படுவார்கள் உடனே நீ முன்போல் மூடி மறைத்துவிடவேணடும்.

### 1306. உயிரிழந்த தூக்கணாங்குருவிக்கு உயிர்கோடுக்குஞ் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் உயிரிழந்த தூக்கணாங்குருவியைக் காட்டி இந்த உயிரிழந்த குருவிக்கு உயிர்கொடுக்கிறேன் பாருங்களென்று முன்கலந்திருக்கும் கருவைவிரலில்தொட்டு மந்திரத்தைசெபித்து கரிவை யாருக்குந்தெரியாமல் தந்திர மாக உயிரிழந்திருக்கும் குருவியின்மேல்தடவி மூடி திறந்துகாட்ட உயிரிழந்த தூக்கணாங்குருவி உயிருடன் இருப்பதுபோற் தோற்றும் அனைவரும் ஆச்சரியப் படுவார்கள் நீ உடனே முன்போல் மறுபடியும் மூடித்திறந்துகாட்ட உயிரிழந்த துபோலவே யிருக்கும்.

### 1307. உயிரிழந்த புறாவிற்கு உயிர்கோடுக்குஞ் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் உயிரிழந்த புறாவொன்றை யெடுத்துக்காட்டி இதோ இந்த உயிரிழந்த புறாவிற்கு உயிர்வரும்படிச்செய்யும் வேடிக்கையைப் பாருங்க ளென்று முன்போல் கருவைக்கலந்து விரலில் தொட்டுக்கொண்டு பத்திரகாளி மந்திரத்தை ஆயிரத்தெட்டு செபித்து கருவைத்தந்திரமாக புறாவின்மேல் தடவி திறந்துகாட்ட உயிருள்ள புறாவாகத்தோற்றும் அப்போது நீ முன்போல் மூடித் திறந்துகாட்ட உயிர் மறைந்துவிடும் ஆச்சரியப்படுவார்கள்.

### 1308. உயிரிழந்த சாவலுக்கு உயிர்கோடுக்குஞ் ஜாலம்.

ஜாலமாடுமிடத்குல் உயிரிழந்த சாவல் ஒன்றை யெடுத்துக்காட்டி இந்த உயிரிழந்தசாவலை மந்த்ர உச்சாடனஞ்செய்து சாவலை பிழைக்கும்படி செய்கி றேன் பாருங்களென்று முன்போல் கருவைக்கலந்து விரலில்தொட்டுகொண்டு பத்திரகாளி மந்திரத்தை ஆயிரத்தெட்டுஞ்செபித்து கருவை ஒருவர்க்குந்தெயாமல்

சாவலின்மேல்தடவி கூடையைப்போட்டுமூடி கொஞ்சநேரம் பொருத்து திறந்துகாட்ட உயிர் உள்ளசாவலைப்போல் தோற்றும் அப்போது மறுபடியும் மூடித் திறக்க உயிரிழந்த சாவலாகத்தோற்றும் அனைவர்களும் ஆச்சரியப்படுவார்கள்.

## 1309. உயிரிழந்த வான்கோழிக்கு உயிர்கொடுக்குஞ் ஜாலம்.

முன்போல் உயிரிழந்தவான்கோழி ஒன்றையெடுத்து அனைவர்க்குங்காட்டி இதற்கு உயிர்கொடுத்து எழுப்பும் விநோதத்தைப் பாருங்களென்று முன்போல் கருவைக்கலந்து விரலில் தொட்டுக்கொண்டு பைரவர் மந்திரத்தை செபித்துக் கருவை ஒருவர்க்குந்தெரியாமல் வான்கோழிமேல் தடவி பெரிய கூடையால் மூடி திறந்துக்காட்ட உயிருள்ள வான்கோழி போல்தோற்றும் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள் நீ முன்போல் மறுபடியும் மூடித்திறந்துக்காட்ட உயிரிழந்ததைப்போலிருக்கும்.

## 1310. உயிரிழந்தவாத்துக்கு உயிர்கொடுக்கும் ஜாலம்.

ஜாலமாடும் சபையில் நின்று உயிரிழந்த வாத்தொன்றை யெடுத்து அனைவருக்குங்காட்டி இந்தவாத்துக்கு உயிர்வரும்படி செய்கிறேன் பாருங்களென்று முன்போல் கலந்து கருவைத்தொட்டு மந்திரத்தை செபித்துக் கருவை ஒருவர்க்குந்தெரியாமல் தந்திரமாக வாத்தின்மேல் தடவி கூடைப்போட்டு மூடித்திறந்துக்காட்ட உயிருள்ள வாத்தாகத் தோற்றும் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள் முன்போல் மூடி மறைத்துவிடவேண்டும்.

## 1311. உயிரிழந்த காகத்திற்கு உயிர்கொடுக்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் முன்போல் உயிரிழந்த காகத்திற்கு மறுபடியும் உயிர்வரும்படிசெய்யும் வேடிக்கைப் பாருங்களென்று முன்போல் கருவைக்கலந்து விரலில்தொட்டு பத்திரகாளி மந்திரத்தைசெபித்து கருவைகாகத்தின்மேல்தடவி மூடித்திறந்துகாட்ட உயிருள்ள காகமாகத்தோற்றும் அனைவரும் ஆச்சரியப்படுவார்கள் நீ முன்போல்மூடி மறுபடியும் திறந்துகாட்ட உயிரில்லாதிருக்கும்.

## 1312. மகாராஜயோக கருவரியும் வித்தை.

மகாராஜயோக செய்யவேண்டில் கருவைச்சொல்வோம் கேட்பாயாக பூமியின்கண் நான்கு வருணசிர்மங்களிலும் சிறப்போங்கிவிடும் பிரமகுலத்தில் செனித்த பிராமணஸ்திரீயில் 10-12-12-16-18-அன்றியும் 8-வயதாகிலும் மிகவும் நன்று எனவறிந்து கொள்ளவும்.

## 1313. பிராமணஸ்திரீ நாதங்கழட்டுகிற விதமறியும் வித்தை.

அறிந்துக்கொண்டு நாதமதைக்கழட்டலாகும் கழட்டுவது பிராமணப்பெண்ணாகயிருக்கவேண்டும் இந்த மகாராஜயோகத்திற்கு அந்தவஞ்சியானவள் ஈன்ற குழவியில் ஆணாகிலும் பெண்ணாகிலும் சரிதான் என்றறிக.

## 1314. விந்திளகுதல் அறியும் வித்தை.

மேற்கூறியபடி அறிந்தும அதில் ஆணென்றாலும் அதிகநன்று பெண் அதனினும் அதிகநன்று ஆகிலும் மகாராஜயோகதிற்கு பிரமகுலத்தின் ஆண்பிள்ளையாகிலும் அதின் விந்துவினுடைய பலத்தைக்கேட்பாயாக வயது 16-ஆனால் மெத்தவும் நன்று 22-ம் 25-ம் நன்றென்று அறிவாய்,

### 1315. பெண்ணுதங் கழட்டுகிற நாளறியும் வித்தை.

அப்படி அறிந்தும் பெண்ணுந்தங்கழட்டுகிறநாள் எதுவெனில் 28-வயதில் நன்று அதனிலும் முப்பதுக்குள்ளே மெத்தவும் நன்று இந்த வயதுகளில் வித்து வானதைக்கழட்ட நன்ருகும் அதற்குமேல் நரைதிரையாகிய விந்து கழட்டிடில் இளகு நீராகப்போகும் அந்தவிந்து உபயோகப்படாதென்றறிவகய்.

### .1316 ஆண்விந்து கழட்டும் நாளறியும் வித்தை.

அறிந்தும் மகாராஜயோகத்திற்கு தைமர்தம் உரோகணி குருவாரமாமகில் ஆண்விந்துகழட்டநன்று அல்லது வைகாசிமாதம் பூசநட்சத்திரம் சுக்கிரவாரத்தி லும் ஆண்பிள்ளையின் விந்துகழட்ட நன்ருகும் அதிலும் பத்துமாதமும் ப்ரியாய் தாயுடையகெர்ப்பத்திலிருந்து பிறந்த பிராமணப்பிள்ளையாகில் மெத்தவும்நன்று அந்த குழந்தைபிறந்த ஐந்தாநாள் படுமாதி நோத்தில் ஒருவர்க்குந் தெரியாமல் சொல்லக்கேளும்.

### 1317. வாலை மூலத்தியானம் ஓது வித்தை.

கேட்பாயாக தேகமுழுதும் கருக்கும்படியாகக் கரித்தூளை இடித்து வரண் டத்தெணணெய்யில் கலந்து குழைந்து ஜடலம்முழுதும் பூசிக்கொண்டு வஸ்து வை நீ உள்ளுக்கும்பானம்பண்ணி வாலையினுடைய மூலமந்திரத்தை ஓம் சிறியும கிலியும் என்று மூன்றெழுத்தை நூத்தியெட்டு செபித்து உன்னுடைய உடலு க்கு திக்குபந்தனஞ் செய்துக் கொள்ளவேண்டும்.

### 1318. பிராமணஸ்திரி நீரில் இறந்தவளைக் கொளுத்தும்போது நெய்முதலானது எடுக்கும் ஜாலம்.

மேற்கூறியபடி பந்தனஞ்செய்துககொண்டு போவாரககில் தன்னை ஒருவ ரும் கண்டுபிடிக்கமாட்டார்கள் அது அப்படியிருக்க சுடுகாட்டில்வேகும் பிணத் தினுடைய எலும்பு கரி நெய் இவை எடுக்கவேண்டில் சரியான பருவவயதுள்ள பிராமணஸ்திரி நீரில் விழுந்திறந்தவளை கொண்டுபோய் கொளுத்தும் போதும் இரும்பிமூல்செய்தகரண்டி ஒன்று தயார்செய்து வைத்துக்கொண்டிருந்து பிண மானதுவெந்மி சொரிகிறநெய்யைப் பிடித்து சிசாவில் வார்க்கவும் வார்த்த நெய் யதனில் பலம் ஒன்றும் முதி எலும்பை கொண்டுவந்து உடித்து தூள்செய்து வடிகட்டிதூளை யெடுத்தும் பீங்கம்னிவிட்டு மேற்படி கெய்யைவிட்டு மத்தித்து உண்டையாகச்செய்து சூரியன்முன் க்ஷணப்போது வைக்க நாலுதிசையும் மயக் கம் பொடி பொரில்போல பொரியும் அதில் ரேப்பூரம் அறைபலம் போடவும்.

### 1319. வஞ்சி முதுகோளம்பு வாசனைப்பொடி முதலை எடப்பாண்டில்வைக்கும் வித்தை.

மேற்கூறியபடி கர்பூரம்சேர்த்து அத்துடன்கஸ்தூரி கொச்சிமஞ்சள் கழஞ் சியும் வெட்டிவேர் மருவு மருக்கொழுந்து இவைகள் வகைக்கு கால் பலமாகச் சேர்த்தே தூளிடித்து மேற்படி தூளுடன் கலந்து பிவனையினுடைய மூலமந்திரத் தை சொல்வேன் கேட்பாயாக ஓம் கிலிரிம் ஸ்ரீயம் என்று கேளாய்.

### 1320 புவனை மூலத்திரானம்செய்யும் வேளையறியும் வித்தை.

மேற்கூறிய மூலத்தை நூற்றியெட்டுஜெபிக்க செகஜாலப்பொடி சித்தியா ம்கு சித்தியானவுடன் அந்தத்பெட்டியில் பணவிடையெடுத்து அதனில் நீரில்

யிறந்தவள்நெய்விட்டு மணவிடையில் பாதிகுழைத்து திலர்தமாக நெற்றியில் இட்டுக்கொண்டு தனிப்பொடி பணவிடைய யெடுத்துக்கொண்டு நடுராத்திரி வேளையில் கேளாய்.

### 1321. வைரவர் தியான வித்தை.

மேற்கூறிய தலைச்சன்பிள்ளை யீன்றவிடத்திற்குபோகி சுவாரியெரிகுதித்து வாசலில்வந்து வாய்திறக்காமற்படிக்கு வைரவர் மூலமந்திரத்தைசொல்லும் வகை எவ்விதமெனில் ஓம்சவ்வும் கிறிரீம் ஸ்ரீயும் சிங் அங் சாயா அருவாய் என்று நூற்றியெட்டு உருஜெபிக்க வைரவர் பாதைவழிகாட்டி நடத்திவைப்பார் நன்மையானது பெருகவு மின்னமுங்கேளாய்

### 1322. ஜெகஜாலப்பொடிதூவும் வித்தை.

கேட்க ஜெகஜாலப்பொடியைக் கையிலெடுத்து தூத்திவிடு அங்குள்ளபேர் கள் யாவரும் தூங்கிக்கொண்டிருந்தாலும் அல்லது விழித்துக்கொண்டிருந்தாலும் இந்தப்பொடி வாசனைப் பட்டபோதே நிசைப்பூண்டை மிதித்தவர்கள்போலும் திசைரலங்கி மதிமயங்கி திகைக்கும்படி மூதேவிமானது அவர்களைப்பிடித்து மயங்கும் அன்னமும் மூவுலகத்தையுங் கூடமயக்கும்.

### 1323. காளபயிரவர் மூலம் ஓதும் வித்தை.

மேற்சொன்ன ஜெகஜாலப்பொடியை ஜெகத்திற்செய்தாக்கால் அவர்க் கிடு இந்த உலகில் யாவருமில்லை இந்தபொடியை எடுத்து தூவி ஒருவீட்டிற் குள்ளே நுழையும்போது காளபைரவரை தியானிக்கவும்.

### 1324. கதவின் தாள்திறக்கும் வித்தை.

மேற்கூறிய காளபைரவர் தியானிக்கும் மூலமந்திரமாவது சுறிம் சிங்குஅவ் வும் அறியும் ஸ்ரீயும் என்று நூற்றியெட்டு உருஜெபிக்க கதவினுடையத்தாப் பாள் திரக்கும் திறந்தவுடனே நீ உள்ளே நுழைந்து ஜெகஜாலப்பொடியதைதூவி திரு பாலிருக்கும் குழந்தையைத்தூக்கிக்கொண்டு வெளியே வந்துவிடவேண்டும் பிறகு தன்னிருப்பிடத்தில் கொண்டுவந்து சேர்க்கவேண்டும்.

### 1325. விட்டகுறை யறியும் வித்தை.

அப்படி சேர்ந்தபிறகு பணவிடை ஜெகஜாலப்பொடியை யெடுத்து அந்த தலைசன் பிள்ளை வாயில் வைக்க அறை கடிகைக்குள் உயிர் பிரிப்பதுபோகும் அப் படிபோயினும் உனக்கு யாதொரு தோஷமுமில்லை ஏனெனில் மதலையினுடைய விதிப்மயன் ஆகுமென வேதாந்திகளாகிய முன்னோர் விளம்பிய வார்த்தையாம்.

### 1326. முன்னோர்கள் வாக்கறியும் வித்தை

முன்னோர்வாக்கு யாதனில்மேற்படி சிசுவின்முடியைவாங்கி மயிர்சவ்வு நொரை யிவைகளைப்பேர்க்கி மண்டையின்"முடிமூளையையெடுத்து பத்திரப்படு த்தி தலைமண்டை வோடுகளை கல்லுவிரல் இடிக்கவேண்டும்.

### 1327. பேரண்டசுன்னம் செய்யும் வித்தை

மேகசொல்லியபடி இகுத்து பேரண்டசுன்னப் செய்யும்வகை எவ்விமெ னில் தலைசன்பிள்ளை மண்டையோட்டில் நாத மரைசேர்விட்டு அரையாமம் அரைத்து மெழுகுபோல் வருகையில் அதையெடுத்துகுகைசெம்து ரவிமுன்னே

வைத்து உலர்த்தி பக்குவமாய்வைத்து மூளையை யெடுத்து கல்வத்திலிக்டு கே ளுஞ்செய்வகை.

### 1328. எண்ணெய்க்கசிவிரங்கும் வித்மறியும் வித்தை.

மேற்கூறியபடி செய்கின்ற வகையாவது அந்த மூளையினுடைய ஆண்விந் துபார்த்து கல்வத்திலிட்டு ஓயாமல் இரண்டு சாமமரைத்து வருகிறபமோ நவநீதம்போல்பாயும் அதுகண்டு அதனை வழித்து பீங்கானில் வைத்து இரண்டு ஜாமம் சூரியன் முன்வைக்க நல்லெண்ணெயுன் நிறத்தைப்போலிறங்கும் இறங்கி நிமஷத்தில் வெண்ணெயைப் போல்கட்டிவிடும் பாற்பத்திகேன்றறியும்.

### 1329. பழம்புளிபோல் செய்யும் வித்தை.

மேற்சொன்ன கசிவானது இரங்கும்போது அதுபிட்டுபோலாகும் அந்தப பிட்டையெடுத்து கல்வத்திலிட்டு அதனுடன விந்துசேர் ஒன்று விட்டு இரண்டு ஜாமம் விடகமல் அறைக்கும்போது பழம்புளிபோலாகும் பன்மை பெறும்படி யாக பாகமாய்வரும் தயிலத்தைகாண்பாயாக.

### 1330. வயது பதினறுகளை அறியும் வித்தை.

மேற்படி புளியுடன் நாதம்சேர் ஒன்றுவிட்டு இரண்டு ஜாமம் விடாமல் அறைக்க அதினுடைய வாலிபமானது மெத்தவயது பதினறு களையாகும்அதை மசனிக்கவும்போகாது அந்தபுளி மஞ்சள் நிறமுடைய மெழுகுபோல் ஆகும் அதை கையிலெடுத்து இழுத்துப்பார்க்க நாறுபோல் வரும் அந்தப்பாகங்கொண்டு அதைவழித்து செயல்பெறுகும்படி உருண்டைசெய்து கையிலவைப்பாய்.

### 1331. சீலைபாகம் ரவிபாகம் தேசபுடம் இவைகள் அறியும் வித்தை.

மேற்சொன்னபடிவைத்து மெழுகினல் கவசஞ்செய்து அதன்மேல் மண் சீலை எழுசெய்து சூரியன் முன்வைத்து உலரச்செய்து ஒரு ஜாமம் பொருத்து எடுத்து சித்துபெறும்படியான சாக்குகளையெல்லாம் ஒரு கூடை எருவால் கெஜ புடம்போட செந்தூரம் சுன்னமதுவாகும்படி புடம்போட்டு வாங்கவேண்டியது.

### 1332. துல்லிக்க கதிதவெள்ளை காணும் வித்தை.

வாக்கிய கவசத்தின்டுமல் சுத்தியசீலையைவாங்கி குகையையுடைத்துஅதை பீங்காளில் வைத்து அந்த வாளசசுன்னத்தை பாக்கும்போது மன் மதன் உதய மாதது போலும் வாணியைப்போலும் சொல்ல வெளிதாக விருக்கும் துல்மூத மான வெள்ளை இந்த சுன்னவாலில் நாதர்கள்வந்து பணிந்திடுவார்கள் இந்த நன் மையுள்ள சுன்னத்தை சிசாவில் வைத்து சொர்னவரை தியானிப்பாய்.

### 1333. சோர்னவைரவர் தியானம் சித்தியாகுதல் அறியும் வித்தை.

சொர்னவைரவை தியானிகும் விதம் எவ்விதமெனில் ஓம் சங் சிறியும் அறியும் வா வா சொர்னவைரவர் யங்குசாயாஎன்று இருநூத்தியெட்டு ஜெபி த்திவா பேரண்டசுன்னமாது சித்தியாகுப் அப்படியானபிறகு பகுரண்ட வண்ட சராசரமும் அளமளதற்றதும் சித்திபெறலாகும்.

### 1334. மகாராஜயோகஞ்செய்கிற சூரியவாலை கற்பறியும் வித்தை.

மேற்படி சுன்னத்தை பத்திரமாகவைத்துக்கொண்டு மகாராஜாயோகம்செய் வோர்கள் அந்தியோக சீலையைப்பெற சூரியவாலைக் கற்பத்தை சொல்வோம் கே ட்பாயாக.

## 1335. மூலிகை தோருப்பறியும் வித்தை.

ஆரை சிவனார்வேம்பு விஷ்ணுமூலி சூரியகாந்தி சந்திரகாந்தி செம்முள்ளி நன்னாறி நத்தைச்சூரி கிறுகுறிஞ்சா நாயுருவி கண்டங்கத்திரி நாய்ப்பாலை முசுமுசுக்கை முடக்கொத்தான் நரிமிரட்டி தூதுவாளை கீழ்க்கால்நெல்லி கலிஉதும்பை வல்லாரை நெருஞ்சி க்ருந்துளசி பத்திராட்சி வெள்ளருக்கு புளியாரை ஆதண்டை குப்பமேனி பேய்கீரை பொடுதலை கெஞ்சா அவுரி பிரமியம் சென்னயுருவி சிவகரந்தை செவ்வுள்ளி இவைகள் அறியவும்.

## 1336. இடைபாகம் ரவிபாகம் அறியும் வித்தை.

மேற்கூறியவண்ணம் அறிவதற்கு ஆகமூலிகை மும்பத்தஞ்சாகும் அதில் ஒவ்வொருமூலி இரண்டு பலமாக நிறுத்தெடுத்து இவ்வகையின் சமூலமெல்லாம் சித்திரைமாதத்தின் வெய்யலில் சுக்ரவாரம்பார்ம் பார்த்து உலர்வைத்து பிறகு எடுத்து கல்லுரலில்போட்டு ஒரு ஜாமமிடித்து தூளாக்கித் தோண்டி வடிகட்டி பின்பு இறகு இந்தத்தூளை ஒரு கலசத்தில்போட்டு வைத்துக்கொள்ளவும் கலசத்தின்மீது சீலைவேடுகட்டி தூளைபதனமாக வைத்துக்கொள்ளவேண்டும்.

## 1337. கடைவிதஆசரக்கின் தோகுப்பறியும் வித்தை.

முன்போல் வைத்துக்கொண்டு அத்துடன் வால்மிளகு மலைமிளகு திப்பிலி நல்லமிளகு கடுக்காய்பிஞ்சு ஜாதிக்காய் கடுக்காய்ப்பூ ஏலம் லவங்கப்பட்டை கிக்கு நற்சீரகம் சூரைவிரை சாரவிரை வெப்பாவரிசி கார்கோலப் பண்டுபரங்கி கருஞ்சீரகம் தான்றிக்காய் தாளிச்சபத்திரி அரத்தை குரோசானி திப்பிவு தும்மராஷ்டகம் சாதிபத்ரி இந்த கடைசரக்கு வகை இருபத்தைந்து வகையாகும் இவை வகைக்கு பலம் இரண்டாக நிருத்தெடுத்து உலர்த்தியெடுத்து கல்லுரலி லிட்டு இரண்டுஜாமம் வரைக்கும் விடாமல் இடித்து நூளாக்கியபின் கேளும்.

## 1338. காட்டுக்கிழங்குவகையறியும் வித்தை.

மேற்படி இலித்ததூளைத்தோண்டி வடிகட்டியெடுத்து முன்சொல்லியதூளுசேர்த்து கலசத்தை பதனமாக வைத்துக்கொள்ளவும் காட்டுக்கிழங்கு வகைசொல்வேன் கேட்பாயாக நிலப்பனைவேர் பூவரசன்பட்டை அத்திவேர்பட்டை ஆலம்வேர்பட்டை அசோக விரு அச்த்தின வேர்ப்பட்டை மாதுளம்வேர் விலாமிச்சவேர் விவ்வவேர் சரக்கொண்ரைவேர் இவைகளாகும்.

## 1339. இடைபாகம் ரவிபாகம் அறியும் வித்தை.

மேற்சொன்னவேர் வகையொன்றுக்கு ஒருபலமாக நிறுத்தெடுத்து வேரையெல்லாம் பில்லைபில்லையாக அறுத்து ஒருவாரம் ரவியிலுலர்த்தி அதை உரலிலிட்டு இடித்து பொடித்து வடிகட்டி முன்பொடியில் சேர்த்துக்கொள்ளவும்.

## 1340. பிரமகுலம் பனிநீர் வாங்கும் வித்தை.

பிரம்குலத்திற்பிறந்த தலைச்சன்பிள்ளையின் பனிக்குடம் வசனிப்போம் கேட்பாயாக ஐந்துபடி நீர்வாங்கி அதில் பேரண்டச்சுன்னம் அரைபலம்போட்டு அரைநாழி பொறுத்துப்பார்க்க் சுத்தசலமாகும் அதையெடுத்து பெருஞ்சட்டியில் வார்த்து சீனிசர்க்கரை 2-சேர்கொட்டி பின்பு சகலமும் அதிலிட்டு சட்டியை அடுப்பின்மேலேற்றி கேளும்

### 1341. ஒரு மரத்தின் விரகால் எருக்கும் வித்தை.

கேட்பாயாக அடுப்பேற்றி தீயையேற்றி ஒருமரத்தின் விரகால் ஒருஜாம மெரிக்க பாகுபோல்வரும் அப்போது மேற்படி பொடி நாலுவகையும் உருதிபெ றும்படியாக அதில் கொட்டி கிண்டி நல்லபதத்தில் பேரண்டச்சுன்னம் அரை பலம்போட்டு மறுபடியுங்கிளரிட சிகப்புநிறகாகவரும் அப்போது அடுப்பைவிட் டிறக்கி கீழேவைத்து நீ சொக்கித்திரியாதபடி சூரியவாலே கற்பத்தை ஆறவைத் துச் சீசாவிற்போட்டு வைத்துக்கொள்ளவும்

### 1342. கர்ப்பத்திற்கு திரிபுரை மூலமந்திரம் ஜெபிக்கும் வித்தை.

மேற்படி லேகியத்திற்கு திரிபுரைதியானஞ்செய்வது எவ்விதமெனில் ஓம் ஸ்ரீம் சிரியும் சிங் ஐயு கிரியும கிலியும் சவ்வும் ஆம் ஆயிமாயி திரிபுரையே ரா என்று 108 உருசெபிக்க சூரிய வாலேகற்பம் சித்தியாகும் திரிபுரையின் சூட்சமி துவாகுமென மேலோர் கூறினர்.

### 1343. சௌமிய சாகரம் **1500** அறியும் வித்தை.

சூட்சமாகிய இந்த சூரியவாலே கற்பமிதுபோல் முன்னோர்கள் சொன்ன நூலில் சொல்லவில்லை ஆயினும் சௌமியசாகரத்தின் பிடமானது வசனித்த படி 1500-யும் பார்க்கவேண்டும் அப்படி பார்ப்போர்களுக்கு சகலமும் சித்தியா கத்தோன்றுமென மேலோர் கூறினர்.

### 1344. கற்பமுண்ண வசந்தகாலம் மாசம் நாளும் அறியும் வித்தை.

கடைத்தேறும்படியான மாணுக்கர்களுக்கு முன்னோர் சுருவாகக் கருணை பெறும்படி சொன்னார் மகராஜயோகஞ்செய்வோர் ஆயிரத்திலொருவன் அபி சையுண்டு ஆதலால் யோகத்திற்கு வசந்தகாலமே முக்கியகானது.

### 1345. உடல்சேதி அறியும் வித்தை.

மேற்படியோகம் செய்யும்வகை எவ்விதமெனில் ஆதிகாலமாகிய முதநாள் பூசநட்சத்திரம குருவாரம் இந்தநாளில் யோகம்புரியுமிடம் குகை பின்னமில்லா திருக்கில் நீ அதிற்சென்று தந்தசுத்தி முதலானதுஞ் செய்துக்கொண்டு ஞான காவியத்திற்கூறிய நேரப்படிக்கு பூசை செய்துக்கொண்டு ராஜயோக நிஷடை யானது அடைய சித்தியாகும்விதம் சொல்வோம் பாராய்.

### 1346. சுவயோகமேடை அறியும் வித்தை.

மேற்கூறியவாறு சித்திபெற சிவயோகமேடையை சொல்லக்கேளாய் அந் தசிவயோகமேடை அமைப்பது பத்துஜாண் அகலமும் பத்துஜாண் நிகளமுமாய் மேடைபோட்டு பிறகு நீ சடலமெங்கும் விபூதியை தளமாயணிந்து முத்திபெ றம்படியான 800 ல் யோகத்துக்கெல்லாஞ் சொல்லிய தீட்சையை செபித்து மவுனமதில் உன்னுடைய அறிவையோட்டி பின்பு கற்பூரார்த்திசெய்து தீபதூப நைவேத்தியத்துடன் சூரியவாலே கற்பலேகியத்தை குண்டுமணிப்பிரமாணமெடு த்து சாப்பிட்டு அரைபடி பசும்பால் சாப்பிடவேண்டும் இப்படி காலேமாலே யிரு வேளையும் ஒருமண்டலம் சாப்பிடவேண்டுமோம் யோகசித்தியாகும்.

### 1347. கற்பக்கோழை வாங்குத லறியும் வித்தை.

மேற்சொன்ன கற்பத்தைக் கையிலெடுத்து இரண்டுநாழிவரைக்கும் முக்கி னிடமாகவைத்து முகர்ந்துக்கொண்டிருந்து பின்பு அதை நாவில்வைத்துதேய்க்க கபங்களெல்லாம் வந்துவிடும்.

### 1348. கற்பமண்டலமுண்ண உண்டாவது அறியும் வித்தை.

கற்பத்தை உண்ணும்போது ஒருவேளையாக நடுமத்தியானத்தில் பெரிச்சாளியின் மங்கரிசியன்னம் சாப்பிடவேண்டும் இப்படி ஒருமண்டலம் சாப்பிட்டு வந்தால் மகாராஜயோகம் சித்தியாகி பிராணவாயு உறுதியாகநிற்கும்.

### 1349. நரைதிரையாக அகற்ற விபாம் அறியும் வித்தை.

மேற்கூறியவண்ணம் கற்பமதை ஒருமண்டலம் உண்ண கபங்கள்யாவும் அகன்றுபோகும் உன்னைக்கண்டோர்கள் யாவரும் தெண்டனிடுவார்கள் கபமானது கழன்றபோது மாதரெல்லாம் மெச்சும்படியாக நரைதிரையானது ஒருமண்டலத்திறகுள்ளே சித்தியாகும் உன்னையாவரும் புகழ்ந்து கொண்டாடுவார்கள் உன்னுடைய மகிமை தேசமெங்கும் பேசிப்புகழ்வார்கள்.

### 1350. சபையை மயக்கும் ஜாலம்.

சபையில்நின்று செகசாலப்பொடியை யெடுத்து காத்துவாட்டம் பார்த்து கொஞ்சம் தூவிவிட வேடிக்கைப் பார்க்கவந்த யாவரும் மூர்ச்சையடைவார்கள் உடனே நீ பேரண்டச்சுன்னத்தை கொஞ்சம் தண்ணீரில்போட்டு அவர்கள் பீதுதெளிக்க நித்திரைபோய் எழுந்தவர்போல் எழுந்திருப்பார்கள்.

### 1351. புலியை மயக்கும் ஜாலம்.

புலிகூட்டங்களின்முன்னே பயமில்லாமற் சென்று பொடியை கொஞ்சமெடுத்து வாட்டமாகநின்று தூவிவிட புலி கூட்டங்களெல்லாம் மூர்ச்சையாய் விழுந்துவிடும் முன்போலெழுப்பவேண்டும்.

### 1352 சிங்கத்தை மயக்கும் ஜாலம்

முன்போல் சிம்பச்கூட்டத்தின் முன்சென்று ஜெகஜாலப்பொடியை கொஞ்சமெடுத்து காத்துவாட்டத்தில் தூவிவிட சிமபக்கூட்டமெல்லாம் மயங்கி மூர்ச்சையாகும் நீ முன்போல் யெழுப்பிவிடவேண்டும்.

### 1353. யானை கூட்டங்களை மயக்கும் ஜாலம்.

முன்போல் யானைக்கூட்டத்திற்சென்று பொடியை கொஞ்சமெடுத்து காத்துவாட்டமாக தூவிட யானைகூட்டமெல்லாம் மூர்ச்சையால் விழுந்து விடும.

### 1354. கரடி கூட்டங்களை மயக்கும் ஜாலம்.

கரடிகூட்டத்தின் முன்சென்று பொடியை யெடுத்து காத்துவாட்டத்தில் நின்று தூவிவிட கரடிகூட்டமெல்லால் மூர்ச்சையாய்விடும்-

### 1355. சர்ப கூட்டங்களை மயக்கும் ஜாலம்.

எவ்வித சர்பகூட்டங்களா யிருந்தபோதிலும் அதனருகில்சென்று ஜெகஜாலப்பொடிசெய்து காத்துவாட்டமாக தூவிவிட அந்த வாடைபட்டவுடன் சர்ப்பங்களெல்லாம் மூர்ச்சையாய்விடும்.

### 1356. கிரிப்பிள்ளை கூட்டங்களை மயக்கும் ஜாலம்.

ஜாலமாடுமிடத்தில் பத்து இருபது கிரிப்பிள்ளை கூட்டங்களை கொண்டு வந்து நிருததி அனைவருக்குங்காட்டி இந்த கிரிப்பிள்ளைகளை மூர்ச்சையடையும்படி செய்கிறேன் பாருங்களென்று பொடியை யெடுத்து காத்துவாட்டமாக நின்று கிரிப்பிள்ளைகள்மேல்போட யாவும் மூர்ச்சையாய்விடும்

### 1357. அணிப்பிள்ளை கூட்டங்களை மயக்கும் ஜாலம்.

முன்போல் சபையில் அணிப்பிள்ளை கூட்டங்களை நிறுத்தி பொடியைத் தெளிக்க மூர்ச்சையாகிவிடும்.

### 1358. மந்தி கூட்டங்களை மயக்கும் ஜாலம்.

குரங்கு கூட்டங்களிருக்குமிடத்தில் சென்று பொடியை எடுத்து காத்து வாட்டமாக நின்று தூவிவிட குரங்கு கூட்டமெல்லாம் மூர்ச்சையாகி விடும் அதை நீ முன்போய் எழுப்பிவிடவேண்டும்.

### 1359. அஸ்வ கூட்டங்களை மயக்கும் ஜாலம்.

ஜாலக்காரன் அஸ்வகூட்டங்களி னிவமாகச்சென்று பொடியைக் கொஞ்ச மெடுத்து ஜாலக்காரன் தியானித்து காட்டவாட்டமாக நின்று பொடியை தூவி விட அஸ்வங்களெல்லாம் மூர்ச்சையாக விழுந்துவிடும் அதை நீ முன்போல் எழுப்பிவிடவும்.

### 1360. மாட்டு மந்தைகளை மயக்கும் ஜாலம்.

படிமாடு எருது எருமைக்கிடா முதலாகிய மாடுகளைமடக்கி வைத்திருக்கு மிடத்தில்சென்று பொடியை கொஞ்சமெடுத்து காத்துவாட்டமாகநின்று தூவி விட மாடுகள்யாவும் மூர்ச்சைவாகி விழுந்துவிடும் முன்போலெழுப்பிவிடவும்.

### 1361. ஆட்டு மந்தைகளை மயக்கும் ஜாலம்.

ஜாலக்காரன் ஆட்டுமந்தைகள் மடக்கியிருக்கு மிடத்தில் சென்று பொடி யைமொஞ்சமெடுத்து காத்துவாட்டமாக நின்று தெளிக்க ஆடுமாடுகளெல்லாம் மூர்ச்சையாகி விழுந்து விடும் நீபரிட்சை பார்த்தவுடன் முன்போல் எழுப்பவும்.

### 1362. கழுதைகளை மயக்கும் ஜாலம்.

கழுதைக் கூட்டத்தினிடமாகச்சென்று பொடியைகொஞ்சமெடுத்து காத் துவாட்டமாகநின்று தெளித்துவிட கழுதை கூட்டம்யாவும் மூர்ச்சையாகிவிடும் நீ முன்போல்செய்து எழுப்பிவிட வேண்டும்.

### 1363. நாய்கூட்டங்களை மயக்கும் ஜாலம்.

நாய்க்கூண்டத்தைக் கண்டவுடன் பொடியை கொஞ்சமெடுத்து காத்துவா ட்டமாக நின்று தூவ நாய்க்கூட்டமெல்லாம் மயக்கங்கொண்டு மூர்ச்சையாகும் அப்படியானவுடனே நீ முன்போல் செய்து யெழுபிப்பிவிடவேண்டும்.

### 1364. நரிகளை மயக்கும் ஜாலம்.

நரிகள் வாழுமிடத்தில் பயமில்லாமற்சென்று தெளிக்க நரி கூட்டங்களெ ல்லாம் மூர்ச்சையாகி விழுந்துவிடும் முன்போல்செய்து எழுப்பிவிடவும்.

### 1365. மான் கூட்டங்களை மயக்கும் ஜாலம்.

மான் கூட்டங்கள் வாழுமிடத்தில் அச்சமில்லாமற்சென்று பொடியைக் கொஞ்சமெடுத்து காத்துவாட்டமாக நின்று தூவிவிட அங்குள்ள மான்கூட்டங்க ளெல்லாம் மயங்கி சுருண்டு மூர்ச்சையாய்விடும் நீ முன்போல்செய்து உடனே எழுப்பிவிட நன்றாகும்.

### 1366. காட்டுப்பூனையை மயக்கும் ஜாலம்.

காட்டுப்பூனை கூட்டமர்க யிருக்குமிடத்திற்சென்று பொடியை கொஞ்ச மெடுத்து காத்துவாட்டமாக நின்றுவிடகாட்டுபூனை கூட்டம் மூர்ச்சையாய்விடும்

